புத்தகம்-ரு. 1907௵ பிப்ரவரி௴ 1௳ இலக்கம் - க.

# சுகாதார போதினி.

க - ம் பிரிவு.

## வைத்தியக் குறிப்புகள்,

முன்தொடர்ச்சி (Vol-II. பக்கம் 185.)

### பக்கநோவு, பக்கசூலை.

பக்கநோவானது வாயுசம்பந்தத்தினா லாவது, சீதள சம்பந்தத்தினாலாவது உண்டானால் அந்த நோவானது ஒரு இடத்திலேயே நிலைத்திராமல் அங்கு மிங்கும் ஓடித்திரிந்து கொண்டிருக்கும். சுரமில்லாதிருக்கும்.

### சிகிச்சை.

மேற்றோல் சீவின சுக்கு விராகனெடை-உ, ஆமணக்கு வேர்ப்பட்டை விராகனெடை-உ, இவ்விரண்டையுஞ் சிதைத்து ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச சுண்டவைத்து வடிகட்டிப் பானஞ்செய்துவரத் தீரும்.

### மேற்படி வியாதிக்குப் பற்று.

எருக்கம்வேர்ப் பட்டை விராகனெடை-உ, இதனைக் கல்வத்திலிட்டுச் சிறுபிள்ளை மூத்திரத்தை வார்த்து வெண்ணெய் போலரைத்து நோவுள்ள விடத்தில் தடவி நெருப்பணலிற் காய்ச்சவும், அல்லது வெயிலிற் காட்டி யுலர்த்தவும். இப்படி யிரண்டு மூன்று தடவைகள் செய்தால் அந்தநோவு தீரும்.

### மேற்படி பற்று. (வேறு.)

கலைமான் கொம்புத்தூள் விராகனெடை-க, மிளகுச்சூரணம் விராகனெடை-வ, இவ்விரண்டையுங்கல்வத்தில் தண்ணீர் வார்த்து மைபோலரைத்துக் கொஞ்சங்கொதிக்கவைத்துநோவுள்ள விடத்திற் பற்றிட வேண்டும். இவ்விதம் சில தடவைகள் செய்ய மேற்படிநோவு தீரும்.

### மார்நோவுச் சிகிச்சை.

தேவதாரம் விராகனெடை-முக்கால், பனைவெல்லம்விராகனெடை-ரு. தேவதாரத்தை யிடித்துச் சூரணஞ்செய்து வடிகட்டிப் பிறகு வெல்லத்தைச் சேர்த்தரைத்து ஒருமாத்திரையாகச் செய்து உட்கொள்ள வேண்டும். இவ்விதம் அப்போதைக் கப்போதாவது அல்லது இந்தக் கணக்கின்படி முன்னதாகச் சித்தப்படுத்தி வைத்துக்கொண்டாவது உபயோகித்துவர,மார்புநோவு தீரும்.

### மேற்படி சிகிச்சை (வேறு)

வெந்தயம் விராகனெடை-கஉ, தேன் பலம்-க. வெந்தயத்தைச் சட்டியிலிட்டு மணம் வரும்படியாக வறுத்து அதில் தேனை விட்டுஆழாக்கு ஜலத்தையும்விட்டு மூன்றிலொருபாகமாகச்சுண்டவைத்திறக்கி வடிகட்டிப் பானஞ்செய்ய வேண்டும், இவ்விதம் செய்து வந்தால், நாட்பட்ட மார்பு நோவு, கஷ்டசுவாசம், ஆகியவைகள் தீரும்.

### இருமல் ரோகம்.

இருமலானது பக்கநோவு, மார்புநோவு, நுரையீரல் நோவு, ஈரல்வீக்கம், இரத்தங்கக்கல் முதலிய ரோகங்கள் காரணமாகக் காணும். அந்தச் சமயங்களில் மூலகாரணமான ரோகத்தை நீக்கினால் இருமலுந் தானே போய்விடும். கடவுள் கிருபையால் அந்தந்த வியாதியின் தலைப்பின் அவ்வவற்றின் சிகிச்சைகளையும் எழுதுவாம். ஆகையால் இருமலைப் பொதுவாக இரண்டு வகையாய்ப் பிரிப்போம்.

ஒன்று வறட்சி யிருமல், அதாவது இருமினால் அதில் சளி முதலிய ஒன்றும் வெளிப்படாது.

இரண்டாவது கப இருமல் அதாவது:—இருமினவுடன் கபம் வெளிப்படும். மார்பில் குருகுரு வென்னுஞ் சப்த மிருக்கும். ஆகையால் கபஇருமலாயிருந்தால் கபத்தைப் பக்குவப்படுத்தும் அவுடதங்களை யுபயோகித்து கபத்தை நீக்கிச் சுத்திசெய்து பிறகு இருமலுக்காக அவுடதங் கொடுக்கவேண்டும்.

வறட்சியிருமலாக இருந்தால் கொழுமையான பதார்த்தங்களை யுபயோகித்து அதை நீக்க முயலவேண்டும்.

### இருமல் ரோகச் சிகிச்சை.

கர்க்கடக சிங்கிச் சூரணம் விராகனெடை - ரு, இதனைக் கல்வத்திலிட்டுத் தேனைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருமணி நேரமரைத்து கடலைப் பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து வைத்துக்கொண்டு வாயிலடக்கி அதன் சாரத்தை விழுங்கி வருவதால் கபசம்பந்தமான இருமல் ரோகந் தீரும்.

மேற்றோல் சீவின அதிமதுரம்,வாதுமைப்பிசின் கருவேலம் பிசின், கோதுமைச் சத்து, கற்கண்டு இவை வகை-க-க்குச் சமனெடை இவற்றைக் கல்வத்தி

விட்டு நன்முப்ப் பொடித்து கொஞ்சம் தேனைவிட்ட ரைத்து மிளகுப் பிரமாண மாத்திரைகள் செய்து ஒன்று அல்லது இரண்டு மாத்திரைகளை வாயிலடக்கிக் கொண்டு அதன் ரசத்தை விழுங்கிவரக் கபசம்பந்தமான இருமல் வரட்சி இருமல் ஆகியவைகள் தீரும்.

உலர்த்தின கண்டங்கத்திரிப்பூ, அல்லது, தூதுவளைப்பூ ஒருபங்கு மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம் ஒருபங்கு, இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு மேற்கண்ட இரண்டு சரக்குகளையும்கல்வத்திலிட்டுப்பொடித்து இஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டுமணி நேரமரைத்து மிளகுப் பிரமாண மாத்திரைகள் செய்து இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கி அதன் சாரத்தை யுட்கொண்டுவர, வறட்சியிருமல், கபஇருமல் ஆகியவைகள் தீரும்.

மிளகு, சுத்திசெய்த பூநீறு, வறுத்தரைத்த கொண்டைக் கடலைமா, இவை வகை-க-க்குச் சமன், இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு. மேற்படி சரக்குகளைக் கல்வத்திலிட்டு மேற்படி யிஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருமணி நேரமரைத்துக்கடலைப் பிரமாண மாத்திரைகள் செய்து வைத்துக்கொண்டு இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கி அதன் இரசத்தைவிழுங்கிவர, மேற்கண்ட இருவகை யிருமல்களும் தீரும்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

உ-ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol - II - பக்கம் 187.)

பேதியாகிற வரையில் மேற்கண்டபடி இரண்டிரண்டு அல்லது மும்மூன்றுமணிக் கொருதடவை கொடுத்துவரவேண்டும். குழந்தைகளுச்குக்காணும் மலபந்தம் அஜீரணம் ஆகியவைகளுக்கும் மேற்கண்டமுறை உபயோகப்படும்.

பிள்ளைகளுக்கு அஜீரணத்தால் அல்லது ஜீரணமாகாதவஸ்து குடலிற்சிக்கிக்கொள்வதால் அதாவது ரொட்டி, ரொட்டித்துண்டு, (வேறு வஸ்துக்களின் துண்டுகள் இரைப்பை, சிறுகுடல் ஆகிய ஸ்தானங்களிற் சிக்கிக்கொள்வதால்) தண்ணீர் தண்ணீராகப் பேதியாகும். அப்படிப்பேதியாவதில் இரத்தக்கலப்பு, சீதக்கலப்பு இல்லாவிட்டால் மேற்கண்ட முறையை யுபயோகிக்கப் பேதியானது உடனே நிற்கும்.

வேறு.

| | |
|---|---|
| ரேவல்சீனிச்சூரணம் | பங்கு-உ |
| மாக்னீஷியா | பங்கு-சு |
| சுக்குச்சூரணம் | பங்கு-க |

இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்து வயதிற்குத் தகுந்தபடி மூன்று குன்றிமணியெடைமுதல் எட்டுக் குன்றிமணிவரையிற் குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கு-கo-குன்றிமுதல் ஙo-குன்றி வரையிலும் உபயோகிக்கலாம்.

இரைப்பையில் அல்லது சிறுகுடலில் புளிப்புச் சேர்ந்திருந்தாலும் வேறு எவ்விதகாரணத்தினாலேனும் மலபந்தப்பட்டிருந்தாலும் இரண்டொருதடவை மலத்தைவெளிப்படுத்த அவசியமானால் மேற்கண்ட முறையை உபயோகிக்கலாம்.

வேறு.

| | |
|---|---|
| ரேவல்சீனிச்சூரணம் | குன்றிமணியெடை-அ |
| மாக்னீஷியா | குன்றிமணியெடை-கo |
| பரிமள சீமைச்சுண்ணாம்புச் சூரணம் குன்றிமணி யெடை | கo |
| பெப்ரமெண்டு ஜலம் | பலம்-க |

இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்துக் கொள்ளவும். இது ஒருதடவைக்காமளவு. இது வயிற்றிற்புளிப்பு அதிகமாகச் சேர்ந்திருந்து மலபந்தப்பட்டிருந்தால் மேற்கண்ட மருந்தை உபயோகிக்க, வயிற்றிலுள்ள புளிபபு நீங்கி மலபந்தமும் நீங்கும்.

வேறு.

ரேவல்சீனிச் சூரணம் குன்றிமணியெடை-சு.
இபிகாகியு எனுச் சூரணம் குன்றிமணியெடை-க.
இவ்விரண்டையு மிஸ்ரமித்துக் கொள்ளவும்.

இது ஒருவேளைக்காம் அளவு, இதனைக் காலையில் ஒருவேளை உபயோகித்து வந்தால் இரத்தங்கக்கல் ரோகம் நீங்கும்.

இன்னும் வரும்.

## சுகாதார போதினி.

௩-ம் பிரிவு.

---

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. -II-பக்கம்181)

கருப்பைக்குள் சிசுவானது ஒரு ஜவ்வுப்பைக்குள்ளிருக்கும். இந்தப் பையில் ஜலமானது நிறைந்திருக்கும். இந்த ஜவ்வுப்பையானது அழுந்தினால் அதிலிருக்கும் சிசுவுக்குத் தொந்தர வுண்டாகாதிருக்கும்படி கடவுளால் இவ்விதம் ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. (இந்த லோகரக்ஷகரின் ஏற்பாட்டை நாமென்னென்று சொல்வோம்) கருப்பையின்வாய் விரிய விரியஜவ்வுப்பையுடன் சிசுவும் கீழேயிறங்கி வருகிறது. இடுப்புநோவு கொஞ்சம் குறைந்தவுடன் இந்தப்பையானது கொஞ்சம் மேலேஏறி விடுகிறது. இந்தப் பையானது ஒரு சூஸ்திரத்தைப்போல வேலைசெய்கிறது. கருப்பையின் வாயானது நன்றாய்விரிந்து போனதும் அந்தஸ்திரீநடுங்குகிறாள். சிலர் வாந்தியும் செய்கிறார்கள், அந்த ஜவ்வுப்பை கிழிந்து போகிறது. இதிலிருந்து ஒருவித சப்தமுமுண்டாகும். இதற்கு நமது நாட்டு ஸ்திரீகள் தண்ணீர்க்குட முடைந்ததென்று சொல்வதுவழமை, இவ்விதம் உடைந்தவுடன் ஜலப்பிரவாகமாக ஓடும் இப்படியுண்டானால் பிரசவ முதற்பருவம் முடிவானது. இனி இரண்டாவதுபருவம் ஆரம்பிக்கிறது. ஆனால் சிலசமயங்களில் * சிலருக்கு இந்தத்தண்ணீர்க்குட முடையாமல் அந்தத் தண்ணீர்க்குடத்துடன் சிசுப்பிறப்பதுமுண்டு.

இதைத்தவிர கெற்பப்பையின் வாய் செம்மையாக விரிந்துபோகாததற்கு முன்பே ‡ தண்ணீர் வெளிப்படுவதுமுண்டு. ஆகையால் மருத்துவப் பெண்ணானவள் கருப்பையின் வாய் விரிந்ததா இல்லையாவென்று அதிக கவனத்துடன் பார்த்துக்கொண்டிருக்கவேண்டியது. அரைமணிக் கொருதடவை பரீக்ஷித்துப் பார்ப்பது போதுமானது, இன்னும் இப்படிப் பரீக்ஷித்துப் பார்ப்பதினால் சிசுவின் எந்த அவயவம் முன்னே புறப்படுகிறதென நிதானிக்கவும் ஏதுவாகும். நூற்றில் தொண்ணூற்றேழிற்குத் தலையே முன்னே வரும். இது சுபாவம். இதனால் சிசு சுகப்பிரசவமாகும். நூற்றிற்கிரண்டிற்குப் புட்டம் முன்னே வெளிப்படும். நூற்றில் ஒன்றுக்குக் கால்முதலில் ஜனனமாகும், நூற்றில் ஒன்றிற்குப் பக்கம் முதலில் அரிதாக ஜெனனமாகும். எல்லாவற்றைப் பார்க்கிலும் கஷ்டமான பிரசவம் பக்கமாக செனனமாவதுதான்.

சமயாசமயங்களில் ஒருகையும் இரண்டுகால்களும் முதலில் ஜனனமாவதுமுண்டு. சிலசமயங்களில் இரண்டுகையும் ஒருகாலும் ஜனனமாகும்; சிலசமயங்களில் இரண்டுகையும் இரண்டுகாலும் முன்னர் ஜனனமாவதுமுண்டு. இதின் விபரத்தைப் பின்னெழுதுவோம்.

ஆனால் இங்கு தலை முன்னர் ஜனனமாவது தெரிந்துகொள்ள வேண்டியது எவ்வித மென்பதுதான். ஆகையால் மருத்துவப் பெண்ணானவள் மெதுவாகத் தன்விரல்களைச்செலுத்திக் கருப்பையின் வாயின் அக்கம் பக்கங்களில் திருப்பிப்பாக்கவேண்டியது. அவள்விரலில் உருண்டையான பதார்த்தம் புலப்பட்டால் அது தலையாக, அல்லது, புட்டமாக இருக்கவேண்டும் அதைச்சற்று அழுத்திப் பார்த்தால் அது சற்றுகடினமாகத்தோற்றினால் தலையென்று நிதானிக்கவேண்டும். அதுபுட்டமாயிருந்தால் சதைப்பற்றாகத்தோற்றுவதுடன் இடையில்ஆசனமிருப்பதும்தென்படும். இவ்விதம் புத்திக்கூர்மையினால் நிதானித்தறிய வேண்டியது. இந்த முதல் நிலைமையானது மேற்கண்டவாறு கிரமேணுவாய் நடந்தேறிவந்தால் மிகவும் உத்தமமாக இருக்கும், அப்படிக்கில்லாமல் இரண்டொருதடவை நோவுகண்டு ஸ்திரீயானவள் கொஞ்சம் படுத்துக்கொண்டால் பாதகமில்லை. இவளுடைய நிலைமையானது சுபாவம்போலாகி வருத்தம் நீங்கிவிடும். இவ்விதமே நோவு நின்றுவிட்டால் சற்று கவனித்து நிதானிக்கவேண்டியது. இரண்டுமணி முதல்-௨௪ மணிவரையில் நிதானிக்க வேண்டியது, ௨௪-மணிநேரம் அரிதாய்நேரிடும். அதுவும் தலைச்சன்பிள்ளைப்பேறுக்கேநேரிடும். ஆகையால் ௧௨-மணிநேரம் போதுமானது. இதற்கானசிகிச்சைநமது நாட்டுமருத்துவப் பெண்களுக்குந்

* இவ்வித சமயங்களில் மருத்துவப் பெண்கள் அதிஜாக்கிரதையோடு வேலை செய்யவேண்டியது. இந்தத் தண்ணீர்க்குடத்தை அஜாக்கிரதையாக என்னமோ ஏதோவென்று சில மருத்துவப்பெண்கள் எரிந்துவிடுகிறார்கள். அப்படிச் செய்யலாகாது. ஆனால் உடனே அந்தத் தண்ணீர்க்குடத்தைக் கத்தியால் அல்லது நகத்தால் அதிஜாக்கிரதையுடன் கிழித்துவிட்டு நஞ்சுக்கொடியின் சிசுவை யெடுத்துக்கொள்ளவேண்டும். இப்படிச் செய்யாமல் தாமதித்தால் சிசு மரித்துப் போக ஏதுவாகும்.

‡ இது பெரும்பான்மையும் மருத்துவப்பெண் அஜாக்கிரதையினால் நேரிடுகிறது. அடிக்கடி அவள் அங்குகையைச் செலுத்துவதால் நகமானது தண்ணீர்க்குடத்திற்பட்டுக் கிழிந்து போவதுமுண்டு. அல்லது அடிக்கடிமூச்சைப்பிடித்து முக்கச் செய்வதினால் அந்தக் குடம் கிழிந்துபோவது முண்டு. இக்காரணத்தினால் மருத்துவப்பெண் கையிலுள்ள நகத்தை நீக்கிவிடுவதுமன்றி அங்கு கையைச்செலுத்த நேரிட்டால் அதிகஜாக்கிரதையுடன் செலுத்தவேண்டியது அவசியம்.

தெரிந்ததுதான். ஆனால் அவர்களுக்கு இதன் மூலகாரணந் தெரியாது, இதற்காக அவர்கள்செய்யுஞ்சிகிச்சையாவது அந்த ஸ்திரீயின் தலைமயிரைத் தன்வாயால் பிடித்துக்கொள்ளச்செய்வதேயாம். ஆனால் இதன் மூலமாவது இந்த ஸ்திரீக்கு வாந்தியுண்டாகாமல் ஒக்காளமுண்டாகும்படிசெய்ய முயற்சிசெய்யவேண்டியது. இப்படி ஒக்காள முண்டாகச்செய்வதால் கருப்பையின்வாயானது விரிந்துபோகும். தலைமயிரை வாயிற் கவ்வச்செய்வதினால் அந்த ஒக்காள முண்டாக ஏதுவாகும்.

### குறிப்பு.

சிலஸ்திரீகளுக்கு சுபாவமாகவே முந்தின நிலைமையில் ஒக்காளமுண்டாவதுமுண்டு. இது நல்லகுறியாம், இதுகெட்ட லக்ஷணமென நிதானித்து இதை நிறுத்தமுயற்சி செய்யலாகாது.

### பிரசவ இரண்டாம் பருவம்

கருப்பையின் வாயானது போதுமான அளவு விரிந்து தண்ணீர்க்குட முடைந்து விட்டால், சிசுவின் தலையானது உடனே வந்துவிடுகிறது. கருப்பையின் வாயிலிருந்து மர்மஸ்தானம் வரையில் நேரான ஒருவழியுண்டாகிவிடுகிறது. இந்தநிலைமையானதுகொஞ்சம் கஷ்டமானது. இந்த நிலைமையில்நிற்பதும் இத்தப்பக்கம் அந்தப் பக்கம் திரும்புவதும் கெடுதிக்கே ஏதுவாகும் ஆகையால் இந்தச் சமயத்தில் முதல் நிமை முடிந்தவுடன் பிள்ளை ஜனனமாகும் சமயம் நெருங்கிவிட்டதென நிதானித்து நிற்கவாவது இந்தப்பக்கம் அந்தப் பக்கம் திரியவாவது இடந்தரலாகாது சிலசமயம் இதனால் குழந்தை ஜனனமாகிக் கீழே விழ ஏதுவாகும், தண்ணீர்க்குட முடைந்தவுடன் தண்ணீர் புறப்படுகிறது. உடனே கருப்பைசுருங்கிச்குழந்தையை முன்னுக்குத் தள்ளுகிறது பிறகு கருப்பையானது கொஞ்சம் தளர்ந்தவுடன் சிசு சற்று மேலுக்கேறுகிறது. சாஸ்திர பரீக்ஷையில்லாத மருத்துவப்பெண்கள் பேயோ அல்லது பூதமோகுழந்தையை மேலுக்கு இழுக்குகிறதெனச் சொல்லி மயக்குகின்றார்கள். பேஷ்! வெகு பேஷ்!! வெகு கெட்டி!!!.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

௪-ம் பிரிவு.

### பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. II. பக்கம் - 182.)

### விஷமாந்தம்.

இலக்ஷணம்:—அடிக்கடி வாந்திபாகுதல், பிதற்றுதல், வயிற்றுநோய், அரைக்குங்கீழ் சீதளம், வயிற்றிரைச்சல், கண்சொருகுதல், பயந்த பார்வை, தாய் கையிலுந் தங்காமை, மயக்கம், சோருதல், சொருகுதல், மலம்சிக்கலாகக் கழிதல், சுரம்வேகமா யடித்தல், இவை முதலியவைகளாம்.

### சிகிச்சை.

மேற்றோல் சீவின சுக்கு, வசம்பு, வெள்ளுள்ளி, இந்துப்பு; வெள்ளைச் சாரணைவேர், மூக்குரட்டைவேர், கடுகுரோகணி, பாச்சோத்திவேர் இவை வகை க-க்கு விராகனெடை-கவ. இவற்றை ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து அதில் பத்துத்துளி தேனையுங் கலந்து பானஞ் செய்விக்கவேண்டும் இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையும் உபயோகித்துவர மேற்கண்ட விஷமாந்த ரோகந்தீரும்.

### குறிப்பு.

இதிற் சொல்லி யிருக்கப்பட்ட வசம்பைச் சாம்பலாக்கிச் சேர்த்துக் கொள்ளவேண்டும். இன்னும் வியாதி பலமா யிருந்தால் கோரோசனை மாத்திரை, கஸ்தூரிமாத்திரை; கூர்மபஸ்பம், கொரசிந்தம், முதலியவைகளி லொன்றைச் சமயோசிதம்போல் கூடச்சேர்த்துபயோகிப்பதால் விசேஷ குணமுண்டாகும்.

### நீர்மாந்த ரோகம்.

இலக்ஷணம்:—சர்வாங்க வேர்வை, தலைவலி, முகத்தில் மினுமினுப்பு, தேகத்திலாவது கைகால்களிலாவது தினவுடன் வீக்கம், முக்கலுடன் நீரிறங்குதல், இரைந்திரைந்து வயிறு கழிதல், வாய் நீரூறல், ஒக்காளம், மெலிந்த வார்த்தை, குலைவலி, உறக்கம், நகைப்பு, முதலியவைகளாம்.

சிகிச்சை.

நுணுவிலை, நொச்சியிலை, குப்பைமேனியிலை, பேய்மிரட்டிச் சமூலம், தும்பையிலை, நல்லவேளை இவற்றின் சாறு வகை ஒன்றுக்கு விராகனெடை-௮, வசம்பைச் சுட்டகரி, வெள்ளைப்பூண்டு, ஓமம், அரிசித்திப்பிலி, இவை வகை-௧-க்கு விராகனெடை-வ, இந்நான்கையும் அம்மியில் வைத்து ஜலம்வார்த்து வெண்ணெய்போலரைத்து மேற்படி சாற்றில் கரைத்து மண் ஓட்டைக் காயவைத்து அதில விட்டு உடனே வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்தைப் பானஞ் செய்விக்கவேண்டும். அவசியமானல் மேற்படி கஷாயத்தில் பத்துத்துளி தேனை விட்டு உபயோகிக்கலாம். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவரின் மேற்கண்ட நீர்மாந்தம் தீரும்.

குறிப்பு.

இந்தக் கஷாயத்தில் முன் சொல்லப்பட் டிருக்கிற சொரசிந்தத்தை யனுபானித்து உபயோகித்தால் வெகு சீக்கிரம் குணமுண்டாகும்.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

௫-ம் பிரிவு.

மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-II-பக்கம் - 176)

பஞ்சாமிர்த ரசம்.

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த அப்பிரக பற்பம் அல்லது, செந்தூரம், சுத்திசெய்த அபஅரபொடி, சுத்திசெய்த நெல்லிக்காய்க் கெந்தகம், சுத்திசெய்த தாம்பிர பொடி இவை வகை-௧-க்கு விராகனெடை-௧, மூக்குவெட்டிச் சுத்திசெய்த சேராங்கொட்டை விராகனெடை-௫, கருணைக் கிழங்குச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டு நன்றுப் கருக்கிறவரையி லரைத்துப் பிறகு தாம்பிர பொடியையும் அபபொடியையும் சேர்த்து ஒருமணி நேரமரைத்துப் பிறகு அப்பிரகத்தைச் சேர்த்து ஒருமணி நேரமரைத்துப் பிறகு சேராங்கொட்டையைச் சேர்த்து மெதுவாகவும் ஜாக்கிரதையாகவும் அதன் தைலம் மேலில் தெரிக்காமல் நன்றாய் மசிகிறவரையி லரைத்து மேற்படி சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து மூன்று நாளரைத்து அரைக்குன்றிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-௧. ௨.

அனுபானம்:—பசுவின் வெண்ணெப், பசும்பாலாடை ஆகியவைகளாம்.

இன்னும் இதைத் தவிர பின்காணும் லேகியத்தில் அனுபானித்துத் தின்றால் மிகவும் விசேஷ குணத்தைத் தரும் அந்த லேகியம் இது:—

மிளகுச்சூரணம் ஒருபங்கு, அரிசித்திப்பிலிச் சூரணம்-௨-பங்கு, மேற்றோல் சீவின சுக்குச் சூரணம் மூன்று பங்கு, சித்திரமூல வேர்ப்பட்டைச் சூரணம் ௪-பங்கு, பாலில் வேகவைத்து உலர்த்தி யிடித்த கருணைக் கிழங்குச் சூரணம் இருபது பங்கு; பனைவெல்லம் நாற்பது பங்கு.

செய்முறை:— சூரணங்களெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்து வைத்துக்கொள்ளவேண்டும். வெல்லத்தை ஜலத்திற் கரைத்து அடுப்பேற்றி மெதுவாயெரித்து இரண்டு மூன்று கொதிவந்த பின்பு மறுபடியும் அதை வடிகட்டிப் பழையபடி அதை அடுப்பேற்றிப் பாகுபதத்தில் மேற்படி சூரணத்தைக் கொட்டி நன்றாய்க் கிளறிக் கீழேயிறக்கி ஆறினபின் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௧௦-௨-மேற்படி பஞ்சாமிர்த இரசத்தை இந்த லேகியத்தி லனுபானித்து உண்டுவந்தால் எல்லாவகை மூலரோகங்களும் தீரும்.

குறிப்பு.

இந்த முறையிற் சொல்லப்பட் டிருக்கிற ஐந்து சரக்குகளின் பற்பத்தை அல்லது, செந்தூரத்தைச் சேர்த்து முன்கண்ட பாகப்படி செய்து உபயோகித்தால் எல்லாவகை மூலங்களுங் எத்தனை நாட்சென்றிருந்தாலும் கிரமேணுவாய்க் குணப்படுவதுடன்

ஒருவன் ஆயுளுள்ள வரையிலும் இந்த வியாதி ம றுபடியும் எட்டிப்பாராமல் ஒட்டறவில்லாமல் கெட்டி யாக நீக்கிவிடும், இந்தச் சரக்குகளின் பற்பமுறைகள் செந்தூரமுறைகள் எல்லாம் நமது அநுபோக வைத்தி ய நவநீதம் இரண்டாம் பாகத்தில் வகை விபரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவசியமானவர்கள் அக்கிரந்தத்தைப் பார்த்துத் தம்தம் சக்தியானுசார ம் இடம், பொருள், ஏவல் ஆகியவைகளுக்குத் தகு ந்தநுபோற் செய்து மேற்கண்ட பாகத்தை முடித்து உபயோகித்தால் இந்த மூலரோகமானது எந்த நிலை மையிலிருந்தாலும் வேரறக்கிரமேணுவாய் நீக்கிவிடு கிறது. ஆயுதங்களினால் சஸ்திர முதலியன செய்யவே ண்டிய மூலரோகங்களும் இதனால் குணமாகி யிருக் கிறது. கஷ்டத்திற்குத் தகுந்தகூலியென்பது பிரசித் தமான வழக்குச்சொல். துணிந்தவர்களுக்குச் சமுத் திரம் முழங்கால் அளவு என்பதுபோல ஊக்கமுந் தைரியமுமுள்ளவர்கள் இதனைச் செய்து முடித்து உ லகத்தாருக்குப் பயன்படுமாறு செய்வார்கள். சோம் பலாயுள்ளவர்களுக்கு சாப்பிடுவதும் கஷ்டமாகவே யிருக்கும்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

சா - ம் பிரிவு.

---

### இரசம்.

முன்தொடர்ச்சி (vol - II பக்கம். 176)

#### சுராங்குசம் (வேறு.)

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த நாபிச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூர ணம், அதிமதுரச் சூரணம், சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு இவை வகை-க-க்கு விராகனெடை-ந, வெற் றிலைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையுங் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டு நன்றாய்க் கருக்கிறவரையிலரைத்து நேர்வாளத்தைத் தவிர மற்றசரக்குகளையும் சேர்த்து ஒருமணிநேரமரைத்து எடுத்துக்கொள்ளவும். பிறகு வாளத்தைக் கல்வத்திலிட்டு நன்றாக மசியும்படி ய ரைத்துப் பிறகு முன்சித்தப்படுத்தி வைத்திருக்கிற சூ ரணத்தைச்சேர்த்து நான்கு சாமமரைத்து குன்றிம ணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர் த்தி சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அநுபானம்:—பசுவின்பால், வாதுமைப்பருப் பை யரைத்துப் பிழிந்தபால், பருப்புக்கிரைவிதையை யரைத்துப் பிழிந்தபால், சுரைவிதைப் பருப்பை ய ரைத்துப்பிழிந்தபால்.

பத்தியம்:—புளியைத்தவிர்க்கவும்.

உபயோகம்:—எல்லாவகைச்சுரங்களும் தீரும்.

#### சுராங்குசம் (வேறு.)

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த நெல்லிக்காய்க் கந்தகம், சுத்திசெய்த லிங்கம், சுத்திசெய்த நேர் வாளம் இவை வகை-க-க்கு வராகனெடை-ந, ஊமத் தனிலைச்சாறு செல்லத்தக்கஅளவு.

செய்முறை:—இரசத்தையுங் கெந்தகத்தையும் சேர்த்தரைத்து நன்றாகக் கருத்தபின்பு மற்றச்சரக் கையும் சேர்த்தரைத்து எல்லாம் மிஸ்ரமமானபின்பு, ஊமத்தனிலைச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு-அ-சா மமரைத்துக் குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி,சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அநுபானம்:—மேற்கண்டவைகளாம்.

பத்தியம்:—புளியைத்தவிர்க்கவும்.

உபயோகம்:—பலவகைச் சுரங்கள் தீரும்.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி.

எ - ம் பிரிவு.

### பற்பமுறைகள்.

முன்தொடர்ச்சி (Vol-II. பக்கம். 159.)

கண்டங்கத்திரியிலைச்சாறு விராகனெடை-உ0, தேன் விராகனெடை - ந. இவ்விரண்டையும் மிஸ்ர மித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனு

பானித்துண்ண, நரையிரல் சம்பந்தமான வியாதிகள் தீரும்.

வாய்விளங்கச் சூரணம், விராகனெடை-வ, உலர்த்தின மாதளைவிதைச் சூரணம் விராகனெடை-உ வேப்பிலையீர்க்குச் சூரணம் விராகனெடை-உ, பசுவினெய் விராகனெடை-ரு, இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, தேகத்திலுண்டான கரும்புள்ளி, செம்புள்ளி, முதலிய ரோகங்கள் தீர்ந்து இரத்தசுத்தியுண்டாகி தேகதிடம், தேகபல முண்டாகும்.

பிரமதண்டி யிலைச்சாறு விராகனெடை-ரு, நெய் விராகனெடை-சு, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண பக்ஷவாதம், தனுர்வாதம் ஆகியவைகள் தீரும்.

ஆற்றுத் தும்மட்டிக் காய்ச்சாறு விராகனெடை-உ, சிவதைவேர்ச் சூரணம் விராகனெடை-வ, தேன் விராகனெடை-க, இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, சூதக சம்பந்தமான எல்லா வியாதிகளும் தீரும்.

சுத்திசெய்த மைசாக்ஷிச் சூரணம் விராகனெடை-வ, சுத்திசெய்தநெல்லிக்காய்க்கெந்தகத் தூள் குன்றிமணியெடை-ச, நெய் தேன் இவை வகை- க-க்கு விராகனெடை-ரு. இவையெல்லாவற்றையு மிஸ்ரமித்து மேற்படி பற்பத்தைப்பிரமாணப்படியனுபானித்துண்ண, வயிற்றுநோய், குன்மம், எல்லாவகை வீக்கங்கள் சகஜமூலம், இரத்தமூலம், காமாலை ரோகம்ஆகியவைகள் தீரும். இருதயம், தலைமூளை, ஆகியவைகளைப் பலப்படுத்தி மனக்களிப்பு, சந்தோஷம் ஆகியவைகளை யுண்டாக்கும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

அ-ம் பிரிவு.

### வினா. விடை.

61-ம் விடை. இதன் விபரம் நமது இரசவாத சிந்தாமணி முதற்பாகத்தில் வெளிப்படையாகச் சொல்லப்பட் டிருக்கின்றது. ஆகையால் தயவுடன் அதனைப் பார்த்துக் கொள்ளவும்.

---

### கடிதங்கள்.

சுகாதார போதினி பத்திராதிப ரவர்கட்கு வந்தனம். அடியிற்கண்ட ஔஷதமானது அடியேனுடைய அநுபவத்தில் மிகவும் சிறந்தது. அதை எனது மித்திரர்களுக்கும் உகயோகமாகும்படி எழுதலானேன்.

சுத்திசெய்து கட்டினவீரம், பலம்-டு, அல்லது சரிப்படாவிட்டால் சாதாரணவீரம் பலம் - டு, ரசம் பலம்-டு, கந்தகம் பலம்-டு, நாகம் பலம் - டு - வெங்காரம் பலம் - டு. நாகத்தை உருக்கி ரசத்தைத்தொந்தித்து பிறகு கெந்தகத்தையும் சேர்த்து கல்வத்திலரைத்து நன்றாய் தூளானபின்பு, வெங்காரத்தையும் சேர்த்து அரைத்து நன்றாயறைபட்டபின்பு முலைப்பாலைச் சிறுகச்சிறுகவிட்டு ஒருஜாமம் அரைக்கவேண்டும். நன்றாயரைத்தபிறகு முன்வீரக்கட்டிக்கு கவசம் செய்து வெய்யிலிற் நன்றாய்க் காயவைக்கவேண்டும். பிறகு, உப்பும் கற்சுண்ணமும் சமனெடையாக எலுமிச்சம்பழச் சாற்றைவிட்டு நன்றாயரைத்து சீலையிற்றடவி முன்வீரக் கவசத்துக்கு - எ - சீலைசுற்றவேண்டும். நன்றாய்க் காய்ந்தபிறகு குக்குடப்புடம் போடவேண்டும். கட்டினவீரமாயிருந்தால் புடமாறி எடுக்கலாம். அல்லது மேற்கவசம் பழுத்தவுடன் எடுக்கவேண்டும் (முன்னதுவே சிலாக்கியம் பின்னது சில சுகுமாரதே

கிகளுக்கு-எ-நாளைக்கு மேல் உபயோகித்தல் வாய் சொற்பமாகப் பிடிக்கிறது. புடத்தில் சரக்குளடையும் குறைகிறது.)பிறகு கவசத்தை எடுத்து வீரத்தைஎடுத்து கசடுகளில்லாமல் மெதுவாய்க் கழுவிபோ எப்படி சௌகரியமோ அப்படி சுத்தம் செய்யவேண்டும். இது ஒருவகை வீரத்தின் பாவனையாம்.

௯ வீரம் பலம், க, சுக்கு மேல்தோல் சீவினது, மிளகு, அரிசித்திப்பிலி, இந்த மூன்றையும் இடித்து சூரணஞ்செய்து வஸ்திரத்தில் வடிக்கட்டினதுள் தனித்தனி சூரணம் பலம் - உ, பிரமதண்டுசாறு, தேன் செல்லுமான அளவு, முன்னர் வீரத்தைக் கல்வத்திலிட்டுப்பொடித்து பிரமதண்டின் சாற்றை சிறுகச் சிறுகவிட்டு ஆறுசாமம் அரைக்கவேண்டும். ஆனால் தொடர்ச்சியாக அரைக்கவேண்டும். பிறகு முன் மூவகைச் சூரணங்கள் கூடினது ஆறுபலத்தையும் சேர்த்துக் கொஞ்சம் கொஞ்சமாகத் தேனைவிட்டு அரைக்கவேண்டும். விடும்தேனானது அதுமாத்திரைபோல் உருட்டப்போதுமானதாக இருக்கவேண்டும். ஜாஸ்திகூடாது. அந்தமாதிரி-ரு-மணி சாவகாசம் அரைக்கவேண்டும். இதற்கு சர்வரோகஹரம் என்று பெயர் வைத்திருக்கின்றார்கள்.

அனுபானமும் பிரமாணமும்:— பால்யர்களுக்கு உளுந்துப் பிரமாணம், நல்ல யௌவனவயதானிகளுக்கு,கொண்டைக்கடலைப் பிரமாணம், சேலம் சர்க்கரையென்னும் கருப்புச் சர்க்கரையைக் கையில் அல்லது துணியில் வைத்துக்கையால்நன்றாய்மர்த்தித்துஅதற்குள் வைத்து மூடிதொண்டையிலிட்டு விழுங்கவேண்டும்.

உபயோகம்:—எல்லாவகை சுரங்கள், ஜன்னிபாதங்கள், காசரோகங்கள், சூலைரோகங்கள், குன்மங்கள், வாயுரோகங்கள் முதலிய எல்லாரோகங்களும் போகும், மூலரோகம், கிராணி, அதிசாரம் முதலிய மூலாதார உஷ்ணசம்பந்த ரோகங்கள், பாண்டு, சோகை, காமாலை முதலிய ரோகங்கள், தவிர மற்றவிதமான கிரந்தி ரோகங்கள், புண்கள், புரைகள் முதலிய துஷ்டரோகங்களிலும் ஆரம்ப குஷ்டரோகத்திலும் ரோகம் உக்கிரமாயிருக்கும்போது இதை ஏழு நாள்கொடுத்தால் வியாதியின் வீறு அடங்கிவிடும். எல்லாவற்றிற்கும் சர்க்கரையே அனுபானம். வியாதியை மீறவொட்டாமற் தடுக்கும், இது ஒருவச்சிராயுதம் போன்றது. எ, நாள் சாப்பிட்டு விடவேண்டும். இடையில்-எ-நாள்விட்டு மறுபடி-எ-நாள் சாப்பிடவேண்டும். இந்தப்பிரகாரம் வியாதியின் பலாபலத்துக்குத் தக்கபடி-ரு-ச-தடவைகள் உபயோகிக்க குணமாய்விடும். வேறுமருந்து தேவையிராது. * வீரத்தை நெருப்பிற் கோடாமற் கட்டிப் பாகப்படுத்தாவிட்டால் கொஞ்சம் வாய்பிடிப்பதோடும் அடிக்கடி சாப்பிட சரிப்படவில்லை. ஆனால் இந்த அவுடதத்தின் ஆச்சரியமான குணத்தை அவரவர்களே தெரிந்து கொள்ளலாம்.

பத்தியம்:—புளி, புகை, பெண், வாய்வு பதார்த்தங்களை நீக்கவேண்டும். அல்லது சமயோசிதம்போலவும் செய்து கொள்ளலாம்.

இது அடியேனுடைய அனுபவத்திலுள்ள ஒரு சிறந்த முறை.

குறிப்பு.

எந்த ரோகத்திற்கும் இந்த மருந்தை சமயோசிதப்போல-ரு-௬-எ, நாள்கள் கொடுத்து பிறகு வேறே மருந்து கொடுத்தால் வெகு சீக்கிரமாக குணம்காணலாம். முரட்டுத் தேகிகளுக்கு வாய் பிடிக்கவே மாட்டாது.

சந்தா நே-9.

* வீரமானது நெருப்பிற் கோடாமல் நிற்கும் ஒரு முறையை மறு பத்திரிகையில் எழுதுவாம்.

ப - ர்.

புத்தகம்-௩. 1907ளு பிப்ரவரிமீ 15உ இலக்கம் உ.

சுகாதார போதினி.
க - ம் பிரிவு.

## வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம் 2.)

### இருமல்ரோகச் சிகிச்சை.

மஞ்சள் சூரணம் விராகனெடை-௫, பூநீற்றுத் தூள் அல்லது, சோடா உப்புத்தூள் விராகனெடை-கவ. இவ்விரண்டையுஞ் சேர்த்துக் கல்வத்தி லரைத்துக் கொஞ்சம் ஜலம் வார்த்து ஒரு சாமமரைத்து நான்கு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து உலர்த்தி வைத்துக் கொள்ளவும். வேளை-க-க்கு மாத்திரை-க-உ-ஆகக் காலை மாலை யிரண்டு வேளையும் உபயோகித்துவர வேண்டும். இவ்விதம் ஒரு வாரம் வரை உபயோகித்து வந்தால் எவ்வித இருமலுந் தீரும்.

ஷை (வேறு)

மிளகு, வெண்காரம், கர்க்கடக சிங்கி, இலவங்கம், சிறுதேக்கு, மஞ்சட் கடுக்காய்த்தோல், அரிசித்திப்பிலி, இந்துப்பு இவற்றைத் தனித்தனி யிடித்த தூள் வகை ஒன்றுக்குப் பலம்-வ, மேற்றோல் சீவியிடித்த சுக்குச் சூரணம் பலம்-உவ, எலுமிச்சம்பழச் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—எல்லாச் சூரணங்களையுங் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து நான்கு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

உபயோகம்:——படுக்கைக்குப் போகும்போது ஒன்று அல்லது, இரண்டு மாத்திரைகளை மென்று சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் ஒருவாரம் செய்து வந்தால் எவ்வித இருமலுந் தீரும்.

ஷை (வேறு.)

கண்டங்கத்திரி வேர், அதிமதுரம், கர்க்கடகசிங்கி, சன்னராஷ்டம், மஞ்சட் கடுக்காய்த்தோல், இவற்றின் சூரணம் வகை-க-க்கு விராகனெடை-க, கருவேலம் பட்டைச் சூரணம் விராகனெடை-௫. இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டுக் குளிர்ந்த ஜலம் வார்த்து ஒரு சாமமரைத்து ஒரு குன்றிமணிப் பிரமாணமுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும். இதில் இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கி இதன் ரசத்தை விழுங்கிவரக் கப சம்பந்தமான இருமல், தொண்டைக் கட்டு, கோழைக் கட்டு, கபக்கட்டு ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு)

மிளகு, புங்கம் விதைப் பருப்பு, கண்டங்கத்திரி விதை, பொரித்த வெண்காரம், வெள்ளைக் காய்ச்சுக் கட்டி இவை வகைஒன்றுக்கு விராகனெடை-உ, அபினி விராகனெடை-க, இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை.—மேற்படி சரக்குகளைத் தூள்செய்து எல்லாவற்றையு மொன்றாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாமமரைத்து ஒரு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

உபயோகம்:—இதில் இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கிக் கொண்டு இதன் ரசத்தை விழுங்கிவரக் கப இருமல், சீதளத்தா லுண்டான இருமல், கோழைக் கட்டு, கபக் கட்டு ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு.)

மஞ்சட் கடுக்காய்த்தோல், புங்கம் விதைப் பருப்பு, கர்க்கடக சிங்கி, மிளகு, அதிமதுரம் இவற்றின் சூரணம் வகை-க-க்குச் சமனெடை. இவைகளெல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டுத் தண்ணீர் வார்த்து ஒருச் சாமமரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகளாகச்செய்து உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். இதில் இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கி இதன் ரசத்தை விழுங்கிவர இருமல், கபக் கட்டு, தொண்டைக் கட்டு ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு.)

கசகசா பலம்-க, (இதனைச் சட்டியில் மணம்வரும் படியாக வறுத்து அம்மியில் வைத்தரைத்துத் தூள் செய்துகொள்ள வேண்டும்.) இந்துப்புத் தூள் விராகனெடை-க, மிளகுத் தூள் விராகனெடை - க, மேற்கண்ட மூன்றையும் கல்வத்திற் சேர்த்து ஒருமணி நேரமரைத்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்திக் கொள்ளவும். இந்தச் சூரணத்தில் வேளை

ஒன்றுக்கு நான்கு குன்றிமணி யெடையாக தினமொன்றிற்கு மூன்று வேளை தனியே யாவது, தேன், நெய், வெண்ணெய் முதலியவைகளில் ஒன்றில் அனுபானித்தாவது உட்கொண்டுவரப் பீனிச சம்பந்தமான இருமல் வறட்சியாலுண்டான இருமல். ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு)

சீமை முள்ளங்கிக் கிழங்கு ஒன்று, இதன்மேல் மூன்று சீலமண் செய்து அடுப்பில் போட்டு வெந்த பதத்திலெடுத்து மேற்கவசத்தை நீக்கிப் பிழிந்து இஷ்டமான அளவு கற்கண்டுத் தூள் போட்டுக் கரைத்து இளஞ் சூடான பதத்திற் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலை மாலை யிரண்டு வேளையும் பானஞ் செய்துவர இருமல் ரோகம், கபக்கட்டு, தொண்டை வறட்சி ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு)

மேற்றோல் சீவின அதிமதுரச் சூரணம், வறுத்திடித்த மிளகுச் சூரணம், இவை வகை-௧-க்கு விராகனெடை-௨, கற்கண்டுத் தூள் விராகனெடை - ௪. இவைகளைக் கல்வத்திலிட்டுக் கொஞ்சம் ஜலம் வார்த்தரைத்து இரண்டு குன்றிமணி நிறையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும். இராக்காலங்களில் இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கி அதன் ரசத்தை விழுங்கிவரக் கபசம்பந்தமான இருமல் தீரும்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

௨-ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol - III - பக்கம் 2.)

சீமை யிந்துப்பு.

சல்வேட் ஆப் மாக்னீஷியா. (Sulphate of Magnesia.) எப்ஸம் சால்ட். (Epsom Salt) இந்துப்பு. இது ஊசியைப்போல் நீண்டு வெள்ளையாயும், பிரகாசமாயுமிருக்கும் தோஷமுள்ளதா யிருந்தால் அது நீராகிவிடும். பரிசுத்தமான உப்பும், உவர்ப்புங் கசப்புமுள்ள தாயுமிருக்கும். உப்பில் காற்றுப் பட்டால் தூளாகிவிடும். இந்த உப்பு ஜலத்திற் கரையும். சாரூபத்திற் கரையாது. ஆக்சாலிக் ஆஸிட். (Oxalic acid) என்கிற உப்பும், நாகபஸ்பமும் (Sulpate of Zinc) இந்த உப்பைப்போ லிருக்கும். இவ்விரண்டுங் கொடிய நஞ்சின் சுபாவமுடையவைகள். ஆகையால் மேற்கண்ட சீமை இந்துப்பிற்கும் பின் சொன்ன இரண்டு உப்புகளுக்கும் இடையிலுள்ள பேதத்தைச் செவ்வையாகத் தெரிந்து கொள்ளவேண்டும். இதற்கு விரேசனகாரி, பலகாரி செய்கைகளுண்டு. இதனை ஒரு விராகனெடை முதல் நான்கு விராகனெடை வரையிலுபயோகிக்கலாம். இதில் ஒரு விசேஷ செய்கையுண்டு. அதாவது இந்த உப்பிற்குறைந்த அளவை அதிக அளவான ஜலத்திற்கரைத்துச் சாப்பிட்டால் அதிகமாகப் பேதியாவதும், இந்த உப்பில் அதிகமான அளவை குறைந்த அளவானஜலத்திற் கரைத்துச் சாப்பிட்டால் குறைந்த அளவாகப் பேதியாவதுமேயாம். உதாரணமாக:-நான்குவிராகனெடை மேற்படியுப்பை பத்துபலம் ஜலத்தில் கரைத்துப் பானஞ்செய்வித்தால்எவ்வளவு பேதியாகுமோ அவ்வளவேஎட்டு விராகனெடை உப்பைஐந்துபலம் ஜலத்திற் கரைத்துக் கொடுத்தால் பேதியாகும். இந்தஉப்பினால் வயிறுப்புகிற குணமிருப்பதால் வாசனையுள்ளபொதினாமுதலியஜலத்துடன்கலந்துகொடுப்பது வழமை. விளாவின கெந்தக திராவகத்தில் ௫-அல்லது, ௧௦-துளி இதனுடன் கலந்து விட்டால் இதனாலுண்டாகும் அருவருப்பு முதலியவைகள் நீங்கிப்போம். பேதியுஞ்செம்மையாக ஆகும். சூரத்து நிலஆவாரைக் கஷாயம், ரோஜாப்பூக் கஷாயம் ஆகியவைகள் இதற்குத் தகுந்த அனுபானமாகும். இதன் ருசியை மாற்றுவதற்காக மேற்சொன்ன கெந்தகத் திராவகத்திற்குப் பதிலாக ஒரு விராகனெடை எலுமிச்சம் பழச்சாற்றைச் சேர்த்துக் கொண்டால் மிகவும் உத்தமமா யிருக்கும். அருவருப்பு, கடுப்பு ஆகியவைகளை நீக்குவதற்கு இதனுடன் கொஞ்சம் சுக்குத்தூளை அல்லது, எஸ்சேன்ஸ் ஆப் ஜிஞ்சர் அதாவது இஞ்சித் திராவகத்தில் இருபது துளி சேர்த்துக் கொள்ளலாம்.

சுரங்கள், தாபன ரோகங்கள் ஆகியவைகளின் ஆரம்பத்தில் மேற்கண்ட உப்பில் ஒரு விராகனெடையெடுத்து அதிக அளவான ஜலத்திற் கரைத்துப் பானஞ் செய்விக்க வேண்டும். இவ்விதம் மூன்று மூன்று மணிக்கொரு தடவை கொடுத்து வந்தால் நன்றாய்ப் பேதியாகிப் பலத்தையும் கொடுக்கும். அல்லது, மலபந்தத்தை நீக்குவதற்காககவும் இதனைப் பேதியாக

உபயோகப் படுத்தப்படுகிறது இது குளிர்ச்சியான பேதி. இதனால் ஜலம்போன்ற மலம் போகும்.

விஷபேதி பரவியிருக்குங்காலங்களில் இதை உபயோகிக்கலாகாது. எல்லாபேதி மருந்துகளைப் பார்க்கிலும் இதை அடிக்கடி உபயோகப்படுத்தலாம். இதைப் பேதிக்கிச் சாப்பிட்டபிறகு காற்றில் உலாவிக் கொண்டிருந்தால் பேதிமட்டாகி மூத்திரத்தை யதிகப்படுத்தும். இது சம்பந்தமான சில முறைகளைப் பின்னெழுதுவாம்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

௫-ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. -III-பக்கம்-4.)

பிரசவ இரண்டாம்பருவம் ஆரம்பமானபோது உடனே ஸ்திரீயைப் பாயின்மீது ஒருச்கணித்துப் படுக்க வைக்கவேண்டும். இரண்டு முழங்கால்களையும் தன் வயிற்றுப் பக்கம் மடக்கிக் கொள்ளும்படி செய்து அம்முழங்கால்களுக் கிடையில் சற்றுபருமனான தலையணையை வைக்க வேண்டும். அனுபவமில்லாத சில மருத்துவப் பெண்கள் பிரசவஸ்திரீயை இச்சமையத்தில் மல்லாந்து படுத்துக்கொள்ளும்படி செய்கின்றார்கள். இதனால் அவள் மர்மஸ்தானத்திலிருந்து ஆசனம்வரையில் உள்ள சருமமானது கிழிந்து போக ஏதுவாகும் ஏனெனில் மல்லாந்து படுக்கவைப்பதினால் பிள்ளையின் சிரசு உதயமாகும்போது அதன்பாரமெல்லாம் கீழ்ப்பக்கம் விழுவதேகாரணமாம். ஒருக்கணித்துப் படுக்கவைப்பதினால் அந்தப்பாரம் ஒருபக்கமாக விழும். இன்னும் முழங்கால்களுக்கிடையில் தலையணை வைத்திருப்பதினால் இரண்டு தொடைகளும் அகன்று விரிந்திருந்திருந்து பிள்ளை ஜனனமாக இலேசா யிருப்பதுடன் பிள்ளைத் தாய்ச் சிக்கும் ஒரு ஆதாரவாக இருக்கும். இந்த இரண்டாம் பருவத்தில் மூச்சை உள்ளே யிழுத்து முக்கச் செய்வதினாற் பிரயோசன முண்டாகும். அவசியமான காலங்களில் இவ்விதஞ் செய்விக்கவேண்டியது. பிள்ளைத் தாய்ச்சியின் பின்னே ஒரு ஸ்திரீ உட்கார்ந்துகொண்டு அவள் முதுகின்மீது தன்கையை வைத்துக்கொண்டு சமையாசமையங்களில் தங்கள்கையை அவளுடைய விலாக்களின் மீது தடவும்படி செய்யவேண்டியது. இப்படிச் செய்வதாற் பிள்ளைத்தாய்ச்சிக்கு ஆரோக்கியமாகத் தோற்றும். பிள்ளைத் தாய்ச்சிக்கு முதுகின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் ஸ்திரீயானவள் இடையில் எழுந்து விடாமற் பிள்ளை பிறக்கிறவரையி லுட்கார்ந்திருக்க வேண்டும். இன்னும் பிள்ளைத் தாய்ச்சியின் முதுகின்பேரில் தன் கைகளையும் வைத்துக்கொண் டிருக்கவேண்டும். இப்படிச் செய்வதால் பிள்ளையின் சிரசானது இலேசாய் உதயமாக ஏதுவாகும். பிள்ளையின் சிரசு உதயமானவுடன் அதன்கழுத்தில் நஞ்சுக்கொடி சுற்றிக்கொண்டிருக்கின்றதா வெனக் கையால் தடவிப்பார்க்கவேண்டும். சில சிசுக்களுக்குக் கொடியானது கழுத்திற் சுற்றிக் கொண்டிருப்பதுண்டு. சிசுபிறந்தவுடன் அதை அவிழ்த்துவிடா விட்டால் சிசுவுக்கு அபாயத்திற் கேதுவாகும். ஆகையால் அதிக மெதுவாகவும், அதிக மிருதுவாகவும் கொடியைக் கையினாற் பிரித்துவிட்டுத் தலையின் மேற்புறமாக உள்ளே அழுத்திவிடவேண்டும். சுற்றுகள் அதிகமாக இருந்தால் அதிகத் தாமதப்படும். இச்சமயங்களில் பிரித்துவிடுவதற்குப் பதிலாகப் பின்காண்கிறபடி கத்திரித்துவிடுவது உத்தமம். பிள்ளையின் நாபிக்குச் சமீபத்தில் அக்கொடியில் ஒருமுடி போட்டும் தாய் பக்கத்தில் அக்கொடியில் ஒருமுடி போட்டும் அதிகஜாக்கிரதையுடன் கத்தரிக்கோலால் அந்தச் சுற்றுகளைக் கத்தரித்து விடுவதேயாம்.

சிரசு உதயமானபின்பு இரண்டு தோட்கள் வெளிப்படக்கொஞ்சம் தாமதமுண்டாகும். அனுபவமில்லாத சிலமருத்துவப்பெண்கள் அவசரப்பட்டுத்தலையை யிழுக்கின்றார்கள். சிலசமயங்களில் அதனால்பிள்ளைக்கு அதிர்ச்சியுண்டாகி அபாயத்திற்கேதுவாகி விடுகிறது. மேலும் பிள்ளைபிறந்தவுடனே இரத்தப்பிரவாகம் அதிகமாக உண்டாவதற்குங் காரணமாகிறது.

சிரசு உதயமாகிச் சற்றுதாமதித்து வழமைப்பிரகாரம் நோவுகண்டால் ஒன்றுஞ் செய்யவேண்டியதில்லை. சுபாவம்போல ஜனனமாகிவிடும். ஆனால் நோவு சொற்பமாக வுண்டானாலும் அறவே யுண்டாகாவிட்டாலும் பிள்ளைத்தாய்ச்சியின் வயிற்றின்மீது கையை வைத்து மெதுவாகத் தடவிக் கொடுக்க வேண்டும். இப்படிச் செய்வதால் நோவுண்டாகிப் பிள்ளை வெளிப்பட ஹேதுவாகும். இப்படித் தடவிக் கொடுத்தும் நோவு சொற்பமாயுண்டானால் தாமதிக்கலாகாது. அதிகமாகத் தாமதிப்பதினால் மூச்சடங்கிப்போக ஏது

லாகும். ஆகையால் இவ்விதமான அசந்தர்ப்ப சமயங்களில் பிள்ளையை வெளியிலேயே பிழுத்துத்தீரவேண்டும். ஆனால் அந்தச் சமயத்திலும் பிள்ளையின் சிரசைப் பிடித்து ஒருபோதும் இழுக்கலாகாது. மருத்துவப்பெண்ணானவள் தன்னுடையகைகளின் ஒவ்வொரு அல்லது, இரண்டிரண்டு விரற்களை உள்ளே செலுத்திப் பிள்ளையின் கை மூலத்தில் மாட்டி மெதுவாக வெளிப்படுத்தவேண்டும். இப்படிச் செய்வதால் பிள்ளை, தாய் ஆகிய இருவருக்கும் எவ்வித வருத்தமுமுண்டாகாது. ஆனால் இப்படிச் செய்யு முன்னமேயே வேறொரு ஸ்திரீ தாயின் வயிற்றை அழுத்திப்பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் இரத்தப் பிரவாகத்திற் கேதுவாகும்.

சிரசு உதயமானபின்பு தாய்க்குப்பின்னே உட்கார்ந்து கொண்டிருக்கிற ஸ்திரீயானவள் தன் ஒரு கையைத்தாயின் முதுகில் வைத்துக்கொண்டு. மற்றொரு கையைத் தாயின் வயிற்றின்மீதும் வைத்து அழுத்திப் பிடித்துக் கொண்டிருக்கும்படிக்கும் செய்யவேண்டியது.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

ச-ம் பிரிவு.

### பாலவைத்தியம்.

முன்தொடச்சி (Vol. III. பக்கம் - 5.)

பால் மாந்தம்.

இலக்ஷணம்:-பால்கிறமானபேதி, வயிறுபொருமல், முகம் வேறுபட்டுக் காணுதல், கைகால்கள் வெதும்பிக்காணுதல், பாலுண்ணாமை, வாந்தி, கண்களிற் குழிவிழுதல், தாகம், அதிக வெப்பம், தலையெடுத்து உட்கார்ந்திருக்காமை, தலைநடுக்கல், மார்பு நோவு, வயிற்றுவலி, சிறிச்சிறி அழுதல், பெருமூச்சு, சுரமுதலியவைகளாம். இதற்குப் பீர்மாந்தமென மறுபெயருமுண்டு.

சிகிச்சை:— உத்தாமணிவேர், மேற்றோல் சீவினசுக்கு, வசம்பு, வெள்ளைப்பூண்டிதழ், மிளகு, சடாமாஞ்சில், குட்டிவிளா இவை வகை-க-க்கு விராகனெடை-க. இவையெல்லாவற்றையுஞ் சட்டியிற் போட்டுக் கருக்கி முக்கால் ஆழாக்கு ஜலம் விட்டு கால் ஆழாக்கு ஜலமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டி ஒரு குன்றிமணி யெடை ஆமையோட்டுப் பற்பத்தையும் சேர்த்துப் பானம் செய்விக்க வேண்டும். இவ்விதம் செய்து வருவதால் மேற்கண்ட பால் மாந்த ரோகங்களும், மற்ற மாந்த ரோகங்களும் தீரும்.

ஊது மாந்தம்,

இலக்ஷணம்:— வாந்தி, கழிச்சல், சுரம், கைகால் தேகம் முதலிய விடங்களில் வீக்கம், தேகத்தின் மீது துண்டு துண்டைப்போன்ற வீக்கம், வயிற்றிரைச்சல், சோர்வு, சுரம், அன்ன பானாதிகளிறங்காமை, நாவிற் புண்போலிருத்தல், மிகுந்த சுவாச மெழும்புதல் என்னு மிக்குணங்களை யுண்டாக்கும். இது பனிரெண்டு வயது வரைக்கும் போராடும்.

சிகிச்சை:— மேற்றோல் சீவினசுக்கு, நீர் முள்ளி, குட்டிவிளா, சுரைக்கொழுந்து, நல்ல வேளை இவை வகை க-க்கு விராகனெடை -உ- பூ நாகத்தை சட்டியிற் போட்டு வறுத்தசாம்பல் விராகனெடை-க-இவையெல்லாவற்றையும் சட்டியிலிட்டு முக்கால் ஆழாக்கு ஜலம் வார்த்துக் கால் ஆழாக்காகச் சுண்டவைத் திறக்கி வடிகட்டி அதில் ஒரு குன்றிமணி யெடை ஆமையோட்டுப் பற்பத்தைச் சேர்த்துப் பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் செய்வதால் ஊது மாந்த முதலிய மாந்த ரோகங்கள் தீரும்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

ரு-ம் பிரிவு.

### மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-III-பக்கம் - 6)

பூங்காவி பலம் -உ- மிளகுச் சூரணம் பலம் -உ- தேன் பலம் -சு.

செய்முறை:—தேனைக் காய்ச்சிச் சூடுகண்டவுடன் மேற்கண்ட சூரணங்களைப் போட்டு நன்றாய்க் கிண்டிக் கிளறிக் கீழிறக்கிவைத்து நன்றாய்க் குளிர ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்தில் விட்டு வாய்மூடிப் பந்தனஞ் செய்து சேழ்வாகில் அல்லது, கோதுமையில் நாற்பது நாட் புதைத்து வைத்து நாற்பத்தொன்றாநாளெடுத்து வேளை யொன்றுக்கு விராகனெடை-ரு, வீதமாகக் காலைமாலை யிரண்டு வேளையும் பானஞ் செய்துவர இரத்தமூல முதலியவைகள் தீரும்.

குறிப்பு.

வியாதி கண்டபோது இதைச் செய்து கொள்வது கூடாத காரியமாகையால் சிகிச்சகர்கள் இதனை முன்னதாகவே சித்தப்படுத்திக் கொள்வது உத்தமம்.

ஷை (வேறு)

இனிப்பு மாதுளம்பழ ஷர்பத் விராகனெடை-கூ, காசினி விதைத் திராவகம் விராகனெடை-கூ, மணத்தக்காளித் தீநீர் விராகனெடை-எ௰, வாய்விளங்கச் சூரணம் விராகனெடை-உ௰. இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலை மாலை யிரண்டு வேளையும் செய்துவர இரத்தமூலம், சீழ்மூலம் முதலியவைகள் தீரும்.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

கூ-ம் பிரிவு.

---

இரசம்.

முன்தொடர்ச்சி (vol - III பக்கம். 6)

சுராங்குசம் (வேறு)

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த நாபி, பொரித்த வெண்காரம், மேற்றோல் சீவின சுக்குச் சூரணம், திப்பிலிச் சூரணம், மிளகுச் சூரணம், நெல்லிமுள்ளிச் சூரணம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், சுத்திசெய்த சீமைச் சிவதைவேர்ச் சூரணம், சுத்திசெய்த தாளகம், அக்கிராகாரச் சூரணம், சன்னராஷ்டச் சூரணம்; சுத்திசெய்த சேர்வாளம், இவை வகை-க-க்கு விராகனெடை-க௰, சோற்றுக் கற்றாழைச் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை,—இரசத்தையுங் கெந்தகத்தையுஞ் சேர்த்து நன்றாய்க் கருக்கிற வரையி லரைத்துப் பிறகு தாளகத்தைச் சேர்த்து அரைத்து நன்றாய் மசிந்தபின்பு வாளத்தைச் சேர்த்து மசியும்படியாக அரைத்து மற்ற சரக்குகளையுஞ் சேர்த்து மேற்படி கற்றாழைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு ஜாமமரைத்து குன்றிமணி யெடைப் பிரமாண மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க.

உபயோகம்.—முலைப்பால், தேன் ஆகிய அனுப்பான விசேஷங்களிலிட எல்லாவகைச் சுரரோகங்களும் தீரும்.

பத்தியம்,—சமை யோசிதம்போல் வைத்துக் கொள்ள வேண்டும்.

சுராங்குசம் (வேறு.)

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த நாபி, சுத்திசெய்த கருஊமத்தை விதை, நற்சீரகம், அரிசித்திப்பிலி, நெல்லிவற்றல், மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, கண்டத்திப்பிலி, இவற்றின் தனித்தனிச் சூரணம் வகை-க-க்கு விராகனெடை-க௰, எலுமிச்சம் பழச்சாறு, சோற்றுக் கற்றாழைச்சாறு இவை வகை-க-க்குச் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையுங் கெந்தகத்தையுஞ் சேர்த்து நன்றாய்க் கருக்கும்படியாக அரைத்துக்கொள்ள வேண்டும். பிறகு மற்றச் சூரணங்களையுஞ் சேர்த்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுகச் சேர்த்துப் பனிரெண்டு சாமம் அரைக்கவேண்டும். பிறகு சோற்றுக் கற்றாழைச் சாற்றை சிறுகச் சிறுக வார்த்துப் பனிரெண்டு சாமமரைக்க வேண்டும். பிறகு குன்றிமணிப் பிரமாண மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி-வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க.

உபயோகமும், அனுபானமும்:—உஷ்ண சம்பந்தமான சுரங்களுக்கு ஏலரிசிச் சூரணம், மூங்கிலுப்புச் சூரணம், ஆகியவைகளில் தனித்தனியா யேனும் அல்லது, இரண்டையும் கலந்தாயினும் அனுபானித்துக் கொடுக்க மேற்கண்டவைகள் தீரும்.

இஞ்சிரசம்; தேன், ஆகியவைகளில் ஒன்றிலேனும், அல்லது, இரண்டையுங் கலந்தேனும் மேற்படி மாத்திரையைப் பிரமாணப்படி யனுபானித்துக் கொள்ள வாதசம்பந்தமான சுரரோகங்கள், வாயு சம்பந்த ரோகங்கள் ஆகியவைகள் தீரும்.

நற்சீரகச் சூரணம் விராகனெடை-௰, தேன் விராகனெடை-க, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட மாத்திரையைப் பிரமாணப்படி யனுபானித்துக் கொடுக்க, நடுக்குசுரம், குளிர்சுரம் ஆகியவைகள் தீரும்.

இன்னும் தகுந்த அனுபானங்களில் இந்த மாத்திரையை உபயோகிக்க சன்னிபாத ரோகங்கள், விஷசுரங்கள் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—பொதுவாகப் புளியை நீக்கவேண்டிய து. இன்னும் வியாதி கடினமா யிருந்தால் சமையோ சிதம்போல இலகுவான ஆகாரங்களாகிய கஞ்சி யி னங்கள் முதலியவைகளை உபயோகிக்க வேண்டும். வி யாதிபலம் தேகபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தப டி பத்தியம் ஏற்படுத்துவது சிகிச்சகர்களின் கடமை யாம்.



## சுகாதார போதினி.

எ-ம் பிரிவு.

### பற்பமுறைகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 7.)

#### தங்கபற்பம்.

சுத்திசெய்த தங்கம் விராகனெடை-௩, (இதனை ப் புளியிலேத்தனமுள்ள தகடாக அடித்துக்கொள்ள வேண்டும்.) பொரித்த வெண்காரம் விராகனெடை-௩ சேராங்கொட்டை விராகனெடை-௩, சரக்கொன்றை ப்புளி விராகனெடை-௩, இம்மூன்றையும் கல்வத்தி லிட்டு மைபோலரைத்து மேற்படி தகட்டின் கீழ்மே லாகிய இருபக்கமுஞ் சமமாகப்பூசிச் சிறு அகலில் வைத்து மேலகல்மூடி ஏழுசீலைமண்செய்து உலர்த்தி கெஜபுடம்போட்டுக் குளிர ஆறினபின் எடுத்தால், த கடானது நொறுங்கிப்போ யிருக்கும். இதனைக் கல் வத்திற்போட்டுப் பொடித்துக் கொள்ள வேண்டும். பொடிக்கக்கூடாதபடி அழுத்தமாக இருந்தால் அர த்தால் அராவித் தூளாக்கிக்கொள்ள வேண்டும். பிற கு மேற்கண்ட மூன்று சரக்குகளையும் மேற்கண்ட நி றையேயெடுத்து தங்கத்தூளுடன்சேர்த்து இரண்டு சாமமரைத்துப பில்லைசெய்து அகலில்வைத்து மேல கல்மூடி ஏழுசீலைமண்செய்து உலர்த்தி முன்போற் கெஜபுடமிடவும். குளிர ஆறினபின்னெடுத்தால் எல் லாம் பற்பமாகியிருக்கும். இதனைக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன் மூன்று சரக்குகளையும் முன்னிறை யே சேர்த்தரைத்துப் பில்லைசெய்து ஓட்டில்வைத்து மேலோடுமூடி ஏழுசீலைமண்செய்துலர்த்தி முன்போற் புடமிடவும். இவ்விதம் மடக்கிமடக்கி இன்னும்நான் குபுடமிட்டால் திவ்யமான பற்பமாயிருக்கும்.

#### குறிப்பு.

இது செய்வதற்குக் கொஞ்சம் கஷ்டமான மு றையாயினும் இதினாலுண்டாகுங் குணம் விசேஷமா கையால் முயற்சியுடையோர் செய்துகொள்ளும்படி யாக இம்முறையும் இங்கே யெழுதப்பட்டது.

பிரமாணம்:—அரிசியெடை-உ.

உபயோகமும், அநுபானமும்:—தேன் விராக னெடை-க௨. இதில் மேற்கண்ட பற்பத்தைப் பிரமா ணப்படி யனுபானித்துண்ண,கபசம்பந்தமான எல்லா வியாதிகளும் தீரும். அதிகப் பசிதீபனமுண்டாகும். தேகசக்தி, தேகபலம் ஆகியவைகள் அதிகம் விருத்தி யாகும்.

பசுவின் வெண்ணெய் விராகனெடை - ௩, கற்க ண்டுத்தூள் விராகனெடை-௩, இவ்விரண்டையு மிஸ் ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனு பானித்துண்ண, பித்த சம்பந்தமான எல்லாவியாதி களும் தீரும். மூளையைப் பலப்படுத்தும், தேகபுஷ்டி யுண்டாகித்தேகக்கட்டழகு,தேகவசீகரம் ஆகியவை களுண்டாகும்.

துளசிச்சாறு விராகனெடை-க௨, தேன் விராக னெடை-க௨, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண் ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, எல்லாவகை முறை சுரங்களும் தீரும்.

பத்தியம்:—தேகசுபாவம் வியாதிபலம் ஆகிய வைகளுக்குத் தகுந்ததுபோல் ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது.

(இன்னும் வரும்.)

## கடிதங்கள்.

2-ம் வாலியம் 160-ம் பக்கத்தில் நமதுநண்பர் க னம் கிருஷ்ணசாமி ராஜா அவர்கள் எழுதி யிருக்கும் கனவானுக்குத் தகுந்ததும், மிகவுஞ் சுலபமானதும், மிகவுஞ் சிறந்ததுமான ஓர் அவுடதம் இங்கெழுதப்ப டும்.இது தெரிந்த அவுடதந்தானே யெனச் சுலபமாய் அவமதிக்காமல் நம்பிக்கையுடன்உபயோகித்துவந்தா ல்அக்கனவானுக்குள்ள வியாதிகடவுளின துகிருபையா ல்முழுவதுங் குணமாகிவிடுமென்பதிற் சந்தேகமில்லை. இந்த ரோகமானது மகாரோகங்களில் ஒன்றாகையால் எந்த அவுடதத்தையும் சிலநாள் தொடர்ச்சியாக உ பயோகித்து வரவேண்டும். அங்கு கண்டிருக்கிறபடி பத்துநாள் பதினைந்துநாள் உபயோகிப்பதினால் அவ்வ ளவு விசேஷகுணங்காண்பது அரிதுதான். அக்கன வான் பலஜன உபயோகத்திற்குத் தருமார்த்தமாய்க் கொடுக்க அதிக ஒத்தாசையுள்ளவரா யிருப்பதாலு ம், மேற்படியாருக்கு மேற்படி வியாதி சௌக்கியமா னால் ஊக்கத்துடன் உதவிசெய்து பலஜன நன்மை க்குக் காரணமா யிருப்பாராகையினாலும் இவ்வரி

ய முறையை யிங்கெழுத மனமுவந்தோம. அம்முறை யிது:—

நன்ருய்ப்பழுத்த நாவற்பழும் தேவையான அளவு. இது பழுத்திருக்கிற காலங்களில் இதனைச்சதையுடன் வெயிலினுலர்த்தி அப்படியே யெடுத்துவைத்துக் கொள்ளவேண்டும். காலந்தப்பினுல் இப்பழம் கிடைப்பது அரிதாகும். இதிற் சுமார் அரைப்பலம் எடுத்து அம்மியில் வைத்து ஜலம்வார்த்து மைபோலரைத்து ஒன்று ஒன்றரை ஆழாக்கு ஜலத்திற் கரைத்துச் சாப்பிட்டபின்பு பத்து நிமிஷந் தாமதித்து இதனைப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் ஆகாரம் சாப்பிடும் போதெல்லாம் பானம்செய்ய வேண்டும் இவ்விதம் குறைந்தபக்ஷம் நாற்பதுநாள் தொடர்ச்சியாகச் செய்துவரு வாராயின் கடவுளினது கிருபையாற் பூரணசௌக்கிய முண்டாகும்.

பத்தியம்:—தேககுபாவத்திற்கு எற்றுக்கொள்ளும் வஸ்துக்களைச் சேர்த்துக் கொண்டும் எற்காதவைகளை நீக்கிவிட வேண்டியதுமேயாம்.

### விநோத விசித்திர விரேசனம்.

ஐயா! கீழ்க்கண்ட விரேசன முறையானது அதிக சிறந்த குணத்தையுடைய தாகையாலும், என்னனுபவத்திற் பலதடவை பலருக்கு உபயோகப்படுத்தப்பட்ட தாகையாலும் இப்போதினியின் அபிமானிகளாகிய நமது நண்பர்களுக்கு உபயோகப் படும்பொருட்டாக இங்கெழுதலானேன், அம்முறை பின்வருகிற விதமாம்.

| | |
|---|---|
| நாட்டுச் சவுக்காரம் | பங்கு - க, |
| சுத்தித்த நேர்வாளப்பருப்பு | பங்கு - க. |
| கறியுப்பு | பங்கு - க, |
| * சுத்தித்த சிற்றுமணக்கம்பருப்பு | பங்கு - ச, |

* சிற்றுமணக்கங் கொட்டையையுடைத்துப் பருப்பெடுத்து ஓட்டில் மணம்வரும்படியாக வறுத்துக் கொட்டையின்மீதுள்ள சருகுபோன்ற தோலையும் அதற்குள்ளிருக்கிற முளையிலையையும் நீக்கிவிடுவதே இதன் சுத்தியாம். இவ்விதம் சுத்திசெய்யாவிட்டால் சிலருக்கு வாந்தியுண்டாகும்.

செய்முறை:—இவைகளைக் கல்வத்திலிட்டு எட்டுச்சாமம் அரைக்க மெழுகாகும். இதனைப் பீங்கான் பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—நான்கு குன்றிமணி முதல் எட்டு குன்றிமணிவரையில். முன்னர் இதனை ஒருதடவை உபயோகித்துக் கொண்டால் அவரவர்களின் தேகசுபாவம் தெரிந்துபோகும். பிறகு அதிகப்படுத்தி அல்லது குறைத்துக்கொள்ளலாம்.

பத்தியம்:—இதற்குப் பிரதானமாக ஒன்றுமே கிடையாது. பழையசாதம், கேழ்வரகுக்கூழ் முதலியவைகளையுஞ் சாப்பிடலாம். குளிர்ந்தஜலம் சாப்பிடச்சாப்பிட பேதியாகிக்கொண்டே யிருக்கும். வெந்நீர் சாப்பிட்டால் பேதிநின்றுபோகும். இப்போதும் இதில் ஒருதடவைக்காம்பேதிமெழுகை ஒரு அணுவிற்கு விற்றுவருகிறேன். ஒருதடவை இந்த அவுடதத்தைப் பேதிக்குச் சாப்பிட்டவர்கள் வேறெந்தவகைப் பேதிமருந்தையும் விரும்பார்களென்பது நிச்சயம்.

சந்தா நெம்பர்-உ௯.

மேற்படி நண்பரவர்கள் வாயுமுதலிய ரோகங்களுக்குக் கைவல்யமான ஓர் முறையை யெழுதுகிறதாகவாக்களித் திருக்கின்றனர். அவ்விதமே லோகோபகாரமாக எழுதுவாரென நம்புகின்ரும்.

ப - ர்.

## விளம்பரம்.

இலக்க சௌமிய சாகரம் தெளிபொருள்

விளக்கவுரை முதற்காண்டம்,

ஷ இரண்டாங் காண்டம்.

மேற்படி இரண்டு காண்டங்களும் அச்சாகி விற்பனைக்குச் சித்தமா யிருக்கின்றன. இந்த (இலக்க சௌமிய சாகர) மென்னும் அரிய நூலானது அகஸ்திய மகா முனிவராற் செய்யப்பட்ட தென்பதும் ம

சா சிறப்புற்ற தென்பதும் உலகறிந்தவிஷயம். இந்நூல் இதுவரையில் உரையுடன் வெளிப்படவில்லையென்பது நிச்சயம். இதில் வாதம், வைத்தியம், மாந்திரீகம், ஞானமுதலிய விஷயங்கள் மிகவுந் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இதிலுள்ள பாக்களெல்லாம் சித்திரகவிக் கிரமமாகவும் ஆழ்ந்த பொருட்களை யகத்துள்ளடக்கின வைகளாவும், பிரித்தாலோ உன்னத முறைப்பொருத்த மாகவும், பொருள்களை இலகுவிற் றெரிந்துகொள்ளும் விதமாயும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இது பத்துக் காண்டங்களுள்ளது. இதிலுள்ள முறைகளெல்லாம் நிச்சயமாகக் கைகூடத் தக்கவைகளும், சந்தேகமற்ற வைகளும், பல ஆச்சரியமான வேலைகளைச்செய்யத் தக்கவைகளுமாம். வாதம், வைத்தியம், மாந்திரீகம், ஞான முதலியவைகளை விரும்பும் ஒவ்வொருவருக்கும் இந்த நூல் ஒன்றே போதுமானது. இந்த நூலின் பெருமை இதனை வாங்கிப்பார்த்து இதிலுள்ள முறைகளைச்செய்து கையாண்டால்மட்டுந் தெரியுமேதவிர மற்றவர்களுக்குக் கிஞ்சித்தும் புலப்படாது. இதனைப் படிக்கப் படிக்க அளவற்ற ஆச்சரியத்தையும், ஊக்கத்தையும் அதிகரிக்கச் செய்து வருமே தவிர ஒரு சிறிதும் வெறுப்பிற் கிடந்தராது.

இது மற்ற சித்தர் நூற்களைப்போல எடுத்ததெல்லாம்எண்ணிலாச் சந்தேகமாயும், பார்ப்பவையெல்லாம் பரம ரகசியமாயும், ஓரிடத்திலெடுத்த விஷயம் மற்றோரிடத்தில் முடிவு பெற்றதாயும், ஒரு நூலிற் சொல்லிய முறைக்கு வேறோர் நூலில் மர்மங்கண்டு பிடிக்கவேண்டிய தாயுமுள்ள பலவித மயக்கங்களுக்கு ஏதுவானதல்ல. இதன் பாக்களின் அருத்தங்களை மட்டும் உணர்ந்துகொண்டால் மற்ற எவ்விஷயங்களிலும் எத்தகைய சந்தேகங்களும் ஏற்படாது. இதிற் சொல்லப்பட்ட முறைகள் சம்மந்தமான ஒவ்வொரு சரக்குகளின் பிறப்பிடம், ரூபம், இலக்ஷணம், குணம் பெயர் முதலியவைகள் அநேகவித ஹேதுக்களைக் கொண்டு தெளிவுபடுத்தப் பட்டிருக்கின்றன. இவ்விதமே ஒவ்வொரு விஷயமும் பலவிதத்தாலும் எவ்வித சந்தேகமும் வாராமற் செவ்வனே விளக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் இதிலுள்ள முறைகளைமட்டும் தெரிந்து செய்துகொண்டால் உலகத்தில் எவ்விஷயத்தையும் சாதிக்கலாமென்ற நம்பிக்கை யிருப்பதினாலேயே அநேக முறைகளைச்சொல்லி மனதை அங்குமிங்கு மலையச்செய்யாமல் இதன் பத்துக் காண்டங்களிலும் முக்கியமான சில முறைகளையே சொல்லியிருக்கின்றார். இன்னும் இதில் இரசவாத விஷயத்தை மற்ற நூற்களில் ஆகாத காரியத்தை ஆவதுபோற்காட்டி அதிலும் சந்தேகத்தைமூட்டியிருப்பதுபோலல்லாதுஇவ்வொருவிஷயமும் மெய்யாகவும்,சந்தேகத்திற்கிடமின்றியும் அந்தந்த அளவின் கிரமப்படியும் வெகு நுட்பமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இதன் அருமை பெருமைகளெல்லாம் இந்நூலை ஒருதடவை பார்த்தவுடன் அநுபவசாலிகளுக்கு நன்கு விளங்கும்.

இன்னும் இது வைத்தியர்களைத் தவிர மற்றய தமிழ்கற்கு மாணாக்கர்களுக்கும் பாடங்கேட்கவேண்டிய இன்றியமையாத ஓர் சிறந்த நூலாகும்.

இரசவாதம் வைத்திய முதலியவைகளை விரும்புகின்றவர்களுக்கு இந்த முறைகளைமட்டு முடித்துக்கொண்டாலேபோதுமானதுஇக்காண்டங்களுக்குஅரியபாக்களையெடுத்துக்கொண்டு முறைபிசகாதுதெளிவான உரைஎழுதி யிருப்பதோடியாவரு மெளிதிலுணர்ந்துகொள்ளும் விதமாக அந்தந்தக்காண்டங்களின் கடோசியில் அவைகளி லடங்கியுள்ள முறைகளை வசனரூபமாகவு மெழுதப்பட்டிருக்கின்றது. இவைகள் ஒவ்வொருவர் கையிலும் அவசிய மிருக்கத் தக்கதே. தமிழ் விரும்புங் கனவான்களுக்கும் அவசியமானதே. லோகோபகாரத்தைக் கருதியே இவைகளுக்கு மிகவுங் குறைந்தவிலை யேற்படுத்தப் பட்டிருக்கின்றன.

மேற்படி 2 - காண்டங்களும் ஒன்றாக பைண்டு செய்யப்பட்டிருக்கின்ற பிரதி-1-க்கு கைவிலை ரூபா 1-0-0, வி-பி - ரூபா 1-3-0.

☞ ஹக்கீம் - பா - முகம்மது அப்துல்லா.

புத்தகம்-௩. 1907ஆம் மார்ச்சுமீ 1௳ இலக்கம் - ௩.

சுகாதார போதினி.

௧ - ம் பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம் 9.)

இருமல்ரோகச் சிகிச்சை.

ஷ மாத்திரை.

மஞ்சட்கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், கற்கடகசிங்கி, சிறுதேக்கு, அரிசித்திப்பிலி, படிக்காரம், வெண்காரம், கொடிவேலி வேர்ப்பட்டை, இந்துப்பு, மேற்றோல் சீவின சுக்கு, இவற்றுள் இடிக்க வேண்டியவைகளை யிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவேண்டும். இவை வகை-௧-க்குப் பலம்-௨ (வெண்காரத்தைப் பொரித்துக் கொள்ள வேண்டும்.) கையாந்தகரைச் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—உப்புகளை முன்னர் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்துக் கொள்ளவேண்டும். பிறகு மற்ற சூரணங்களையுஞ் சேர்த்து மேற்படி கையாந்தகரைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்குசாமமரைத்து எட்டுக் குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-௧ வீதம் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்க வேண்டியது.

அனுபானம்:—சூடான தேகிகளுக்கு அதிமதுரக் கஷாயம், மிளகுக் கஷாயம் ஆகியவைகளில் உபயோகிக்க வேண்டியது.

உபயோகம்:—பீனிச சம்பந்தமான இருமல், கபசம்பந்தமான இருமல், கபக்கட்டு, கோழைக்கட்டு, தொண்டைக்கட்டு முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி யேற்படுத்திக் கொள்ளவும்.

இருமல்ரோகக் காரர்களுக்கு எண்ணெயை ஆசனவாயில் தடவி வைத்தால் உடனே இருமல் சாந்தமாகும்.

அரிசித்திப்பிலியை சுடாகு குடிப்பதுபோல சுங்கானில் வைத்துப் புகைக் குடித்து வந்தால், நாட்பட்ட இருமல் ரோகம் குணமாகும்.

எட்டிக் கொட்டையை நெய்யில் வறுத்துக் கரியாக்கித் தூள்செய்து வைத்துக்கொண்டு இரண்டு குன்றிமணி யெடை தேனில் அல்லது, நெய்யில் மர்த்தித்துச் சாப்பிட வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவர எல்லாவகை யிருமல்களுந் தீரும்.

இருமற் சூரணம்.

இந்துப்பு, வளையலுப்பு, கல்லுப்பு, படிக்காரம், வெண்காரம், ஓமம் இவை வகை-௧-க்குப் பலம்-௧, கருவேலம் பிசின் சூரணம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—எல்லாவற்றையும் ஒன்றாகச்சேர்த்துப் பொடித்து ஒரு ஓட்டிலிட்டு மேலோடுமூடி மூன்று சீலைமண்செய்து அரைக் கெஜபுடம் இட்டு ஆறினபின்னெடுத்துக் கல்வத்திற்பொடித்து அதன் சமனெடை மேற்படி கருவேலம்பிசின் சூரணத்தைச் சேர்த்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-௪-அ, காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கவேண்டும்.

உபயோகம்:—எல்லாவகை இருமல்களும்தீரும்.

இருமற்பாயசம்.

கோதுமை உமி படி-௩, இதனை-௧, ஆழாக்குஜலத்தில் ஒரு இரவு ஊறவைத்து மறுநாட் காலையில் நன்றாய்ப்பிசைந்து வடிகட்டிப் பாலை யெடுத்துக்கொள்ள வேண்டும். மேற்றோல் நீக்கின வாதுமைப்பருப்பு, ஜீரணசக்திக்குத் தகுந்தபடி இரண்டு பருப்புமுதல் பதினொன்று பருப்பு வரையிலாம். இதனை அம்மியில் வைத்து மைபோலரைத்து ஜலத்திற் கரைத்து வடிகட்டிப் பாலெடுத்துக் கொள்ளவேண்டும். இம்மூவகைப் பால்களையும் ஒன்றாகச் சேர்த்து அடுப்பேற்றிக் காய்ச்சிக் கொஞ்சம் குழம்பான பதத்தில் அவரவர் களினிஷ்டப்படி சீனிச் சர்க்கரையை அல்லது, கற்கண்டைச் சேர்த்துப் பிறகு கொஞ்சம் காய்ச்சிப் பாயச பதத்திலிறக்கி வைத்து இளஞ்சூட்டுடன் ஜீரணசக்திக்குத் தகுந்ததுபோல் பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் பிரதிதினமும் இரண்டு, அல்லது, மூன்றுதடவை பானஞ்செய்து வரலாம். இப்படிச் செய்துவந்தால் இருமல் சாந்தப்படுவதுடன் இருமலினாலுண்டாகும் தூர்ப்பலம், ஆயாசம், களைப்பு முதலியவை

கள் தீரும். இருமல் தேகிகளுக்கு இதனை ஆகாரமாகச் செய்து உபயோகித்து வரலாம்.

### சிறுபிள்ளை யிருமலுக்கு.

வெண்காரம் பலம்-௧, இதில் அரைப்பலத்தையெடுத்துப் பொரித்துக் கொள்ளவேண்டும். அரைப்பலத்தைப் பொரிக்காமற் சேர்த்து இரண்டையும் பொடித்து இவ்விரண்டிற்குச் சமனெடை மிளகுத்தூளைக் சேர்த்து சோற்றுக் கற்றாழைச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு ஒரு சாமமரைத்து ஒருகுன்றிமணி யெடை மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-௧-௨-பிள்ளையின் வயதிற்குத் தகுந்தபடி யுபயோகிக்கவேண்டும்.

அனுபானம்:—மூலைப்பால், தேன் ஆகியவைகளாம்.

உபயோகம்:—குழந்தைகளுக்குக் காணும் எல்லாவகை யிருமல்களும் தீரும். சுகுமார தேகிகளுக்குக் காணும் இருமல்களிலும் உபயோகிக்கலாம்.

காக்கையின் மலத்தை ஒரு சிறு பையிற் போட்டு முடிந்து சிறு பிள்ளைகள் கழுத்திற் கட்டி தொங்கவிட்டு வைத்தால் இருமல் ரோகஞ் சாந்தமாகுமென ரியாஜே ஆலம் கிர் யென்னுங் கிரந்தத்திற் சொல்லப் பட்டிருக்கின்றது.

இன்னும் வரும்.

---

### சுகாதார போதினி.

௨ - ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol - III - பக்கம் 10.)

கீழ்க்காணும் முறையானது பேதியாகக் கொடுக்க உபயோகப் படுகிறது. இதற்கு வெள்ளைப் பாவன திராவகம். (White Mixture) வைட் மிக்சர் எனச் சொல்லப்படுகிறது.

| | |
|---|---|
| சீமை யிந்துப்பு விராகனெடை | ௧௨ |
| காந்தமண் பற்பம் விராகனெடை | ௨ |
| இஞ்சி ஷர்பத் விராகனெடை | ௮ |
| பெப்ரமெண்டு ஜலம் பலம் | ௫ |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்து வைத்துக் கொண்டு நான்குமணிக்கொருதடவை முக்காற் பலம் பானஞ்செய்ய வேண்டும். நன்றாய்ப் பேதியாகிற வரையில் இதைப் பானஞ் செய்யவும். பானஞ் செய்யும்போது இதனை நன்றாய்க் குலுக்கி மருந்தை யெடுத்துக் கொள்ளவேண்டும். ஏனெனில், அந்த மருந்து கீழ்ப்படிந்திருப்பதுவே காரணமாம்.

### வேறு.

சீமை யிந்துப்பு விராகனெடை ௨. ௪.

* சூரத்துநில ஆவாரைக் கஷாயம் பலம் - ௩. அல்லது ௫.

செய்முறை:—இவ்விரண்டையு மிஸ்ரமித்துப் பானஞ் செய்வித்தால் நன்றாய்ப் பேதியாகும். ஆசன எரிச்சல், களைப்பு முதலியவைகள் ஒன்று மிராது.

இந்தக் கஷாயத்துடன் மேற்கண்டபடி சீமையிந்துப்பைச் சேர்த்த முறைக்கு கருப்புபாவன திராவகம் (Black Mixture) பிளாக் மிக்சர்எனச்சொல்லப்படும்.

இன்னும் வரும்.

---

### சுகாதார போதினி.

௩ - ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. -III-பக்கம்-11.)

சிசுவானது மார்புவரையில் வெளிப்பட்டால் முதுகில் வைத்திருக்கிற கையை யெடுத்து விடவேண்டும். ஆனால் வயிற்றின்மேல் வைத்திருக்கிற கையை யெடுக்கலாகாது. நஞ்சுக்கொடி வெளிப்படுகிற வரையில் கையை வயிற்றின் மீதே வைத்துக்கொண்டிருக்கவேண்டும். அப்படிச் செய்வதால் அனாவசியமான

---

* சூரத்து நிலஆவாரைக் கஷாயம்:—குச்சி, காம்பு முதலியவைகளை ஆய்ந்து நீக்கின சூரத்து நிலஆவாரை விராகனெடை-௬, மேற்றோல் சீவி யிடித்த சுக்குத் தூள் குன்றிமணி யெடை - ௧௪, கொதிக்கின்ற வெந்நீர் பலம்-௮, இந்த வெந்நீரை ஒரு பாத்திரத்திற் போட்டு மேற்படி யிரண்டு சரக்கையும் அதிற் போட்டு அரைமணி நேரமூடி வைத்திருந்து வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயமே சூரத்து நில ஆவாரைக் கஷாயமாம். இந்தக் கஷாயத்தில் ஒன்றரைப் பலமுதல் மூன்று பலம் வரையிற் பானஞ் செய்யலாம்.

இரத்த சிராவகத்திற் கேதுவிராது. பிள்ளைமார்புவரையினுதயமாகி விட்டால் பிள்ளை ஜனனமாவதற்குத் தடையிராது. சில நிமிஷங்களுக்குள் ஜனனமாகிவிடுமென நிச்சயிக்க வேண்டியது. பிள்ளைபிறந்த தக்ஷணமே அதிக மெதுவாகப் பிள்ளையைத் தூக்கி ஒரு பக்கமாக வைத்துவிடவேண்டும். ஏனெனில் சிலசமையங்களில் சில ஸ்திரீகளுக்குப் பிள்ளை பிறந்தவுடனே கெற்பப்பையிலிருந்து இரத்த தாரை வெளிப்படும். அதனால் பிள்ளையின் முகம், காது, மூக்கு, கண் முதலிய விடங்களில் அந்த இரத்தமானது செல்ல ஏதுவாகுமென்பதே காரணம்.

பிள்ளை பிறந்தவுடனே மேற்கண்டபடி ஒதுக்கமாக ஒரு பக்கத்தில் வைத்துக் கொண்டு பிள்ளையின் வாயில் விரலைவிட்டு வாய்க்குள்ளிருக்கும்சளி முதலிய அசுத்தங்களை நீக்கிவிடவேண்டும். இவ்விதம் அசுத்தங்களை நீக்கினபின்பு நஞ்சுக் கொடியை அறுக்க வேண்டும்.

அதன்விபரம்:—நாபியின் பக்கமாக மூன்றுவிரல் நீளம்விட்டு மிருதுவான துணியினால் ஒருமுடிபோடவேண்டும். (கெட்டியான கயிறு முதலியவைகளாற் கட்டினால் அது அறுந்துபோவதற்கு ஏதுவாகும்.) இதற்குமேல் அரையங்குலம்விட்டு வேறொரு முடிச்சுப் போடவேண்டும். இந்த இரண்டு முடிச்சுகளுக்கு மத்தியில் கூர்மையான கைத்திரிக்கோலால் இலகுவாய்க்கத்தரித்து விடவேண்டும். அதை மழுங்கக்கத்தியால் பலதடவை யறுப்பதினாற் சிசுவிற்குக் கஷ்டமுண்டாகும். இவ்விடத்தில் பின்காணும் விஷயத்தைக் கவனித்தில் வைக்கவேண்டியது ஆவசியகம் அதாவது, சிசு பிறந்தபின்பு அது அழாமலிருந்தால் நஞ்சுக் கொடியை அறுக்கலாகாது என்பதே. பிள்ளை அழாமலிருப்பதின் கருத்தாவது இன்னும் அது மூச்சு வாங்கவில்லை. இன்னும் அது தாயினுடைய இரத்தத்தின் மூலமாகவே ஜீவித்துக் கொண்டிருக்கின்றது என்பதாம் இந்தச் சமையத்தில் நஞ்சுக் கொடி யறுபட்டால் பிள்ளைக்கு மரணமே கெதியாகும்.

பிள்ளையின் வாயிலிருந்து கோழை முதலிய அசுத்தங்களை நீக்கினபின்பு அது அழாமலிருந்தால் கொஞ்சம் குளிர்ந்த ஜலத்தைக் கையிலெடுத்து முகத்தில் இரண்டொரு தடவை தெளித்தால் அது பேங்கி அழ ஆரம்பிக்கும். இப்படிச் செய்தும் குழந்தை அழாவிட்டால் ஒருசிறு பாத்திரத்திற் குளிர்ந்த ஜலத்தை நிறைத்துப் பிள்ளையைக் கழுத்துவரை அதில் நனைத்து உடனே அதை மெதுவாக எடுத்துக் கொள்ளவேண்டும். இப்படிச் செய்வதால் பிள்ளையானது திடுக்கிட்டு ஏங்கி அழ ஆரம்பிக்கும். இப்படிச் செய்தும் அது அழாவிட்டால் சீதோஷ்ணமான ஜலத்தில் அதாவது இளஞ்சூடான ஜலத்தில் முன்போற் கழுத்துவரை நனைத்து உடனே மெதுவாக எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் சீதோஷ்ண ஜலக்தில் ஒருதடவையும் குளிர்ந்த ஜலத்தில் ஒருதடவையுமாக மாற்றி மாற்றிப் பிள்ளை அழுகிறவரை இரண்டு மூன்று தடவைசெய்யவேண்டும்.

பிள்ளையின் முதுகில் கையால் மெதுவாகத் தட்டிக் கொடுப்பதினாலும், மூக்கில் இறகு முதலியமிருதுவாகிய வஸ்துக்களை மூக்கில் விட்டுக் கூச்சமுண்டாக்குவதினாலும் சிலசமையம் பிரயோசனங் காணப்பட்டிருக்கிறது. தெய்வாதீனமாக இந்தச் சிகிச்சைகளினால் அழாவிட்டால் பிள்ளையை தன்காலை நீட்டிக் கொண்டு அதன்மேல் மல்லாத்திப் படுக்கவைத்து தன் இரண்டுகைகளையும் அதன் இரண்டு அக்குளுக்குள் செலுத்திக் கொஞ்சம் தூக்கிப்பிடித்து அதன்வாயில் ஊத வேண்டியது. ஊதினவுடனே அதன்புயத்தை அதன்விலாவோடு சேர்த்து அழுத்த வேண்டியது. பிறகு முன்போற் கொஞ்சந் தூக்கி அதன்வாயில் ஊதவேண்டியது. பிறகு முன்போல் புயத்தைவிலாவோடு அழுத்திக் கொஞ்சம் அமுக்கிப் பிடிக்க வேண்டியது. இவ்விதம் மாற்றி மாற்றிச் சிலதடவைகள் செய்தால் கடவுளினது கிருபையால் பிள்ளையானது இரண்டு மூன்று தடவை பேங்கி பேங்கிச் சுவாசித்து அழ ஆரம்பிக்கும்.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

௪-ம் பிரிவு.

---

## பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. III. பக்கம் - 12.)

### சுரமாந்தம்.

இலக்ஷணம்:—தேகம், முகம். ஆகியவை மினுமினுத்திருத்தல், சுரமிருத்தல், முலையை வாயில் வைத்தூட்டினும்கொஞ்சங் கொஞ்ச முண்ணுதல், நீர் சிவந்திருத்தல், அடிக்கடி அழுகை, பொடியிருமல், மல

ஜலக் கட்டு, பசியில்லாமை, தேகமெல்லா வேவா யிருத்தல், மயக்கம் முதலியவைகளாம்.

சிகிச்சை.

தும்பையிலை, உத்தாமணியிலை, துளசியிலை வெதுப்படக்கி யிலை, நாயுருவியிலை, சாணக்கியிலை, பேய்மிரட்டியிலை, விஷ்ணுகரந்தையிலை இவை வகை-த்-க்கு விராகனெடை-க. இவை யெல்லாவற்றையும் இடித்துச் சாறுபிழிந்து ஒட்டைச் சற்று காயவைத்து அதிற் போட்டு முரித்து ஒரு குன்றிமணி யெடை ஆமையோட்டுப் பற்பத்தை மிஸ்ரமித்துப் பானஞ்செய்விக்கவேண்டும். இவ்விதம் செய்வதால் மேற்கண்ட சுரமாந்த ரோகமானது தீரும்.

கல் மாந்தம்.

இலக்ஷணம்:—வயிறு கல்போ லிருத்தல், சுரமடித்தல், மெய் வெளுத்திருத்தல், காவுலர்ந்திருத்தல், கால் குளிர்ந்திருத்தல், முகத்தை நெருடிக் கொள்ளுதல், பலவிதமாகக் கழிதல், உடல் மெலிந்துபோதல், சிரசில் வியர்வை முதலியவைகளாம்.

சிகிச்சை:—அரிசித்திப்பிலி, வசம்பு (இதனைச் சுட்டுச் சாம்பலாக்கிக் கொள்ள வேண்டும்) பேய் மிரட்டியிலை, நிலஆவாரையிலை, கடுகு ரோகணி, நாயுருவியிலை. இவை வகை-க-க்கு விராகனெடை-உ௰, வேப்பெண்ணெய் பலம் உ௰.

செய்முறை:—மேற்படி வகைகளில் இலைகளை யரைத்தும் மற்றச் சரக்குகளையிடித்துத் தூள்செய்தும் மேற்படி யெண்ணெயிற் போட்டுக் காய்ச்சி மெழுகு பதத்தி லிறக்கிக் கொள்ளவும். மேற்படி யிலைகளைத் தனித்தனி சாறு பிழிந்து மேற்கண்ட அளவு சேர்த்து எண்ணெ யெரித்துக் கொள்வது உத்தமமாயிருக்கும்.

பிரமாணம்:—விராகனெடை-க, இதில் ஒருகுன்றிமணி யெடை ஆமையோட்டுப் பற்பத்தை மிஸ்ரமித்துப் பிள்ளைக்குக் குடிப்பாட்ட வேண்டும். இவ்விதம் வியாதி குணப்படுகிற வரையிற் செய்துவர வேண்டும்.

உபயோகமும்.—கல்மாந்த முதலிய பல வகை மாந்தரோகங்கள் தீரும்.

வலிப்பு மாந்தம்.

இலக்ஷணம்:—கை கால்கள் அடிக்கடி யிழுத்தல், பல்கிட்டி யிருத்தல், பலவிதக் கழிச்சல், மார்பில் வலி, வாந்தி, மயக்கம், முதலியவைகளாம்.

சிகிச்சை:-மேற்றோல் சீவின சுக்கு, சன்னராஷ்டம், வெள்ளைப் பூண்டிதழ், மாவிலிங்கப் பட்டை, நல்ல வேலைவேர், முருங்கைப் பட்டை, முசுறு முட்டை, இவை வகை-க-க்கு விராகனெடை - உ௰, வேப்பெண்ணெய் பலம்-உ௰.

செய்முறை:—மேற்படிச் சரக்குகளை மைபோலரைத்து எண்ணெயிற் கலக்கிப் பதமாகக் காய்ச்சி யிறக்கிக் கொள்ளவும்.

பிரமாணம்:-விராகனெடை-க, க௰, இதில் வேளை ஒன்றுக்கு ஒரு குன்றிமணி யெடை கோரோசனையைப் பொடித்து மிஸ்ரமித்துக்கொடுக்கவேண்டும். வெள்ளைப் பூண்டுத் தைலத்தைத் தேகத்தின் மேற்பூசிவர வேண்டும்.

உபயோகம்:—வலிப்பு மாந்தம் முதலிய பாந்த ரோகங்கள் தீரும்.

(இன்னும் வரும்.)



சுகாதார போதினி.

ரு - ம் பிரிவு.



மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-III-பக்கம்-12)

மூலரோகக் களிம்பு

ஜாதிக்காய்ச் சூரணம் விராகனெடை - க௰, மாசக்காய்ச் சத்து விராகனெடை-௬, சுத்திசெய்த ஆட்டுக் கொழுப்பு விராகனெடை-எ௰.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கல்வத்திலரைத்து, மெழுகுபோலானபின் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப் படுத்தவும்.

உபயோகம்:— இதனை மூல முளைகளின் மீது தடவி வருவதினால் மூல முளை கரைந்து மறைந்துபோம்.

வேறு.

வெடியுப்புத் தூள் விராகனெடை-வ, வெள்ளாட்டுப் பால் பலம்-ரு, சீனிச் சர்க்கரை பலம் - க, இவை யெல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகித்து வந்தால் இரத்தமூலம், சுட்க மூலம் ஆகியவைகள் தீரும்.

வேறு.

பச்சையான மாவிலையைக் கசக்கிச் சுங்கானில் வைத்து நெருப்பிட்டுச் சுங்கான் பிடிப்பதுபோல் புகைக் குடித்து வந்தால் இரத்தமூலங் குணமாகும்.

வேறு.

மாதுளை போட்டை உலர்த்திச் சூரணஞ் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். இதில் விராகனெடை-ஒ, விளாவின தயிருடன் சேர்த்துப்பானஞ்செய்யவேண்டும். விளாவின தயிரானது சுமார்-ரு-பலமிருந்தாற் போதுமானது. இவ்விதம் காலை மாலை யிரண்டு வேளையும் உபயோகிக்க வேண்டியது. அப்படிச்செய்யக்கூடாவிட்டால் காலையில் ஒருவேளை மாத்திரஞ் செய்யக் வேண்டியது. தாகத்திற்கும் மேற்படி விளாவின தயிரையே பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் செய்து வருவதினால் இரத்தமூலம் குணமாகும்.

வேறு.

சட்டிப் பற்றுக்கரி (அதாவது சட்டியை அடுப்பில் வைத்தெரிக்கும்போது சட்டியின் பின்பக்கத்தில் ஒட்டியிருப்பதாம்) இதனைச் சுரண்டியெடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். இதில் வேளை ஒன்றிற்குக் கால் விராகனெடை வீதமாக இரண்டு மூன்று பலம் ஜலத்திற்போட்டுக் கரைத்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் செய்துவருவதினால் இரத்தமூலம் தீரும்

வேறு

எட்டிக்கொட்டையைச்செங்கல்மீதுஜலம்வார்த்து அதில் இழைத்து மூலமுளைகளின்மீது பூசவேண்டும் பிரதிதினமும் மும்மூன்று தடவை பூசிவந்தால் மேற்படிமுளைகள் வதங்கிச்சுருங்கி உதிர்ந்துபோகும்.

இன்னும் வரும்.

சுகாதார போதினி.

க-ம் பிரிவு.

இரசம்.

முன்தொடர்ச்சி (vol - III பக்கம். 14)

ஹேம கிருபா ரசம்.

சுத்திசெய்த இரசம் ஒருபங்கு, தங்கத்தை அராவின அரபொடி காற்பங்கு, சுத்திசெய்த கெந்தகம் இரண்டரைப்பங்கு, முள்ளிலவு மரப்பட்டைச் சாறு செல்லத்தக்க அளவு. இம்மூன்றையுங் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு இரண்டு சாம மரைத்து ஒரு உருண்டையாகச் செய்து மண்ணோட்டில் வைத்து மேலோடு மூடிச் சீலமண் செய்து உலர்த்திக்கொள்ள வேண்டும். ஒரு முழச் சதுரக் குழிதோண்டி அதன் மத்தியில் அரைச்சாண் சதுரம் பள்ளந்தோண்டி அதில் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற கவசத்தைவைத்து அச்சிறுகுழி நிறைய மணலைப்போட்டமுக்கி விடவேண்டும். பிறகு அந்தக்குழி நிறைய விராட்டியை அடுக்கி நெருப்பிட்டுக் குளிர ஆறினபின் எடுத்து அறுகண்ட எடை கெந்தகஞ்சேர்த்து இஞ்சிரசத்தைச் சிறுகச் சிறுகவிட்டு இரண்டு சாமம் அரைக்கவேண்டும். பிறகு கொடிவேலிவேர்க்கஷாயத்தைவிட்டு இரண்டுசாமம் அரைக்கவேண்டும். பிறகு பருமனான பலகரைகளையெடுத்து அதற்குள் நிறைத்துவிட வேண்டும். பிறகு மருந்தினெடையில் அரைக்காற்பங்கு வெண்காரம் வெண்காரத்தினெடையிற்பாதி நாபிச்சூரணம், இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டுக் கள்ளிப்பாலைவிட்டு ஒருமணிநேரமரைத்துப் பலகரையின்வாயில் தடவி வாய்பந்தனஞ் செய்ய வேண்டியது. பிறகு ஒரு பானைக்குள் சுண்ணாம்பைத்தடவி அதற்குள் முன் சித்தப்படுத்தின பலகரைகளைவைத்து அந்தப் பானையின் வாய்க்குப் பொருந்தும்படியான மற்றொரு பானையைத் தேய்த்துப் பொருந்தும்படி மூடி ஏழு சீலமண்செய்து உலர்த்திக் கெஜபுடம் போடவேண்டும். நன்றாய்க் குளிர ஆறினபின் எல்லாவற்றையும் எடுத்துப் பொடித்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—ஒரு குன்றிமணிமுதல் இரண்டு குன்றியணியெடை வரையிலாம்.

அனுபானமும், உபயோகமும்:—இலந்தைக்கொட்டைச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், மயிலிறகைச் சுட்ட சாம்பல் இவை வகை-க-க்குக் குன்றிமணியெடை - ௪, கற்கண்டுத் தூள் குன்றிமணியெடை-அ, தேன் விராகனெடை-க, இவையெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண எல்லாவகைக் கபரோகங்களும், கபதொந்த ரோகங்களும் தீரும்.

இன்னும் சங்கிரஹணி, இருமல், சுவாசகாசம், மந்தாரகாசம், அரோசிகம், பலஹீனம் முதலியரோக்கங்களும் தீரும்.

பத்தியம்:—இதற்கு உப்பை நீக்கவேண்டியது. கூடாதசமையத்தில் குறைந்தபக்ஷம் மூன்று நாளாயினும் உப்பை நீக்கிவைக்க வேண்டியது.

இன்னும் வரும்.



## சுகாதார போதினி.

எ-ம் பிரிவு.



### பற்பமுறைகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 14.)

நாம் இந்தப் பிரிவில் இதுவரையில் தங்கப், வெள்ளி முதலியவைகளில் பல பற்பவகைகளை யெழுதிவந்தோம். அவை சம்பந்தமான முறைகள் இன்னும் அனேகமுள. இன்னும் அவற்றுள் அருமையான முறைகளுமுண்டு. கடவுள் கிருபைசெய்தால் அனுபோகவைத்திய ரத்நாகரத்தில் எழுதுவோம். நமது அனுபோகவைத்திய நவநீதத்திலும் அநேகமுறைகள் எழுதப்பட்டிருக்கின்றன. ஆகையால், அம்முறைகளை யிம்மட்டோடு நிறுத்தி இனித் தாம்பிரபற்பமுறைகளை யெழுதுவாம்.

பற்பத்திற்கு வேண்டிய தாம்பிரமானது நைப்புள்ளதாகவும், கனமானதாகவும், சிவந்த வருணமுள்ளதாகவும் இருக்கவேண்டும். இவ்வகைத் தாம்பிரத்தைச் சுத்திசெய்து பற்பஞ்செய்ய வேண்டும். இதன் சுத்திக்கிரமம் அநேகவகையாயினும் இலகுவான இரண்டொரு சுத்தி முறைகளைமட்டும் இங்கெழுதுவோம்.

#### தாம்பிரச்சுத்தி.

தேவையான அளவு தாம்பிரத்தை மெல்லியதகடாகச்செய்து கொள்ளவேண்டும். அதைக் கரிநெருப்பில்வைத்துப் பழுக்கக்காய்ச்சி எள்ளெண்ணெயில் தோய்க்கவேண்டும். இந்த எண்ணெயானது தோய்த்த தகடானது ஆழ்ந்து கிடக்கும்படியாக இருக்கவேண்டும். ஒருதடவை தோய்த்த எண்ணெயை மறுதடவைக்கு உபயோகிக்கலாகாது. தடவைக்குத் தடவை புதிதாக வார்த்துக்கொள்ள வேண்டும். முன் தோய்த்த தகடானது ஆறினபின் முன்போல் நெருப்பில்வைத்துப் பழுக்கக்காய்ச்சி முன்போல் தோய்க்கவேண்டும். இவ்விதம் மடக்கிமடக்கி எண்ணெயில் ஏழுதடவையும், புளித்தமோரில் ஏழுதடவையும், காடியில் ஏழுதடவையும், கோமூத்திரத்தில் ஏழுதடவையும், கொள்ளுக்கஷாயத்தில் ஏழுதடவையும் முன்போல் தோய்த்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் செய்தெடுத்த தாம்பிரமானது பற்பம்செய்ய யோக்கியதையான சுத்தியுள்ளதாம்.

(இன்னும் வரும்)



## விளம்பரம்.

இலக்க சௌமிய சாகரம் தெளிபொருள்

விளக்கவுரை முதற்காண்டம்,

ஷை இரண்டாங் காண்டம்.



மேற்படி இரண்டு காண்டங்களும் அச்சாகி விற்பனைக்குச் சித்தமா யிருக்கின்றன. இந்த (இலக்க சௌமிய சாகர) மென்னும் அரிய நூலானது அகஸ்திய மகா முனிவராற் செய்யப்பட்டதென்பதும் மகா சிறப்புற்றதென்பதும் உலகறிந்தவிஷயம். இந்நூல் இதுவரையில் உரையுடன் வெளிப்படவில்லையென்பது நிச்சயம். இதில் வாதம், வைத்தியம், மாந்திரீகம், ஞானமுதலிய விஷயங்கள் மிகவுந் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இதிலுள்ள பாக்களெல்லாம் சித்திரகவிக் கிரமமாகவும் ஆழ்ந்த பொருட்களை யகத்துள்ளடக்கின வைகளாவும், பிரித்தாலோ உன்னத முறைப்பொருத்த மாகவும், பொருள்களை இலகுவிற் றெரிந்துகொள்ளும் விதமாயும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இது பத்துக் காண்டங்களுள்ளது. இதிலுள்ள முறைகளெல்லாம் நிச்சயமாகக் கைகூடத் தக்கவைகளும், சந்தேகமற்ற வைகளும், பல ஆச்சரியமான வேலைகளைச்செய்யத் தக்கவைகளுமாம். வாதம், வைத்தியம், மாந்திரீகம், ஞா

ன முதலியவைகளை விரும்பும் ஒவ்வொருவருக்கும் இந்த நூல் ஒன்றே போதுமானது. இந்த நூலின் பெருமை இதனை வாங்கிப்பார்த்து இதிலுள்ள முறைகளைச்செய்து கையாண்டால்மட்டுந் தெரியுமேதவிர மற்றவர்களுக்குக் கிஞ்சித்தும் புலப்படாது. இதனைப் படிக்கப் படிக்க அளவற்ற ஆச்சரியத்தையும், ஊக்கத்தையும் அதிகரிக்கச் செய்து வருமே தவிர ஒரு சிறிதும் வெறுப்பிற் கிடந்தராது.

இது மற்ற சித்தர் நூற்களைப்போல எடுத்த தெல்லாம்எண்ணிலாச் சந்தேகமாயும், பார்ப்பவையெல்லாம் பரம ரசசியமாயும், ஒரிடத்திலெடுத்த விஷயம் மற்றோரிடத்தில் முடிவு பெற்றதாயும், ஒரு நூலிற் சொல்லிய முறைக்கு வேறோர் நூலில் மர்மங்கண்டு பிடிக்கவேண்டிய தாயுமுள்ள பலவித மயக்கங்களுக்கு ஏதுவானதல்ல இதன் பாக்களின் அருத்தங்களை மட்டும் உணர்ந்துகொண்டால் மற்ற எவ்விஷயங்களிலும் எத்தகைய சந்தேகங்களும் ஏற்படாது. இதிற் சொல்லப்பட்ட முறைகள் சம்மந்தமான ஒவ்வொரு சரக்குகளின் பிறப்பிடம், ரூபம், இலக்ஷணம், குணம் பெயர் முதலியவைகள் அநேகவித ஹேதுக்களைக் கொண்டு தெளிவுபடுத்தப் பட்டிருக்கின்றன. இவ்விதமே ஒவ்வொரு விஷயமும் பலவிதத்தாலும் எவ்வித சந்தேகமும் வராமற் செவ்வனே விளக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் இதிலுள்ள முறைகளைமட்டும் தெரிந்து செய்துகொண்டால் உலகத்தில் எவ்விஷயத்தையும் சாதிக்கலாமென்ற நம்பிக்கை யிருப்பதினாலேயே அநேக முறைகளைச்சொல்லி மனதை அங்குமிங்கு மலையச்செய்யாமல் இதன் பத்துக் காண்டங்களிலும் முக்கியமான சில முறைகளையே சொல்லியிருக்கின்றார். இன்னும் இதில் இரசவாத விஷயத்தை மற்ற நூற்களில் ஆகாத காரியத்தை ஆவதுபோற்காட்டி அதிலும் சந்தேகத்தைமூட்டி யிருப்பதுபோலல்லாது ஒவ்வொருவிஷயமும் மெய்யாகவும், சந்தேகத்திற்கிடமின்றியும் அந்தந்த அளவின் கிரமப்படியும் வெகு நுட்பமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இதன் அருமை பெருமைகளெல்லாம் இந்நூலை ஒருதடவை பார்த்தவுடன் அநுபவசாலிகளுக்கு நன்கு விளங்கும்.

இன்னும் இது வைத்தியர்களைத் தவிர மற்றைய தமிழ்கற்கு மாணாக்கர்களுக்கும் பாடங்கேட்கவேண்டிய இன்றியமையாத ஓர் சிறந்த நூலாகும்.

இரசவாதம் வைத்திய முதலியவைகளை விரும்புகின்றவர்களுக்கு இந்த முறைகளைமட்டு முடித்துக் கொண்டாலேபோதுமானது இக்காண்டங்களுக்கு அரியபாக்களையெடுத்துக்கொண்டு முறைபிசகாது தெளிவான உரைஎழுதி யிருப்பதோடு யாவரு மெளிதி லுணர்ந்துகொள்ளும் விதமாக அந்தந்தக்காண்டங்களின் கடோசியில் அவைகளி லடங்கியுள்ள முறைகளை வசனரூபமாகவு மெழுதப்பட்டிருக்கின்றது. இவைகள் ஒவ்வொருவர் கையிலும் அவசிய மிருக்கத் தக்கதே. தமிழ் விரும்புங் கனவான்களுக்கும் அவசியமானதே. லோகோபகாரத்தைக் கருதியே இவைகளுக்கு மிகவுங் குறைந்தவிலை யேற்படுத்தப் பட்டிருக்கின்றன.

மேற்படி - 2 - காண்டங்களும் ஒன்றாக பைண்டு செய்யப்பட்டிருக்கின்ற பிரதி-1-க்கு கைவிலை ரூபா 1 - 0 - 0, வி - பி - ரூபா 1 - 3 - 0.

☞ ஹக்கீம் - பா - முகம்மது அப்துல்லா.

---

சந்தா தாரர்களின் பேயர்.

கீழ்க்கண்ட கனதனவான்கள் நமது போதினியின் 1907௵ சந்தாவை நம்மீது பேரன்புடன் முன் பணமாக அனுப்பினதற்காக நாம் மனப் பூர்வமான வந்தனத்துடன் பெற்றுக் கொண்டோம்.

| | | |
|---|---|---|
| கனம். கிருஷ்ணசாமி ராஜா வேட்டவளம். | 2 | ,, ,, |
| கனம். கிருஷ்ண சாமி நாயுடு நாகப்பட்டணம். | 2 | ,, ,, |
| கனம். மாதவாச்சாரியார் சிறேமல்குடி. | 2 | ,, ,, |
| கனம். P. விஸ்வாஸ், காடிகிஸ்ட் சிலுவார் பட்டி. | 2 | ,, ,, |
| கனம். K. சாயபு மரைக்காயர் திரிசி. | 2 | ,, ,, |
| கனம். R. முத்து நரசிம்மலு நாயுடு மேலப்புதுப் பாக்கம். | 2 | ,, ,, |
| கனம். S. K. கந்தசாமி கவுண்டர் ராமநாராயண புரம். | 2 | ,, ,, |

கனம். முகம்மது காசிம் சாயபு
குண்ணத்தூர். 2 ,, ,,

கனம். K. தர்மராஜ அய்யர்
பார்வதி புரம். 2 ,, ,,

கனம். V. சுப்பய்ய காரு
கும்பகோணம். 2 ,, ,,

கனம். M. நாராயணசாமி அய்யர் B. A. B. L.
திருவல்லிக் கேணி. 2 ,, ,,

கனம். M. சுப்பிரமணிய அய்யர்
கோட்டைப் பாடி. 2 ,, ,,

கனம். K. குப்புசாமி அய்யர் B. A. B. L.
திருவல்லிக் கேணி. 2 ,, ,,

கனம் ஞானசேகர முதலியார்
மதறாஸ். 1 ,, ,,

கனம். A. L. M. முகம்மத் முகைதீன் அவர்கள்
கொழும்பு. 2 ,, ,,

கனம். J. S. பிச்சை முத்து
காரைக்கால். 2 ,, ,,

கனம். T. ஆறுமுக முதலியார்
திருவடீஸ்வரன் பேட்டை. 1 ,, ,,

கனம். E. அண்ணுசாமி முதலியார்
நாமக்கல். 2 ,, ,,

கனம். C. மாதவராவ்
தும்கூர். 2 ,, ,,

கனம். M. ரத்தினவேலு முதலியார்
மதறாஸ். 2 ,, ,,

கனம். E. ராகவாசாரியார்
நெல்லூர். 2 ,, ,,

கனம். M, கந்தசாமி பிள்ளை
பழனி. 2 ,, ,,

கனம். கைலாஸநாத சர்மா
எடையாத்தாங்குடி. 2 ,, ,,

கனம். N. S. சுந்தரேச அய்யர்
உதயமார்த் தாண்டபுரம். 2 ,, ,,

கனம். N. V. நாராயணய்யர்
டக்கலி. 2 ,, ,,

கனம். எத்திராஜுலு நாயுடு
சிவகிரி. 2 ,, ,,

கனம். V. S. மஹாதேவ அய்யர்
விக்கிர பாண்டியன். 2 ,, ,,

கனம் O. C. P. S. E. பக்கீர்முகைய‌த்
தீன் ராவுத்தர், மதுரை. 2 ,, ,,

கனம். உ. R. சுப்பிரமணிய அய்யர்
தாழக்குடி. 2 ,, ,,

கனம். M. சங்கர அய்யர்
ராதாபுரம். 2 ,, ,,

கனம். உ. இரத்தின வேலு செட்டியார்
மதறாஸ். 2 ,, ,,

கனம். M. S. வெங்கட ராமய்யர்
மேலமங்கலம். 2 ,, ,,

கனம். S. முத்து குமாரஸ்வாமி பிள்ளை
கூத்துபாட்டர் தோப்பு. 2 ,, ,,

கனம். M. S. V. உலகநாதப் பிள்ளை
தேவகோட்டை. 2 ,, ,,

கனம். உ. J. சுப்பிரமணிய ராஜு
பெருமாளகரம். 2 ,, ,,

கனம். S. கிருஷ்ண அய்யர்
பெருமாளகரம். 2 ,, ,,

கனம். R. N. சிவசூரிய பிள்ளை
ராதாபுரம். 2 ,, ,,

கனம். தே. வே. சாமியார் என்கிற வாலாம்
பிகைதாச சுவாமிகள், பேரளம் 2 ,, ,,

இப்போதினியானது முன்பணங் கொடுத்தவர்களுக் கன்றி மற்றவர்களுக் கனுப்பப்படாது எனகண்டிப்பான விதி ஏற்பட் டிருப்பதால் பாரபக்ஷமின்றி ஒருவருக்கு முன்பண மில்லாமல் அனுப்புவது மேற்படி ஏற்பாட்டிற்கு விரோதமாகும். ஆகையால்; சிலகனவான்களின் விருப்பப்படி பத்திரிகை யனுப்பப்படவில்லை. ஆகையால் அந்தக் கனவான்கள் இப்போதினியைப் பெற்றுக்கொள்ள இஷ்ட மிருந்தால், முன்பண மனுப்பத் தயவு செய்வார்களெனக் கேட்டுக்கொள்ளப்படுகிறது.

புத்தகம்-௩. 1907ஸு மார்ச்சுமீ 15௳ இலக்கம்-௪.

சுகாதார போதினி.

க-ம் பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம் 8.)

இருமற் சூரணம்.

மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த்தோற்-சூரணம், நெல்லிவற்றற் சூரணம், இந்துப்புத்தூள், மாதுளை ஓட்டுச்சூரணம். பூனைக்காலி விதைச் சூரணம், வாசனைப் புல்லைச் சுட்டெரித்த சாம்பல், கண்டங்கத்திரியை யெரித்த சாம்பல், இவை வகை-க-க்குப் பலம்-உ, அரிசித்திப்பிலிச் சூரணம், மிளகுச் சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-வ.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றுய்ச் சேர்த்து வைத்துக்கொள்வதே யாம்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை-எ. அ.

அனுபானம்:—சர்க்கரை, தேன் முதலியவைகளாம்.

உபயோகம்:—எல்லாவகை யிருமல்களும் மூன்று நாளைக்குள் குணமாகும்.

வேறு.

மாதுளைத் தோலையிடித்த சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், கற்கடக சிங்கிச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-க௨, இந்துப்பு, கறுப்புப்பு, கல்லுப்பு இவற்றின் தூள் வகை-க-க்கு விராகனெடை-௩, பஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம் விராகனெடை-சு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றுய் மிஸ்ரமித்துக் கல்வத்தில் அரைமணி நேரம் அரைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை-ரு. அ.

அனுபானம்:—தேன், சன்னராஷ்டக் கஷாயம், மிளகுக் கஷாயம், முதலியவைகளாம்.

உபயோகம்:—எல்லாவகை இருமல்களுந் தீரும்.

ஷை (வேறு)

கற்கடக சிங்கிச் சூரணம், மேற்றோல் சீவி யிடித்த அதிமதுரச் சூரணம், கருவேலம் பிசின் சூரணம், கசகசாத்தோற் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், கடல் தேங்காய்ச் சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-௨.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றுகச் சேர்த்தரைத்து மிஸ்ரமித்துக் கொள்வதே யாம்.

பிரமாணம்:—விராகனெடை-௨, ௩.

அனுபானம்,—தேன், சர்க்கரை, ஆகியவைகளாம்.

உபயோகம்:—எல்லாவகை யிருமல்களுந்தீரும்.

இருமல் ஷர்பத்.

மேற்றோல் சீவின அதிமதுரம், சோம்பு, தூத்தி விதை, மயிர்ச்சிக்கி, இவை வகை-க-க்கு விராகனெடை-௨, ஜூபா வெந்தயம் இவை வகை-க-க்கு விராகனெடை-க, சீமை நறுவிலிப்பழம் பலம்-௩, கசகசா பலம்-௨, கசகசாத்தோல் பலம்-க௨, சீனிச் சர்க்கரை பலம்-ரு.

செய்முறை.—மேற்கண்ட சரக்குகளுள் சிதைக்கவேண்டியவைகளைச் சிதைத்தும் விதைநீக்க வேண்டியவைகளை விதை நீக்கியும் முக்காற்படி ஜலத்தில்-உச-மணிநேரம் ஊறவைத்து அடுப்பேற்றிச் சிறுதீயா லெரித்து மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின் இறக்கி வடிகட்டின கஷாயத்தில் சர்க்கரையைச் சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீயா லெரித்துப் பாகுபதத்தி லிறக்கி ஆறினபின் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௨, ௩.

உபயோகம்:— எல்லாவகை யிருமல்களும் தீரும்.

வேறு.

சரக்கொன்றைப்புளி தேவையான அளவு எடுத்து ஜலத்திற் கரைத்து வடிகட்டித் திப்பிநீக்கி அடுப்பேற்றிச் சிறுதீயா லெரித்துக் குழம்புப் பதமாகச் சுண்டவைத்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவேண்டும். இப்படிச் செய்ய ஏலாதவர்கள் இங்கிலீஷ் மருந்து ஷாப்புகளில் விற்கப்படும் சுத்திசெய்த சரக்கொன்றைப் புளியைவாங்கி உபயோகித்துக்கொள்ளலாம். மேற்கண்ட விதமாகச் சுத்திசெய்த சரக்கொன்றைப்புளி ஒருபங்கு, சீனி இரண்டு அல்லது,மூ

ன்று பங்கு. இவ்விரண்டையு மிஸ்ரமித்துத் தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி விராகனெடை-க. உ, வீதம் பிரதிதினமும் இரண்டு அல்லது, மூன்று தடவை உபயோகித்து வந்தால் மலபந்தத்தை நீக்கி இருமலைப் போக்கும்.

ஷை (வேறு.)

சரக்கொன்றைப் புளிபலம்-௩, (இதனை மூன்று ஆழாக்கு ஜலத்திற்போட்டுக் கரைத்து வடிகட்டித் திப்பியை நீக்கி விட்டு இதில் பத்துப்பலம் சீனிச் சர்க்கரையைச் சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துக் குழம்புப் பதமான பக்குவத்தில் இறக்கி ஆறினபின் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப் படுத்தவும். அவசியமானபோது வேளை யொன்றுக்கு விராகனெடை-௫, அல்லது-௬-வீதம் சோம்புத் திராவகம், அல்லது சோம்புக்கஷாயத்துடன் சாப்பிட வேண்டும். இவ்விதம் பிரதிதினம் ஒருதடவை அல்லது, இரண்டு தடவைசெய்துவர மலபந்தத்தை நீக்கி மார்பிலுள்ள கபத்தை வெளிப்படுத்தி இருமலைச் சாந்தப்படுத்தும்.

வேறு.

ஆளி விதையை வறுத்திடித்த சூரணம் ஒருபங்கு, தேன் இரண்டுபங்கு. இவ்விரண்டையு மிஸ்ரமித்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு இரண்டு அல்லது, மூன்று விராகனெடை வீதம் பிரதிதினமும் ஒன்று அல்லது, இரண்டு தடவை உட்கொண்டு வந்தால் இருமலைச் சாந்தப்படுத்தி அங்கு கப உற்பத்தியாகாமற் றடுக்கும். பக்கநோவு குணப்படும்.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol - III - பக்கம் (18)

கஷ்டத்தோடு சூதகங்காணும் ஸ்திரீகளுக்குப் பின்காணும் முறையைக் கொடுத்துக் குணமானதாக டாக்டர் ஈஷ்வில் என்னும் துரையவர்கள் தம் அனுபவ கிரந்தத்தில் எழுதியிருக்கின்றார்கள். அம்முறையிது:—

| | |
|---|---|
| சீமை யிந்துப்பு விராகனெடை | கஉ, |
| காந்தமண் பஸ்பம் விராகனெடை | கஉ. |
| பைக்கார்போனெட் ஆவ் சோடா விரா | ௬. |
| கறியுப்பு விராகனெடை | உ. |
| சுக்குச்சூரணம் விராகனெடை | க. |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்துச் சீஷாவில் வைத்துக் கொள்ளவும். படுத்துக் கொள்ளப்போகும்போது தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி ஒன்று அல்லது, இரண்டு விராகனெடை பானஞ்செய்விக்க வேண்டும். மருந்து சாப்பிடுவதற்கு முன் இந்தச் சீஷாவை நன்றாய்க் குலுக்கிக் கொள்ளவேண்டும்.

உபயோகம்:—சூதக காலங்களிலுண்டாகும் வயிற்றுநோய், இடுப்புநோய், மார்புநோய் முதலியவைகள் தீரும். சூதகம் கிரமப்படும்.

ஷை (வேறு.)

குளிர்சுரம், நடுக்குசுரம் ஆகிய இந்தச்சுரங்கள் கண்டு மலபந்தப்பட் டிருந்தால் தேகம் உஷ்ணமாயிருக்கும்போது சீமை யிந்துப்பைக் கீழ்க்காணும் முறையைப்போல செய்துகொடுத்தால் குணமுண்டாகும். அம்முறையிது;—

| | |
|---|---|
| லைகர் அம்மொனியி அஸிடேடிஸ் விராகனெ-க. | |
| வெடியுப்புத்தூள் குன்றிமணியெடை | உ௯. |
| ஸ்பிரிட் ஆவ் நைட்ரிக் ஈதர் துளி | உ0. |
| சீமை யிந்துப்பு விராகனெடை | க. |
| கர்ப்பூரஜலம் விராகனெடை | க. |

செய்முறை:—இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்துக் கொள்ளவும். இது ஒருதடவைக்காம் அவுடதம. இவ்விதம் பிரதிதினம் இரண்டு அல்லது, மூன்று மணிக்கொருதடவை உபயோகிக்க வேண்டும். மலம் போகிறவரையில் அல்லது, வேர்வைகண்டு சுரம் தணிகிறவரையிற் கொடுக்கவேண்டும். பேதி ஆனபிறகு, அல்லது சுரம் நின்றபிறகு இதனை உபயோகிக்கலாகாது.

(இன்னும் வரும்)

சுகாதார போதினி.

௩ - ம் பிரிவு.

ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. -III-பக்கம்-11·)

இந்தச் சமையத்திற் கவனத்தில் வைக்கவேண்டியது ஒன்றுண்டு. அதாவது பிள்ளை பிறந்து அதி

ன் வாயிலுள்ள கோழை முதலியவைகளை நீக்கினபின்பு அழாமலிருந்தும் முகம், கண் ஆகியவைகளில் நீலம் பாய்ந்து யிருந்தால் உடனே நாபிக்கொடியைக் கட்டாமல் நாபிக்குச் சமீபத்தில் கொஞ்சம் அறுத்துவிட்டு ஒன்று ஒன்றரை விராகனெடை இரத்தம்வெளிப்பட்டபின் அதைக் கட்டிவிட வேண்டும். இப்படிச் செய்வதால் முகம் முதலிய ஸ்தானங்களிலுள்ள நீல வருணம்போய் பிள்ளை அழ ஆரம்பிக்கும். இப்படிச் செய்தும் அழாவிட்டால் மேற்கண்டபடி முயற்சிசெய்ய வேண்டுமென்பதே.

நமது நாட்டுப்புறத்து மருத்துவ அம்மாமார்கள் இந்தச் சமயத்தில் முகத்தில் தண்ணீரைத் தெளிப்பதற்குப் பதிலாக அதன் தலையைத் தண்ணீரில் நனைக்கின்றார்கள். இதனாற் சில சமயம் கெடுதிக் கேதுவாகும். சில அம்மாமார்களோ மிளகை மென்று கொண்டு பிள்ளையின் வாயில் ஊதுகின்றார்கள். ஊதுவதாற் குணமுண்டாமென்பது வாஸ்தவமாயினும் மிளகு முதலிய காரவஸ்துக்களாற் குழந்தைக்கு அசௌக்கியத்திற் கேதுவாகும்.

ஆங்கிலேயர்களின் வழமையாவது பிள்ளை பிறந்தவுடன் அது அதிக துர்ப்பலமுள்ளதாயிருந்தால் நாபிக்கொடியை தாய் பக்கத்திலிருந்து உருவிப்பிள்ளையின் தேகத்தில் இரத்தஞ் செல்லும்படியாகச்செய்து அதில் முடிச்சுப் போட்டுத் தடைப்படுத்தி விடுகின்றார்கள். தாயின் இரக்தத்தினாற்றான் பிள்ளை ஜீவித்திருக்கிறதென்பது தெரிந்த விஷயம். ஆகையால் தாய் இரத்தமானது கொஞ்சம் உள்ளே செலுத்தப்பட்டால் அதிக பலமுண்டாகுமென்பதேயாம். ஆங்கிலேய மருத்துவப் பெண்கள் குழந்தை பிறந்தவுடன் அதிக துர்ப்பலப்பட்டிருந்தால் மேற்கண்டபடி தாயின் இரத்தத்தைப் பிள்ளைக்குச் செலுத்துவதுமின்றி அந்தக் கொடியை அறுத்தவுடன் தாய் பக்கத்திலுள்ள கொடியிலிருந்து வடியும் இரத்தத்தில் இரண்டு மூன்று துளிகளைப் பிள்ளைக்குக் குடிப்பாட்டிவிடுகின்றார்கள். இவ்விதஞ் செய்வது மேன்மையெனத் தெரிந்தபோதிலும் அந்த இரத்தத்தை அந்தக் குழியின் வழியாக ஏற்றலாகாதெனச் சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது. இதன் கருத்தாவது தாயின் இரத்தம் கெட்டிருந்தால் பிள்ளைக்குக் கெடுதியுண்டாகாதிருக்கவேண்டுமென்பதேயாம். ஆகையால் இந்த விஷயங்களை நன்றாய் நிதானித்துச் செய்யவேண்டியதே பிரதானம்.

குறிப்பு.

நாபிக்கொடியை அறுக்கும்போது அந்த நாபிக்கு சமீபத்தில் முடிச்சிட வேண்டுமென நாம் முன்னே சொல்லியிருக்கின்றோம். அப்படிச் செய்வதின் கருத்தாவது அறுபட்ட வாயின் மூலமாகப் பிள்ளையினின்றும் இரத்தம் வெளிப்படாமலிருப்பதற்கேயாம். அப்படி யிரத்தம் வெளிப்பட்டால் பிள்ளையுடனே இறந்துபோம். நாபிக்கொடியில் மறுபக்கம் போடும் முடிச்சின் உபயோகமாவது:—

(1) அந்தக் கொடியில் இரத்தந் தங்கிநிற்பதினால் அது கனத்துச் சீக்கிரம் விழுந்துபோக ஏதுவாகும்.

(2) தெய்வாதீனமாக இன்னொரு சிசு வயிற்றிலிருந்து அதற்கும் இதற்கும் ஒரே நஞ்சுக்கொடியாயிருக்கும் பக்ஷத்தில் அது மரணமடையாதிருக்கும்படியேயாம்.

குறிப்பு.

இரண்டு பிள்ளைகள் கெற்பத்திலிருந்து ஒன்றிற்குப் பின் மற்றொன்று ஜனனமாகிறது. ஒரு பிள்ளை ஜனனமான பின்பு மற்றபிள்ளை ஜனனமாக முதற்பிள்ளைக்குச் செய்த முறையே யிதற்கும் செய்யவேண்டும். முதற்பிள்ளை பிறந்தபின்பு மருத்துவப் பெண்ணானவள் பிள்ளைத் தாய்ச்சியின் வயிற்றில் கையை வைத்துப் பார்த்தால் பிள்ளையிருப்பதும் இல்லாததும் பரிஷ்காரமாய்த் தெரிந்துகொள்வார்கள்.

குறிப்பு.

நாபிக்கொடியை யறுக்கும்போது அதிலுள்ள சத்தைப் பின்னுக்குத் தள்ளித் துளையிடாத நல்லமுத்து பனிரெண்டை யிதற்குட் செலுத்திக் கட்டிவிடவேண்டும். தினம் ஒன்றிற்கு ஒவ்வொரு முத்தாக இந்தப் பிள்ளைக்கு அரைத்துக் குடிப்பாட்டிவிடவேண்டும். இப்படிச் செய்வதால் பிள்ளையின் ஆயுள் முழுவதும் அம்மை வராதெனச் சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது. இதுவன்றி அம்மை வராமல் தடுக்க அநேக உபாயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அதையெல்லாம் கவனிக்காமல் நாம் பல தடவைகளில் மோசம் போகின்றோம். ஆனால் ஆங்கிலேய அரசாங்கத்தார் அம்மை வைப்பதே சட்டமாக ஏற்படுத்தியிருக்கின்றார்கள். இதன்படி நடந்து வருவதே போதுமானதாயிருக்கும்.

இன்னும் வரும்.

## சுகாதார போதினி.

ச - ம் பிரிவு.



### பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. III. பக்கம் - (20.)

#### போர் மாந்தம்.

இலக்ஷணம்:—சுரமடித்தல், தேகம் கரைந்து கூடாயிருத்தல், அடிக்கடி கழிச்சல், உதடு உலர்ந்து போதல், வாயில் நுரை தள்ளுதல், வாந்தியாதல், கண் குழிவிழுந்திருத்தல், நெஞ்சு புண்ணுயிருத்தல் முதலியவைகளாம்.

சிகிச்சை:—மேற்றோல்சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, இந்துப்பு, சீரகம், கோரோசனை இவற்றின்சூரணம் வகை-க-க்கு விராகனெடை-உ, உத்தாமணியிலை, தும்பையிலை, சாணக்கியிலை, பேய்மிரட்டியிலை, பொடுதலையிலை இவை வகை-க-க்கு விராகனெடை-க

செய்முறை:—இவையெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு இரண்டுசாமமரைத்து மைபோலானபின் குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அனுபானம்:—இலவங்கக்கஷாயம், மோர், தேன் ஆகியவைகளாம்.

உபயோகம்:—போர்மாந்த முதலிய மாந்தரோகங்கள் தீரும்.

#### உப்பு மாந்தம்.

இலக்ஷணம்:—வயிறுப்பியிருத்தல், வயிற்றிலிரைச்சல், வயிறு கழிதல், தாகம், சுரம், பிதற்றல், வாந்தி, முலையுண்ணாமை, மயக்கம் முதலியவைகளாம்.

சிகிச்சை:—குப்பைமேனியிலை விராகனெடை - க0, கறியுப்பு விராகனெடை - ൦. இவ்விரண்டையுஞ்சேர்த்துக் கசக்கிப் பிழிந்து சாறெடுத்துக் குழந்தைக்கு வார்க்கவேண்டும். இவ்விதம் பிரதிதினமும் இரண்டு மூன்று தடவைகள் செய்யின் மேற்படி உப்புமாந்தம் முதலிய மாந்தரோகங்கள் தீரும்.

#### ஷை (வேறு)

மூக்காவேளை, மேற்றோல் சீவினசுக்கு, ஓமம் இவை வகை-க-க்கு விராகனெடை-க. இவற்றைச் சட்டியிலிட்டு வறுத்துக் கருக்கி அரையாழாக்கு ஜலத்தைவார்த்து மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின் வடிகட்டி அதில் அரைக் குன்றிமணியெடை காயுருவி உப்பையும் அரைக்குன்றிமணியெடை ஆமையோட்டுப் பற்பத்தையும் மிஸ்ரமித்துப் பானஞ்செய்விக்கவேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையுஞ் செய்துவந்தால் மேற்படி உப்புமாந்த முதலிய பல மாந்தரோகங்கள் தீரும்.

#### சன்னி மாந்த ரோகம்.

இலக்ஷணம்:—மயக்கம், தலைபுரட்டல், கால்குளிர்ந்திருத்தல், நாவில் முள் தடித்திருத்தல், அதிகத்தாகம், அறிவுகெடுதல், வெறும்வாந்தி, ஏப்பம், வலிப்பு முதலியவைகளாம்.

சிகிச்சை:—மேற்றோல் சீவினசுக்கு, முருங்கைப்பட்டை, மாவிலிங்கைப்பட்டை, சிற்றரத்தை, வெற்றிலை, முசுமுசுக்கை இவை வகை-க-க்கு விராகனெடை-உ. இவையெல்லாவற்றையும் வைத்து நறுக்கிச் சாறுபிழிந்து அதில் அரைக்குன்றிமணியெடை கஸ்தூரியைச்சேர்த்துப் பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் செய்துவரவும். பூண்டுத்தைலத்தைத் தேகத்தின்மீது பூசிவரவேண்டும். இவ்விதஞ் செய்தால் சன்னிமாந்தம் முதலிய பல மாந்தரோகம் தீரும்.

(இன்னும் வரும்.)



## சுகாதார போதினி.

டு - ம் பிரிவு.



### மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-III-பக்கம்-(21)

கடுக்காய்த்தோற் சூரணம் விராகனெடை - ஌, காலையில் இதனை யுட்கொண்டு இதன்மேல் அரை ஆழாக்கு நீராகாரத்தைப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் பிரதிகாலையிலும் சாப்பிட்டு வருவதினால் மூலரோகம் நிர்மூலமாகும்.

#### ஷை (வேறு.)

மைசாக்ஷிபலம்-ரு, சரக்கொன்றைப்புளி பலம்-ரு, சூரத்துக் கடுக்காய்த்தோற் சூரணம் பலம்-ரு, தா

ன் றிக்காய்த்தோற் சூரணம் பலம்-க, பிஞ்சுக் கடுக்காய்ச்சூரணம் பலம்-க, நெல்லிவற்றற்சூரணம் பலம்-க, அவ்திமூன் சூரணம் பலம்-க, உஸ்துகுதூஸ் சூரணம் பலம்-க, வெங்காயத்தாள்சாறு செல்லத்தக்கஅளவு, தேன்வீசை-க.

செய்முறை:—ஆரம்பத்தில் மைசாக்ஷியையும் சரக்கொன்றைப் புளியையும் கல்வத்திலிட்டு மேற்படி வெங்காயத்தாள் சாற்றைவிட்டு ஒருசாமமரைத்து மற்றச் சூரணங்களையுஞ் சேர்த்து மிஸ்ரமித்து வைத்துக் கொள்ளவும். தேனைக்காய்ச்சிச் சூடுகண்டபின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற மருந்தைச் சிறுகச் சிறுகப்போட்டு நன்றாய்க்கடைந்து மிஸ்ரமித்து இறக்கி ஆறினபின் பீங்கான் ஜாடியிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-ங. காலையில் மாத்திரம் ஒருவேளை சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—மலச்சிக்கல், மலபந்தம்ஆகியவைகள் நீங்கி மூலரோகம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—தேகசுபாவத்திற்குத் தகுந்ததுபோல ஏற்படுத்திக் கொள்வதேயாம்.

ஷை (வேறு)

மைசாக்ஷி பலம்-உ, பாதுமையெண்ணெய் பலம்-உ, மஞ்சட்கடுக்காய்த்தோற் சூரணம் பலம்-ய, சூரத்துக் கடுக்காய்த்தோற் சூரணம் பலம்-ய, பிஞ்சுக் கடுக்காய்ச்சூரணம் பலம்-ய, நெல்லிமுள்ளிச்சூரணம் பலம்-ய, சுத்திசெய்த சீமைச்சிவதைவேர்ச்சூரணம் விராகனெடை-ரு, ரூமிமஸ்தகிச் சூரணம் விராகனெடை-உஅ, நல்ல கெட்டித்தேன் பலம்-உய, வெங்காயத்தாள் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மைசாக்ஷியைக் கல்வத்திலிட்டு மேற்படி வெங்காயத்தாள் சாற்றைச் சிறுகச்சிறுகவார்த்து ஒரு சாமமரைத்து ரூமிமஸ்தகிச் சூரணத்தைத் தவிர மற்றைச் சூரணங்களில் வாதுமை நெய்யைவிட்டுப் புரட்டி நெய்ப்பசையுண்டாக்கிக் கல்வத்திலுள்ள மருந்துடன்சேர்த்து மிஸ்ரமித்து வைத்துக்கொள்ளவும். தேனை அடுப்பிலேற்றிச் சிறுதீயாயெரித்துச் சூடுகண்டவுடன் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கும் மருந்தைச் சிறுகச்சிறுகப்போட்டு நன்றாய்க்கடைந்து நன்றாய் ஆறினபின்பு ரூமிமஸ்தகிச்சூரணத்தைச் சேர்த்துப் பிசைந்து வைத்துக்கொள்ளவும். சூட்டுடன் ரூமிமஸ்தகியைச் சேர்த்தால் லேகியமானது அதிகம் கசந்துபோகும். ஆகையால்நன்றாய்க் குளிரஆறினபின் மேற்படி ரூமிமஸ்தகியைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-உ - ரு. அவசியமானால் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—மலபந்தம், மலக்கட்டு, மலச்சிக்கல், மலவறட்சி ஆகியவைகள் தீருவதுடன் மூலரோகமும் தீரும்.

பத்தியம்:—சமயோசிதம் போலவும், தேகசுபாவத்திற் கேற்றவிதமாகவும் ஏற்படுத்த வேண்டும்.

(இன்னும் வரும்.)

## சுகாதார போதினி.

சு - ம் பிரிவு.

### இரசம்.

முன்தொடர்ச்சி (vol - III பக்கம். 22)

முன்தொடர்ச்சி (vol - III பக்கம். 22)

### மகா சுராங்குசம்.

சுத்திசெய்த இரசம் விராகனெடை-அ, நாபிச்சூரணம் விராகனெடை - அ, சுத்திசெய்த கெந்தகம் விராகனெடை-அ, ஊமத்தைவிதைச் சூரணம் விராகனெடை.உவ, மிளகுச்சூரணம் விராகனெடை - சய, எலுமிச்சம்பழச் சாறு அல்லது, இஞ்சிச்சாறுசெல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையும் கல்வத்திற் சேர்த்தரைத்து நன்றாய்க்கறுத்தபின்பு மற்றவைகளையுஞ் சேர்த்தரைத்து எலுமிச்சம்பழச்சாற்றை அல்லது, இஞ்சிச்சாற்றைச்சிறுகச்சிறுகவார்த்து இரண்சொமமரைத்து ஒரு குன்றிமணியளவு மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அனுபானம்:—இஞ்சிச்சாறு, தேன், மிளகுக்கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:—வாதம், பித்தம், சிலேஷ்மம் ஆகிய மூவகைச் சுரங்களும் தீரும். பகல் சுரம், இராச்சுரம், ஒருநாள் முறைச்சுரம், இரண்டாமுறைச் சுரம், மூன்றாமுறைச்சுரம், நான்கா முறைச்சுரம் முதலிய முறைச்சுரங்களெல்லாம் தீரும். கைகால்பிடிப்பு, கீல்வாதசுரம், முதலியவைகளும் தீரும்.

பத்தியம்:—தேகசுபாவம், வியாதிபலம் ஆகிய வைகளுக்குத் தகுந்ததுபோல் ஏற்படுத்திக் கொள்ளவும்.

(இன்னும் வரும்.)



சுகாதார போதினி.

எ - ம் பிரிவு.



பற்பமுறைகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 22.)

தாம்பிரசுத்தி (வேறு.)

கள்ளிப்பால் விராகனெடை-௬, எருக்கம்பால் விராகனெடை-௬, இந்துப்பு விராகனெடை-௪. இவை யெல்லாவற்றையும் கல்வத்திலிட்டு-௨-மணிநேரம் அரைத்து வைத்துக்கொள்ள வேண்டும். தாம்பிரத் தகட்டைப் புளியிலேக் கனம் அடித்து முன் சித்தப்படுத்தின மருந்தை இருபக்கமும் பூசிக் கரிநெருப்பிற் பழுக்கக்காய்ச்சி நன்றாய்ப்பழுத்தபின்பு வெண்ணொச்சிச்சாற்றில் தோய்க்கவேண்டும். அந்தச் சாறானது இந்தத் தகடு ஆழ்ந்து கிடக்கும்படியாகத் தாராளமாக இருக்கவேண்டும். ஒரு தடவை உபயோகித்த சாறானது மறுதடவைக் குதவாது. அப்போதைக் கப்போது புதிய சாறுவிட்டுக் கொள்ளவேண்டும். முன்தோய்த்த தகடானது நன்றாய்க் குளிர ஆறினபின் முன் சித்தப்படுத்தின மருந்தை முன்போல் இருபுறமும் பூசி முன்போற் கரிநெருப்பிற் பழுக்கக் காய்ச்சி முன்போல் வெண்ணொச்சிச் சாற்றிற் சாய்க்கவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிப் பனிரெண்டு தடவைகள் செய்தெடுத்தால் தாம்பிரமானது பரிசுத்தமாகி யிருக்கும். இந்த வகைத் தாம்பிரத்தைப் பற்பம் செந்தூரம் ஆகியவைகள் செய்து உபயோகித்தால் அசுத்த தாம்பிரத்தின் தர்க்குணங்களாகியவாந்தி, அரோசகம், மயக்கம், திடுக்கம், அசதி முதலியவைகள் ஒன்றுமிராது. தேக ஆரோக்கியத்திற் கேதுவான குணங்களைத் தரும்.

இன்னும் வரும்.



கடிதங்கள்.

ஐயா!

அடியிற் சொல்லப்பட்ட அம்ஸ மண்டூரம் என்னும் சூரணமானது சற்று கடும்பத்தியமானதாயினும் என் சகோதர அபிமானிகளுக்கும் மற்றவர்களுக்கும் பொதுவாக லோகோபகாரமாய் அப்பாகத்தை யெழுத முன் வந்தேன். இது அதிக சிறந்த குணமுள்ளதாகையால் ஒவ்வொருவரும் அனுபவத்தில் நிச்சயமாகத் தெரிந்து கொள்வார்கள். ஆகையால் இதனை நமது போதினி மூலம் வெளிப்படுத்தும்படி விரும்புகிறேன். இம்முறையானது வசன ரூபமாக எழுதப்பட்டிருக்கிறது. நாம் செய்கிற பாகமானது விசேஷம் குணமுடைய தல்லவென்பது எனது அபிப்பிராயம். அப்படிக்கிருந்தாலும் வேறு சரியான பாகம் தெரியாததால் இதையே உபயோகிக்கும்படி நேரிடுகிறது.

அம்முறையாவது:—மருங்கப்பள்ளம் பொன்கிட்டம் தேவையான அளவு. இதை நன்றாய்ச்சூரணித்து எட்டுப்பங்கு ஆவின்நீரில்போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து வேகவைத்துக் கொள்ளவேண்டும். பின்மேற்றூல் சிவினசுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, மேற்றூல் நீக்கின கோரைக்கிழங்கு, கிராம்பு, செவியம், கொடிவேலி வேர்ப்பட்டை, மரமஞ்சள், கண்டத்திப்பிலி, தேவதாரம் இவைகளைத் தனித்தனி யிடித்துவஸ்திரகாயஞ் செய்தசூரணம் சமனெடையாகச் சேர்த்தது, மொத்தம் சூரணம் மண்டூர சூரணத்திற்குச் சமனெடை யிருக்கவேண்டும். இந்தச் சூரணத்தை முன் மண்டூர சூரணத்துடன் கலந்து நன்றாய் அரைத்து விராகனெடை-௨. ௩. சாப்பிடலாம். சாப்பிட்டவுடன் பசுவின்மோர் விட்டு விழுங்கவேண்டும்.

உபயோகம்:—எல்லாவிதமான பாண்டு, சோகைகள், உதரரோகங்கள், காமாலை, ஊருஸ்தம்ப வாதம், முதலானவை தீரும். இதில் பாண்டு, சோகை, அசீர்ணம், பித்தவாயு முதலானவைகளுக்குக் கொடுத்து நிச்சயமான குணங் கண்டிருக்கிறது.

பத்தியம்:—உப்பு, புளி முதலிய ஒன்றும் சேர்க்கக் கூடாது பசுவின்மோரும் சாதமும் தான் சாப்பிடவேண்டும். தாகத்துக்கும் மோரே சாப்பிடவேண்டும், ஏழுநாட்களுக்குள் எவ்விதமான பாண்டு வீக்கமும் நீங்கிவிடும்.

குறிப்பு.

மோரைக்காட்டிலும் பசுவின்பால் விசேஷகுணமுள்ளதென்று நினைக்கின்றேன். இந்த விஷயத்திலும் மண்டூரத்தைப் பக்குவஞ்செய்யும் விஷயத்திலும், மற்ற விஷயங்களிலும் பத்திராதிபரவர்கள் அபிப்பிராயம் தேவை.

சந்தா நே. 9.

## விளம்பரம்.

இலக்க சௌமிய சாகரம் தெளிபொருள்

விளக்கவுரை முதற்காண்டம்,

ஷ இரண்டாங் காண்டம்.



மேற்படி இரண்டு காண்டங்களும் அச்சாகி விற்பனைக்குச் சித்தமா யிருக்கின்றன. இந்த (இலக்க சௌமிய சாகர) மென்னும் அரிய நூலானது அகஸ்திய மகா முனிவராற் செய்யப்பட்ட தென்பதும் மகா சிறப்புற்ற தென்பதும் உலகரிந்தவிஷயம். இந்நூல் இதுவரையில் உரையுடன் வெளிப்படவில்லை யென்பது நிச்சயம். இதில் வாதம், வைத்தியம், மாந்திரீகம், ஞானமுதலிய விஷயங்கள் மிகவுந் தெளிவாகச் சொல்லப்பட் டிருக்கின்றன. இதிலுள்ள பாக்களெல்லாம் சித்திரகவிக் கிரமமாகவும் ஆழ்ந்த பொருட்களை யகத்துள்ளடக்கின வைகளாவும், பிரித்தாலோ உன்னத முறைப்பொருத்த மாகவும், பொருள்களை இலகுவிற் றெரிந்துகொள்ளும் விதமாயும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இது பத்துக் காண்டங்களுள்ளது. இதிலுள்ள முறைகளெல்லாம் நிச்சயமாகக் கைகூடத் தக்கவைகளும், சந்தேகமற்ற வைகளும், பல ஆச்சரியமான வேலைகளைச்செய்யத் தக்வைகளுமாம். வாதம், வைத்தியம், மாந்திரீகம், ஞான முதலியவைகளை விரும்பும் ஒவ்வொருவருக்கும் இந்த நூல் ஒன்றே போதுமானது. இந்த நூலின் பெருமை இதனை வாங்கிப்பார்த்து இதிலுள்ள முறைகளைச்செய்து கையாண்டால்மட்டுந் தெரியுமேதவிர மற்றவர்களுக்குக் கிஞ்சித்தும் புலப்படாது. இதனைப் படிக்கப் படிக்க அளவற்ற ஆச்சரியத்தையும், ஊக்கத்தையும் அதிகரிக்கச் செய்து வருமே தவிர ஒரு சிறிதும் வெறுப்பிற் கிடந்தராது.

இது மற்ற சித்தர் நூற்களைப்போல எடுத்த தெல்லாம்எண்ணிலாச் சந்தேகமாயும், பார்ப்பவையெல்லாம் பரம ரகசியமாயும், ஓரிடத்திலெடுத்த விஷயம் மற்றோரிடத்தில் முடிவு பெற்றதாயும், ஒரு நூலிற் சொல்லிய முறைக்கு வேறோர் நூலில் மர்மங்கண்டு பிடிக்கவேண்டிய தாயுமுள்ள பலவித மயக்கங்களுக்கு ஏதுவானதல்ல இதன் பாக்களின் அருத்தங்களை மட்டும் உணர்ந்துகொண்டால் மற்ற எவ்விஷயங்களிலும் எத்தகைய சந்தேகங்களும் ஏற்படாது. இதிற் சொல்லப்பட்ட முறைகள் சம்மந்தமான ஒவ்வொரு சரக்குகளின் பிறப்பிடம், ரூபம், இலக்ஷணம், குணம் பெயர் முதலியவைகள் அநேகவித ஹேதுக்களைக் கொண்டு தெளிவுபடுத்தப் பட்டிருக்கின்றன. இவ்விதமே ஒவ்வொரு விஷயமும் பலவிதத்தாலும் எவ்வித சந்தேகமும் வராமற் செவ்வனே விளக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் இதிலுள்ள முறைகளைமட்டும் தெரிந்து செய்துகொண்டால் உலகத்தில் எவ்விஷயத்தையும் சாதிக்கலாமென்ற நம்பிக்கை யிருப்பதினலேயே அநேக முறைகளைச்சொல்லி மனதை அங்குமிங்கு மலைபச்செய்யாமல் இதன் பத்துக் காண்டங்களிலும் முக்கியமான சில முறைகளையே சொல்லியிருக்கின்றார். இன்னும் இதில் இரசவாத விஷயத்தை மற்ற நூற்களில் ஆகாத காரியத்தை ஆவதுபோற்காட்டி அதிலும் சந்தேகத்தைமூட்டியிருப்பதுபோலல்லாது ஒவ்வொருவிஷயமும் மெய்யாகவும்,சந்தேகத்திற்கிடமின்றியும் அந்தந்தந்த அளவின் கிரமப்படியும் வெகு நுட்பமாகச் சொல்லப்பட் டிருக்கின்றது. இதன் அருமை பெருமைக ளெல்லாம் இந்நூலை ஒருதடவை பார்த்தவுடன் அனுபவசாலிகளுக்கு நன்கு விளங்கும்.

இன்னும் இது வைத்தியர்களைத் தவிர மற்றய தமிழ்கற்கு மாணக்கர்களுக்கும் பாடங்கேட்கவேண்டிய இன்றியமையாத ஓர் சிறந்த நூலாகும்,

இரசவாதம் வைத்திய முதலியவைகளை விரும்புகின்றவர்களுக்கு இந்த முறைகளைமட்டு முடித்துக் கொண்டாலேபோதுமானதுஇக்காண்டங்களுக்கு அரியபாக்களையெடுத்துக்கொண்டு முறைபிசகாதுதெளிவான உரைஎழுதி யிருப்பதோடியாவரு மெளிதி லுணர்ந்துகொள்ளும் விதமாக அந்தந்தக்காண்டங்களின் கடோசியில் அவைகளி லடங்கியுள்ள முறைகளை வசனரூபமாகவு மெழுதப்பட் டிருக்கின்றது. இவைகள் ஒவ்வொருவர் கையிலும் அவசிய மிருக்கத் தக்கதே. தமிழ் விரும்புங் கனவான்களுக்கும் அவசியமானதே. லோகோபகாரத்தைக் கருதியே இவைகளுக்கு மிகவுங் குறைந்தவிலை யேற்படுத்தப் பட்டிருக்கின்றன.

மேற்படி - 2 - காண்டங்களும் ஒன்றாக பைண்டு செய்யப்பட் டிருக்கின்ற பிரதி-1-க்கு கைவிலை ரூபா 1 - 0 - 0, வி - பி - ரூபா 1 - 3 - 0.

☞ ஹக்கீம் - பா -முகம்மது அப்துல்லா.

சந்தா தாரர்களின் பேயர்.

கீழ்க்கண்ட கனதனவான்கள் நமது போதினியின் 1907ஹு சந்தாவை நம்மீது பேரன்புடன் முன் பணமாக அனுப்பினதற்காக நாம் மனப் பூர்வமான வந்தனத்துடன் பெற்றுக் கொண்டோம்.

கனம். கிருஷ்ணசாமி ராஜா
வேட்டவளம். 2 ,, ,,
கனம். கிருஷ்ண சாமி நாயுடு
நாகப்பட்டணம். 2 ,, ,,
கனம். மாதவாச்சாரியார்
சிறேமல்குடி. 2 ,, ,,
கனம். P. விஸ்வாஸ், காடிகிஸ்ட்
சிலுவார் பட்டி. 2 ,, ,,
கனம். K. சாயபு மரைக்காயர்
நிர்வி. 2 ,, ,,
கனம். R. முத்து நரசிம்மலு நாயுடு
மேலப்புதுப் பாக்கம். 2 ,, ,,
கனம். S. K. கந்தசாமி கவுண்டர்
ராமநாராயண புரம், 2 ,, ,,
கனம். முகம்மது காசீம் சாயபு
குண்ணத்தூர். 2 ,, ,,
கனம். K. தர்மராஜ அய்யர்
பார்வதீ புரம். 2 ,, ,,
கனம். V. சுப்பய்ய காரு
கும்பகோணம். 2 ,, ,,
கனம். M. நாராயணசாமி அய்யர் B. A. B. L.
திருவல்லிக் கேணி. 2 ,, ,,
கனம். M. சுப்பிரமணிய அய்யர்
கோட்டைப் பாடி. 2 ,, ,,
கனம். K. குப்புசாமி அய்யர் B A. B. L.
திருவல்லிக் கேணி. 2 ,, ,,
கனம் ஞானசேகர முதலியார்
மதறாஸ். 1 ,, ,,
கனம். A. L. M. முகம்மத் முகைதீன் அவர்கள்
கொளும்பு. 2 ,, ,,
கனம். J. S. பிச்சை முத்து
காரைக்கால். 2 ,, ,,
கனம். T. ஆறுமுக முதலியார்
திருவடீஸ்வரன் பேட்டை. 1 ,, ,,
கனம். E. அண்ணுசாமி முதலியார்
நாமக்கல். 2 ,, ,,
கனம். C. மாதவராவ்
தும்கூர். 2 ,, ,,
கனம். M. ரத்தினவேலு முதலியார்
மதறாஸ். 2 ,, ,,
கனம். E. ராகவாசாரியர்
நெல்லூர். 2 ,, ,,
கனம். M, கந்தசாமி பிள்ளை
பழனி. 2 ,, ,,
கனம். கைலாஸநாத சர்மா
எடையாத்தாங்குடி. 2 ,, ,,
கனம். N. S. சுந்தரேச அய்யர்
உதயமார்த் தாண்டபுரம். 2 ,, ,,
கனம். N. V. நாராயணய்யர்
டங்வ்வி. 2 ,, ,,
கனம். எத்திராஜுலு நாயுடு
சிவகிரி. 2 ,, ,,
கனம். V. S. மஹாதேவ அய்யர்
விக்கிர பாண்டியன். 2 ,, ,,
கனம். O. C. P. S. E. பக்கீர்முகையதீன் ராவுத்தர், மதுரை. 2 ,, ,,
கனம். a. R. சுப்பிரமணிய அய்யர்
தாழக்குடி. 2 ,, ,,
கனம். M. சங்கர அய்யர்
ராதாபுரம். 2 ,, ,,
கனம். a. இரத்தின வேலு செட்டியார்
மதறாஸ். 2 ,, ,,
கனம். M. S. வெங்கட ராமய்யர்
மேலமங்கலம். 2 ,, ,,
கனம். S. முத்து குமாரஸ்வாமி பிள்ளை
கூத்துபாட்டர் தோப்பு. 2 ,, ,,
கனம். M. S. V. உலகநாதப் பிள்ளை
தேவகோட்டை. 2 ,, ,,
கனம். a. J. சுப்பிரமணிய ராஜு
பெருமாளகரம். 2 ,, ,,
கனம். S. கிருஷ்ண அய்யர்
பெருமாளகரம். 2 ,, ,,
கனம். R. N. சிவசூரிய பிள்ளை
ராதாபுரம். 2 ,, ,,
கனம். தே. வே. சாமியார் என்கிற வாலாம்பிகைதாச சுவாமிகள், பேரளம் 2 ,, ,,

இப்போதினியானது முன்பணங்கொடுத்தவர்களுக் கன்றி மற்றவர்களுக் கனுப்பப்படாது எனகண்டிப்பான விதி ஏற்பட் டிருப்பதால் பாரபக்ஷமின்றி ஒருவருக்கு முன்பண மில்லாமல் அனுப்புவது மேற்படி ஏற்பாட்டிற்கு விரோதமாகும். ஆகையால், சிலகனவான்களின் விருப்பப்படி பத்திரிகை யனுப்பப்படவில்லை. ஆகையால் அந்தக் கனவான்கள் இப்போதினியைப் பெற்றுக்கொள்ள இஷ்ட மிருந்தால், முன்பண மனுப்பத் தயவு செய்வார்களெனக் கேட்டுக்கொள்ளப்படுகிறது.

புத்தகம் - ௩. 1907ஞு ஏப்ரல்மீ 1உ இலக்கம் - டு.

சுகாதார போதினி.

க - ம் பிரிவு.

### வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol III பக்கம் 26.)

### இருமல் ரோகச் சிகிச்சை.

விதைநீக்கின திராக்ஷப்பழம் விராகனெடை-உ௦. மிளகுச்சூரணம், சிறுதேக்குச் சூரணம், கோரைக்கிழங்குச் சூரணம், கடுக்காய்ப் பிஞ்சுச்சூரணம், இவை வகை - க - க்கு விராகனெடை-க௦. சுத்தமான தேன் பலம்-க.

செய்முறை:—மேற்படி சூரணங்களை யெல்லாம் ஒன்ருய்க்கலந்து திராக்ஷப்பழத்துடன் சேர்த்து அம்மியில் அரைக்கவேண்டும். அரைக்கும்போது தேனைச் சிறுகச் சிறுக வார்த்து திரள்பதத்தில்-வ-விராகனெடை-௦-விராகனெடை உள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக்கொள்ளவும்.

உபயோகம்:—இந்த மாத்திரைகளில் ஒன்றை மூலைப்பாலிற் கரைத்துப் பானஞ் செய்விக்கவேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டு வேளையும் செய்வித்து வந்தால், இருமல், சுவாசம், நுரையீரல்களிலுள்ள கெடுதிகள், கபக்கட்டு, தொண்டைக்கட்டு, ஆகிய இவைகள் தீரும். இதனைச் சிறு பிள்ளைகளுக்கும் உபயோகிக்கலாம். ஆனல், குறைந்த அளவாக உபயோகிக்கவேண்டும்.

வேறு.

கடுக்காய்ப்பிஞ்சுச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், அதிமதுரச் சூரணம், கருவேலம்பிசின் சூரணம், இவை வகை யொன்றுக்கு விராகனெடை - உ. தேன் விராகனெடை-க௦.

செய்முறை:—மேற்படி சூரணங்களை யெல்லாம் ஒன்ருய் மிஸ்ரமித்துத் தேனைவார்த்துக் குழைத்துப் பீங்கான் பாத்திரத்தில் பத்திரப் படுத்தவும்.

உபயோகம்:—இதில் விராகனெடை - க - முதல் உ-வரையில் உட்கொண்டுவர, இருமல்ரோகம் தீரும். சிறு குழந்தைகளுக்கு-வ-விராகனெடை நாவில் தடவி சாப்பிடச் செய்யவேண்டும். தினம் - உ - ௩ - தடவை உபயோகிக்கலாம். இப்படிச் செய்துவந்தால் சிறுவர்களுக்கு வாந்தியோடு உண்டாகும் இருமல் தீரும்.

வேறு.

கருவேலம்பிசின் சூரணம், விராகனெடை-ச௦, வாதுமைப்பிசின் சூரணம், கோதுமைச் சத்துச்சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-௩, மேல்தோல் சீவியிடித்த அதிமதுரச் சூரணம் விராகனெடை-க௦. சீனிசருக்கரை பலம்-க௦.

செய்முறை:—மேற்படி சூரணங்களையெல்லாம் ஒன்ருய்க் கலந்துகொள்க. சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் மேற்படி சூரணங்களைக் கொட்டிக்கிளறி எடுத்து பீங்கான் பாத்திரத்தில் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௦-தெ-காலை மாலை இரண்டுவேளையும் உபயோகிக்கலாம். இதனை மாத்திரையாகச் செய்து வாயில் அடக்கிக்கொண்டு இதன் ரசத்தை விழுங்கியும் வரலாம்.

உபயோகம்:—எல்லா இருமல்களும் தீரும். பெரியவர்கள், சிறியவர்கள் எல்லோருக்கும் உபயோகிக்கலாம்.

குறிப்பு.

உஷ்ணம் அதிகப்பட் டிருப்பவர்களுக்கு மேற்படி முறையுடன் ௩-விராகனெடை தித்திப்பு கொம்மட்டிவிதைப் பருப்பை அல்லது மூலாம்பழவிதைப் பருப்பைச் சேர்த்து உபயோகிக்கவும்.

வேறு.

கற்கடகச் சிங்கித்தூள், இதனைத் தேனில் குழைத்துச்சிறு பிள்ளைகளுக்குக் கொடுத்துவர, கபசம்பந்தத்தினு லுண்டான எல்லாவகை இருமலும் தீரும். இதனைத் தொடர்ந்தேற்றியாய் உபயோகித்து வந்தால் தேகபுஷ்டி, தேகபலம், முதலியவைகள் உண்டாகும். இதன் சூரணம் - ஞ - வயதிற்கு உட்பட்டவர்களுக்குக் குன்றிமணி யெடை-௩-ச-மற்றவர்களுக்கு வயதுக்குத் தகுந்தபடி அளவ வற்படுத்திக் கொள்ளவேண்டும்.

வேறு.

விதைநீக்கின திராக்ஷப்பழம் பங்கு-க. கற்கடக சிங்கிச் சூரணம் பங்கு-க, அரிசித்திப்பிலிச் சூரணம் பங்கு-க. இம்மூன்றையும் சேர்த்தரைத்துத் தேனைவிட்டுக் குழைத்து வைத்துக்கொண்டு, வேளை-க-க்கு க-விராகனெடை வீதம் சாப்பிட்டுவர, எல்லாவகை

இருமல்களும் தீரும். இது பெரும்பாலும் சிறுவர்களுக்கு ஏற்றமருந்து.

வேறு.

கோரைக்கிழங்குச் சூரணம், அதிமதுரச் சூரணம், இவை வகை-க-க்கு-க-பங்கு, தேன் உ-பங்கு, இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்து வைத்துக்கொண்டு சுமார்-ச-அல்லது-ர-குன்றிமணி எடை எடுத்துத் தன் தாய்ப்பாலிற் கலந்து பானஞ் செய்விக்கவும். இப்படிச் செய்துவந்தால், எல்லா இருமல் ரோகங்களும் தீரும். இதுவும் சிறுவர்களுக்கு ஏற்றமருந்து.

வேறு

அதிமதுரம், விதைநீக்கின திராக்ஷப்பழம், இவை வகை-க-க்கு விராகனெடை-ச. கசகசாத்தோல், விராகனெடை-கஉ. சீமை நறுவிலிப்பழம் விராகனெடை-ரு. ஆளிவிதை விராகனெடை-உ, அத்திப்பழம் விராகனெடை-சு. சோம்பு, தூதுவளை வேர்பட்டை, இவை வகை-க-க்கு விராகனெடை-க.

இவை யெல்லாவற்றையும் சிதைத்து அரைப்படி ஜலத்திற்போட்டுக் காய்ச்சி நாலிலொரு பாகமாக சுண்டவைத்து இறக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

இந்தக் கஷாயத்தில்-ரு-பலம் வெள்ளை சருக்கரையைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி எடுத்துவைத்துக் கொள்ளவும்.

வாதுமைப் பருப்பு, கோதுமைச்சத்து இவை வகை-கக்கு விராகனெடை-ச. கற்கடகசிங்கிச் சூரணம் விராகனெடை-உ. அதிமதுரப்பால், வாதுமைப்பிசின், இவை வகை-க-க்கு விராகனெடை-க. அரிசித்திப்பிலிச் சூரணம் விராகனெடை-௪. கரியபோளச் சூரணம் விராகனெடை-வ.

இவற்றுள் சூரணஞ் செய்யவேண்டியவைகளைச் சூரணித்தும், பொடிக்க வேண்டியவைகளைப் பொடித்தும் மேற்படி ஷர்ப்பத்திற் சேர்த்துக் கலக்கிவைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க. உ௪.

உபயோகம்:—எல்லா இருமல்களும் தீரும். சிறுவர்களுக்கும் உபயோகிக்கலாம்.

வேறு.

காவுஜுபான் விராகனெடை-கவ; சோம்பு விராகனெடை-க, அதிமதுரம் விராகனெடை-ச, கசகசாத்தோல், கருவேலம்பிசின், சீமை நறுவிலிப்பழம், துத்திவிதை, இவை வகை-க-க்கு விராகனெடை-க. விதைநீக்கின திராக்ஷப்பழம் விராகனெடை-உ௪.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் அரைப்படி ஜலத்திற்போட்டு நாலில் ஒருபாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டி திப்பிநீக்கி அதில் அரைப்பலம் சருக்கரையைப்போட்டுப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டு வேளையும் பானஞ்செய்துவர, எல்லாவகை இருமல்களும் தீரும்.

---

## சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் 26)

(Bicarbonate of Sodiem) பைகார்போனேட் ஆப் சோடியம். இதற்கு சாதாரணமாய் Soda சோடாவெனப்பேர் வழங்கப்படுகின்றது. இந்த உப்பானது வெள்ளைக் கட்டிகளாயிருக்கும். இதற்கு வாசனையில்லை. வாயில்போட்டால் உவர்ப்பாயும் குளிர்ச்சியாயுமிருக்கும். காற்றுப்பட்டால் தூளாகிவிடும். குளிர்ந்த ஜலத்தில் அற்பமாயும், வெந்நீரில் அதிகமாயும் கரையும். சாராயத்தில் கரையாது. இது உழமண்ணை சுத்திசெய்து செய்யப்படுகிறபடியால் இதனைச் சுத்திபண்ணின உழமண்ணென்றும், பூநீறென்றும் சொல்லலாம்.

அஜீரணம், வயிற்றில் புளிப்புத்தட்டிக் காணும் குலையெரிவு, வயிற்றுப்புளிப்பு, வயிற்றெரிச்சல், வயிறுப்பிசம், பேதி, மந்தவாந்தி, சர்க்கார மூத்திரரோகம், கீல்வாதம், காசரோகம், அல்ப தாபனரோகம், காள்பட்ட சில சர்மரோகம் ஆகிய இவைகளுக்கு உள்ளுக்கும் கொடுக்கலாம். வெளிக்கும் உபயோகிக்கலாம்.

அளவு. 5-குன்றிமணி முதல்-30 - குன்றிமணி வரையில் உபயோகிக்கலாம்.

10 - குன்றிமணியெடை சோடாவை இராத்திரியில் படுத்துக் கொள்ளும் பொழுது எடுத்துக் கொண்டால், வயிற்றிலிருக்கிற புளிப்பைக்கண்டித்து நல்ல நித்திரையை யுண்டாக்கும்.

புளித்தேப்பம், மார்பெரிச்சல், அல்லது, வயிற்றெரிச்சலாகிய இவைகள் உண்டானால். ஐந்து குன்றிம

ணி அல்லது ஏழரை குன்றிமணி சோடாவை ஒருபலம் சோம்புத் தீனீரில், அல்லது, இரண்டரைப் பலம் தண்ணீரில் கரைத்து சாப்பிட்ட நான்கு மணிக்குப்பிறகு பானஞ் செய்வதால் தீரும்.

சிலருக்குப்புளிப்புவஸ்துக்களை அதிகமாய்ப் புசித்தால், காதுக்குப்பின், அல்லது, வேறு பேசி நரம்புகளில் வலிகாண்பதுண்டு. அந்தச் சமயங்களில் ஐந்து குன்றிமணியெடை சோடாவை ஜலத்திற் கரைத்து பானஞ்செய்வித்தால், அந்த வலி யுடனே நின்றுபோம்.

மாங்காய்முதலிய புளிப்பு வஸ்துக்களை அதிகமாய்ச் சாப்பிட்டு அஜீரணமானால்,ஐந்து குன்றிமணியெடை சோடாவை உட்கொள்வதினால் அந்த அஜீரணம் உடனே தீரும்.

சாப்பாடுமுதலிய ஆகாரத்தை மிதமின்றிச் சாப்பிட்டு பேதியாக வாரம்பித்து வேறெந்த வஸ்துவையும் இரைப்பையானது ஏற்றுக்கொள்ளாமல் வயிற்றுப்பிசம்கண்டால், கீழ்க்காணு முறையை உபயோகித்தால் குணமுண்டாகும். அம்முறை இது.

சோடா விராகனெடை ௨

ஆரோமெடிக் ஸ்பிரிட் ஆப் அமோனிய
Aromatic Spirit of Ammonia } துளி ௫௦

பெப்பர் மெண்டு தீனீர்
Peppermint Water } பலம் ௨

இவையெல்லாவற்றையும் ஒன்றாய்மிஸ்ரமித்துப் பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் சித்தப்படுத்தி தினம் ஒன்றுக்கு இரண்டுதடவை உபயோகித்துவர, மேற்கண்டரோகம் தீரும்.

சிறு குழந்தைகளுக்குக்காணும் பேதிக்கு ஒரு குன்றிமணியெடை சோடாவும் ஒரு குன்றிமணியெடை Aromatic Powder ஆரோமெடிக் பவுடரையும் மிஸ்ரமித்து உபயோகிக்கவும். இவ்விதம் தினம் இரண்டு மூன்று தடவைகள் வயதிற்குத்தகுந்தபடி அளவை அதிகப்படுத்தி உபயோகித்துவந்தால், மேற்கண்டரோகம் தீரும்.

பித்தநீர் செல்லும் குடல் வழியாக பித்தக்கல் வெளிப்படும்போது அதிக வேதனையும், நோயுமுண்டாகும். இந்தச் சமயங்களில்ஒன்று, அல்லது, இரண்டு விராகனெடை சோடாவை-௧௦-பலம் ஜலத்தில் கரைத்துப்பானஞ் செய்விக்கவேண்டும். ஒருதடவைகொடுத்து வாந்தியாகிவிட்டால், மறுதடவையும் உபயோகிக்கவேண்டும்.

தேகத்தின்மீது காணும் சிறு குப்புளங்கள் சொறிகள் முதலிய சர்மரோகங்களுக்கு-௫-அல்லது-அ-குன்றிமணியெடை சோடாவை ஒரு பலம் நிலவேம்புக் கஷாயத்திற்கரைத்துப் பகலில் இரண்டுதடவை பானஞ்செய்விக்க வேண்டும். இன்னும் இரண்டு மூன்று விராகனெடைசோடாவை-௧௦-பலம் ஜலத்திற்கரைத்து மேனுக்கும் உபயோகித்து வரலாம். இதனை இவ்விதம் உபயோகிப்பது வருத்தமாயிருந்தால், ௧௦ - குன்றிமணியெடை சோடாவை - ௧ - பலம் கொழுப்பைச் சேர்த்தரைத்து மேனுக்கு உபயோகித்து வரலாம். இவ்விதம் உள்ளுக்கும் வெளிக்கும் உபயோகப்படுத்தி வருவதினால், மேற்கண்ட சர்மரோகங்கள் தீரும்.

சிங்கோனுதுள், சோடா இவ்விரண்டையும் சமனாய்ச் சேர்த்து இதில் ௨-முதல் ௫-குன்றிமணி யெடையாக தினத்துக்கு இரண்டு மூன்றுதடவை உபயோகித்து வந்தால் கணுவாதரோகம் தீரும்.

ரேவல்சினிச் சூரணம் குன்றிமணி யெடை ௩.

சோடா ஷை ௭௨
கலம்பாச் சூரணம் ஷை ௨

இவையெல்லாவற்றையும் மிஸ்ரமித்தரைத்துப் பகல் போஜனம் எடுத்துக்கொள்ளு முன் சாப்பிட்டு வருவதினால் கணுவாதரோகம் தீரும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௩ - ம் பிரிவு.



### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-26.)

சிசுவை வளர்க்கும் கிரமம் முதலியவைகளெல்லாம் முன் சொல்லப்பட் டிருக்கின்றன. இனி சமயம் வாய்க்கும்போதும் எழுதப்படும். ஆனால் நாபிக்கொடியை அறுத்தபின்பு தேன் நெய் ஆகிய இரண்டையும் மிஸ்ரமித்து தங்கச்சிலாகையால் எடுத்து சிசுவின் நாவில் தடவவேண்டும். இதனால் குழந்தையின் இரப்பை சுத்தமாய்விடும், பிறகு சீதோஷ்ண ஜலத்தினால் ஸ்நாநஞ் செய்விக்கவேண்டும். இந்த ஜலத்தி

ல் கொஞ்சம் உப்பைச்சேர்த்துக் காய்ச்சிக்கொண்டால் உத்தமம். குழந்தையை அதிக ஜாக்கிரதையோடு ஸ்நானஞ்செய்து வைக்கவேண்டியது. ஸ்நானஞ் செய்வித்தவுடன், மிருதுவான வஸ்திரத்தினல் மிருதுவாகத் துடைத்து மிருதுவான வஸ்திரத்தில் சுற்றி ஒரிடத்தில் படுக்கவைக்கவும். இந்த வேலைகளை ஒரு ஸதிரீ பார்த்துக் கொள்ளும்படியாக நியமித்துவிட்டு, மருத்துவப் பெண்ணனவள் பிரசவ ஸ்திரீயை கவனிக்கவேண்டியது; அதாவது பிரசவமான-24-மணி நேரத்திற்குப் பிறகு பிரசவ ஸ்திரீயின் இரண்டு மார்புகளையும் கருவி சுத்திசெய்து-௧0-சொட்டுப்பாலைப் பீச்சி நீக்கிப் பிறகு குழந்தைக்குப் பால் கொடுக்கும்படி செய்விக்கவேண்டியது.

நாமிதுவரையில் சாதாரணமான சுகப் பிரசவத்தைப் பற்றி சொல்லிவந்தோம். இனி கஷ்டப் பிரசவத்தைப்பற்றிச்சுருக்கமாய்க்கொஞ்சம் இங்கு சொல்லுவாம். ஏனெனில், இவ்வித சமயங்களில் கைதேர்ந்த மருத்துவப் பெண்கள் சமயத்திற்குத் தகுந்தபடி செய்யவேண்டு மென்பதேயாம். ஆயினும், இந்த விஷயங்களையும் நமது சகோதரிகள் தெரிந்து ஞாபகத்தில் வைத்திருப்பதனல் சமயாசமயங்களில் கஷ்டப்படும் மற்ற சகோதரிகளுக்கு உதவிசெய்ய ஏதுவாகும்.

(1) கருப்பையின் பலக்குறைவு:—சில சமயங்களில் சிசுவை வெளிப்படுத்தக் கூடிய சக்தியானது குறைந்துபோவதினல் அல்லது கருப்பையானது அசக்தமாய் விடுவதினல் சிசு வெளிப்படாமலிருக்க ஹேதுவாகும்.

சிகிச்சை:—இருதயத்தை பலப்படுத்தும் வஸ்துக்களையும் மூத்திரவர்த்தன காரிகளையும் உபயோகப்படுத்த வேண்டியது. இன்னும் எபிகா யென்னும் ஒரு இங்கிலீஷ் மருந்தானது இதற்காக மிகவும் சித்திபெற்றதாக விருக்கிறது. கர்ப்ப ஸ்திரீகள் வீட்டில் இதனை முன்னதாக வாங்கிவைத்திருக்க வேண்டியது. இதனைக் கற்சாரக்குள்ள சீஷாவிற் போட்டு நன்ருய் வெளிச்சம் படும்படியான விடத்தில் வைக்கவேணடியது. டப்பி முதலியவைகளில் வைப்பதினல் இதின் குணம் கெட்டுப்போக ஹேதுவாகும். கண்ணுடியுள்ள அலமாரிகளானல் பாதகமில்லை. இந்த மருந்தானது, கையைப்போட்டு வெளிப்படுத்துவதுபோல கருப்பையிலிருந்து சிசுவை வெளிப்படுத்திவிடுகிறது. ஒருதடவை இந்தமருந்தை உபயோகித்தவுடன், கிரமமாக இடுப்பு வலியை யுண்டாக்கி விடுகிறது. கருப்பையின் வாய்விரிய தாமசமா யிருந்தபோதிலும் உடனே அதின்வாயை விரியும்படி செய்துவிடுகிறது. சில நாட்களாய் ஆங்கிலேய டாக்டர்கள் இதற்காக எருகட்டென்னும் மருந்தை உபயோகித்து வந்தார்கள். அது நஞ்சின் சுபாவமுடையது. அதனல் பலவித கெடுதிகளுக்கு ஹேதுவா யிருந்தது. ஆனல் இந்த மருந்தோ எந்தச் சமயத்தில் உபயோகித்த போதிலும் பிரசவ ஸ்திரீக்கு நன்மையே பயக்கும். இந்த மருந்தை உபயோகிப்பதினல் பிரசவ ஸ்திரீக்கு பலத்தைக் கொடுக்கிறது. எவ்வித வருத்தமுமில்லை. இது மிகவும் உபயோகமான மருந்து. இது நூதனமாய்க் கண்டுபிடிக்கப்பட்டது. இது பெரிய மருந்து ஷாப்புகளில் விற்கப்படுகிறது.

---

## சுகாதார போதினி.

ச - ம் பிரிவு.

### பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. III. பக்கம் - 26.)

### பேய் மாந்தம்.

இலக்ஷணம்:—இடுப்பு, கை, கால், தொடை, முகம், மூக்கு, பிடர்நரம்புகள், முதலிய ஸ்தானங்களில் நோவு,வாயில் நுரைதள்ளுதல், மயக்கம், பிதற்றுதல், புலம்புதல், கீழ்நோக்கான வலிப்பு, பயந்து பயந்தழுதல்,திடுக்கிடுதல், மிரளமிரள விழித்தல் முதலியவைகளாம்.

சிகிச்சை:—காட்டாத்திப்பூ, தும்பைப்பூ, விஷ்ணு கிரந்தை சமூலம், குப்பைமேனிவேர்,உத்தாமணிவேர், துளசியிலை, பேய்மிரட்டியிலை, மேல்தோல் சீவின சுக்கு, இவை வகை-க-க்கு விராகனெடை-க,

செய்முறை:—இவற்றுள் சிதைக்கவேண்டியவைகளைச் சிதைத்து ஒன்ருய்ச் சேர்த்திடித்து புதுவோட்டிற் போட்டு ஆழாக்கு ஜலம்வார்த்துக் காய்ச்சி மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டி அதில் ஒரு குன்றிமணி யெடை கோரோசனையைப் பொடித்துக்கரைத்து பானஞ் செய்விக்க வேண்டும். இவ்விதம் காலைமாலை, இரண்டுவேளையும் பானஞ்செய்வித்துவர பேய்மாந்த முதலிய மாந்தரோகங்கள் தீரும்.

தோலைமாந்த ரோகம்.

இலக்ஷணம்:—தேகமெல்லாம் வலிகடுப்பு, சுரம், முகத்தைப் பார்த்தழுதல், வியர்வை, விலாபருக்கிருத்தல், கொட்டாவி, தாகம், சோர்வு, கவிழ்ந்துவீழ்தல், இவை முதலியவைகளாம்.

சிகிச்சை:—மேல்தோல் சீவினசுக்கு, சன்னராஷ்டம், விஷ்ணுகரந்தை சமூலம், குட்டிவிளா சமூலம், லவங்கப்பூ, சணைக்கியிலை, இவை வகை-க-க்கு விராகனெடை-க. கஸ்தூரி,குன்றிமணி யெடை-வ.

செய்முறை:—மேற்கண்ட வஸ்துக்களில் சிதைக்கவேண்டியவைகளைச் சிதைத்து எல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து புதுச்சட்டியிற்போட்டு ஒருஆழாக்கு ஜலத்தை வார்த்து மூன்றிலொரு பாகமாக சுண்டவைத்து வடிகட்டி அதில்கஸ்தூரியைக் கரைத்து பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டுவேளையும் பானஞ் செய்வித்துவர, தோலைமாந்த முதலிய பலமாந்த ரோகங்கள் தீரும்.

கண மாந்தம்.

அடிக்கடி சுரமுண்டாதல், மூக்கில் நீர்வடிதல், வயிறுப்புதல், வயிற்றிரைச்சல், பலவிதமான வயிற்றுப்போக்கு, இருமல், தேகம் இளைத்துப்போதல், கண்மயக்கம், முதலியவைகளாம்.

சிகிச்சை:—அரிசித்திப்பிலி, சுட்டெரித்த வசம்புச் சாம்பல், தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ், வெள்ளைச் சாரணைவேர்ப்பட்டை, நாய்வேளை வேர்ப்பட்டை, உத்தாமணி வேர்ப்பட்டை, நிலவிளா வேர்ப்பட்டை, கொட்டைக்கரந்தை வேர்ப்பட்டை, இவை வகை-க-க்குப் பலம்-௮, பசுவின் நெய் பலம்-க0.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளை யெல்லாம் முலைப்பால் அல்லது பசுவின் பால்விட்டு வெண்ணெய்போ லரைத்து மேற்படி நெய்யிற் கரைத்து மூன்றுநாள் வெய்யிலில் வைத்து நாலாநாள் அடுப்பேற்றி சிறுதீயா யெரித்துக் கடுகுதிரண்ட பதத்திலிறக்கிவடிகட்டி வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க. ௩. சமன் முலைப்பாலுடன் கலந்து பானஞ் செய்விக்க வேண்டும். இதனைத் தொடர்ச்சியாய் சிலநாள் கொடுத்துவந்தால் கணமாந்த முதலிய ரோகங்கள் தீரும்.

சிங்கி மாந்தம்.

நாபியில் தீ எழும்புதல்போ லிருத்தல், ஈரலில் புண்ணுண்டா யிருப்பதுபோ லிருத்தல், திணறலான மேல்மூச்சு, சுரம், திமிர், முதலியவைகளாம். இதனை மாந்தசுர மென்றும் சொல்வதுண்டு.

சிகிச்சை:—மாந்தசுரச் சிகிச்சையில் சொல்லியிருப்பதேயாம்.

குறிப்பு.

உள்ளில் வெப்பமிருந்தால் கணமாந்த மென்றும், கண் சொருகினால் சொருகுமாந்த மென்றும், உச்சியில் குழிவிழுந்தால், குழிமாந்த மென்றும், கைகாலை யிழுத்தால், இழுப்புமாந்த மென்றும், வயிறுப்பினால், உப்புமாந்த மென்றும், இரைத்தால், இரைப்புமாந்த மென்றும், பேதியில்லாவிட்டால் கட்டுமாந்த மென்றும், விக்கலிருந்தால், விக்கல்மாந்த மென்றும் வாதச்சேஷ்டைஅதிகரித்தால், வாதமாந்த மென்றும், பித்தச்சேஷ்டைஅதிகரித்தால் பித்தமாந்தமென்றும், கபச்சேஷ்டை அதிகரித்தால், கபமாந்த மென்றும், ஜன்னிபாதக் குறிகளிருந்தால், ஜன்னிமாந்த மென்றும், பெயர். ஆகையால் அந்தந்த மாந்தங்களை நிதானித்து ஆங்காங்கு சொல்லி யிருப்பதுபோல் சிகிச்சை செய்விப்பதுமன்றி பின்காணும் சிகிச்சைகளையும் சமயோசிதமாக செய்ய வேண்டியது சிகிச்சகர்களின் கடமையாம்.

(இன்னும் வரும்)

---

சுகாதார போதினி.

ரு-ம் பிரிவு.

மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் - 26)

மகா திரிபலாதி.

சூரத்துக் கடுக்காய்த்தோல், கறுப்புக் கடுக்காய்தோல், தான்றிக்காய்த்தோல், சீமை நெல்லிமுள்ளி, மிளகுச் சூரணம். அரிசித்திப்பிலிச் சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-கஅ, சீமை தண்ணீர் விட்டான் கிழங்கு, விராகனெடை-உ, மேல்தோல் சீவின சுக்குச்சூரணம் விராகனெடை - உ. தூதரிசுபேத் சூரணம் விராகனெடை-உ. தூதரிசுருக் சூரணம் விராகனெடை-உ. விளாலரிசித்தூள் விராகனெடை - உ. பஹமனே சுபேத் சூரணம் விராகனெடை - உ. பஹமனே சுருக் சூரணம் விராகனெடை-உ. மேல்தோல் போக்கின எள்ளு விராகனெடை ௩. கசகசா விராகனெடை-௩. வாதுமைநெய் அல்லது பசுவின்நெய் செல்லத்தக்க அளவு. நல்லதேன், சரக்கின் மொத்தஎடைக்கி மூன்றுபங்கு.

செய்முறை:-கசகசாவையும் எள்ளையும் தனித்தனி யரைத்து. அவற்றுடன் எல்லாச் சூரணங்களையும் ஒன்றாய் மிஸ்ரமித்து வாதுமை நெய்யை அல்லது பசுவின் நெய்யைச் சிறுகச்சிறுகத் தெளித்துப் பிசைந்து நெய்ப்பசை யுண்டாக்கிக் கொள்ள வேண்டும். பிறகு கல்லுரலில் இடித்து வெண்ணெய்போல் ஆனபின் எ

டுத்துத் தேனைக்காய்ச்சி நுரையை நீக்கிச் சுத்திசெய்து, அதில் சிறுகச் சிறுகப் போட்டு சந்தனமத்தாற் கடைந்து ஆறினபின் பீங்கான் பாத்திரத்தில் எடுத்து வைத்துக்கொள்ளவும்.

### குறிப்பு.

இது செய்து மூன்று மாதத்திற்குப் பின் உபயோகிக்கவேண்டுமென கவன மிருக்கவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-க. கஉ.

உபயோகம்:—இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்து வந்தால் எல்லாவித மூல ரோகங்களும் தீரும்.

### வேறு.

மேல்தோல் சீவின சுக்குச்சூரணம் பலம்-ங, மிளகுச் சூரணம் பலம்-க. கொடிவேலி வேர்ப்பட்டைச் சூரணம் விராகனெடை. சு, சீமைத் தண்ணீர்விட்டான் கிழங்குச் சூரணம் பலம்-கஉ, அக்ரோட் பருப்பு விராகனெடை-கஉ மேல்தோல் போக்கின எள்ளு விராகனெடை-ங. மூகிழ்வெட்டி சுத்திசெய்தசேராங்கொட்டை-க0. (இவைகளை மூன்று பலம் நல்லெண்ணெயிற் போட்டு அடுப்பேற்றி எண்ணெய்கக்கி மிதக்கிறவரையில் காய்ச்சி வடிகட்டி எடுத்துக்கொள்ள வேண்டும்.) பனைவெல்லம் பலம்-க0.

செய்முறை:—சூரணங்களை யெல்லாம் ஒன்றாய் மிஸ்ரமித்துக் கொள்ளவேண்டும். அக்ரோட் பருப்பு எள்ளு ஆகிய இவைகளை வெண்ணெய்போலரைத்து மேற்படி சூரணத்திற் கலந்துகொள்ள வேண்டும். பிறகு மேற்படி சேராங்கொட்டை எண்ணெயை மேற்படி சூரணத்தில் சிறுகச் சிறுகத் தெளித்து நெய்ப்பசை யுண்டாக்கிக் கொள்ளவும்வேண்டும். பனைவெல்லத்தைத் தூள்செய்து ஆழாக்குஜலம்விட்டுக்காய்ச்சி இரண்டு கொதிவந்தவுடன் வஸ்திரத்தில் வடிகட்டி திப்பியை நீக்கிவிட்டுப் பிறகு அடுப்பேற்றிக்காய்ச்சிப் பாகுபதத்தில் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கும் சூரணத்தைச் சிறுகச் சிறுகத் தூவி மத்தாற்கடைந்து லேகிய பதத்தில் இறக்கி ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை—ஏ. க.

உபயோகம்:—வாயு சம்பந்தான எல்லாவகை மூலரோகங்களும் தீரும்.

பத்தியம்:—வியாதிபலம், தேகபலம், முதலியவைகளுக்கு தகுந்தது போலவும் சமயோசிதம் போலவும் பத்தியம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது.

### வேறு.

பிஞ்சுக் கடுக்காய்ச் சூரணம், மரமஞ்சள் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-சு, சுத்திசெய்த கிட்டத்தூள் விராகனெடை-ங.

செய்முறை:—முன் மூன்று சூரணங்களையும் கல்வத்திலிட்டுக்கையாந்தகரைச் சாற்றைச்சிறுகச்சிறுகவார்த்து நான்குசாமம் அரைத்துக் கால் விராகனெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலில் உலர்த்திவைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-உ-ங.

அநுபானம்:—புளித்தமோர், புளித்த நீராகாரம் முதலியவைகளாம்.

உபயோகம்:—மூல சம்பந்தமான இரத்தப்போக்கை நிறுத்தும்; இரத்தமூல ரோகந் தீரும்; இரத்த விருத்தி; தேகபலம், தேகதிடம் முதலியவைகளுண்டாகும.

(இன்னும் வரும்)



## சுகாதார போதினி.

### சு-ம் பிரிவு.

இந்தப்பிரிவில் இதுவரையில் இரசத்தைப்பற்றியும் இரச சம்பந்தமான முறைகளைப்பற்றியும் எழுதிவந்தோம். ஆனால், நமது அபிமானிகளுள் பலர் இரசவாத சம்பந்தமான முறைகளை எழுதிவரவேண்டுமென்றும், இரசவாத சம்பந்த முறைகளில் கைவல்யமானவைகளைச்செய்து தாங்களும் நிட்சயித்து லோகோபகாரமாக வெளிப்படுத்தும்படியான சங்கம் ஒன்று ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும் கோருகின்றார்கள்.

அவ்விதம் ஒருசபை ஏற்பட்டு பல முறைகளையுஞ்செய்து கைவல்யமானவைகளை இப்போதினி மூலம் வெளிப்படுத்த எவ்வித ஆக்ஷேபனையு மில்லை. ஆனால் பரோபகாரம், ஜீவகாருண்யம், சுதேசாபிமானம் முதலியவையுள்ளவர்கள் நமது அபிமானிகளில் பலர் இந்த விஷயத்திற்காக முன்வரவேண்டும். அப்படிப் பலர் முன்வந்தால் நமக் கனுபவமான முறைகளை ஒவ்வொன்றாய் எழுதிவருவோம். இப்போதினியின் அபிமானிகளுள் பலர் சிறந்த மகா பண்டிதர்களாகையால் அவர்களுக்கும் அனேக பாகங்கள் தெரிந்திருக்கும். அவர்களும் பரோபகாரச் சிந்தையுடன் தம் தமக்கு அனுபோகசித்தமான இரசவாதமுறைகளையும் எழுத முன்வருவார்கள்.

மேற்படி சங்கத்தார் ஒவ்வொரு முறைகளையுஞ்செய்து கைவல்லியமான முறைகளை வெளிப்படுத்தினால், வைத்தியம், வாதம் என்னும் இருவகைக்கு அதிகப் பிரயோசனப்பட்டு உலகத்தாருக்கும் பெரும் பிரயோசனத்தைத் தருமென்பது நிச்சயம். ஆனால்; நம்பவர்கள் எப்போது சங்கம் சேர்வது? எப்போது முறைகளைச் செய்வது? என்பதுதான் விளங்கவில்லை.

இந்த விஷயத்தை நமது அபிமானிகளே யோசித்துத் தகுந்த ஏற்பாடு செய்வார்களென நம்புகின்றோம்.

நமது அபிமானிகளுள் பலரின் விருப்பப்படி இரசவாத சம்பந்த முறைகளை நமது சிற்றறிவிற் கெட்டினவரையில் எழுதிவருவோம். அவ்விதமே நமது நண்பர்களுள்ளும் பலர்க்கு அவ்வகைப் பாகங்கள் தெரிந்திருக்கும் பக்ஷத்தில் கரவுமறைவின்றி யெழுதும்படியாகக் கேட்டுக்கொள்கின்றோம்.

ஏனெனில், இரசவாதம் என்பது பொய்யே யென்பது சிலர் அபிப்பிராயம். இரசவாதம் செய்வதற்காக வழிதுறையின்றித் தாம் கஷ்டப்பட்டு சம்பாதித்த தனத்தையும் தன்னுயுளையும் அவமே போக்கி அவதிப்படுகின்றவர்கள் அனேகர். எடுத்ததையெல்லாம் எட்டரைமாற்றுப் பொன்னாகச்செய்து விடவேண்டுமென்னும் பேராசைப்பேய்த் தலைக்கேறித் தம் மனம்போன போக்கெல்லாம்சென்று கெட்டலைபவர்கள் பலரை யின்றுங்காணலாம். ஒவ்வொரு தொழிலுக்கும் விதிவிலக்கு அநுபவம் முதலியவைகளுண்டு. முன்னர் விதிவிலக்குகளைத் தெரிந்துகொண்டு பிறகு அநுபவசாலிகள் மூலமாக ஒவ்வொன்றின் மர்மங்களையும் இரகசியங்களையுந் தெரிந்துகொண்டால் மாத்திரந்தான் எந்தத் தொழிலிலும் வெற்றியடையலாம். அவ்விதம் முயற்சி செய்யாத வரையில் வீண்செலவும், வீண் காலங்கழித்தலுமாகவே முடியும்.

இரசவாதத் தொழிலுக்கு அவசியமான அனேகமுறைகள் ஆதியோடந்தமாகவும் வரிசைக்கிரமமாகவும் நமது இரசவாத சிந்தாமணி முதற்பாகம், இரண்டாம் பாகம் ஆகியவைகளில் வகை விபரமாகவும் எழுதியிருக்கின்றோம். மற்றப் பாகங்களையும் மூன்றாம்பாகத்தில் எழுதி கூடியசீக்கிரம் அச்சாகி வெளியிடப்படும். ஆயினும், நமது நண்பர்களின் விருப்பப்படியும் இப்போதினியின்மூலமாக சிலவற்றை எழுதிவருவோம். இதற்காக, இப்போது அச்சாகி வெளியாகியிருக்கும் "அகஸ்தியர் பள்ளு" என்னும் அரிய கிரந்தத்தில சொல்லப்பட்டிருக்கும் முறைகள் அநுபவசித்தமானவைகளானபடியாலும் ஆரம்பமாகக் கற்கும் மாணாக்கர்களுக்கு ஏற்றவைகளான படியாலும் அதிலுள்ள முறைகளை ஒன்றன்பின் னொன்றாய் எழுதி அதிலுள்ள மர்மமுதலியவைகளை யெழுதிவருவோம். ஆகையால், நமது நண்பர்களுள் பரோபகாரச்சிந்தை, ஜீவகாருண்யமுள்ளவர்கள் ஒவ்வொருவரும் தாமும் செய்து அதன் முடிவை வெளிப்படுத்துவார்களாயின் அநேகர் பற்பலவிதப் பிரயோசனங்களை யடைவார்களென்பது நிச்சயம். ஆகையால் நமக்கு அநுபவமான சில விஷயங்களை யெழுதிவருவோம். ஆனால் நமது அபிமானிகளும் அவரவர்கள் அபிப்பிராயத்தையும் தெரியப்படுத்து வார்களென நம்புகின்றோம்.

### கூட்டுவேதை.

ஹேமலான், சேர்மான வேதை பொன்னானது இயற்கைப் பொன், செயற்கைப்பொன் என இருவகையாம். ஜோட்வேதை,யெனப் பல நாமங்களுண்டு.

சுயத் தங்கந்தவிர, மற்றப் பொன்னெல்லாம் சேர்மானப் பொன் அல்லது செயற்கைப்பொன்னும்.

இப்போது சாதாரணமாக வழங்கிவரும் சாவரின் பொன்னானது சுயத்தங்கம் எட்டுபங்கும், சுத்தி செய்த செம்பு ஒரு பங்கும் சேர்க்கப்பட்டதாம்.

சாவரினைப் புடமிட்டால் அதிலுள்ள செம்பு நீங்கிச் சுத்த தங்கமாகிவிடும். இவ்விதமே குறைந்த மாற்றுள்ள பொன்னைப் புடமிட்டுத் தங்கமாக்கிக் கொள்ளலாம்.

இவ்விதமே ஒரு சாவரனில் வெள்ளி யிரண்டணாவை வைத்துருக்கினால் ஏழேமுக்காலே யரைக்கால்)மாற்றுள்ள பொன்னும். இவ்விதமே சுயத்தங்கத்தில் சுத்தியான செம்பை அல்லது வெள்ளியை வைத்துருக்கி குறைந்த மாற்றுள்ள பொன்னாகச்செய்து கொள்வதற்குச் சேர்மானப் பொன்னெனப்படும்.

(இன்னும் வரும்)

---

இதனைத் தயவுடன் முழுதும் வாசித்துத் தங்கள் நண்பர்களுக்கும் வாசிக்கக் கொடுக்கவும்.

### மகா ஆனந்த புருஷகேம்பீர ஹல்வாவும், திலாவேன்னும் மேற்பூச்சும்.



தளர்ந்த நரம்புகளை உற்சாகப் படுத்தவும், சோர்ந்த பேசிநரம்புகளைப் பலப்படுத்தவும், மேற்பூச்சு மாத்திரம் அதிகமாக உபயோகப்படாது. ஆகையால், மேற் பிரயோகத்துடன் உட்பிரயோகமும் ஆவசியகம். பாலியச்சேஷ்டையினாலும், அறியாமையினாலும் உண்டான தாதுநஷ்டம் முதலிய வியாதிகளுக்கென பலவித விசித்திர நாமங்களோடு, வெளிப்பட்டுலாவும் போலி விளம்பரங்களை நம்பி ஏமாந்துபோகிறவர்கள் அனேகம். மேற்கண்ட ஔஷதங்கள் அவ்விதமானவைகள் அல்லன. இவை பரம்பரையாகவும், நெடுநாள் அநுபவ சித்தமாகவும், கைவல்லியமான முறைகள். ஒருவரிருவரல்ல. நூற்றுக்கணக்கான அநேகரால் உபயோகப் படுத்தப்பட்டுக் குணங்காணப் பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

பாலிய சேஷ்டையினலும், அறியாமையினலும் முற்றும் போக நிர்வாக சக்தியற்று, தாது நஷ்டமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினலும் தீராமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினல்கடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானல் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள் தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஔஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனேற்பலம், தைரியம், வீரியம் முதலியவைகளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன் விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதாரரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.



## அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையி லச்சாகி வெளிவரவில்லையென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட ரோகங்களுக்கு நானவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட் டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆதியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, லிங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யகூடியவைகள். இவை யுத்தி புத்தி அனுபவம் முதலியவைகளுக் கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னையுமையும் பொருளையும் அவமே பழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகள் அல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அனுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லக வகையாலும் லாபத்திற்கே யேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதி நூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட் டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கவசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட தக்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-2-0 வி - பி 1 - 4 - 0.

---

## தன்வந்திரி சூக்ஷ்ம வைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளியாகாத நூதன சிறிய கிரந்தம். இதின் பற்பல வகை மாத்திரைகள், எண்ணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நாந தைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷ்மமானவைகளும் பல தடவை அநுபவப்பட்ட வைகளுமாம். இதனைப் பார்த்த தக்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்ருய் விளங்கும். தம்முடையவும், தம் மினஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி - 1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-0.

---

## ஞாய அஷ்டாங்க தீபம்.



இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகைதாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞான நூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்போரும் ஆனந்தப் படும்படியாக வெண்பா, துறை, ஆனந்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட் டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி 0-6-0.

---

புத்தகம் - ௩. 1907ஹு ஏப்ரல்மீ 15உ இலக்கம்-௬.

சுகாதார போதினி.

க - ம் பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol III. பக்கம் 34.)

இரத்தம் கக்கல் ரோகச் சிகிச்சை.

இரத்தம் கக்கல் ரோகத்துக்கு இரத்தரோகம், க்ஷயரோகம் என்றும்பேர். காசலில் இரத்தம்வந்தால் மார்பிற் சூடுண்டாகி வருகிறதென நிதானிக்கவேண்டும். காசலில்லாமல் இரத்தம் வந்தால் மூளையிலிருந்து இரத்தம் வருகிறதென நிதானிக்க வேண்டும். இருமி இரத்தம் வந்தால் நுரையீரல், முதலிய உள்ளவயவங்களி லிருந்து வருகிறதென நிதானிக்க வேண்டும்.

சிகிச்சை.

மேற்சருகை நீக்கின சீந்தில்கொடி விராகனெடை - ரு; அத்திப்பட்டை விராகனெடை - ரு, இரண்டையும் நைபச் சிதைத்து, காலாழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாக சுண்டவைத்திறக்கி வடிகட்டி அதில் ஒரு விராகனெடை கருவேலம்பிசின் சூரணத்தைப் போட்டுக் கலக்கிப் பானஞ் செய்ய வேண்டும். இவ்விதம் பிரதிதினமும் இரண்டு அல்லது மூன்று வேளை பானஞ் செய்துவரின், எல்லாவகை இரத்தம் கக்கல் ரோகங்களும் தீரும்.

வேறு.

மொந்தன் வாழைப்பூவை இடித்துப் பிழிந்து வடிகட்டின சாறு ஆழாக்கு கால், துணியைச் சுட்டுக் கரியாக்கின தூள் விராகனெடை-வ. இரண்டையும் மிஸ்ரமித்து பானஞ் செய்ய வேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையுஞ் செய்துவர, இரத்தம் கக்கல் ரோகம் தீரும்.

வேறு.

செம்பருத்திப்பூ விதழ் விராகனெடை-ச. இதனை அரை ஆழாக்கு ஜலத்தில் ½ - மணி நேரம் ஊறவைத்து கசக்கிப் பிழிந்து வடிகட்டி. பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளை அல்லது பிரதிதினம் மூன்று வேளை பானஞ்செய்துவர, மேற்கண்ட ரோகங்கள்தீரும்.

வேறு.

கருவேலம் பிசின் சூரணம், பூவகாரச் சூரணம். வாதுமைப் பிசின் சூரணம், இவை வகை- க - க்கு விராகனெடை - ௨, இம்மூன்றையும் மிஸ்ரமித்துக் கொள்ளவும்.

அரைப்பலம் கசகசாவை அம்மியில் வைத்து ஜலம் வார்த்தரைத்து ஜலத்தில் கலக்கிப் பிழிந்தபால் பலம்-க, இஞ்சியின் மேல்தோலைச் சீவி இடித்துப்பிழிந்து சுண்ணாம்பு நீக்கின சாறு விராகனெடை-க. இவ்விரண்டையும் மிஸ்ரமித்து மேற்படிச் சூரணத்தைப்போட்டுக் கலக்கிப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டு வேளையுஞ் செய்துவர, மேற்கண்ட ரோகங்கள் தீரும்.

வேறு.

பூங்காவி, வெள்ளை குங்கிலியச் சூரணம், பூ மாதுளம்பூச் சூரணம், கருவேலம் பிசின் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை - ௮. நெல்லிக்காய்ச் சாறு. பலம்-க. இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையுஞ் செய்துவர, மேற்கண்ட ரோகங்கள் தீரும்.

குறிப்பு.

நெல்லிக்காய் அகப்படாத சமயங்களில் நெல்லி முள்ளியை ஊறவைத்துப் பிழிந்து வடிகட்டின ஊறற் கஷாயத்தில் உபயோகிக்கலாம்.

வேறு.

கருவேலங் கொழுந்து, மாதுளங் கொழுந்து, இவை வகை-க-க்கு விராகனெடை-க. கொத்துமல்லி விதை விராகனெடை-உ. இவை யெல்லாவற்றையும் ஒரு ஆழாக்கு ஜலத்தில் இரவில் ஊறவைத்து காலையில் அரைத்து அந்த ஜலத்தில் கலக்கி கொஞ்சம் கற்கண்டை அல்லது சீனி சருக்கரையைச் சேர்த்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் ஐந்து நாள் பிரதி காலையிலுஞ் செய்துவர, இரத்தம் கக்கல் ரோகம் இரத்தவாந்தி முதலிய ரோகங்கள் தீரும்.

வேறு

தாமரைக்கிழங்கு விராகனெடை-ச. இதனை அரைத்து தேனிற் குழைத்துச் சாப்பிடவேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையுஞ்செய்துவர, இரத்தங் கக்கல் ரோகம் தீரும்.

வேறு.

இரண்டு விராகனெடை பருப்புக்கீரை விதையை அரைத்துப் பிழிந்த இரசத்தைப் பானஞ் செய்துவர, இரத்தங் கக்கல் ரோகம் தீரும்.

வேறு

பருப்புக்கீரையை இடித்துப் பிழிந்த சாறு விராகனெடை-ரு, இதனுடன் ஒரு விராகனெடை தேனை மிஸ்ரமித்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டு வேளையும் பானஞ் செய்துவர, மேற்படி ரோகம் தீரும்.

வேறு

கோபிமண் விராகனெடை-க, இதனைப் பொடித்துக் கொத்துமல்லிக் கீரைச்சாறு பலம்-அ, இரண்டையும் மிஸ்ரமித்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலை மாலை, இரண்டு வேளையுஞ் செய்துவர, மேற்படி ரோகம் தீரும்.

வேறு

சிறுதுத்தி விதைச் சூரணம் விராகனெடை-அ, மாசக்காய்ச்சூரணம் விராகனெடை-அ, இரண்டையும்மிஸ்ரமித்துக் கொஞ்சம் ஜலத்தில் கரைத்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையும் பானஞ் செய்துவர, மேற்கண்ட ரோகம் தீரும்.

கஹருபா பில்லை மாத்திரை.

திறமான கஹருபா விராகனெடை-உ, பருப்புக்கீரை விதை; துணியைச் சுட்ட சாம்பல், வறுத்திடித்து வஸ்திரகாயஞ் செய்த கொத்து மல்லிவிதைச் சூரணம், கோதுமைச் சத்து, பூங்காவி, கருவேலம்பிசின் சூரணம், வாதுமைப் பிசின் சூரணம், இவை வகை ஒன்றுக்கு விராகனெடை-க.

செய்முறை:—ஆரம்பத்தில் கஹருபாவை கல்வத்திலிட்டு மெதுவா யுடைத்து நுண்மையான தூளாக்கி வஸ்திரகாயஞ் செய்து அதில் நின்ற திப்பியை மறுபடியும் கல்வத்திலிட்டு நுண்மையாக உடைத்து முன் தூளையும் சேர்த்து பன்னீரைச் சிறுகச் சிறுக வார்த்து நான்குஜாமமரைத்துப்பிறகு மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து பன்னீரைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு ஜாமமரைத்து ஒரு விராகனெடையுள்ள பில்லை மாத்திரைகளாகச் செய்து நிழலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க. உ.

அனுபானம்:—முலைப்பால், கொத்தமல்லிக் கீரைச்சாறு, பருப்புக்கீரை விதையை அரைத்துப் பிழிந்த ரசம், ஆகியவைகளி லொன்றில் அனுபானித்து உபயோகிக்கவும்.

உபயோகம்:—இரத்தம் கக்கல் ரோகம், சூதகப் பெருக்கு, நீரில் இரத்தம் விழுதல் முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—சூடான பதார்த்தங்களையும், தேகத்திற்கு ஒவ்வாத பதார்த்தங்களையும் நீக்க வேண்டியது.

பூமாதுளை பில்லை மாத்திரை.

பூ மாதுளைப்பூ விராகனெடை-ச, சுக்காங் கீரை விதை, கொத்தமல்லி விதை, இவைகளின் தனித்தனிச் சூரணம் வகை-க-க்கு விராகனெடை-உ, வாதுமைப் பிசின் சூரணம், கருவேலம்பிசின் சூரணம், முருங்கைப் பிசின், * மாசக்காய்ச் சத்து, இவை வகை-க-க்கு விராகனெடை-க.

செய்முறை:—எல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு பன்னீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமம் அரைத்து ஒரு விராகனெடையுள்ள பில்லை மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க. உ.

அனுபானம்:— மேற் சொல்லப்பட்டவைகளேயாம்.

உபயோகம்:—மேற்கண்ட ரோகங்கள் தீரும்.

குறிப்பு.

மேற்கண்ட பாகத்தில் அவசியமானால் நான்கு குன்றிமணி யெடை அபினியையுஞ் சேர்த்து உபயோகித்துக் கொள்ளலாம்.

ஹப்புல்ஆஸ் ஷர்பத்து.

ஹப்புல்ஆஸ் பலம்-உ. சந்தனத் தூள், நெல்லிவற்றல், பூமாதுளம்பூ, வகை-க-க்கு விராகனெடை-உ. சீனிசருக்கரை பலம்-கூ, பொரித்த கருவேலம்பிசின் விராகனெடை-க.

---

* மாசிக்காய்ச் சத்து அகப்படாத சமயத்தில் மாசிக்காய்த் தூளை இரண்டு பங்காகச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

செய்முறை:—முன் கண்ட நான்கு சரக்குகளையும் மூன்றுழாக்கு ஜலத்திற் போட்டு, பன்னிரண்டு மணிநேரம் ஊறவைத்து அடுப்பேற்றிக் காய்ச்சி மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின் இறக்கி வடிகட்டின கஷாயத்தில் சர்க்கரையைச் சேர்த்துக்காய்ச்சிப் பாகுபதத்திலிறக்கி குளிர ஆறினபின்பு கருவேலம் பிசின் சூரணத்தைக் கலந்து மிஸ்ரமித்து பீங்கான் பாத்திரத்தில் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—பலம்-உ, க.

உபயோகம்:—மார்பு துடித்தல், பேதியாகுதல், முதலிய குணங்களோடு உள்ள இரத்தங் கக்கல் ரோகம், இரத்தவாந்திரோகம், ஆகியவைகள் தீரும்.

இரத்தம் கக்கல் ரோகமுள்ளவர்களுக்கு பெரும்பான்மையும் உபயோகப்படும், காய், கறி வகைகளாவன.

பீர்க்கங்காய், சுரைக்காய், பூசனிக்காய், வாழைப்பூ, நெல்லிக்காய், பருப்புக்கீரை, மசூரிப்பருப்பு ஆகியவைகளும் இவை போன்றவைகளுமாம்.

---

## சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் 35)

### Carbonate of Ammonia.

நவச்சார உப்பு அல்லது ஆக்ராண உப்பு.

இந்த உப்பானது சித்தப்படுத்தப்பட்டு இங்கிலீஷ் மருந்து ஷாப்புகளில் விற்கப்படுகிறது. இந்த உப்பு கட்டிகளா யிருக்கும். குளிர்ந்த ஜலத்தில்கரையும்; சாராயத்தில் சரியாய்க் கரையமாட்டாது. காற்றுப்பட்டால் அதிலிருக்கிற காரம்போய் விடுவதால் உப்பிலிருக்கிற பளபளப்பு மாறி பொடியா யுதிர்ந்து போகும். ஆகையால் கல்காரக்குள்ள சீஷாவில் போட்டு வைத்திருக்க வேண்டும். இதற்கு வாசனையும் உருசியுமில்லை.

இது குலையெரிவு, சரற்குழி வேதனை, இரத்தமசூரிகா ரோகம், நுரையீரல் ரோகம், இவைகளை உடனே தணிக்கும். அக்கி, பித்தத்தழும்பு, முக்கிபமாய் குஷ்டம், சொறி, சிரங்கு, முதலிய சரும வியாதிகளுக்கு எடுத்தமருந்து. மார்ச்சளி; சூதக ஜன்னி, காக்கை வலி, பிரசவ பைத்தியம், ஸ்தம்பவாதம், சுவாசகாசம், இவை முதலிய வியாதிகளுக் குபயோகித்து சௌக்கியங்கண்டதுண்டு. ஜலதோஷம், மூர்ச்சை, போதக்ஷயம் ஆகிய இவைகளுக்கு இதை முகரவைக்கலாம். தொண்டை வாய்வுக்கும் இரப்பை ரோகங்களுக்கும் கொடுக்கலாம். வாந்திபேதிக்கு அடிக்கடி முழு மாத்திரையாகக் கொடுத்து நன்மை கண்டதுண்டு. வமனகாரியாக அபூர்வமாக அரை டிராம் கொடுக்கலாம்.

மாத்திரை:—க, உ, முதல் 6-குன்றிமணி வரையில் கொடுத்தால் உஷ்ணப்படுத்தும் 12-குன்றிமணி முதல் 17-குன்றிமணி வரையில் கொடுத்தால் வாந்தியாகும்.

மூர்ச்சை ரோகத்தில் இதனை முகரவைப்பதினால் உடனே ஸ்மரணை யுண்டாகி சுகமுண்டாகும். இதனை முகரவைக்கும் விபரமாவது. வியாதியஸ்தனின் ஒரு நாசித் துவாரத்தை ஒரு விரலால் அழுத்திக் கொண்டு மறுநாசித் துவாரத்தில் சீஷாவின் கார்க்கை எடுத்துக்கொண்டு முகர வைக்கவேண்டும். இவ்விதமே அந்த நாசியின் துவாரத்தை விரலால் அழுத்திக்கொண்டு மறுநாசித் துவாரத்தில் முகரவைக்க வேண்டும் என்பதே.

### குறிப்பு.

மூர்ச்சை ரோகமானது சிலருக்கு மூளையில் இரத்தம்சேர்ந்து கட்டிப் போவதால் உண்டாகும். அந்தச் சமயங்களில் இதனை முகரவைக்க லாகாதென ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டியது.

சூதக ஜன்னி,—அதாவது ஸ்திரீகளுக்கு சூதக காலங்களில் பந்தைப்போல் வயிற்றிலிருந் தெழும்பி நெஞ்சில் வரும்போது மூர்ச்சை யுண்டாகும். அந்தச் சமயத்தில் மேற்கண்டபடி இதனை முகரவைப்பதினால் பெரும்பான்மையும் உடனே மூர்ச்சை நீங்கிப் போகும்.

தேள்கொட்டி விஷமேறினால் மேற்கண்டபடி இதனை முகரவைத்தால் உடனே விஷமிறங்கி அழுதுகொண் டிருந்தவன் சிரித்துக் கொண்டிருக்க நேரிடும்.

| | | |
|---|---|---|
| நவச்சார உப்பு விராகனெடை | | உ |
| சோடா கார்பொனெஸ் விராகனெடை | | க |
| குவாஷிபா வெந்நீர்க் கஷாயம் பலம் | | ௫ |
| Sesqui carbonate of Ammonia | dr | $\frac{1}{2}$ |
| Carbonate of soda | dr | 1 |
| Infusion of Quassiae | fl - oz | 1 |

இவை எல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்து ஒரு வேளைக்கு ஒரு அவுன்ஸ் வீதம் தினம் இரண்டு அல்லது மூன்று வேளை உபயோகித்து வந்தால், அஜீரண ரோகம் தீரும்.

| | |
|---|---|
| நவச்சார உப்பு குன்றிமணி யெடை | ௨ ½ |
| பைகார் போனெட் ஆப் சோடா வி | ½ |
| கலம்பா பாவனைத் திராவகம் விராகனெடை | ௧ |
| கலவை ஜென்ஷன் வெந்நீர்க் கஷாயம்பலம் | ௧வ |
| Sesquicarbonate of Ammonia gr | 5 |
| Bycarbonate of Soda. dr | ½ |
| Tincture of Calumbia. fl-dr | 1 |
| Infusion of Gentian Compound fl. cz | 1 |

இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்து தினத்துக்கு இரண்டுவேளை உபயோகித்து வந்தால், கிரந்தி ரோகங்கள் தீரும்.

Sir - A. Coopper

---

சுகாதார போதினி.

௫ - ம் பிரிவு.



ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-36.)

கருப்பையின் வாய் கேட்டிப்பட்டுப் போகுதல்.

சிசுவானது வெளிப்படுவதற்கு அதன் பருமனுக்குத் தகுந்தபடி கருப்பையின் வாயானது விரியாமலிருப்பதால் அது வெளிப்படாமலிருக்க நேரிடும். இவ்வித சமயங்களில் சிலருக்கு கிரமப்படி இடுப்பு நோயானது கண்டுகொண்டேயிருக்கும். ஆனால்முன்கண்டபடி கருப்பையின் வாயானது கெட்டியாயிருப்பதால் கருப்பஸ்திரீக்கு உண்டாகும் வேதனைக்கு அளவேயில்லை. அதை அனுபவிப்பவர்களுக்கே தெரியவரும். மற்றவர்கள் சொல்லும் தரமுடையதன்று. இதற்காக புருஎச்சம், அக்கராகாரம், திறமானதேன், இம்மூன்றையுஞ் சேர்த்து மைபோலரைத்துக் கருப்பையின் கழுத்து வரையில் செலுத்துவதினால், கருப்பையிலுள்ள கடினம் நீங்கி, கருப்பை தளர்ந்து வாய் விரிந்து சிசு தாராளமாய் வெளிப்பட ஏதுவாகும்.

எபிகா வென்னும் மருந்தை உள்ளுக்குபயோகப்படுத்துவதினால் ஆச்சரியப் படும்படியான குணத்தைத்தரும். இதனை உபயோகித்த க,௦-மணிக்குள் குணந்தெரியும். எரிகிற நெருப்பில் ஜலத்தை ஊற்றிக் குளிரச் செய்வதுபோல பிரசவ ஸ்திரீக்கு இதனால் சுகங்காணும்.

3. கருப்பையின் வாயானது வேறுபக்கம் புரண்டிருத்தல்:—இது பெரும்பான்மையும் புட்டங்கள் பெருத்து அகன்டிருக்கப் பெற்ற ஸ்திரீகளுக்கு இவ்விதமிருக்கும். ஆகையால், இவ்வித ஸ்திரீகளை நேராகமல்லாந்துபடுக்கச் செய்து அதிக சாமர்த்திய முள்ள மருத்துவப் பெண் மூலமாக மெதுவாக கையினால் அதன் வாயைத் திருப்பிவிடச் செய்து படுத்த படுக்கையிலேயே பிரசவிக்கச் செய்ய வேண்டும்.

4. நாம் முன் சொல்லி யிருக்கிறபடி நீர்ப்பையானது நீரினால் நிறைந்திருப்பதும், கஷ்டப் பிரசவத்துக் கேதுவாகும். இந்தச் சமயங்களில் ஆயுதத்தினால் நீரை யெடுத்து வெளிப்படுத்தி விடுவதே சுலபமும் உசிதமுமான சிகிச்சையாம். இதற்கேற்ற ஆயுத முதலியவைகள் இங்கிலிஷ் மருந்து ஷாப்புகளிற் விற்கப்படுகின்றன. இதனை உபயோகிக்கும் வகை முதலியவைகளும் கிரமமாகப் பயின்ற மருத்துவப் பெண்களுக்குத் தெரியும். ஆகையால் தெரிந்தவர்கள் மூலம் இதனைச் செய்விக்க வேண்டும்.

இப்படிச் செய்யக்கூடாத சமயங்கயில் மூத்திர வர்த்தனி காரிகைகளை உபயோகப்படுத்தி மூத்திரத்தை வெளிப்படுத்த வேண்டும்.

முள்ளங்கிவிதை, சோம்பு, வெடியுப்பு, குங்குமப்பூ, ஓமம், முதலியவைகளில் சமயோசிதம்போல ஏற்றவைகளை ஏற்கும் அளவு கஷாயஞ்செய்து உபயோகிப்பதினால், குணமுண்டாகும்.

---

சுகாதார போதினி.

௭ - ம் பிரிவு.



பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. III. பக்கம் - 37.)

மாந்தக் கஷாயம்.

பீர்க்கம் வேர், தும்பை வேர், வெதுப்படக்கி வேர், பேய்மிரட்டி வேர். வேலிப்பருத்தி வேர், நுணாவேர்ப்பட்டை, சுட்டெரித்த வசம்பின் சாம்பல்,

ஓமம், தோலுரித்த வெள்ளைப்பூண்டு, இவை வகை-௧-க்கு விராகனெடை-௫.

செய்முறை:—ஓட்டைச் சுடவைத்து ஓமத்தைப் போட்டு ஓமம் பொரியும் சமயத்தில், பூண்டைப் போட்டு அது வதங்கினவுடன், மற்ற வேர் வகைகளைப் போட்டு நன்றாய் வதங்கும்படியாக வறுத்து அரை ஆழாக்கு ஜலத்தைவிட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டிப பானஞ் செய்விக்க வேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையும் செய்துவர, எல்லாவகை மாந்த ரோகங்களும் தீரும்.

மாந்தக் கஷாயம் வேறு.

மேல்தோல் சீவின 'சுக்கு, ஏலம், கடுகுரோகணி' பரங்கிச் சக்கை, இவை வகை-௧-க்கு விராகனெடை-௫. மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், கோரைக்கிழங்கு, இவை வகை-௧-க்கு விராகனெடை-௫. மாசிப்பத்திரி, பற்பாடகம், நாயுருவிவேர், மூக்காவேளை, கருஞ்சீரகம், கோழியின்வெள்ளை யெச்சம், இவை வகை-௧-க்கு விராகனெடை-௫, இந்த ஆறையும் சட்டியிலிட்டு வறுத்துச் சாம்பலாக்கிக் கொள்ள வேண்டும்.

செய்முறை:—எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்துச் சட்டியிலிட்டு ஒரு ஆழாக்குஜலத்தைவார்த்து எட்டிலொரு பாகமாகச் சுண்டவைத்துப் பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டுவேளையும் பானஞ் செய்வித்துவர, எல்லாவகை மாந்த ரோகங்களும் தீரும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௫ - ம் பிரிவு.

### மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 38)

| | | |
|---|---|---|
| சீமைக் கடுக்காய்த்தோல விராகனெடை | | ௧௦ |
| மஞ்சள் கடுக்காய்த்தோல் விராகனெடை | | ௧௦ |
| தான்றிக்காய்த்தோல் விராகனெடை | | ௧௦ |
| முத்துச் சிப்பியை புடமிட்டு பஸ்பமாக்கின பஸ்பம் விராகனெடை | | ௯ |
| ஆட்டுக்கொம்பை யெரித்துச் சுட்டகரி விராகனெடை | | ௩ |
| ஓமம் விராகனெடை | | ௨௫ |
| சுத்திசெய்த மைசாக்ஷி | பலம் | ௭ |

வெங்காயச்சாறு செல்லத்தக்க அளவு

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளை தனித்தனி இடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கண்ட எடை எடுத்துக் கொள்ளவேண்டும். பிறகு மைசாக்ஷியை வெங்காயச் சாற்றில் கரைத்து வைத்துக்கொண்டு மற்றச் சரக்குகளைக் கல்வத்திலிட்டு முன் சித்தப்படுத்தி யிருக்கிற சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து அந்தச் சாறெல்லாஞ் சென்றபின்பு திரள் பதமாகிற வரையில் அரைத்து அரை விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-௨. ௩.

அனுபானம்:—நீராகாரம், மோர், வெங்காயச் சாறு முதலியவைகளாம்.

உபயோகம்:—இரத்தமூலம், எல்லாவகைகளும் அதி சீக்கிரமாகக் குணப்படும். மூல சம்மந்தமான உப்புசம் மூலவாய்வு ஆகியவைகள் தீரும்.

வேறு.

| | |
|---|---|
| கருப்புக் கடுக்காய்த்தோல் விராகனெடை | ௪௫ |
| தான்றிக்காய்த்தோல் விராகனெடை | ௪௫ |
| நெல்லிமுள்ளி விராகனெடை | ௪௫ |
| வெங்காய விரை விராகனெடை | ௨௫ |
| பவளப் புற்றுவிராகனெடை | ௨௭ |
| முத்துச் சிப்பி பற்பம் விராகனெடை | ௨௭ |
| சுத்திசெய்த மைசாக்ஷி விராகனெடை | ௧௦ |

வெங்காயத்தாள் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—முன்கண்ட சரக்குகளைத் தனித்தனி இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணத்தை தனித்தனி மேற்கண்ட அளவு எடுத்துக்கொள்ள வேண்டும். மைசாக்ஷியை வெங்காயத்தாள் சாற்றில் கரைத்து மற்றச் சரக்குகளைக் கல்வத்திலிட்டு முன் சித்தப்படுத்தின சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்தரைத்து சாறெல்லாம் சுண்டினபின்பு சாறுவிடாமல் திரள்பதமாகிற வரையிலரைத்து அரை விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவேணும்.

பிரமாணம்:—மாத்திரை-௧. ௨.

அனுபானம்:—இரும்பை நெருப்பில் பழுக்கக் காய்ச்சி ஜலத்தில் தோய்த்து ஆறினபின்பு வடிகட்டி வைத்துக்கொள்ள வேண்டும். இந்த ஜலம் சுமார் கால் அல்லது, அரை ஆழாக்கில் மேற்கண்ட பிரமாணப்படி மாத்திரையை அனுபானித்துப் பானஞ்செ

ய்யவேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையும் உபயோகிக்க வேண்டும்.

உபயோகம்:—எல்லாவகை இரத்தமூல ரோகங்களுந்தீரும். இதன் சிறந்த குணம் இதனை உபயோகிப்பவர்கள் ஆச்சரியப் படும்படியாகத் தெரியவரும்.

---

சுகாதார போதினி.

சு - ம் பிரிவு

முன்தொடர்ச்சி (vol- III பக்கம். 39)

## இரசவாதம்.

சேர்மான பொன் அல்லது செயற்கைப் பொன் என்பது இன்னதென முன் சொல்லியிருக்கின்றோம். அவ்வகைப்பொன்னானது சாதாரணமாய் தட்டார் முதலியபாவரும் செய்யத் தகுந்தது. ஆனால், சாஸ்திரகிரமப்படி மேற்கண்ட சேர்கைப்பொன்னை செய்து இலாபமடையலாம், அந்த வகைகளை எழுதுமுன் அவற்றின் இலக்ஷணம், அவலக்ஷணம் முதலியவைகளை ஒருவாறு தெரிந்துகொள்ள வேண்டியது ஆவசியமாகையால் அவைகளை முன்னரிங் கெழுதுவாம்.

### பொன்னின் சுலக்ஷணம்.

செயற்கைப் பொன்னானது அல்லது இரசவாதப் பொன்னானது கீழ்க்காணும் இலக்ஷணங்களை யுடையதாயிருக்குமாகில், அதனைப் பொன்னென விற்பதனால் வேத சாஸ்திரப்படி பாபமுமாகாது. சர்க்கார் சட்டத்தின்படியும் குற்றமுமாகாது. அப்படிக்கில்லாதிருக்கில், அதனைப் பொன்னென விற்பது வேதசாஸ்திரத்தின்படி பாபமாவதுடன் சர்க்கார் சட்டத்திற்கு விரோதமாய் மோச மென்னுங் குற்றத்துக் கேதுவாகும். ஆகையால், நமது நண்பர்கள் இவ்விஷயங்களைகவனத்தில் வைக்கும்படியாய் மிகவும் வினயமாய்க் கேட்கப்படுகிறது.

1. பொன்னை நெருப்பில் காய்ச்சி எடுத்தால் பொன் வர்ணமா யிருக்கவேண்டும்.

2. அதனை நெருப்பில் காய்ச்சி எடுத்தால் கொஞ்சமும் கறுப்பு வர்ணம் வரலாகாது.

3. இதனை நெருப்பில் காய்ச்சியெடுத்து அதன் மீது நவச்சாரத் தூளைப்போட்டால், அதன் வர்ணம் பேதப்படலாகாது. அதாவது வெண்புள்ளி, அல்லது கறும்புள்ளி யுண்டாதல் அல்லது வர்ணம்போய் விடுதல் முதலியவைகளே யாம்.

4. பொன்னை எத்தனை தடவைகள் மடக்கிமடக்கி உருக்கினபோதிலும் அதன் வர்ணம் மாறலாகாது. அதன் வர்ணம் முன்போலவே யிருக்கவேண்டும். அதாவது முன்னுள்ள மாற்று குறையலாகாது

5. சங்க திராவகமென்னும் வெடியுப்பு திராவகத்தில் பொன்னைத் தவிர மற்றெல்லா உலோகங்களும் கரைந்து போகும். பொன்னானது உப்பு திராவகத்தில் மாத்திரம் கரையும். ஆகையால், அதனை வெடியுப்புத் திராவகத்திற் போட்டாற் கரையாமலிருக்கவேண்டும். அதனை உப்பு திராவகத்திற்போட்டாற் கரையவேண்டும்.

6. பொன்னுக்கு சுபாவமாயுள்ள ஊட்டம் (Gravity) உண்டாகிவிட வேண்டும். இதன் அறிகுறியாவது:-இதனை மற்ற லோகத்துடன் சேர்த்து உருக்கினால் எப்போதும் கீழ்ப்பக்கம் பொன்னிறமாயாகி விடுவதேயாம்.

7. இதனை வெட்டிரும்பால்வெட்டி யுடைத்தால் முழுவதும் துண்டாய்ப்போய்விடாமல் ஈற்றில்கொஞ்சம் ஒட்டிக்கொண்டிருக்கவேண்டும். உடைவதும் நைப்பாக உடையவேண்டும். பட்டென உடையலாகாது.

8. இதனை உருக்கி எடுத்தால் இதன் மணியானது மேற்புறம் உண்டையாக மீன் முதுகைப் போன்றிருக்கவேண்டும்.

9, இதனை உருக்கி எடுத்தால் இந்த மணியின் கீழ்ப்புறத்தில் வலையைப்போன்ற உருண்டையான சிறுபள்ளங்கள் விழுந்திருக்கவேண்டும்.

10. நவச்சாரம் ஒருபங்கு. வெண்காரம் ஒருபங்கு, வெடியுப்பு அரைப்பங்கு, இவை யெல்லாவற்றையும் ஜலம் வார்த்தரைத்து இதை தகட்டின்மீது பூசி நெருப்பில் காய்ச்சி எடுத்தால் பளபளப்பும், நல்லநிறமு முண்டாகி விடவேண்டும்.

11. இதனை உருக்கும்பொழுது வலது புறமாகச் சுழன்று வரவேண்டும்.

இந்தப் பதினொறு வகைகளும் நல்ல பொன்னின் சுலக்ஷணமாம். இவையன்றிப் பின்காணும் அவலக்ஷணங்களு மிருக்கலாகாது. அவையாவன:—

### பொன்னின் அவலக்ஷணம்.

கோச்சகம்.

பொங்கல் திரை சவுடு பொருமலுடன் கண்விழித்தல், மங்கல்மழுக்குறைதல் வளர்பொடிக்கு முன்னுருகல், தங்குங்கழும்பூறல் தானடிக்க வேதகர்தல், துங்கமுடன் கம்பிக்குத் துண்டு துண்டா யொடிதலுமே.

1. இதனை உருக்கும்போது பொங்கிவிழுதல்.
2. அதில் திறையுண்டாகுதல்.
3. சௌடா யிருத்தல்.
4, அதனை உருக்கி ஜலத்தில் தோய்த்தெடுத்தால் பொருமலுண்டாகுதல்.
5, அதனை உருக்கும்போது கண்ணை மூடிமூடி விழித்தல்.
6. அது உருகும்போது கண்விட்டாடாமல் மங்கலா யிருத்தல்.

7. மழுக்குறைதல்,

8. இதில் பொடியை வைத்து ஊதினால் பொடிக்குமுன் உருகிப்போகுதல்.

9. களிம்புண்டாகுதல்.

10. ஊறலுண்டாகுதல்,

11. இதனை அடித்தால் தகருதல்.

12. கம்பி இழுத்தால் கம்பிக்குவராமல் பொடியாய்ப் போகுதல்.

இந்தப் பனிரெண்டும் பொன்னின் அவலக்ஷணமாம்,

இவை யில்லாதிருக்கில் சேற்கைப் பொன்னாயிருக்கினும் இயற்கைப் பொன்னின் குணத்தையுடையதெனச் சொல்லலாம். ஆகையால் மேற்கண்ட சுலக்ஷணங்களை யுடையதாய் மேற்கண்ட அவலக்ஷங்கள‍ற்றதா யிருப்பதைப் பொன்னென விற்பதால் வேதசாஸ்திரப்படி பாபமுமாகாது; இராஜாங்க சட்டத்துக்கும் விரோதமுமாகாது. இவ்விதம் இல்லாததைப் பொன்னென விற்பதால், மேற்கண்ட இருவகை குற்றத்திற்கும் ஆளாக நேரிடும்.

---

## சுகாதாரபோதினி

எ-ம், பிரிவு,

முன்தொடர்ச்சி (Vol-II. பக்கம். 4.)

### தாம்பிர சுத்தி.

பூனீறு, கறியுப்பு, கல்லுப்பு. இவை மூன்றும் வகை-க-க்கு சமனெடை. புளித்தமோர், திறமானகாடி இவ்விரண்டையுஞ் சமபாகமாகச் சேர்த்து வைத்துக்கொள்ளவேண்டும்.

முன் மூன்று சரக்கையும் கல்வத்திலிட்டுப் பொடித்து முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற மோர்காடி நீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டுமணி நேரமரைத்துத் தாம்பிரத்தகட்டின்மீது பூசிக் கரிநெருப்பில் வைத்து பழுக்கக்காய்ச்சிக் காடியில் தோய்க்கவேண்டும். நன்றாய் ஆறினபின்பு எடுத்து முன்போல் உப்புக் கலவையைப்பூசி கரிநெருப்பில் பழுக்கக்காய்ச்சி முன்போல் காடியில் தோய்க்கவேண்டும். ஒருதடவை உபயோகித்த காடியானது மறுதடவைக்கு உபயோகமாகாது, மேலும் காடியானது துவைக்கும் தகடானது ஆழ்ந்து கிடக்கும்படியாக இருக்கவேண்டியது. இவ்விதம் மடக்கிமடக்கி ஏழுதடவைகாடியிலும், ஏழுதடவை வெண்ணெச்சி யிலைச் சாற்றிலும் காய்ச்சித் தோய்க்கவேண்டியது. இப்படிச் செய்வதால் செம்பிலுள்ள தோஷங்களெல்லா மற்று சுத்தமாய் விடும். இவ்விதம் சுத்திசெய்த செம்பை பற்பம், செந்தூரஞ் செய்வதனால் எவ்வித தோஷமுமின்றி விசேஷகுணமுண்டாகும்.

குறிப்பு.

மேற்கண்ட தாம்பிர சுத்தியானது வைத்தியத்திற்காகும். வாதத்துக்காகாது. வாதத்திற் குபயோகப்படுத்த இஷ்டமானால் முன் செம்பை உருக்கி காடியில் ஏழுதடவையும் வெண்ணெச்சிச் சாற்றில் ஏழுதடவையும் சாய்த்தெடுத்துக் கொள்ள வேண்டியது. இதனை சேற்கைப்பொன்னிற்காகச் சேர்த்துக் கொள்ளலாம்.

### தாம்பிர சுத்தி. வேறு.

தாம்பிரத்தை ராவிப் பொடியாக்கி ஓர் துண்டுத்துணியில் தளரமுடிந்து ஒரு சிறு மண்பாத்திரத்தில் டோளாந்திரமாகக் கட்டித் தொங்கவிட்டு அந்தப் பாத்திரம் நிறைய கோமூத்திரத்தைவிட்டு அடுப்பின்மீது வைத்து காடாக்கினியாக எரித்து அந்தமூத்திரமெல்லாஞ் சுண்டினபின் எடுத்துக் கல்வத்திலிட்டு ஜலத்தை விட்டரைத்துக் கழுவி உலர்த்தி முன்போல் வஸ்திரத்தில் முடிந்து முன்போல் மூத்திரத்தில் எரித்தெடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் மூன்றுதடவை மடக்கி மடக்கிச் செய்துக்கொண்டால், தாம்பிரமானது தோஷமற்றதாய்ச் சுத்தமாகிவிடும். இதனை பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்துக்கொள்வதனால் விசேஷகுண முண்டாவது நிச்சயம்,

குறிப்பு.

தாம்பிரசுத்தி, தாம்பிர பற்பம், தாம்பிர செந்தூரம் முதலிய அநேக வகைகள் நமது அநுபோக வைத்திய நவநீதம் முதலிரண்டாம் பாகங்களில் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. விசேஷமாய்த் தெரிந்து கொள்ள விருப்பமுள்ள நண்பர்கள் மேற்படி புஸ்தகங்கள் மூலமாகத் தெரிந்துக் கொள்ளலாம்,

(இன்னும் வரும்)

---

இதனைத் தயவுடன் முழுதும் வாசித்துத் தங்கள் நண்பர்களுக்கும் வாசிக்கக் கொடுக்கவும்.

மகா ஆனந்த புருஷகேம்பீர ஹல்வாவும், திலாவென்னும் மேற்பூச்சும்.

தளர்ந்த நரம்புகளை உற்சாகப் படுத்தவும், சோர்ந்த பேசிநரம்புகளைப் பலப்படுத்தவும், மேற்பூச்சு மாத்திரம் அதிகமாக உபயோகப்படாது. ஆகையால், மேற் பிரயோகத்துடன் உட்பிரயோகமும் ஆவசியகம் பாலியச் சேஷ்டையினாலும், அறியாமையினாலுமுண்டான தாதுநஷ்டம் முதலிய வியாதிகளுக்கெனபலவித விசித்திர நாமங்களோடு, வெளிப்பட்டுலாவும்போலி விளம்பரங்களை நம்பி ஏமாந்துபோகிறவர்கள் அனேகம். மேற்கண்ட ஔஷதங்கள் அவ்விதமானவைகள் அல்லன. இவை பரம்பரையாகவும், நெடுநாள் அநுபவ சித்தமாகவும், கைவல்லியமான முறைகள். ஒருவரிருவரல்ல. நூற்றுக்கணக்கான அநேகரால் உபயோகப் படுத்தப்பட்டுக் குணங்காணப்

பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

பாலிய சேஷ்டையினாலும், அறியாமையினாலும் முற்றும் போக நிர்வாக சக்தியற்று, தாது நஷ்டமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினாலும் தீராமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினால் கடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானால் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள் தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஔஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனோற்பலம், தைரியம், வீரியம் முதலியவைகளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன் விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதார ரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.



அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையி லச்சாகி வெளிவரவில்லை யென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட. ரோகங்களுக்கு நானாவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட் டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆதியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செப்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, லிங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யகூடியவைகள். இவை யுத்தி புத்தி அனுபவம் முதலியவைகளுக் கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னுயுளையும் பொருளையும் அவமே யழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகளல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அனுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லா வகையாலும் லாபத்திற்கே பேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதி நூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட் டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கவசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட தக்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-20- வி - பி 1 - 4 - o.



தன்வந்திரி சூக்ஷ்ம வைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளியாகாத நூதன சிறிய கிரந்தம். இதின் பற்பல வகை மாத்திரைகள், எணணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நாநதைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷ்மமானவைகளும் பல தடவை அநுபவப்பட்ட வைகளுமாம். இதனைப் பார்த்த தக்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்றாய் விளங்கும். தம்முடையவும் தம்மின ஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி - 1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-o.

ஞாய அஷ்டாங்க தீபம்.

—*—

இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகைதாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞானநூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்போரும் ஆனந்தப் படும்படியாக வெண்பா, துறை, ஆனந்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட் டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி o-6-o.

இராஜ அவுடத சாலை. 12 - வது நெ. அப்புமேஸ்திரி தெருவு, மாபுஸ்கான்தேவடி. மத்ராஸ்.

புத்தகம் - ௩. 1907ஸ்ரீ மேமீ 1 உ இலக்கம் - ௭.

## சுகாதார போதினி.

க - ம் பிரிவு.

---

### வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol III. பக்கம் 43.)

#### இருதயத் துடிப்பு ரோகம்.

இந்த ரோகமானது இருவகைப்படும், ஒன்று இருதயத்திற்கே வியாதி நேரிடுவது. மற்றொன்று இரப்பை, தலைமூளை, சிறு குடல்கள், கருப்பை, முதலிய அவயவங்களிலொன்றில் வியாதி நேரிட்டு அது சம்பந்தமாக இருதயத்திற்கு நேரிடுவது. வேறு அவயவ சம்பந்தத்தால் இருதயத்திற்கு வியாதி நேரிட்டால், முன்னர் அந்தந்த அவயவத்திலுள்ள வியாதியை நீக்கினால் இருதயத்திற் குண்டாகிய வியாதியும் தானே போய்விடும். வேறு அவயவ சம்பந்தமில்லாமல் இருதயத்திற்கு மாத்திரம் வியாதி கண்டிருந்தால் தேகத்தைச் சுத்திசெய்து இருதயத்தைப் பலப்படுத்தும் அவுஷதங்களை உபயோகிக்க வேண்டும். சாதாரணமான மார்பு துடித்தல் ரோகங்களில் தேக சுபாவத்தைக் கிரமப்படுத்தினால் வியாதி தானே தணிந்து போகும்.

#### சந்தன பானம்.

சந்தனத்தூள் பலம்-உ௦, இதனை அரைப்படி பன்னீரில் அல்லது ஜலத்தில் ஓரிரவு ஊறவைத்துக் காலையில் அடுப்பேற்றி சிறுதீயா யெரித்து நான்கிலொரு பாகமாகச் சுண்டினபின் இறக்கி வடிகட்டி அதில் எட்டுப்பலம் சீனி சருக்கரையைச் சேர்த்துக் காய்ச்சி பாகுபதத்தி லிறக்கி வடிகட்டிச் சீஷாவில் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—பலம்-,௦. ௬.

உபயோகம்:—உஷ்ண சம்பந்தத்தா லுண்டான மார்பு துடித்தல் மார்பு அதிர்ச்சி முதலியவைகள் தீரும்.

#### குறிப்பு.

மேற்படி ஷர்பத்தில் புளிப்புண்டாக்க வேண்டுமானால், இரண்டு பலம் எலுமிச்சம்பழச் சாற்றைச் சேர்த்துக் காய்ச்சிக் கொள்ளலாம்.

#### காவுஸபான் ஷர்பத்து.

காவுஸபான் இலை பலம்-சு, சீனி சருக்கரை பலம்-உச.

செய்முறை:—மேற்படி இலையை முக்கால்படி ஜலத்தில் போட்டு ஓரிரவு ஊறவைத்து மறுநாள் காலையில் அடுப்பேற்றி மெதுவாயெரித்து நான்கிலொரு பாகமாகச் சுண்டினபின் இறக்கி வடிகட்டி. அதில் சருக்கரையைக் கரைத்து அடுப்பேற்றிக் காய்ச்சி பாகுபதத்திலிறக்கி ஆறினபின் சீஷாவிற் போட்டுப் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—பலம்-௦. ௬.

உபயோகம்:—மார்பு துடித்தல், மார்பு அதிர்ச்சி முதலியவைகள் தீர்ந்து இருதயம் பலப்படும்.

#### பட்டு ஷர்பத்து.

கோராப்பட்டு பலம்-ச, தாளிசப்பத்திரி, சடாமாஞ்சில், இவை வகை-க-க்கு விராகனெடை-உ௦. சந்தனத்தூள், ஏலரிசி இவை வகை-க-க்கு விராகனெடை-ரு. சீனிசருக்கரை பலம்-க௩.

செய்முறை:-பட்டைச் சன்னமாகக் கத்தரித்து ஒருபடி ஜலத்கிற் போட்டு மூன்றுநாள் ஊறவைத்து நாலாநாள் அடுப்பேற்றிக் காய்ச்சும்போது முன்கண்ட நான்கு சரக்குகளையும் நைபச் சிதைத்து ஒரு வஸ்திரத்துண்டில் தளரமுடிந்து அதிற் போட்டுக் காய்ச்சவேண்டும். காய்ச்சும்போது மரக்கொம்பினால் அடிக்கடி அந்தப் பையை நசுக்கியும் வரவேண்டும். ஜலமானது நாலிலொரு பாகமாகச் சுண்டினபின் பிசைந்து வடிகட்டித் திப்பிநீக்கி சருக்கரையைச் சேர்த்து அடுப்பேற்றிக் காய்ச்சி பாகுபதத்தி லிறக்கி ஆறினபின் சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௩. ௭.

உபயோகம்,—இருதயம் பலப்பட்டு இருதய அதிர்ச்சி, மார்பு துடித்தல், மனக்கவலை, வீண்கவலை, ஆகியவைகள் நீங்கும்.

#### இருதய உற்சாக ஷர்பத்து.

பருத்திப்பூ (செம்பருத்தியானால் உத்தமம்) பலம்-க௦. இதனை அரைப்படி பன்னீரில் அல்லது ஜலத்தில் ஓரிரவு ஊறவைத்து மறுநாள் காலையில் அடுப்பேற்றிக் காய்ச்சி இரண்டிலொருபாகமாகச் சுண்டின பின்பு வடிகட்டிப் பத்துப் பலம் சீனி சருக்கரையைக் கரைத்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி ஆறினபின்பு சீஷாவில் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—பலம்-க. உ.

உபயோகம்:—இருதயத்தைப் பலப்படுத்திக் குதூகலத்தை யுண்டாக்கும். வீண்கவலை, எரிவந்தம ஆகிய இவைகளை நீக்கும். ஆரம்பப் பைத்திய ரோகந்தீரும். இது சொற்பச் சரக்காயினும் இருதய முத

லியவைகளைப் பலப் படுத்துவதில் மிகவும் சிறந்ததாம்.

### அன்னாசிப்பழ ஷர்பத்து.

அன்னாசிப் பழத்தின் மேலுள்ள தோலை சீவிவிட்டுச் சிறு பில்லைகளாக அறுத்து மர உரலிற்போட்டு மரஉலக்கையால் இடித்துச் சாறுபிழிந்து வடிகட்டி எடுத்துக்கொள்ள வேண்டும். இந்தச்சாறு ஒருபங்கு, சீனிசருக்கரை இரண்டு பங்கு, இரண்டையுஞ் சேர்த்து அடுப்பேறறிச் சிறுதீயா யெரித்துப் பாகுபதத்திலிறக்கி ஆறவைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—பலம்-ஒ. க.

உபயோகம்:—இருதயத்தைப் பலப்படுத்தும், மனதிற்கு ஆனந்தத்தையும் உல்லாசத்தையு முண்டாக்கும்.

### குறிப்பு.

இதனுடன் கால்பங்கு பன்னீரையும் சக்திபான சாரம் கஸ்தூரியையுஞ் சேர்த்துச் செய்துக்கொண்டால், விசேஷ குணத்தைத் தரும்.

### தம்பல ஷர்பத்து.

மஞ்சள் நிறமாகப் பழுத்துப்போன வெற்றிலை-ள, இதனை இடித்து ஒருபடி ஜலத்திற்போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கி அதில் பன்னிரண்டு பலம் சீனி சருக்கரையைச் சேர்த்து அடுப்பேற்றி மெதுவாய்க் காய்ச்சிப் பாகுபதத்திலிறக்கி ஆறவைத்து சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—பலம்-அ. ஒ.

உபயோகம்:—குளிர்ச்சியாயுள்ள இருதயத்தைப் பலப்படுத்தும், மாதி, சுபாதிக்கம், பசிமந்தம், அஜீரணம், ஆகியவைகளைப் போக்கும். மனதிற்கு உல்லாசத்தையும் ஆனந்தத்தையு முண்டாக்கும்.

### சீத கஸ்தூரிப் பிரயோகம்.

ஜஹர் முஹரா [illegible] இதனை ஜலத்தை வார்த்துக் கல்லிலிழைத் தெடுத்தது விராகனெடை-ச. ரோஜாப்பூச் சூரணம், கொத்தமல்லி விதைச் சூரணம், பருப்புக்கீரை விதைச் சூரணம், பன்னீர் விட்டிழைத்த சந்தனம் வகை-க-க்கு விராகனெடை - உ. காவு ஜபான் சூரணம், மூங்கிலுப்புத் தூள் இவை வகை -க-க்கு விராகனெடை க. கஸ்தூரி விராகனெடை-அ, சீனிசருக்கரை பலம்-உ அ. தேன் பலம்-கவ.

செய்முறை:—சருக்கரையையுந் தேனையுஞ் சேர்த்துக் கொஞ்சம் ஜலம்வார்த்துக் காய்ச்சிப்பாகுபதத்தில் கீழிறக்கி முன் சரக்குகளில் கஸ்தூரியைத் தவிறமற்றெறல்லாச் சரக்குகளை ஒன்றாகச் சேர்த்து அதிற்போட்டு சந்தனக் கட்டைமத்தால் கடைந்து ஆறினபின்பு கஸ்தூரியுடன் கொஞ்சம் கற்கண்டைப்போட்டுப் பொடித்து முன் மருந்தில் தூவி பீங்கான் பாத்திரத்தில் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க. கவ.

உபயோகம்:—உஷ்ண சம்பந்தத்தினாலுண்டான இருதய அதிர்ச்சி இருதயத் துடிப்பு, ஆகிய இவைகள் தீரும். இருதயம் பலப்பட்டு வீண்கவலை, மனச்சோர்வு, மனத்தளர்ச்சி முதலியவைகள் நீங்கி, ஆனந்தம், உல்லாசம் முதலியவைகள் உண்டாகும்.

### உஷ்ண கஸ்தூரிப் பிரயோகம்.

கிச்சிலிக்கிழங்குச் சூரணம், சடாமாஞ்சிச் சூரணம், உஷ்ணாச் சூரணம், மேல்தோல் சீவின சுக்குச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-ந. தாளிசப்பத்திரிச் சூரணம், ஏலக்காய்ச் சூரணம் இவை வகை - க - க்கு விராகனெடை-உ. லவங்கச் சூரணம், கஸ்தூரி இவை வகை-க-க்கு விராகனெடை-ஐ. தேன் பலம்-ந.

செய்முறை:—தேனைக் காய்ச்சிப் பாகுபதத்தில் கஸ்தூரியைத் தவிற மற்றச் சரக்குகளையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து அதிற்போட்டு சந்தனமத்தாற் கடைந்து ஆறினபின்பு கஸ்தூரியுடன் கொஞ்சம் கற்கண்டைப் போட்டுப் பொடித்து அதிற்கலந்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-க, கவ.

உபயோகம்:—சீதள சம்பந்தத்தினா லுண்டான இருதய அதிர்ச்சி, இருதயத் துடிப்பு, ஆகியவைகள் தீரும். இருதயம் பலப்பட்டு, வீண்கவலை, மனச்சோர்வு, மனத்தளர்ச்சி முதலியவைகள் நீங்கி, ஆனந்தம் உல்லாசம் முதலியவைகளுண்டாகும்.

---

## சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் 44)

| | |
|---|---|
| நவச்சாரவுப்பு குன்றிமணியெடை | உ,ஒ |
| பெப்பர் மெண்டு ஜலம் பலம் | உ |



| | |
|---|---|
| ரோஜாப்பூ பாணிதம் விராகனெடை | ௧ |
| Sespuicarbonate of ammonia grs. | 5 |
| Pepperment water fl dram. | 3 |
| Rose syrup fl dr. | 1 |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்ருக மிஸ்ரமித்து ஒருவேளை பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டு வேளையும் அல்லது, தினம், மூன்று வேளையும் சமபோசிதம்போல் உபயோகித்துவந்தால், மந்தாக்கினி பேதிரோகந் தீரும்.

வேறு.

| | |
|---|---|
| நவச்சார வுப்பு குன்றிமணியெடை | ௧௦ |
| எலுமிச்சம்பழம் ரசம் விராகனெடை | ௬ |
| அல்லது எலுமிச்சம்பழ உப்பு குன்றி யெடை | ௧௨½ |
| நீர் விராகனெடை | ௭ |
| சிரப் ஆப் டொலு விராகனெடை | ½ |
| சாதிக்காய் பாவனமது விராகனெடை | ½ |
| Sesquicarbonate of ammonia gr. | 2o |
| Fresh Lemon Juice fl dms | 6 |

or

| | |
|---|---|
| Citric acid gr. | 25 |
| Distilled water fl dr | 7 |
| Syrup of Tolu fl dr. | I½ |
| Spirit of Nutmeg fl dr. | 1½ |

செய்முறை:—இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்து ஜுரமா யிருக்கும்போது கொடுத்தால் வியர்வை யுண்டாகி ஜுரம் சாந்தப்படும். இவ்விதம் அவசியமானபோது தடவைக்குத் தடவை புதிதாய் செய்து கொள்ளவும்.

வேறு

| | |
|---|---|
| நவச்சார வுப்பு விராகனெடை | ½ |
| ஜன்ஷன் சத்து விராகனெடை | ½ |
| Carbonate of ammonia dr. | ½ |
| Extract of Gentian dr. | ½ |

செய்முறை: – இவ்விரண்டையும் சேர்த்தரைத்து 12 மாத்திரைகளாக்கி ஒரு வேளைக்கு இரண்டு மாத்திரைவீதம் தினம் ஒன்றிற்கு இரண்டு அல்லது மூன்று வேளை உபயோகித்து வந்தால், குலையெரிவு, கணுவாத ரோகம், ஆகியவைகள் குணப்படும்.

வேறு.

நவச்சாரவுப்பு குன்றிமணியெடை உ½ முதல் ௬
அபினி பாவனத் திராவகம் துளிகள் ௧௦ முதல் ௨௦

| | | |
|---|---|---|
| நிலவேம்புக் கஷாயம் | பலம் | ௧ |
| Sesquicarbonte of ammonia gr | | 5 to 8 |
| Tincture of Opium drops | | 1o to 2o |
| Infustion of Kariyath oz | | 1 |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்ருய் மிஸ்ரமித்து பானஞ் செய்விக்க வேண்டும். இவ்விதம் தினம் ஒன்றுக்கு இரண்டு அல்லது மூன்று வேளை உபயோகித்துவந்து மாம்சம் கீரை முதலியபத்தியத்தில் வைத்தால் மதுமூத்திர ரோகம் சௌக்கியப்படும்.

வேறு.

| | | |
|---|---|---|
| நவச்சார உப்பு குன்றிமணி யெடை | | ௫ |
| கர்ப்பூரம் குன்றிமணி யெடை | | ௩ |
| எபிகாக் சூரணம் குன்றிமணி யெடை | | ௧ |
| Carbonate of ammonia | grs | Io |
| Camphor | grs | 6 |
| Iqecacpowder | grs | 2 |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்ருய் மிஸ்ரமித்து தேனில் அனுபானித்து உட்கொள்ள வேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டுவேளையும் உபயோகித்துவந்தால், நாள்பட்ட மார்ச்சளி ரோகந் தீரும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

### ௩-ம் பிரிவு.



### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. I!I-பக்கம்-44.)

5-வது குழந்தையின் அவயவங்கள் பெருத்துபபோவதால் கஷ்டப் பிரசவம் நேரிடும். கருப்பையின் வாயானது நன்ருய்விரிந்து அகண்டிருந்த போதிலும் கருப்பத்திலுள்ள சிசுவின் அவயவங்கள் பெருத்திருப்பதினல் அது வெளிப்பட கஷ்டமுண்டாகும். முன் காலத்திலுள்ளவர்கள் கருப்பிணியின் வயிற்றைக் கீறிப்பிள்ளையை வெளிப்படுத்தினதாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல் தற்கால ஐரோப்பிய டாக்டர்கள் கருப்பத்திற்குள்ளேயே குழந்தையைச்சிதைத்து வெளிப்படுத்துகின்ருர்கள். மேற்கண்ட இருவகைச் சிகிச்சைகளிலும் குழந்தைக்கு அல்லது கர்ப்ப ஸ்திரீக்கு அபாயத்திற்கு ஹேதுவில்லாம லிருக்கவில்லை.

இதன் சிகிச்சை கடவுளுடைய கிருபா கடாக்ஷத்தை த் தவிர வேறொன்றும் மில்லையென நிச்சயமாய்ச் சொலலாம். இவ்வித அபாயத்தினின்றும் நமது ச கோதரிகளைக் கடவுள் ரக்ஷிப்பாராக.

சில சமயங்களில் கருப்பையிலுள்ள சிசுவானது அதிகம் பெருத்திராவிட்டாலும் கருப்பையானது சி றிதாகவும் அதன் கழுத்து முதலியவை நெருக்கப்ப ட்டனவாகவு மிருப்பதாலும், பிரசவமாக கஷ்டமு ண்டாகும். இச் சமயங்களில் முரட்டு சுபாவமுள்ள சில மருத்துவப் பெண்கள் வெகு அவசரமாக குழந் தையை வெளியே இழுத்துக் கொண்டுவர முயற்சி செ ய்வார்கள். இச்சமயங்களில் இப்படிச் செய்ய நாம் கொஞ்சமும் இடந்தரலாகாது. இன்னும் இத்தகை யினர்களுக்கு தகுந்த புத்தி மதிகளையும் சொல்லி ஜா க்கிரதைப் படுத்த வேண்டியது. ஏனெனில் இவ்வித சமயங்களில் குழந்தையை வெளியே இழுத்துக்கொ ண்டு வருவதால் சிசு தாய் ஆகிய இருவருக்கும் அ பாயத்துக் கேதுவாவதே காரணம்.

இவ்வித பிரசவ ஸ்திரீகளுக்கு இவ்வித சமயங் களில் தைரியமான வார்த்தைகளைச் சொல்லி மன ஆ றுதலைக்கொடுத்து தைரியப்படுத்த வேண்டும். குளோ ரபாரம் முதலியவைகளை முகரக் கொடுத்து நித்திரை யுண்டாக்குவதால் ஒருவித ஆறுதலும் சௌக்கியமு முண்டாகும், (கடவுளினது இவ்வித அபூர்வ ஏற்பா டுகளைப் பற்றி யாரால் என்னென்று சொல்லக்கூடும். அவனது அற்புதம் அவனுக்கே தெரியும்.)

௬-வது பிரசவ ஆரம்பத்தில் சிரசு உதயமாகுவ தற்குப் பதிலாக வேறு அவயவங்கள் உதயமாகுதலா ல் உண்டாகும் கஷ்டப் பிரசவம்.

இது பலவகைப் படுமாகையால் ஒவ்வொன்றை யும் கூடியவரையில் சுருக்கமாக எழுதுவாம்.

### புட்டங்கள் ஆரம்பத்தில் உதயமாகுதல்.

புட்டங்கள் ஆரம்பத்தில் வெளிவந்து ஜலமான து வெளிப்பட்ட பின் சிசுவின் இரண்டு புட்டங்களு ம் அதன் ஆசனமும் வெளிப்பட் டிருக்கின்றனவா? வென மருத்துவப்பெண் தன்கையால் மெதுவாய்த் த டவி தெரிந்துகொள்ள வேண்டும். இன்னும் தன்வி ரலைச் சற்று மேலே செலுத்துவதால் அச்சிசுவானது ஆண் அல்லது பெண்ணெனத் தெரிந்து கொள்ளவுங் கூடும். மேற்கண்ட இருவகையாகவும் சிசுவின்புட்ட மானது ஆரம்பமாய் உதயமா யிருக்கிறதென நிச்ச யமாக அறிந்து கொள்ள வேண்டும்.

இவ்விதம் நிச்சயித்து அறியக்கூடாத சில அவ சர சுபாவமுள்ள மருத்துவப் பெண்கள் சிசுவின் வா யை ஆசன துவாரமென தப்பாகப் பாவித்து மோச ம்போக நேரிடுகிறது. ஆகையால், மேற்கண்ட இரண்டு வகைகளையும் ஆற அமர நிதானித்துத் தெரிந்துகொ ள்ள வேண்டும். வாயின் துவாரமானது ஆசனத்து வாரத்தைப் பார்க்கிலும் பெரிதா யிருக்கும் சிசுவி ன் ஆசனத் துவாரத்தில் விரலை வைத்தால் அது அத னை அழுத்தும். இவையன்றி வாயிக்குள் விரல் சென்று ல் அங்குள்ள ஈறு, நாவு, முதலியவை செவ்வையாக ப் புலப்படும். இதனால் எவ்வித சந்தேகமுமில்லாம ல் முதலில் உதயமாகிறது சிரசா? அல்லது புட்டமா? வென தெரிந்துகொள்ளக் கூடும். பனிக்குடம் உடை து ஜலம் வெளிப்படாததற்கு முன்பும் தெரிந்துகொ ள்ளலாம்.

ஆரம்பத்தில் சிரசு உதயமானால் அதை மூடிக் கொண் டிருக்கிற ஜவ்வுப் பையானது பிகுவுள்ளதா யிருக்கும். புட்டம் உதயமானால் அது அப்போது த ளர்ந்திருக்கும். சில சமயங்களில் புட்டம் உதயமாகு ம்போது பிள்ளைக்கு மலம் வெளிப்படுவது முண்டு.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௪ - ம் பிரிவு.

### பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. III. பக்கம் - 45.)

### மாந்த மாத்திரை.

சுத்திசெய்த ஜாதிலிங்கம், சுத்திசெய்த இரச க ர்ப்பூரம், ஏலரிசிச் சூரணம், பூங்காவித்தூள், இவை வகைக-௩-க்கு விராகனெடை-உ௰, சதாபிலைச்சார் செ ல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட நான்கு சரக்குகளையு ம் கல்வத்திலிட்டு அரைத்துப் பொடித்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு ஜாமமரை த்து அரை குன்றிமணி யெடையுள்ள மாத்திரைக ளாகச் செய்து நிழலிலுலர்த்தி சீஷாவில் பத்திரப்ப டுத்த வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க.௪. ஒருவயதுக்குட்ப ட்ட குழந்தைகளுக்கு ஒரு மாத்திரை போதுமானது

மற்றவர்களுக்கு வயதிற்குத் தகுந்தபடி மாத்திரையை உபயோகிக்கலாம்.

அநுபானம்:—முலைப்பால், தேன், பொடுதலையிலையை புட்டவித்துப் பிழிந்த இரசம், ஓமக் கஷாயம், மாசிப்பத்திரிக் கஷாயம்முதலிய கஷாயங்களில் சமயோசிதம்போல அநுபானித்து உபயோகிக்க வேண்டும்.

உபயோகம்:—எல்லாவித மாந்தங்கள், செவ்வாப்பு, கரப்பான் முதலிய குழந்தைகள் ரோகம் எல்லாம் தீரும்.

குறிப்பு.

இந்த மாத்திரையுடன் ஒரு விராகனெடை முதல் 2 விராகனெடை வரையில் கோரோசனையைச் சேர்த்துக் கொள்வதினால் அநேக குணங்களுண்டாகும். இன்னும் குழந்தைகளின் தேக சுபாவத்துக்குத் தகுந்தபடியும் வியாதிக்குத் தகுந்தபடியும் கஷாய முதலியவைகளைச் சித்தப்படுத்திப் பிரமாணப்படி மாத்திரைகளை அநுபானித்து உபயோகிக்கலாம்.

மாந்தக் கஷாயம்.

| | |
|---|---|
| அவுரிவேர்ப்பட்டை விராகனெடை | ௨ |
| செவ்வியம் விராகனெடை | ௪ |

செய்முறை:—இவ்விரண்டையும் நையச்சிதைத்து ஒரு ஆழாக்கு ஜலத்திற் போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டின கஷாயத்தில் ,௨. அல்லது ௧-விராகனெடை தேனை விட்டுக் கலந்து பானஞ் செய்விக்கவும். இவ்விதம் காலை மாலை இரண்டுவேளையும் செய்து வருவதால் எல்லாவகை மாந்தரோகங்களுந் தீரும்.

(இன்னும் வரும்)

---

சுகாதார போதினி.

௫-ம் பிரிவு.

மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 46)

| | |
|---|---|
| கருப்புக் கடுக்காய் விராகனெடை | ௩.௨ |
| ஹப்புல்ஆஸ் விராகனெடை | ௩.௨ |
| ஜூப்தே பஹுத் விராகனெடை | ௧தெ |
| பூமாதுளைப்பூ விராகனெடை | ௪௨ |
| மைசாக்ஷி விராகனெடை | ௧தெ |
| சுத்திசெய்த அயக் கிட்டம் விராகனெடை | ௧தெ |
| ரூமிமஸ்தகி விராகனெடை | தெஹு |
| ஜாதிக்காய்ச் சூரணம் விராகனெடை | தெஹு |
| ஜடாமாஞ்சில் சூரணம் விராகனெடை | தெஹு |
| லவுங்கச் சூரணம் விராகனெடை | தெஹு |
| வெங்காய விதைச் சூரணம் விராகனெடை | உதெ |
| ஜய்த்தூ ணெண்ணெய் அல்லது சித்தாமணக் கெண்ணெய் | செல்லத்தக்க அளவு. |

சவுக்குமர யிலைச்சாறு செல்லத்தக்க அளவு,

செய்முறை:—கடுக்காய் வகைகளையும், வெங்காய விதையையும் ஜய்த்தூ ணெண்ணெயை அல்லது சித்தாமணக் கெண்ணெயைத் தெளித்து வறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். மைசாக்ஷியைக் கல்வத்திலிட்டு சவுக்கிலைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து மைபோலரைத்து பின்பு முன் சித்தப்படுத்தி யிருக்கிற சூரணத்தையும் மற்ற சரக்குகளையும் ஒன்றாய்க் கலந்து அதிற்போட்டு முன் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து நான்கு ஜாமமரைத்து அரை விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி சீஷாவில் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-௪. அ.

அநுபானம்:—கடலையை ஊறவைத்த ஜலம் நீராகாரம், புளித்தமோர், முதலியவைகளாம்.

உபயோகம்:—இது எல்லாவகை மூலரோகத்தையுஞ் சௌக்கியப்படுத்தும். மூலத்தின் இரத்தப் போக்கை அதி சீக்கிரமாகக் கட்டுப்படுத்தும். எவ்விதமான நாள்பட்ட மூலரோகத்தையும் நாசப்படுத்தும்.

பத்தியம்:—காரமான வஸ்துக்கள், அதிகப் புளிப்பான வஸ்துக்கள் முதலியவைகளை நீக்கவும்.

வேறு.

| | | |
|---|---|---|
| மிளகாய் விராகனெடை | | ௪௨ |
| கறுப்புக் கடுக்காய் விராகனெடை | | உதெ |
| பனவெல்லம் | பலம் | ௩ |

செய்முறை:—மிளகாயை வறுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கண்ட எடை நிறுத்தெடுத்துக்கொள்ள வேண்டும். கறுப்புக்கடுக்காயை வறுக்காம லிடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கண்ட எடை நிறுத்தெடுத்துக் கொள்ள வேண்டும். பிறகு இவ்விரண்டையும் ஒன்றாக மிஸ்ரமித்து கல்வத்திலிட்டு மேற்படி வெல்லத்தையுஞ் சேர்த்து ஒருசாமம் வரை

யில் அரைத்து வ-விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

உபயோகமும் அனுபானமும்:—காலையில் ஒரு மாத்திரையை கால்பலம் பசுவின் நெய்யில் அனுபானித்து உட்கொள்ள வேண்டும். மாலையில் காலாழாக்கு குளிர்ந்த ஜலத்துடன் அனுபானித்து உட்கொள்ளவேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டுவேளையும் முப்பது நாட்கள் சாப்பிடவேண்டும் மருந்தாரம்பித்த மூன்றாம்நாள் முதல் பிரதிதினம் ஒரு மாத்திரையைவெற்றிலைச் சாற்றிலிழைத்துபஞ்சை அதிற் துவைத்து நனைத்து நன்றாய்ப் பிழிந்து மூலமுளைகளின் மீதுகட்டிவரவும் வேண்டும். இவ்விதம் ஏழுநாட்கள் செய்யவேண்டும் இவ்விதம் உள்ளுக்கும் வெளிக்கும் உபயோகித்துவந்தால் மூல முளைகள் உலர்ந்து வரண்டு அடியோடே யுதிர்ந்து போகும்.

பத்தியம்:—கீரையினங்கள், நெய் சம்பந்தமான ஆகாரங்கள், ரொட்டி முதலியவைகளாம். எந்தப் பதார்த்தத்திலும் நெய்யை அதிகமாய்ச் சேர்த்து உபயோகித்து வரவேண்டும்.

குறிப்பு.

மிளகாயானது மூலரோகிகளுக்கு பொருந்தாத வஸ்துவா யிருந்தும் அதினாலேயே அந்த வியாதி குணமாகும்படி ஏற்பட்டிருப்பது கடவுளின் மஹா உன்னதமான சக்தியைக் காண்பிக்கிறது.

வேறு.

மஞ்சட் கடுக்காய்த்தோல் சூரணம், தான்றிக்காய்ச் சூரணம், வேப்பங்கொட்டைப் பருப்புச் சூரணம், துத்திவிதைச் சூரணம் இவை வகை-க - க்குப் பலம் - க. சீனிசருக்கரை பலம்-ச.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-உ. ந.

அனுபானம்:—நீராகாரம், குளிர்ந்தஜலம், முதலியவைகளாம்.

உபயோகம்:—இரத்தமூலம், வறட்சிமூலம், முதலிய பலவகை மூலரோகங்கள் தீரும்.

பத்தியம்:—குளிர்ச்சியான கீரையினங்கள்,குளிர்ச்சியான பழவர்க்கங்கள் முதலியவை யாகும். கருவாடு, மீன் முதலியவை போன்ற உஷ்ணமான வஸ்துக்களை நீக்கவேண்டும்.

வேறு

கருஞ்சீரகம் பலம்-க௦, இதனை இரண்டு பங்காக்கி ஒரு பங்கை மணம் வரும்படியாக வறுத்து இரண்டையுங் கலந்து மூன்று பங்காக்கி ஒருபங்கை காலையில் மென்று சாப்பிட்டு அதன்மேல் கொஞ்சம் குளிர்ந்த ஜலத்தை அருந்தவேண்டும். இவ்விதம் பிரதி காலையிலும் இடைவிடாமல் சாப்பிட்டு வருவதினால் இரத்தமூலம், வறட்சிமூலம் முதலிய எல்லாவகை மூலரோகங்களுந் தீரும். இது ஏகச் சரக்காயிருந்த போதிலும் எந்தவகை மூலரோகத்தையும் வேரோடு கண்டிக்கும் சுபாவமுள்ளது, ஆனால் இதை சாப்பிடுவது கொஞ்சம் கஷ்டமான வேலைதான். கஷ்டத்துக்குப் பால்மாறாமல் தொடர்ந்தேற்றியாய் உபயோகித்து வருதினால் என்னாளும்படும் கஷ்டமானது நீங்கிப்போகும்.

---

## சுகாதார போதினி.

௬ - ம் பிரிவு



முன்தொடர்ச்சி (vol- III பக்கம். 47)

### இரசவாதம்.

நாம் முன் போதினியில் பொன்னின் சுலக்ஷணம் அவலக்ஷணம் ஆகியவைகளை எழுதி யிருக்கின்றோம். நமது நண்பர்களுள் அநேகருக்கு இப்பரீக்ஷைகள் நன்றாய்த் தெரிந்திருக்குமாயினும் தெரியாதவர்களும் தெரிந்துகொள்ளும் பொருட்டு முக்கியமானவைகளை மாத்திரம் எழுதினோம். இன்னும் மேற்சொன்ன கூட்டு வர்க்கத்திற்காக அவசியம் கவனிக்கத்தக்க சிலபொது விதிகளும் சிறப்பு விதிகளு முண்டு. அவைகளையும் நமது நண்பர்கள் தெரிந்து கொள்ளும்விதமாக சுருக்கமாக முன்னர் எழுதி பிறகு அவ்வகை முறைகளை எழுத வாரம்பிப்பாம்.

சேர்மான வேலைக்காக பிரதானமாக வேண்டியது சுத்தியானதாம்பிரமாம். இதற்காக வேண்டிய தாம்பிரம் துருசுச்செம்பு,தொட்டிச் செம்பு, அமச்செம்பு முதலியவைகள் முக்கியமானவைகள். இந்த வகைகளில் ஒன்றைகிரமப்படி சுத்திசெய்து வெள்ளியுடன் சம்பந்தப்படுத்தி சூக்ஷ்ம சரக்குகளின் உதவியால் அதனை மடித்து ஜீவபாணிதத்தால் உயிர்ப்பித்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் சூக்ஷ்ம சரக்குகளால் எத்தனை தடவை மடித்து மடித்து ஜீவபாணிதத்தால் எத்தனை தடவை உயிர்ப்பிக்கிறோமோ ஸ்தூல சரக்கானது அத்தனைக்கத்தனை அதிக மிருதுவாகவும் அதிக வர்ணமுள்ளதாகவு மிருக்கும். அதாவது வெள்

ளியுடன் சுத்திசெய்த தாம்பிரத்தை சேர்த்துருக்கி தகடடித்துச் சூக்ஷமச் சரக்குகளான இரசம், கந்தகம், மனோசிலை முதலியவைகளின் உதவியால் அதனைக் கொன்று, நெய், தேன், வெண்காரம் முதலியவைச் சேர்ந்த ஜீவபாணிதத்தால் உருக்கி யெடுத்து மறுப்டியும் அதனைத் தகடடித்து முன்போல் சூக்ஷம சரக்கின் உதவியால் முன்போல் மடித்து முன்போல் ஜீவபாணிதத்தால் உருக்கி யெடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிச்செய்து வருவதால் தாம்பிரத்தின் வருணம் வெள்ளிக்கேறி தாம்பிரமானது தீய்ந்துபோய் வைத்த வெள்ளியானது தாம்பிர வர்ணத்தைப் பெற்று, வைத்த எடை வெள்ளி நின்றுபோகும். பிறகு இந்த வர்ணஎடை வெள்ளிக்குச் சமனெடை அல்லது குறைந்தபெடை நிறத்திற்குத் தகுந்தபடி தங்கத்தைச் சேர்த்து விற்கப்படுகின்றது. ஆகையால், தாம்பிரமானது இந்த வேலைக்குபயோகப்படுவதா யிருந்தால் அதிக சுத்தமாயிருக்க வேண்டியது. அப்படி சுத்தமாயில்லா விட்டால் தங்கத்தைச் சேர்த்து உருக்கும்போது நீலப்புகை யுண்டாகும் மாற்று குறைவான பொன்னுகி உபயோகமற்றதாகிவிடும். ஆகையால், ஆரம்பத்தில் மேற்கண்ட ஒருவகைச் செம்பை கிரமப்படி சுத்திசெய்து கொள்ளவேண்டும்.

## குறிப்பு.

தாம்பிரத்தை பூரணமாகச் சுத்திசெய்வது அதிக கஷ்டமெனச் சொல்வார்கள். அது வாஸ்தவமான விஷயமே. ஆனால் இந்த வேலைக்காக வேண்டிய தாம்பிர சுத்தியின் இலக்ஷணமாவது அதனை வைத்துருக்கினால் உருகும்போது நீலப்புகை யில்லாம லிருப்பதேயாம். இவ்வளவு தூரம் சுத்திசெய்து கொண்டால் போதுமானது. இவ்விதமான பாகங்கள் அநேகம் நமது இரசவாத சிந்தாமணியிற் சொல்லப்பட்டிருக்கின்றன. மேலும் நாமிங்கெடுத்து செய்யவேண்டியபல முறைகள் நமது அகஸ்தியர் பள்ளென்னுங் கிரந்தத்தில் மிகவும் விபரமாகச் சொல்லப்பட் டிருக்கின்றன. அம்முறைகளை ஒன்றன் பின்னொன்றாக நாமும் நமது நண்பர்களுற் சிலருஞ் செய்து அதன் மர்மங்களை லோகோபகாரமாக வெளிப்படுத்த நிச்சயத் திடிருப்பதால், இந்த விஷயத்திற் பிரியமுள்ள ஒவ்வொரு நண்பர்களிடத்தும் மேற்படி கிரந்தம் அவசியம்இருக்கவேண்டியது.

2. வெள்ளியானது நன்றாய்ச் சிவந்த தாம்பிர வர்ண மாகாத வரையில் அதனோடு தங்கத்தைச் சேர்க்க லாகாது. அப்படிச் சேர்த்தாலோ குறைந்த மாற்றுள்ள பொன்னாகும். அல்லது அதனை மடக்கி மடக்கி உருக்கினால், அல்லது அதனைசங்குதிராவகத்திற் போட்டால், அல்லது அதனை உருக்கி நவச்சாரத்தூளை கிராசித்தால் பூரண வர்ணம் குறைந்துகொண்டே போகும், அல்லது வெணபுள்ளிகள் காணப்படும். ஆகையால் வெள்ளியில் நன்றாய் வர்ணமேற்றிப் பின்பு அதனை மிருதுவாக்கிக் கொண்ட பிறகுதான் தங்கத்தைச் சேர்க்கவேண்டும். இந்த மர்மத்தை யறியாத அநேகர் அவலக்ஷணமான மட்டங்களோடு தங்கத்தைச் சேர்த்து எவ்வித பிரயோஜனத்தையு மடையாமல் ஏமாந்து போகின்றார்கள். மட்டத்தின் நிதானத்தை நிச்சயித் தறியாத வரையில் அதனுடன் தங்கத்தை சம்பந்தப் படுத்தலாகாது. இது கொஞ்சம் அனுபோகத்தினால் நிதானமாய்த் தெரிந்துக் கொள்ள வேண்டியதே தவிர ஆரம்பத்திலேயே தெரிந்துக் கொள்வது மஹா கஷ்டம். அனுபோகசாலிகளுக்கு இவ்விஷயங்க ளெல்லாம் நன்றாகத்தெரிந்திருக்கு மாகையால் அவர்களுக்காக நாமிங் கொன்றுஞ் சொல்லோம். இந்த விஷயத்தில் நூதனமாய் ஆரம்பித்துக் கற்கிறவர்கள் மேற்கண்ட விஷயத்தில் தங்கள் புத்தியைச் செலுத்திப் பல தடவைகள் பார்த்து தெரிந்துகொள்ள முயற்சி செய்ய வேண்டுவதே அடியேன் கருத்து. தாம்பிரமானது நன்றாகச் சுத்தி ஆகாமலிருந்தால், மட்டத்தின்மீது கறுப்பு வாணப் புள்ளிகள் அல்லது கறுப்பு வர்ணந்தோன்றும். ஆகையால் தாம்பிரமானது சுத்தியா யிருக்கிறதாவென அதனை உருக்கிப் பரீக்ஷித்துக் கொள்ளவேண்டும். உருகும்போது நீலப்புகை யில்லாம லிருந்தால் இந்த வேலைக்காகப் போதுமானது.

(இன்னும் வரும்)

---

பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன

பாலிய சேஷ்டையினாலும், அறியாமையினாலும் முற்றும் போக நிர்வாக சக்தியற்று, தாது நஷ்டமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினாலும் தீராமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினால்கடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானால் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள் தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஒளஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனோற்பலம், தைரியம், வீரியம் முதலியவைகளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன் விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதாரரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.



அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையி லச்சாகி வெளிவரவில்லை யென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட ரோகங்களுக்கு நானாவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட் டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆகியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, வங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட் டிருக்கின்றன, சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யகூடியவைகள். இவை யுத்தி புத்தி அனுபவம் முதலியவைகளுக் கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னையுமே பொருளையும் அவமே யழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகளல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அனுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லா வகையாலும் லாபத்திற்கே பேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதி நூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட் டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கவசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட தக்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-20- வி - பி 1 - 4 - 0.

---

தன்வந்திரி சூக்ஷ்ம வைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளியாகாத நூதன சிறிய கிரந்தம். இதின் பற்பல வகை மாத்திரைகள், எண்ணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நாந தைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷ்மமானவைகளும் பல தடவை அநுபவப்பட்ட வைகளுமாம். இதனைப் பார்த்த தக்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்றாய் விளங்கும். தம்முடையவும் தம் மின ஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி - 1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-0.

---

ஞாய அஷ்டாங்க தீபம்.



இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகை தாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞான நூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்போரும் ஆனந்தப் படும்படியாக வெண்பா, துறை, ஆனந்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட் டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி 0-6-0.

---

இராஜ அவுடத சாலை. 12 - வது நெ. அப்புமேஸ்திரி தெரு, மாபுஸ்கான்தேவடி. மத்ராஸ்.

புத்தகம் - ௩. 1907ளு மேமீ 15௳ இலக்கம் - ௮.

கனம் சுகாதாரபோதினி

பத்திராதிப ரவர்களுக்கு

ஐயா!

அடியிற் கண்ட பாகங்கள் எனது மூதாதைகளுக்கும் எனக்கும் கைவல்யமானவைக ளானபடியால் லோகோபகாரமாக தங்கள் பத்திரிகையின் மூலமாக அப்பாகங்களை வெளிப்படுத்தும்படியாக மிகவுங் கேட்டுக்கொள்கின்றேன். இப்பாகங்களுட் பல நமது நண்பர்களுக்குள் அநேகருக்குத் தெரிந்திருக்கலாமென வெண்ணி அலட்சியஞ் செய்யாமலும், காலதாமதஞ் செய்யாமலும் கூடிய சீக்கிரம் வெளிப்படுத்தும்படி தயவுசெய்ய வேண்டியது. இப்பாகங்கள் வெளிப்பட்டவுடன் எனக்கனுபவமாகிய சில இரசவாத முறைகளையும் எழுதச் சித்தமா யிருக்கின்றேன்.

த - ச - அ - கா.

சுகாதார போதினி.

௧ . ம் பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol III. பக்கம் 43.)

மேற்றோல் போக்கின வாதுமைப் பருப்பு பலம் -௮, இதனை அம்மியில் வைத்து ஜலம் வார்த்தரைத்து அரை ஆழாக்கு ஜலம்வார்த்துப் பிசைந்து வடிகட்டித் திப்பிநீக்கின பாலில் ஒருபலம் சீனக்கற்கண்டைப் பொடித்துக் கரைத்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையும் செய்துவரின், மார்பெரிவு, இருமல், வறட்சி, சுவாசம், சூலை, உதிரச்சிக்கல் முதலிய ரோகங்கள் தீரும்.

வேறு

வெள்ளைக் கசகசா விதை பலம் ௧0, பனங்கற்கண்டு பலம்-௧0, ஏலரிசி பலம்-௨. வால்மிளகு பலம்-௨.

இவை யெல்லாவற்றையும் அம்மியில் வைத்து மைபோலரைத்து எடுத்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு அரைப்பலம் முதல் ஒரு பலம் வரையில் காலை மாலை யிரண்டுவேளையும் சாப்பிட்டுவர, சூட்டைப்பற்றிய இருமல் நீங்கும்.

வேறு.

பெருஞ் சீரகம் விராகனெடை-௨, சீமை அத்திப்பழம் விராகனெடை-௨௦; பர்லியா ஒஷான் விராகனெடை-௧௰, இம்மூன்றையும் சேர்த்து முக்கால் ஆழாக்கு ஜலம் வார்த்து மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து வடிகட்டிப் பானஞ்செய்துவர, இருமல், சுவாசம், மூச்சடைப்பு, வாயு, பக்கசூலை, குன்மம் ஆகியவைகள் தீரும்.

வேறு

தாளிசப்பத்திரியை யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் விராகனெடை-௧, இதனைத் தேனில் அனுபானித்துட் கொள்ள இருமல், சுவாசம் ஆகியவை தீரும்.

மேற்படி சூரணத்தைத் தயிரிலனுபானித் துண்ண, பேதி, இரத்தமூலம் ஆகியவைகள் தீரும்.

வேறு.

வசம்பைச் சுட்டு வெண்மையான சாம்பலாக்கிக் கொள்ளவேண்டும். இந்த பஸ்பம் விராகனெடை-௰ தேன் விராகனெடை-௧, இவ்விரண்டையுங் கலந்து சாப்பிட்டுவர, இருமல், சுவாசம் ஆகியவை தீரும்.

வேறு

சாம்பிராணிச் சத்து குன்றிமணி யெடை-௨. சீனிசர்க்கரை விராகனெடை-௨, இவ்விரண்டையுங் கலந்து சாப்பிட்டுவர, கபரோகங்கள், குளிர்ச்சியினாலுண்டான இருமல் ஆகியவை போகும்.

வேறு.

கோதுமைச் சத்து விராகனெடை-௫, பசுவின் நெய் விராகனெடை-௨௦, சீனிசர்க்கரை பலம்-௨.

செய்முறை:—மேற்படி சத்தைத் தூள்செய்து மெல்லிய வஸ்திரத்தில் முடிந்து அரை ஆழாக்கு ஜலத்திற் பிசைந்து பாலெடுத்துக் கொள்ளவேண்டும். இந்தப் பாலில் மேற்படி சர்க்கரையைக் கரைத்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின்பு நெய்யை விட்டு ஐந்து நிமிஷம் தாமதித்து இறக்கி ஆறவிட்டு இளஞ்சூடா யிருக்கும் போது பானஞ் செய்ய வேண்டும். (இதனைக் காய்ச்சும்போது கைவிடாமல் துளாவிவர வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் கட்டி கட்டியாகி விடும்.) இவ்விதம் காலை மாலை யிரண்டுவேளையும் பானஞ் செய்துவர, இருமல், மார்பின் வறட்சி, மார்புநோய், தொண்டை வறட்சி ஆகியவைகள் தீரும்.

### வேறு.

துளசிச்சாறு பலம் - ௨, புதுஓட்டை அடுப்பிற் காயவைத்து அதில் மேற்படி சாற்றைவிட்டு உடனே யிறக்கி வடிகட்டிக் கொள்ள வேண்டும். பிறகு இதில் நான்குதுளி தேனைவிட்டுக் குழந்தைக்குப் பானஞ் செய்விக்கவேண்டு. இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையுஞ் செய்துவர, குழந்தைகளுக் குண்டாகும் இருமல் ரோகம் தீரும்.

### வேறு.

ஆடாதோடை வேர்ப்பட்டை, அல்லது, உலர்த்தின இலை, கோஷ்டம், திப்பிலி, சுட்டெரித்த வசம்பின் சாம்பல், நெல்லிமுள்ளி, மஞ்சட் கடுக்காய்த்தோல், உலர்த்தின கண்டங்கத்திரி வேர்த்தோல், சன்னராஷ்டம், கற்கடக சிங்கி, மிளகு, சிறுநாகப்பூ, இவை வகை-க-க்குப் பலம்-வ.

இவை யெல்லாவற்றையுஞ் சேர்த்திடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து இந்தச்சூரணத்திற்குச் சமனெடை சீனி சர்க்கரையைச் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.

பிரமாணம்,—விராகனெடை-க, க௨.

அனுபானம்:—நெய், தேன் முதலிவைகள்.

உபயோகம்:—அஸ்திச்சூடு, வறட்சி, இருமல், புகைச்சல், தொண்டைக் கம்மல், சினுங்கிருமல், நாவறட்சி, உள்வறட்சி, கோழைக்கட்டு, கபக்கட்டு. மூலச்சூடு, பித்தங்கள், மேகரோகங்கள் ஆகியவை தீரும்.

### காசுகட்டிப் பற்பம்.

நன்றாய்ச் சிவந்திருக்கிற காசுகட்டி பலம்-உ௦, இதனைக் கல்வத்திலிட்டுப் பொடித்து வஸ்திரகாயஞ் செய்து திப்பிநீக்கின தூளை மறுபடியுங் கல்வத்திலிட்டு முருங்கையிலைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்துப் பில்லைசெய்துலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடு மூடி மூன்று சீலைமண்செய்து ஐம்பதுபலம் விராட்டியில் புடமிட்டு ஆறினபின்னெடுக்கப் பஸ்பமாகி யிருக்கும். இதனை சீஷாவிற் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை-ரு. க௦.

அனுபானம்:—வெண்ணெய், நெய்.

உபயோகம்,—இருமல், சுவாசம், இரத்தங் கக்கல் ஆகியவை தீரும்,

பத்தியம்:—மீன், கருவாடு முதலியவைகளும், உஷ்ணமான பதார்த்தங்களும் ஆகா, ஆட்டிறைச்சி சூப்பு ஆகும், மாமிச பக்ஷணி யல்லாதவர்கள் துவரம்பருப்பை வேகவைத்த தெளிநீரை யெடுத்து நெய்யைக் கொஞ்சம் அதிகமாகச் சேர்த்து அதிகக் காரமில்லாமல் இரசமாகச்செய்து உபயோகிக்கலாம், அல்லது, அதில் கத்திரிப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு முதலியவைகளைச் சேர்த்துச் சமைத்து உபயோகித்துக் கொள்ளலாம்.

### பூமூல பற்பம்.

செம்மண் தரையிலுள்ள பூநாகம் பலம்-அ, இதனை அரைப்படி புளித்தமோரில் போட்டு பனிரண்டு மணிநேரம் வைத்திருந்து பிறகுகழுவி, அவற்றின் வயிற்றிலுள்ள மண் முதலியவைகளையெல்லாம் நீக்கிச் சுத்திசெய்யவேண்டும். பிறகு புளித்ததயிரில் முன்போல் பனிரண்டு மணிநேரம் ஊறவைத்துக் கழுவிச் சுத்திசெய்து மெல்லிய வஸ்திரத் துண்டில் வைத்து ஜலமில்லாமல் பிழிந்தெடுத்துக் கால்படி பிரமியிலைச் சாற்றில் பனிரண்டு மணிநேரம் ஊறவைத்துச் சாற்றுடனே கல்வத்திலிட்டு அரைக்கவேண்டும். சாறு உலர்ந்துவிட்டால் முன் சாற்றையே கொஞ்சம் கொஞ்சம் விட்டுக் கொண்டு நான்குசாம நேரமரைத்து பில்லை செய்து உலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடுமூடி மூன்று சீலைமண் செய்து நூற்றைம்பது பலம் விராட்டியிற் புடமிட்டு ஆறினபின்பு எடுக்க பற்பமாகி யிருக்கும், இதனை சீஷாவிற் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை-உ. ச

அனுபானம்:—தேன், வெண்ணெய்.

உபயோகம்:—ஈளை, இருமல், இரைப்பு, சுவாசகாசம் ஆகியவைகள் தீரும், தாதுவிருத்தி, தாதுபுஷ்டி ஆகியவைகளுண்டாகும்.

### தாளகக் கட்டு.

சுத்திசெய்த தாளகம் பலம்-க. ஜவ்வு, எலும்பு முதலியவைகளை நீக்கி அதிகப் பொடியாகக் கொத்தின வெள்ளாட்டிறைச்சி பலம்-க௦அ, இதனை நூற்றெட்டு உருண்டைகளாகச் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு உருண்டையிலும் மேற்படி தாளகத்தை வைத்துப் பொதிந்து வாழை நாரால் அல்லது நூலால் இரண்டு மூன்று சுற்றுச் சுற்றிக்கட்டி ஒருசேர் பசுவினெய்யைக் கொதிக்கவைத்து நன்றாகக் கொதித்தபின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கி

ற உண்டையைப்போட்டு இறைச்சி சிவந்த பதத்திலெடுத்து ஆறவிட்டு நன்றாய்க் குளிர ஆறினபின்பு கட்டிமீதுள்ள மாமிசத்தை நீக்கிவிட்டு இந்தக் கட்டியின்மீது இன்னொரு உண்டை மாமிசத்தைப் பொதிந்து முன்போல் நூலால் கட்டி முன்போல் நெய்யில் வறுத்தெடுக்க வேண்டும். இவ்விதம் நூற்றியெட்டு உண்டையிலும் பொதிந்து நூற்றெட்டுத் தடவை பொறித்தெடுத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் செய்வதால் தாளகத்தின் தோஷங்களெல்லாம் நீங்கிக் கட்டுப்பட்டுப்போம். இதனை யெடுத்து மெல்லிய வஸ்திரத்தினால் நெய்ப்பசை யில்லாமல் நன்றாய்த் துடைத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து சீஷாவில் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—அரிசியெடை-க. கஉ.

அனுபானம்:—தேன், நெய் ஆகியவைகளாம்.

உபயோகம்:—கபம், இருமல், இரைப்பு முதலிய எல்லாவகை கபரோகங்களும் தீரும்.

பத்தியம்:—வியாதி கடினமானதா யிருந்தால் கடும்பத்தியம் வைக்கவேண்டியது. அதாவது உப்பு புளியை நீக்கி, பாலன்னம், பாற்பாயசம், முதலியவைகளை உபயோகிக்க வேண்டும். வியாதி சற்று இலகுவானதா யிருந்தால் புளியை மாத்திரம் நீக்கிவிட்டு உப்பைவறுத்து உபயோகிக்க வேண்டியது.

அக்கினிமந்த ரோகச் சிகிச்சை.

மேற்றோல் சீவியிடித்து வஸ்திரகாயஞ் செய்த சுக்குச்சூரணம், மிளகுச் சூரணம், இந்துப்புத்தூள், இவை வகை-க-க்குப் பலம்-க. சீமை திராக்ஷாதி செல்லத்தக்க அளவு.

செய்முறை:—முன் மூன்று சரக்குகளையும் கல்வத்திலிட்டு மேற்படி காடியைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்துக் கால் விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க. ௩.

உபயோகம்:—அஜீரண பேதி, உஷ்ணபேதி அஜீரணம், மந்தாக்கினி ஆகியவைகள் தீரும்.

ஷை வேறு.

மேற்றோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, மிளகு, ஓமம், வாய்விளங்கம், இவற்றின் தனித்தனிச் சூரணம் வகை க-க்குப பலம்-க, சீனிசர்க்கரை பலம்-௫ தேன் பலம்-௫, நெய் பலம் உ௦.

செய்முறை:—சர்க்கரையிற் கொஞ்சம் ஜலத்தை வார்த்துக் கரைத்து அடுப்பேற்றி ஒரு கொதி வந்தபின்பு வடிகட்டித் திப்பிநீக்கின பாகுடன் தேனையுஞ் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் மேற்படி சூரணங்களை ஒன்றாய்ச் சேர்த்துச் சிறுகத் தூவி நன்றாகக் கிண்டிக்கிளறி கீழிறக்கி நெய்யைவிட்டு மறுபடியும் நன்றாய்க் கிளறிப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-க. உ.

உபயோகம்:—அக்கினிமந்தம், அஜீரணம், வாயுரோகங்கள் ஆகியவைகள் தீரும்,

அண்டவாயு சிகிச்சைகள்.

தோலுரித்த வெள்ளைப்பூண்டித்தழ் பலம்-க. நவச்சாரம் பலம்-க, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு ஒருமணி நேரமரைத்து ஒரு மெல்லிய வஸ்திரத்திற் றடவி அண்டத்தின்மீது போட்டு நூலால் கொஞ்சம் தளர்ச்சியாகக் கட்டி வைக்கவேண்டும். பன்னிரண்டு மணிநேரஞ் சென்று விட்டால் அதனை யவிழ்த்து நீக்கிவிட்டு மறுபடியும் முன்போற் சித்தப்படுத்திக் கட்டவேண்டும். இவ்விதம் மூன்று கட்டுக் கட்டினால் அண்டவாயு, அண்டவீக்கம், ஆகியவைகள் தீரும்.

வேறு.

காளான், மீன்வச்சிரம் இவை வகை-க-க்குப் பலம்-௦, இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டுப் பொடித்துக் காடியைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருமணி நேரமரைத்து அண்டத்தின்மீது பூசிவர, அண்டவீக்கம், அண்டவாயு ஆகியவைகள் தீரும்.

வேறு.

திராக்ஷப்பழம், மொச்சைப் பருப்பின்மா, சீரகச்சூரணம், இவை வகை-க-ச்குப் பலம்-௦, இவை யெல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கல்வத்திலிட்டு அரைத்து பீஜத்திற்பூச, அண்டவீக்கம், அண்டவாயு முதலியவைகள் தீரும்.

வேறு.

நொச்சியிலைப் பழுப்பை வெண்ணெய்போலரைத்து பீஜத்தின் மீது பற்றிட, பீஜவீக்க முதலியவைகள் தீரும்.

### வேறு

பூநாகத்தைப் பாலிற்போட்டு மண் முதலியவைகளை நீக்கிச் சுத்திசெய்து அம்மியில் வைத்தரைத்து வாதுமை நெய் அல்லது பசுவின் நெய் தெளித்துப் பிசைந்து அடைபோற்செய்துபீஜத்தின்மீது வைத்துக் கட்ட,பீஜவீக்கம்,அண்டவாயு, முதலியவைகள் தீரும்.

### வேறு.

சிற்றாமணக் கெண்ணெய் பலம்-௪௰, மிளகுத் தக்காளிச்சாறு பலம்-௪௰, வெந்தயம் பலம்-௨.

செய்முறை:—எண்ணெயையும் மேற்படி சாற்றையும் ஒன்றாகக்கலந்து, அதில் வெந்தயத்தைப்போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து வெந்தயமானது முரமுரப்பாகும் வரையிற் காய்ச்சி இறக்கி ஆறின பின்பு கடுகுடனே வேறு பாத்திரத்தில் ஊற்றி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—பலம்-ஹ. ௧.

உபயோகம்:—எல்லாவகை அண்ட வியாதிகளும் தீரும்.

பத்தியம்:— மருந்தை பிரதிதினமும் காலையில் ஒருவேளை சாப்பிடவேண்டியது. வியாதி கடினமாயிருந்தால் உப்பு, புளியை நீக்கிவிட்டு வெந்நீர்ச் சாதம் சாப்பிடவேண்டியது.' துவரம்பருப்பைவறுத்துத் தூள்செய்து அதை உபயோகித்துக்கொள்ளலாம். வியாதி இலேசனதா யிருந்தால், இலகுவான பத்தியமாக சமயோசிதம்போல வைக்க வேண்டியது. மூன்றுநாள் பத்திய மிருப்பதோடு மறுமூன்று நாளும் மறுபத்திய மிருக்கவேண்டியது. ஏழாவதுநாள் முதற்கொண்டு எல்லாம் சேர்த்துக் கொள்ளலாம்.

### அண்டவாதச் சஞ்சீவி.

கழற்சி யிலைச்சாறு பலம்-௪௰, வெண்ணிறமாயுள்ள வெங்காயச்சாறு பலம் - ௪௰, சிற்றாமணக்கெண்ணெய் பலம்-௪௰. கழச்சிப் பருப்பு பலம்-ஹ, கழச்சி வேர்ப்பட்டை பலம்-௧, கழச்சிக் கொழுந்து பலம்-௧, * இரச கர்ப்பூரம் விராகனெடை - ௮, சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு விராகனெடை-௪.

செய்முறை:—கழச்சிப் பருப்பு முதலிய சரக்குகளைத் தனித்தனி அம்மியில் வைத்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து அரைத்து மேற்படி யெண்ணெயிற் கலக்கி மற்ற சரக்குகளையும் ஒன்றாகக் கலந்து பூரத்தைக் கல்வத்திற் பொடித்துத் தூவி அடுப்பேற்றி சிறுதீயா யெரித்து மெழுகு பதத்திலிறக்கி ஆறினபின்பு வடிகட்டித் திப்பிநீக்கிப் பீங்கான் பாத்திரத்திற்ப த்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௧. ௨. தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி சமயோசிதம்போல் அளவைக்குறைத்தும் அதிகப்படுத்தியும் உபயோகிக்கலாம். இரண்டொரு தடவை பேதியாவதற் போதுமானது.

உபயோகம்,—அண்டவாதம், குடல்வாதம், விரைவாதம, கால்வாதம், யானைக்கால் வாதம் முதலிய எல்லாவகை வாதரோகங்களும் தீரும்.

பத்தியம்:—சமயோசிதம் போலவும், வியாதியின் பலத்திற்குத் தகுந்தபடியும் ஏற்படுத்த வேண்டியது.

### காக்கைவலிச் சிகிச்சை.

ஏலக்காயைப் பொடித்து வஸ்திரகாயஞ் செய்து வலிவந்திருக்கும்போது ஆக்கிராணிக்கச் செய்ய வலிப்பு நிற்கும். பிறகு இந்தத் தூளை மூக்குத் தூளைப்போல் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், மேற்கண்டரோகம் அடிக்கடி வராமல் வியாதி தீர்ந்துபோய் விடும். துர்அதிஷ்ட வசத்தால் வியாதி மறுபடி வந்தபோதிலும் அதிக மூர்க்கமாக வராமல் சுலபமாய்க் காணும். ஆனல், இதனைத் தொடர்ந்தேற்றியாகச் செய்து வருவதினல் அதிக குணமுண்டாகும்.

### வேறு.

ஜாதிப்பத்திரியையும் மேற்கண்ட விதமாகவே செய்துவர, மேற்கண்ட ரோகம் தீரும்.

### ௬ வேறு.

பஸ்பாயிஜ் விராகனெடை-௫௰, சரக்கொன்றைப்புளி விராகனெடை-௨ஹ. தரஞ்சபீன் அல்லது, கற்கண்டு விராகனெடை-௫.

செய்முறை:—பஸ்பாயிஜை ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின் னிறக்கி வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்தில் மேற்படி சரக்கொன்றைப் புளியையும், தரஞ்சபீனையுங் கரைத்து மறுபடியும் வடிகட்டிப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலையில் ஒருவேளை மாத்திரம் உபயோகித்துவர, காக்

* இதனை சுத்திசெய்ய வேண்டியதில்லை.

கைவலி, மூலரோகம், குன்மரோகம் முதலியவைகள் தீரும்.

வலியுசிதப் பிரயோகம்.

வைகாசி, ஆனி, ஆடி ஆகிய இந்த மாதங்களி லொன்றில் நாற்பது பச்சைத் தவளைகளைப் பிடித்து வயிற்றைப் பிளந்து அவற்றின் ஈரல்களை மாத்திரம் எடுத்துக்கொள்ள வேண்டும். பிறகு ஒரு புதுச்சட்டி யில் நான்கைந்து கோவீஸ்கீரை யிலைகளைப்பரப்பி அதன்மீது முன் ஈரல்களை ஒன்றோடொன்று படாமல் வரிசையாகப் பரப்பி மேலும் அந்த இலைகளைப் பரப்பி மூடி அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து ஈரலின் ஈரம் உலர்ந்த பதத்தில்ஈரல்களை மாத்திரம் எடுத்துத்தூள் செய்து ஆறுபங்காகப் பங்கிட்டுத் தனித்தனியே வைத்துக்கொள்ள வேண்டும். கடகராசியில் சூரியனுஞ் சந்திரனுஞ் சேருகிற தினத்தில் காலமே போஜனத்திற்கு முன் வெறும் வயிற்றில் அரைப்பலம் பிரூண்டியில் மேற்படி ஒருபங்கைக் கலந்து பானஞ் செயயவேண்டும். இதனை யுட்கொண்டபின் இரண்டு மணிநேரம் வரையில் ஒன்றும் சாப்பிடலாகாது. பிறகு வழமைபோல் போஜனம் செய்யலாம். மாலையில் இராப் போஜனமான பின்பு மற்றொரு பங்கை மேற்கண்டபடியே சாறுயத்தில் மிஸ்ரமித்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதமே அடுத்த இரண்டு நாட்களிலும் சாப்பிட வேண்டியது. இவ்விதம் செய்தால் காக்கைவலி, குதிரைவலி, குமரகண்டன் முதலிய பதினெட்டு வகை வலிப்பு ரோகங்களும் தீரும். இது பல தடவைகள் செய்து பலருக்குக் குணங் கண்டதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விதம் செய்ய சக்தியுள்ளவர்கள் செய்தால் நிச்சயமாகக் குணமுண்டாகுமென நம்பப்படுகிறது. கூடுமானவர்கள் மேற்கண்ட விதமாகச் செய்து பிரயோசனத்தை யடையலாம்.

நரம்பு அறுப்பட்டதற்குச் சிகிச்சை.

பூநாகத்தைப் பாலில் அல்லது, மோரில் போட்டு வயிற்றிலுள்ள மண் முதலியவைகளைச் சுத்திசெய்து அம்மியில் வைத்து மைபோலரைத்து நரம்பு அறுபட்ட தானத்தில் வைத்துக் கட்டிவர அறுபட்ட நரம்புகள் கூடி ஒன்றாகிப்போகும்.

வேறு

பாம்பின் தோலின் பொடியையும், வயல் நண்டின் பொடியையும் ஒன்றாகச் சேர்த்து அறுபட்ட நரம்பின் மேற்றூவித் துணியாற் சுற்றிக்கட்டிவைக்கவேண்டும். இவ்விதம் தூவிக் கட்டிவர அறுபட்ட நரம்புகள்கூடி அங்குள்ள இரணமு மாறிப்போகும்.

நீர்க்கட்டின் சிகிச்சை.

வெள்ளைச்சாறு வேளையிலைச்சாறு ரூபாயெடை -ரு, பசுவின் பச்சைப்பால் ரூபாயெடை-கஉ, இவ்விரண்டையு மிஸ்ரமித்துப் பானஞ்செய்ய கட்டுப்பட்டநீர் உடனே இறங்கிவிடும்.

குஷ்டரோகச் சிகிச்சை.

செவ்வலரிவேர் வீசை-க, இதனைச் சிறு துண்டுகளாகத் துண்டித்து நிழலிற்போட்டு ஈரமில்லாமல் நன்று யுலர்ந்தபின்பு ஒருதோண்டியி ன்டியில் சிறு துவாரங்களிட்டு அதிற்போட வேண்டும். தோண்டியின் வாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண்செய்து உலர்த்தி பாகப்படி குழித்தைலமிறக்கி இதிலுள்ள ஜலத்தை வேறாகவும், தைலத்தை வேறாகவும் பிரித்துத் தனித்தனி சீஷாவில் பத்திரபடுத்தவும்.

பிரமாணமும், அநுபானமும்:—மூன்றுபலம் ஜலத்தில் மேற்படி தைலத்தைக் குச்சிபால் தொட்டு ஒருதுளி தைலத்தை அதில்விட்டுக் கலக்கிப் பானஞ் செய்ய வேண்டும். இவ்விதம் காலையில் மாத்திரம்மூன்றுநாள் பானஞ் செய்யவேண்டும்.

உபயோகம்:—குஷ்டம், புண்கள், இரணங்கள் முதலியவைகள் தீரும். இம்மருந்தைச் சாப்பிடும் போது இரணங்களிலிருந்து இரத்தம் வடியும்.

பத்தியம்:—உப்பு, புளியை நீக்கி வைக்கவேண்டியது, மறுமூன்று நாளும் மறுபத்தியங் காக்கவேண்டியது. ஏழாநாள் எண்ணெய் ஸ்நானஞ்செய்து மறுநாள் புளியைச் சேர்க்கவும்.

### வெண்குஷ்ட மேற்பூச்சு.

தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ், சுத்திசெய்த நவச்சாரத்தூள் இவ்விரண்டும் சமனெடை. இவ்விரண்டையுங் கல்வத்திற்போட்டு மைபோலரைத்து மேற்பூசிவர வெள்ளை மாறிப்போகும்.

### வேறு.

திறமான கோரோசனையை உமிநீரில் இழைத்துப் பூசிவர, வெண்குட்டம், கருங்குட்டம் ஆகியவைகள் மாறும்.

### கூழ்ப்பாண்டச் சூரணம்.

ஒருபெரும் பூசுணிக்காயைக் கீறி குடல், மேற்றோல் ஆகியவைகளை நீக்கிச் சிறு துண்டுகளாக அரிந்து சட்டியிலிட்டு பிட்டவியலாக அவித்துப் பிழிந்து மறுசட்டியிலிட்டுப் பசுவின் நெய் தெளித்துச் சிவக்க வறுத்திடித்துச் சூரணஞ்செய்து கொள்ளவும். மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், மேற்றோல் சீவினசுக்கு, மிளகு, திப்பிலி, அதிமதுரம், ஏலரிசி, இலவங்கம், செண்பகப்பூ, கல்மதம், சீரகம், இவை வகை-க-க்கு விராகனெடை-கவ. சீனிசர்க்கரை மேற்கண்ட சூரணங்களெல்லாவற்றிற்கும் சமனெடை.

செய்முறை:—மேற்கண்ட எல்லாச் சூரணங்களையும், சர்க்கரையையும் ஒன்றாக மிஸ்ரமித்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-உ௨, ௰, காலை மாலை யிரண்டு வேளையும் உபயோகித்துவர வேண்டியது.

உபயோகம்:—மேகரோகங்கள், பவுத்திர ரோகங்கள், மூலரோகங்கள், மூத்திரப்பாளை, மூத்திரக்கிரிச்சரம், பெரும்பாடு, பிரமேக ரோகங்கள், நீர்க்கடுப்பு, நீரெரிச்சல், மேககாங்கை, கல்லடைப்பு, நீரடைப்பு, முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்,—இச்சாபத்தியம், அவரவர்களின்தேகத்திற்கு ஒவ்வாத பதார்த்தங்களை நீக்கவேண்டியது தான் முக்கியமான பத்தியம்.

### அறுவகைச் சூரணம்.

நற்சீரகம், மேற்றோல் சீவின அதிமதுரம், காமப்பூ, கருஞ்சீரகம், சன்ன லவங்கப்பட்டை, சதகுப்பை இவற்றைத் தனித்தனியிடித்த சூரணம் வகை-க-க்குப் பலம் க, கொத்துமல்லிவிதைச் சூரணம், பலம்-சு, சீனி சர்க்கரை பலம்-சு, சீனுக்கற்கண்டுத் தூள் பலம்-கஉ.

செய்முறை:—இவை யெல்லாவற்றையு மொன்றாக மிஸ்ரமித்துக் கல்வத்தில், அல்லது, அம்மியில் ஒருமணிநேரம் அரைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-க, உ.

அனுபானம்:—நீராகாரம், இளநீர், செவ்விளநீர், வெண்ணெய், நெய், தேன், இஞ்சிச்சாறு, சுசகசா கஷாயம், சுக்குக் கஷாயம், அதிமதுரக் கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:—சிரசுநோய், கண்ணீர்ப் பாய்ச்சல், உன்மத்தம், நித்திரை யில்லாமை, வாய்கோணல், வாய்குளறல், செவிநோய், செவிடு, ஊமைத்தன்மை, தொண்டைப்புண், கண்டமாலை ஆகியவைகள் தீரும். கண்ணின் பிரகாசம் அதிகமாகும், நெஞ்சு திடப்படும், குலையெரிவு, நெஞ்செரிவு, கைகாலெரிவு, தேக எரிவு முதலியவைகள் தீரும். பித்தரோகம், அக்கினிமந்தரோகம் ஆகியவைகளும் நீங்கும். தேகத்திலுள்ள அசுத்தநீர்க் கட்டுதீரும். வாந்தி, அரோசகம் ஆகியவைகள் தீரும். வயிற்றிலுள்ள புழுக்கள், கிருமிகள், இடுப்புவலி, கல்லடைப்பு, சேத்துமரோகம், பில்லி, வஞ்சனை முதலானவைகளுந் தீரும். தேகபுஷ்டி, தேகதிட முதலியவைகளுண்டாகும்.

### குறிப்பு.

அநேகர் இந்த முறையைக் கிரமமாகச்செய்யாமல் தங்கள் மனங்கொண்டவாறு செய்து பிரயோசனமடைவதற்குப் பதிலாக நஷ்டத்தையடைந்து வருகின்றார்கள். இந்தப் பாகமானது பலரால் பல தடவைகளில் அனுபோகசித்தமாக நிச்சயிக்கப்பட்டி

ருக்கின்றது, இதிலுள்ள மர்மமெல்லாம் இதனைச் செய்வதிலும், இதன் அனுபானத்திலுமே உள்ளது, ஆகையால் மேற்கண்ட பாகப்படிசெய்து மேற்கண்ட அனுபானங்களுள் வியாதிக்குத் தகுந்தபடியும், தேக சுபாவத்திற்குத் தகுந்தபடியும் சமயோசிதம் போல் நிதானித்து உபயோகித்துவந்தால், கடவுளினது கிருபையால் மேற்கண்ட குணங்களெல்லா முண்டாகும்.

## கட்டுவாதி மாத்திரை.

ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, இலவங்கம், ஏலரிசி, அதிமதுரம், அதிவிடையம், அபின், கஞ்சா, குராசாணியோமம், கோரைக்கிழங்கு, வெந்தயம், சீரகம், சிறுநாகப்பூ, உலர்த்தின புளியாரைக் கீரை, காட்டாத்திப்பூ, உலர்த்தின மாதுளம்பிஞ்சு, உலர்த்தின வாழைப்பூ, இவை வகை-க-க்குப் பலம்-வ, வாழைப்பூச்சாறு, அல்லது, மாதுளம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளில் அபின் தவிர மற்றவைகளைத் தனித்தனியிடித்து வஸ்திரகாயஞ்செய்து தனித்தனி மேற்கண்டயெடை நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். பிறகு எல்லாச் சூரணங்களையும் ஒன்றாக மிஸ்ரமித்து வைத்துக்கொண்டு அபினியைச் சிறு உண்டைகளாகச்செய்து ஒவ்வொரு உண்டையாகக் கல்வத்திற்போட்டு மேற்படி சூரணத்தையும் சிறுகச்சிறுகச்சேர்த்து அரைத்து எல்லாம் ஒன்றாய் நன்றாக மிஸ்ரமானபின்பு ஒருபானையில் அரைப்படி பாலைவிட்டு அதன்மேல் மெல்லிய வஸ்திரத்தால் வேடுகட்டி முன் சித்தப்படுத்தின சூரணத்தை அதன்மேல்வைத்து மேற்சட்டிமூடி அடுப்பில்வைத்து சிறுதீயாயெரித்து பால்சுண்டும் தருணத்திலிறக்கிக் கல்வத்திலிட்டு மேற்படி வாழைப்பூச்சாற்றைச்சிறுகச் சிறுகவார்த்து நான்கு சாமமரைத்து மிளகுபோன்ற மாத்திரைகள்செய்து வைத்துக்கொள்ளவும்.

உபயோகம்:—தேன், சர்க்கரை முதலியவைகளில் அனுபானித்துக்கொடுக்க எல்லாவகைக் கழிச்சல்ரோகங்களும் தீரும்.

இதனைத் தயவுடன் முழுதும் வாசித்துத் தங்கள் நண்பர்களுக்கும் வாசிக்கக் கொடுக்கவும்.

---

## மகா ஆனந்த புருஷகெம்பீர ஹல்வாவும், திலாவென்னும் மேற்பூச்சும்.

தளர்ந்த நரம்புகளை உற்சாகப் படுத்தவும், சோர்ந்த பேசிநரம்புகளைப் பலப்படுத்தவும், மேற்பூச்சு மாத்திரம் அதிகமாக உபயோகப்படாது. ஆகையால், மேற் பிரயோகத்துடன் உட்பிரயோகமும் ஆவசியகம். பாலியச் சேஷ்டையினாலும், அறியாமையினாலும் உண்டான தாதுநஷ்டம் முதலிய வியாதிகளுக்கெனபலவித விசித்திர நாமங்களோடு, வெளிப்பட்டுலாவும்போலி விளம்பரங்களை நம்பி ஏமாந்துபோகிறவர்கள் அனேகம். மேற்கண்ட ஔஷதங்கள் அவ்விதமானவைகள் அல்லன. இவை பரம்பரையாகவும், நெடுநாள் அநுபவ சித்தமாகவும், கைவல்லியமான முறைகள். ஒருவரிருவரல்ல. நூற்றுக்கணக்கான அநேகரால் உபயோகப் படுத்தப்பட்டுக் குணங்காணப் பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

பாலிய சேஷ்டையினாலும், அறியாமையினாலும் முற்றும் போக நிர்வாக சக்தியற்று, தாது நஷ்டமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினாலும் தீராமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினால்கடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானல் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள்

தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஔஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனோற்பலம், தைரியம், வீரியம் முதலியவைகளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன்விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதாரரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.



அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையிலச்சாகி வெளிவரவில்லையென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட ரோகங்களுக்கு நானுவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட்டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆகியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, லிங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யக்கூடியவைகள். இவை யுத்தி புத்தி அனுபவம் முதலியவைகளுக்கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னுயுளையும் பொருளையும் அவமே யழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகளல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அனுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லா வகையாலும் லாபத்திற்கே யேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதிநூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட்டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கவசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட தக்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-2-0 வி - பி 1 - 4 - 0.

---

தன்வந்திரி சூக்ஷ்மவைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளியாகாத நூதன சிறிய கிரந்தம். இதில் பற்பல வகை மாத்திரைகள், எண்ணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நாநதைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷ்மமானவைகளும் பல தடவை அநுபவப்பட்டவைகளுமாம். இதனைப் பார்த்த தக்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்றாய் விளங்கும். தம்முடையவும் தம் மினஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி - 1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-0.

---

ஞாய அஷ்டாங்க தீபம்.



இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகை தாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞான நூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்போரும் ஆனந்தப் படும்படியாக வெண்பா, துறை, ஆனக்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட்டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி 0-6-0.

---

இராஜ அவுடத சாலை. 12 - வது நெ. அப்புமேஸ்திரி தெருவு, மாபுஸ்கான்தேவடி. மத்ராஸ்.

புத்தகம் - ரு. 1907ஹு சூன்மீ 1உ இலக்கம் - கூ.

சுகாதார போதினி.

க . ம் பிரிவு.

## வைத்தியக் குறிப்புகள்.

### தாதுபுஷ்டி லேகியம்.

| | |
|---|---|
| நீர்முள்ளிவிதைச் சூரணம் துலா | கரு |
| சீனக்கற்கண்டு துலா | கரு |
| சீனிசர்க்கரை துலா | கரு |
| தேன் துலா | கரு |
| * சுத்திசெய்த சடைக் கஞ்சா துலா | கங ஒ |
| மேற்றோல் நீக்கின சுக்குச் சூரணம் துலா | ரு |
| பூமிசர்க்கரைக் கிழங்கு துலா | ரு |
| அதிமதுரச் சூரணம் துலா | உ ஒ |
| மேற்றோல் நீக்கின வாதுமைப் பருப்புதுலா | உ ஒ |
| கசகசா துலா | உ ஒ |
| மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம் துலா | உ ஒ |
| கஞ்சாவிதைச் சூரணம் துலா | உ ஒ |
| பூனைக்காலி விதைச் சூரணம் துலா | உ |
| முருங்கைப்பிஞ்சுஅல்லது,முருங்கைப்பூதுலா | உ |
| ஜாதிக்காய்ச் சூரணம் துலா | க ஒ |
| ஜாதிபத்திரிச் சூரணம் துலா | க ஒ |
| மாசக்காய்த்தோற் சூரணம் துலா | க |
| அரிசித்திப்பிலிச் சூரணம் துலா | க |
| கஸ்தூரி மஞ்சள் சூரணம் துலா | க |
| * அபின் துலா | ஒ |
| பசுவின்பால் படி | க |
| பசுவின்நெய் பலம் | உ0 |

செய்முறை:—நெய்யில் கஞ்சாவைப் போட்டு அடுப்பின் மீதேற்றிச் சிறுதீயா யெரித்து மூலிகைவறு பட்ட பதத்தில் இறக்கி இளஞ்சூட்டுடன் வடிகட்டித் திப்பிநீக்கி நெய்யை மாத்திரம் எடுத்துக் கொள்ள வேண்டும். முருங்கைப் பிஞ்சை அல்லது, முருங்கைப் பூவைக் கொஞ்சம் பால்விட்டு வேக வைத்துக் கல்வத்திலிட்டுத் தேனைச் சிறுகச் சிறுக வார்த்து வெண்ணெய்போ லரைத்து மீதித் தேனிற் கலக்கித் தனியே வைத்துக் கொள்ளவேண்டும். வாதுமைப் பருப்பை ருசித்து அதிலுள்ள கைப்பான பருப்புகளை நீக்கி விட்டு அம்மியில் வைத்துக் கொஞ்சம் பால்தெளித்து வெண்ணெய்போ லரைத்துத் தனியே வைத்துக் கொள்ளவேண்டும். கசகசாவிலுள்ள கல், மணல் முதலியவைகளை ஆய்ந்து நீக்கி அம்மியில் வைத்துப் பசுவின்பாலைத் தெளித்து வெண்ணெய் போலரைத்து தனியே வைத்துக்கொள்ள வேண்டும். அபினியில் கொஞ்சம் பசுவின் பாலைவிட்டு நன்றாகக் கரைத்து மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டி அதையும் தனியே வைத்துக்கொள்ள வேண்டும். மற்ற சூரணங்களை யெல்லாம் ஒன்றாக்க் கலந்து மடக்கிமடக்கி ஏழுதடவைகள் வஸ்திரகாயஞ் செய்து தனியே வைத்துக்கொள்ள வேண்டும். கற்கண்டையும் சீனிசர்க்கரையையும் கலந்து கொஞ்சம் ஜலவிட்டுக் கரைத்து அடுப்பேற்றி ஒரு கொதிவந்தவுடன் இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கி அதிற் பாலைச்சேர்த்து வாதுமைப் பருப்பை அரைத்த விழுதையும் கசகசாவை யரைத்த விழுதையுங் கலக்கி அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துப் பாகுபதத்தில மேற்படி சூரணங்களைச் சிறுகச் சிறுகத் தூவி கிண்டிக்கிளறி இறக்கித் தேனைச் சேர்த்து நன்றாக மிஸ்ரமித்துச் செல்லத்தக்க அளவுமுன் கஞ்சா நெய்யையும் விட்டு நன்றாக மிஸ்ரமித்துக் குளிர ஆறினபின்பு அபினைக் கரைத்து வைத்திருக்கிற பாலையுஞ்சேர்த்து மறுபடியும் நன்றாகப் பிசைந்து பிங்கான் ஜாடியிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—வேளை ஒன்றுக்கு துலா-வ ஒ, இதனைப் போஜனம் செய்த பிறகு சாப்பிட வேண்டியது.

உபயோகம்:—இரத்த விருத்தியுண்டாகி தாது விளையும், இந்திரிய சிராவகம், இந்திரிய ஸ்கலிதம், சொற்பன ஸ்கலிதம், துரிதஸ் கலிதம் ஆகியவைகள் தீர்ந்து நீர்த்துப்போன இந்திரியமானது இறுகிக் கெட்டிப்படும். தேகதிடம், தேகபலம், மனோபலம், உற்சாகம், தேகக் கட்டழகு, முகவஜீகரம, தேக வஜீகரம் முதலியவைக ளுண்டாகும். இந்திரியக் கெடுதிகள் தீர்ந்து புத்திர சந்தானத்திற் கேதுவாகும்.

### குறிப்பு.

இனிப்பி லதிகப் பிரியமுள்ளவர்கள் இன்னும் முப்பது துலா கற்கண்டை, அல்லது, சீனிசர்க்கரையை அதிகமாகச் சேர்த்துக் கொள்ளலாம். இதிற்சொல்லி யிருக்கிறபடி சித்தப்படுத்தின கஞ்சா நெய் அவ்

* லாகிரி பிரிய மில்லாதவர்களும், லாகிரி பழக்கமில்லாதவர்களும் மேற்கண்ட இரண்டு சரக்குகளையும் நீக்கிச் செய்து கொள்ளலாம்.

வளவையும் சேர்க்கவேண்டு மென்பதவசியமல்ல. இஷ்டமான வரையிலும் அல்லது செல்லத்தக்க அளவு வரையிலும் சேர்த்துக் கொள்ளலாம். இந்த நெய்யைச் சேர்க்கப் பிரியமில்லாதவர்கள் மேற்கண்ட விபரப்படியே தனிநெய்யைச் சேர்த்துக் கொள்ளலாம். சக்தியுள்ளவர்கள் அவரவர்களின் சக்திக்கு இயன்ற அளவு தங்கரேக்கு, வெள்ளிரேக்கு, அம்பர், கஸ்தூரி முதலியவைகளையுஞ் சேர்த்து உபயோகிக்கலாம். இன்னும் சாஸ்திரக் கிரமப்படி செய்யப்பட்ட பவளபற்பம், முத்துப்பற்பம், சிலாசத்துப் பற்பம், கல்நார் பற்பம், வெள்ளிப் பற்பம், தங்கபற்பம், அல்லது, செந்தூரம், முதலியவைகளையும் சேர்த்து உபயோகிக்கலாம்.

வேறு,

| | | |
|---|---|---|
| ஷகாகுல் மிஸ்றிச் சூரணம் துலா | ௨௰ |
| போஜீதான் மிஸ்றிச்சூரணம் துலா | ௨௰ |
| சுரிஞ்சான் மிஸ்றிச்சூரணம் துலா | ௨௰ |
| றாமிமஸ்தகிச் சூரணம் துலா | ௨௰ |
| சீனக்கற்கண்டுத் தூள் துலா | ௧௦ |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துப் பீங்கான் கல்வத்திற் போட்டு கால்மணிநேரம் அரைத்து மிஸ்ரமித்துப் பீங்கான் டப்பியில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—துலா-௧. கவ. இதனை இரவில் நித்திரை செய்யப் போகும்போது சாப்பிட்டு, அதன்மேல் காய்ச்சிக் கற்கண்டிட்ட பசுவின் பாலில் ஜீரண சக்திக்குத் தகுந்தபடி அரை, முக்கால், ஒன்று ஆழாக்கு பானஞ் செய்யவும்.

உபயோகம்:—இந்திரிய ஸ்கலிதம், இந்திரிய சிராவகம், துரிதஸ்கலிதம், சொற்பன ஸ்கலிதம், முதலியவைகள் தீர்ந்து தாதுபுஷ்டி யுண்டாகும்.

பத்தியம்:—புளிப்பு வஸ்துக்களை அதிகமாகச் சேர்க்காமல் குறைந்த அளவாக உபயோகித்துவர வேண்டியது. பாற்பாயசம், மிட்டாய் தினிசுகள் முதலியவைகளை ஜீரண சக்திக்குத் தகுந்தபடி உபயோகித்துவர வேண்டியது.

ஷை வேறு.

| | | |
|---|---|---|
| திறமான சாலாமிஸ்றிச் சூரணம் துலா | ௫ |
| பஹமனே சுறுக் சூரணம் துலா | ௩ |
| பஹமனே சுபேத் சூரணம் துலா | ௩ |
| சுரஞ்சான் மிஸ்றிச்சூரணம் துலா | ௧ |
| கற்கண்டுத்தூள் துலா | ௧௨ |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துப் பீங்கான் கல்வத்தில் போட்டு அரைமணிநேரம் அரைத்து மிஸ்ரமித்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம், உபயோகம், அனுபானம், முதலியவைக ளெலலாம் முன் பாகத்திற் சொல்லப்பட்டிருப்பவைகளேயாம்.

ஷை வேறு (ஜவ்வாதுப் புலவர் முறை)

(a) மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, ஏலரிசி, நற்சீரகம், இவை வகை-௧-க்குப் பலம்-௨, மேற்றோல் சீவின அதிமதுரம், சிறுதேக்கு, நெருஞ்சிமுள், நெருஞ்சில்வேர், நீர்முள்ளி வித்து, அதிவிடயம், கஸ்தூரி மஞ்சள், உலர்த்தின வெள்ளைச்சாரணைக் கிழங்கு, அமுக்குராக் கிழங்கு, உலர்த்தின கையாந்தகரை சமூலம், கொடிவேலி வேர்ப்பட்டை, மருட்கிழங்கு, சிறுநாகப்பூ, மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், சீமை நெல்லிவற்றல், இலவங்கப்பட்டை, செண்பக விதை அல்லது, செண்பகப்பூ, சுத்திசெய்த கஞ்சா, பெருஞ்சீரகம், நிலப்பனைக் கிழங்கு, பூமிசர்க்கரைக் கிழங்கு, சாலாமிஸ்றி, நத்தைச்சூரிவிதை, இவை வகை-௧-க்குப் பலம்-௰.

(b) வறுத்த உழுத்தம் பருப்பு, வறுத்த எள்ளு, கொடிமுந்திரிப்பழம், முள்ளிலவம் பிசின், இந்துப்பு இவை வகை-௧-க்குப் பலம்-௰, மேற்றோல் நீக்கின வாதுமைப்பருப்பு, சாரப்பருப்பு, இவை வகை-௧-க்குப் பலம்-௨, விதை நீக்கின பேரீச்சம்பழச் சுளை பலம்-௩௦.

(c) சீனிசர்க்கரை பலம்-௪௦, இஞ்சிச்சாறுபடி-௰, தேன் பலம்-௭௰, பசுவின் நெய் பலம்-௧௫.

செய்முறை:— (a) யிலுள்ள சரக்குகளை யெல்லாம் ஒன்றாகச் சேர்த்திடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். (b) யிலுள்ள உழுத்தம் பருப்பையும் எள்ளையும் தனித்தனி அரைத்துத் தூள்செய்து கொள்ளவேண்டும். கொடி முந்திரிப்பழத்தைத் தனியே யரைத்து வைத்துக்கொள்ள வேண்டும். முள்ளிலவம் பிசினைக் கொஞ்சம் நெய்யில் வறுத்து அம்மியிலரைத்துக் கொள்ள வேண்டும். வாதுமைப் பருப்பை நுசித்து அதிலுள்ள கைப்புப் பருப்

புகளை நீக்கிவிட்டு அதனுடன் சாரப் பருப்பையுஞ் சேர்த்து அம்மியில் வைத்து மைபோலரைத்துத் தனியே வைத்துக்கொள்ள வேண்டும். பேரீச்சம்பழத்தை அம்மியில் வைத்து மைபோலரைத்துச் சிறு பில்லைகளாகச் செய்து நெய்யில் போட்டு வறுத்தெடுத்து மறுபடியும் அம்மியில் வைத்தரைத்துத் தனியே வைத்துக்கொள்ள வேண்டும். பிறகு (C) யிலுள்ள சீனிசர்க்கரையையும், இஞ்சிச் சாற்றையும் சேர்த்து அடுப்பேற்றிப் பாகுபதத்தில் வாதுமைப் பருப்பையும், சாரப்பருப்பையும் அரைத்து வைத்திருக்கிற விழுதைப்போட்டு நன்றாக மிஸ்ரமித்து மற்ற சூரணங்களை யெல்லாம் ஒன்றாகக் கலந்து அதிற்றாவி, சந்தனமத்தால் நன்றாகக் கடைந்து பிறகு நெய்யை விட்டுக் கடைந்து கீழேயிறக்கி தேனைவிட்டுக் கடைந்து குளிர ஆறினபின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற பேரீச்சம்பழத்தையும் சேர்த்துக் கையால் ஒருமணி நேரம் நன்றாகப் பிசைந்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௧. க௨. இதனை காலை, மாலை யிரண்டுவேளையும் உட்கொண்டு அதன்மேல் காய்ச்சிக் கற்கண்டிட்ட பாலில் ஜீரணசக்திக்குத் தகுந்தபடி அரை, முக்கால், ஒன்று ஆழாக்கு பானஞ் செய்யவும்.

உபயோகம்:—இந்திரிய சிராவகம், துரிதஸ்கலிதம், சொற்பனஸ்கலிதம், முதலியவைகள் தீர்ந்து தாதுபுஷ்டி உண்டாகும். ஜீரணசக்தி விருத்தியாகும், மந்தாக்கினிரோகம், வயிற்றுவலி, வாயுசம்பந்தமான ரோகங்கள் முதலிய அநேக ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

குறிப்பு.

இதில் இஷ்டமானுல் இஞ்சிச்சாறு அரைப்படிக்கு பதிலாக ஒருபடி சேர்த்துக் கொள்ளலாம். இஷ்டமானுல் இந்த லேகியத்துடன் தங்கரேக்கு, வெள்ளிரேக்கு ஆகியவைகளைச் சேர்த்து உபயோகிக்கலாம். இது சற்று உஷ்ண சுபாவமுடைய தாகையால் குளிர்ச்சி சம்பந்தமான வியாதிகளுக்கு அதிக சிரேஷ்டமானதாம். ஆகையால் தேக சுபாவம், வியாதியின் சுபாவம் ஆகியவைகளை நிதானித்து உபயோகிக்க வேண்டியது சிகிச்சகர்களின் கடமையாம்,

௬ (வேறு)

ஜாதிக்காய், ஜாதிபத்திரி, ஏலரிசி, கசகசா, இலவங்கம், இலவங்கப்பட்டை, மிளகு, மேற்றோல் சீவின சுக்கு, நற்சீரகம், கொத்துமல்லி விதை, சுத்திசெய்த கஞ்சா, இவை வகை-௧-க்குப் பலம்-௧, பனைவெல்லம் பலம்-அ, சீனிசர்க்கரை பலம்-௬, பசுவின் நெய் பலம்-௬௨.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளைத் தனித்தனியே பொன் வறுப்பாக வறுத்து இடித்துச் சூரணித்துப் பனைவெல்லத்தையும் சர்க்கரையையும் சேர்த்துக் கல்லுரலில் மைபோலிடித்து நெய்யையுஞ் சேர்த்துப் பிசைந்து லேகியம்போற் செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௧. க௨, இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் உட்கொண்டு அதன்மேற் காய்ச்சிக் கற்கண்டிட்ட பாலில் ஜீரண சக்திக்குத் தகுந்தபடி அரை, முக்கால், ஒன்று ஆழாக்கு பாலைப் பானஞ்செய்ய வேண்டும்.

உபயோகம்:—வாயு சம்பந்தத்தினு லுண்டான ரோகங்கள் தீர்ந்து தாதுபுஷ்டி யுண்டாகும்.

குறிப்பு.

இந்த லேகியத்தில் தண்ணீரைச் சேர்க்கலாகாது, இதனை நெருப்பின்மீதும் வைக்கலாகாது. ஆகையால் நன்றாக உரலிலிடித்து நைப்பாக்கி நெய்யைச் சேர்த்து லேகியமாகச் செய்துகொள்ள வேண்டும்.

௬ (வேறு.)

(a) ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, ஏலரிசி, இலவங்கப்பட்டை, இலவங்கம், மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, நற்சீரகம், பெருஞ்சீரகம், கொத்துமல்லி விதை, சுத்திசெய்த கஞ்சா இவை வகை-௧-க்குப் பலம் - ௧, (b) பூமிசர்க்கரைக் கிழங்கு, நிலப்பனைக் கிழங்கு, மதனகாமப்பூ, பேதாளுவிதை, றூமிமஸ்தகி, சாலாமிஸ்றி, ஷகாகுல்மிஸ்றி, பூனைக்காலிவிதை இவை வகை-௧-க்குப் பலம்-௧.

(c) அபின் துலா-வ, பொன்ரேக்கு-உடு, வெள்ளிரேக்கு - ௧00, வெள்ளிச்செந்தூரம், அயசெந்தூரம் காந்த செந்தூரம், அப்ரேக செந்தூரம் இவை வகை-௧-க்கு விராகனெடை-௧, பனைவெல்லம் பலம் உ௰, சீனிசர்க்கரை பலம்-டு, நெய் பலம்-௧௨ ௦, குங்குமப்பூ விராகனெடை-௧வ.

செய்முறை:—(a) யிலுள்ள சரக்குகளில் றூமிமஸ்தகியைத் தவிர மற்றெல்லாவற்றையும் தனித்தனி பொன் வறுவலாக வறுத்து எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்திடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ள வேண்டும். றூமிமஸ்தகியைத் தனியே பொடித்து வைத்திருந்து லேகியம் முடிந்த மறுநாள் சேர்க்கவேண்டும். (b) யிலுள்ள சரக்குகளை யெல்லாம் ஒன்றாகச் சேர்த்து வறுக்காமல் வெயிலிலுலர்த்தி யிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து முன் சூரணத்துடன் கலந்து வைத்துக்கொள்ள வேண்டும். அபினையும் குங்குமப்பூவையும் கல்வத்திலிட்டு முன் சூரணத்திற் கொஞ்சங் கொஞ்சந் தூவியரைத்துச் சூரணமாக்கி முன் சூரணத்துடன் கலந்துகொள்ளவேண்டும். பிறகு இந்தச் சூரணம், வெல்லம், சர்க்கரை ஆகியவைகளை ஒன்றாகக் கலந்து கல்லுரலிலிட்டு மைபோலிடித்து நெய்யை விட்டு நன்றாக மர்த்தித்துப் பிசைந்து செந்தூரவகைகளையுஞ் சேர்த்து மறுபடியும் நன்றாக மர்த்தித்துப் பிசைந்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—வராகனெடை-௨, ௩, இவ்விதம் காலை, மாலை யிரண்டுவேளையு முட்கொண்டு காய்ச்சிக் கற்கண்டிட்ட பாலில் ஜீரண சக்திக்குத் தகுந்தபடி அரை, முக்கால், ஒரு ஆழாக்குப் பானஞ் செய்துவர வேண்டும்

உபயோகம்— மோரைப்போல் நீர்த்திருக்கின்ற இந்திரியமானது நொங்கைப்போ லிறுகிக் கெட்டிப்படும். சொற்பனஸ்கலிதம், துரிதஸ்கலிதம், இந்திரிய சிராவகம், முதலியவைகள் தீர்ந்து தாதுபுஷ்டி, தேகபுஷ்டி ஆகியவைகளுண்டாகும். சம்போக காலங்களிலுண்டாகும் அதிதுற்பலம், இடுப்புநோய், ஆயாசம், களைப்பு முதலியவைகள் தீரும். தேகத்தைத் திடப்படுத்தி மனக்களிப்பையும், மனோற்சாகத்தையுங் கொடுக்கும்.

பத்தியம்:—கூடிய வரையில், புளியையும், புகையையும் நீக்கி வைக்கவேண்டியது. வியாதியுள்ளவர்கள் இம்மருந்தை யுபயோகிக்கும்போது ஸ்திரீ சங்கமத்தைத் தள்ளி வைக்கவேண்டியது ஆவசியகமென்பது சிகிச்சகருக்குத் தெரிந்த விஷயமேயாம்.

### வேறு.

ஜாதிக்காய், மராட்டி மொக்கு, முருங்கை விதை, ஆலம்விதை, அரசம்விதை, அத்திவிதை, அதிமதுரம், மாசிக்காய்த்தோல், மஞ்சட் கடுக்காய்த்தோல், சிறுநாகப்பூ, மதனகாமப்பூ, கிராம்பு. இவைகளைத் தனித்தனி யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் வகை-௧-க்குப் பலம்-௨, குங்குமப்பூ, சாம்பிராணிப் பதங்கம், அபின், இவை வகை-௧-க்குப் பலம்-௪, கஸ்தூரி வராகனெடை-௧, தங்கரேக்கு-௧௦, வெள்ளிரேக்கு-௫௦, முருங்கைப்பூச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—ஆரம்பத்தில் குங்குமப்பூவைக் கல்வத்திற்போட்டு மேற்படி முருங்கைப்பூச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து அரைத்து அது நன்றா யரைபட்டபின்பு அபினைச் சேர்த்தரைத்து அதுவும் நன்றா யரைபட்ட பின்பு கஸ்தூரியைச் சேர்த்தரைத்து அதுவும் நன்றாயரைபட்ட பின்பு சாம்பிராணிப் பதங்கைச்சேர்த்து அரைத்து மற்ற சூரணங்களை யெல்லாம் ஒன்றாக மிஸ்ரமித்து முன் மருந்தோடு சேர்த்து முன் சாற்றையே சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து ஐந்து குன்றிமணி நிறையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி முன் தங்கரேக்கு, வெள்ளிரேக்கு ஆகியவைகளை முன் மாத்திரைகளின்மீது கவசஞ்செய்து சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

### குறிப்பு.

மாத்திரைகளி லெல்லாம் கவசம் செய்வதற்கு தங்கரேக்குப் போதா தாகையால் அந்த ரேக்குகளை மாத்திரம் முன் மருந்தோடு சேர்த்தரைத்துக் கொள்வது உத்தமம். சக்தியுள்ளவர்கள் செல்லத்தக்க தங்கரேக்கைவாங்கிக் கவசித்துக் கொள்ளலாம்.

பிரமாணம்:—மாத்திரை-௧. இப்பிரமாணப்படி காலை மாலை யிரண்டுவேளையு முட்கொண்டு அதன்மேல் காய்ச்சிக் கற்கண்டிட்டபாலை ஜீரணசக்திக்குத் தகுந்தபடி அரை, முக்கால், ஒரு ஆழாக்கு பானஞ் செய்துவரவும்.

உபயோகப்:—இந்திரிய சிராவகம். துரிதஸ்கலிதம், சொற்பனஸ்கலிதம் ஆகியவைகள் தீர்ந்து தம்பனசக்தி, தேகபலம், மனோபலம் முதலியவைகளுண்டாகும்.

பத்தியம்:—புளிப்பு வஸ்துக்களை அதிகமாகச் சேர்க்கலாகாது. பாற்பாயசம், பாலன்னம், மிட்டாய்தினுசுகள், இனிப்பானபதார்த்தங்கள் முதலியவைகளை அதிகமாகச் சேர்த்துவர வேண்டியது.

ஷை வேறு.

வாகைப்பிசின், முருங்கைப்பிசின், விளாம்பிசின், கருவேலம்பிசின், வேப்பம்பிசின், இலவம்பிசின், வாதுமைப்பிசின், மாம்பிசின் இவை வகை-க-க்கு விராகனெடை-க, பூனைக்காலிவிதை, நத்தைச்சூரிவிதை, அகத்திவிதை, வில்வவிதை, நெல்லிவிதைப்பருப்பு, வாகைவிதை, அத்திவிதை, அரசம்விதை, ஆலம்விதை, பொன்முசுட்டைவிதை, சுண்டைவிதை, தேற்ருன்விதை, நாயுருவிவிதை இவை வகை-க-க்கு விராகனெடை-க, மேற்ருேல் சீவினசுக்கு, மஞ்சட்கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், இலவங்கப்பட்டை, நிலப்பனைக்கிழங்கு, அமுக்குராக்கிழங்கு, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, குராசாணியோமம், குந்திக்கரிம், மதனகாமப்பூ இவைகளைத் தனித்தனியிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் வகை-க-க்கு விராகனெடை - க, விதைநீக்கின திராக்ஷப்பழம் விராகனெடை-ம. சீனக்கற்கண்டு விராகனெடை - கஉ௦, சீனிசர்க்கரை விராகனெடை-கஉ௦, தித்திப்பு திராட்சப்பழ ரசம் செல்லத்தக்க அளவு. (இந்தத் திராக்ஷப்பழ ரசத்திற்குப்பதிலாக திறமான பிராந்தியையாவது அல்லது, போர்ட் ஒயின் என்னும் சாருபத்தையாவதுவிட்டு அரைத்துச் செய்துகொண்டால் அதிக விசேஷ குணத்தைத்தரும்.)

செய்முறை:—பிசின் வகைகளையெல்லாம் ஒன்ருகச்சேர்த்து முன் சாற்றைவிட்டு ஊறவைத்து எடுத்துக்கொள்ளவேண்டும். மற்றச் சரக்குகளையெல்லாம் தனித்தனியிடித்து வஸ்திரகாயஞ்செய்து மேற்கண்டஎடை தனித்தனி நிறுத்தெடுத்துக்கொள்ள வேண்டும். பிறகு எல்லாவற்றையும் ஒன்ருகக்கலந்து கல்வத்திலிட்டு மேற்கண்ட திரவ வகைகளில் ஒன்றைச் சிறுகச் சிறுகவார்த்து எட்டுசாமமரைத்து நான்கு குன்றிமணிபெடையுள்ள மாத்திரைகளாச்செய்து நிழலிலுலர்த்தி அதன்மீது வெள்ளிரேக்கைக் கவசித்துச் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க. இவ்விதம் காலை மாலை யிரண்டுவேளையும் உட்கொண்டு காய்ச்சிக் கற்கண்டிட்டபாலை ஜீரணசக்திக்குத் தகுந்த அளவு பானஞ்செய்யவேண்டும். கூடுமானல் ஒருபலம் முருங்கைப்பூவை, அல்லது, முருங்கைப்பூப் பிஞ்சைப் பாலுடன் சேர்த்து அது நன்ருகக் குழையும்படியாக வேகவைத்து அதனுடன் கற்கண்டை, அல்லது, சீனிசர்க்கரையைச்சேர்த்து தித்திப்புண்டாக்கிப் பானஞ்செய்வதால் விசேஷ குணமுண்டாகும்.

உபயோகம்:—நீர்த்துப்போன இந்திரிய மானது இறுகிப் பலப்படும். இந்திரியகமலம், இந்திரிய நாளம் முதலியவை பலப்பட்டு இந்திரிய விருத்தியுண்டாகி தாதுபுஷ்டி யதிகரிக்கும். துரிதஸ்கலிதம், சொற்பனஸ்கலிதம் ஆகியவைகள் தீர்ந்து தம்பனசக்தியுண்டாகும்.

ஷை வேறு.

தென்னம் இளம்பாளையிலுள்ள பூவிதழ்களை யுலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் பலம்-கு, நீர்முள்ளிவிதை, நிலப்பனைக்கிழங்கு, இலவங்கப்பட்டை இவைகளைத் தனித்தனியிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் வகை-க-க்குப்பலம்-ச, கருவேலம்பிசின் சூரணம் பலம்-ரு, சீமைத் தண்ணீர்விட்டான் கிழங்குச் சூரணம் பலம்-உ, சுத்திசெய்து வாசனைவரும்படியாக வறுத்திடித்த கஞ்சாச்சூரணம் பலம்-க, அரிசித்திப்பிலிச் சூரணம் பலம்-௰, சந்தனம், ஜாதிக்காய், இலவங்கம், பெருஞ்சீரகம் இவைகளைத் தனித்தனியிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் வகை-க-க்குப் பலம்-வ, விதை நீக்கின பேரீச்சம்பழம் பலம்-கூ, தேன் பலம்-ச௦, நெய் பலம்-உ௦, சர்க்கரை பலம்-ரு௦, பசுவின்பால் படி - உ, கோதுமைநொய் பலம்-எ௰.

செய்முறை:—பாலுடன் சர்க்கரையைச் சேர்த்து கோதுமை ரவையையும் நெய்யில் வறுத்துச் சேர்த்துக் காய்ச்சவேண்டும். காய்ச்சும்போது கைவிடாமல் துளாவிக்கொண் டிருக்கவேண்டும். பேரீச்சம்பழத்தை நெய்யில் வறுத்து வெண்ணெய்போலரைத்து எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும், மற்ற சூரணங்களையெல்லாம் ஒன்ருகக்கலந்து வைத்துக்கொள்ளவும் வேண்டும். முன் காய்ச்சும் பாலானது பாகுபதமாகவருஞ் சமையத்தில் முன் சூரணங்களைச் சிறுகச்சிறுகத்தூவி சந்தனமத்தாற் கடைந்து கீழிறக்கி பேரீச்சம்பழத்தைச் சேர்த்து தேன், நெய் முதலியவைகளை முறையேசேர்த்து நன்ருக மர்த்தித்துப் பீங்கான்பாத்திரத்தில் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௨௦, ௫, காலை மாலை யிரண்டுவேளையுஞ் சாப்பிட்டுவரவும்.

உபயோகம்:—மேகரோகங்கள், சிராவகரோகங்கள் தீரும். இந்திரியஸ்கலிதம், துரிதஸ்கலிதம், சொற்பனஸ்கலிதம்; ஆகியவைகள் தீர்ந்து இந்திரியவிளைவு, இந்திரியவிருத்தி, தேகபுஷ்டி, தாதுபுஷ்டிமுதலியவைகளுண்டாகும். தேகபலம், மனோபலம் முதலியவைகள் விருத்தியாகி தேக அழகு, முகவஜீகரம்முதலியவைகளுண்டாகும்.

பத்தியம்:—புளிப்பு வஸ்துக்களை அதிகமாகச் சேர்க்கலாகாது, பாற்பாயசம், பாலன்னம், தித்திப்பு வஸ்துக்கள் ஆகியவைகளை அதிகமாக உபயோகித்துவரவும்.

## உஷ்ணசாந்தத் தைலம்.

எள்ளெண்ணெய்படி-க, தாமரைக்கொடிச்சாறுபடி-க, பூலாங்கிழங்கு, பச்சிலை இவற்றின் சூரணம் வகை-க-க்குப் பலம்-௨.

செய்முறை:—முன் எண்ணெயையும் முன் சாற்றையும் ஒன்றாகக்கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து நீரெல்லாஞ் சுண்டினபதத்தில் கீழிறக்கி முன் சூரணத்தைத் தூவி மூடிவைத்துக் குளிர ஆறினபின்பு வடிகட்டித் திப்பிநீக்கி சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இதனை வாரத்திற்கிரண்டுதடவை ஸ்நானஞ்செய்து வருவதினால் மூலச்சூடு, பித்தச்சூடு, வெட்டைச்சூடு முதலிய எல்லாவகைச் சூடும்தீரும். கண்காந்தல், கைகாலெரிவு, கண்புகைச்சல் ஆகியவைகளும் தீரும். நீர்க்கடுப்பு, நீரெரிச்சல் முதலியவைகள்தீர்ந்து இந்திரியபுஷ்டியுண்டாகும். இளைத்த தேகம் பெருத்துப் பலப்படும். இதனால் விசேஷகுணமுண்டாகும். இதன் நலத்தை இதனைக் கையாள்பவர்கள் தாமே தெரிந்து கொள்ளக்கூடும்.

பத்தியம்:—ஸ்நானஞ் செய்த தினம் ஸ்திரீபோகம், செம்மறித்தயிர், பகல் நித்திரை, பாகற்காய், பால், புகை, புளி, மீன் முதலியவைகளை நீக்கவும்.

## சுரநாசத் தைலம்.

சன்னராஷ்டம், அமுக்கிராக் கிழங்கு, சதகுப்பை, கோஷ்டம், மரமஞ்சள், கொம்பரக்கு, மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, திப்பிலி, அதிமதுரம், லவங்கப்பத்திரி, லவங்கப்பட்டை, நாகேசரம், கடுகுரோகிணி, கோரைக்கிழங்கு இவை வகை-க-க்குப் பலம்-வ, எள்ளெண்ணெய் பலம்-௨௦.

செய்முறை:—முன் சரக்குகளை யெல்லாம் ஒன்றாயிடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்படி யெண்ணெயிற் போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்துப் போட்ட சரக்கானது கரிந்துபோன பதத்தில் இறக்கி இளஞ் சூட்டுடன் வடிகட்டி சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

உபயோகம்:—இதனை முறைப்படி ஸ்நானஞ் செய்ய, சுரம், காந்தல், நாட்பட்டசுரம், சுரத்தாலுண்டாகும் பலவகை ரோகங்கள் ஆகியவைகள் நீங்கும்.

## பற்று.

ஆளிவிதையை வேகவைத்து தேங்காயெண்ணையை விட்டு நன்றாகக் கடைந்து ஓர் துணியில் தடவி வேதனை முதலியவையுள்ள விடத்திற் போட்டுக் கட்டிவைக்க, உடனே அந்த நோவுகள் தணிந்து போகும். வயிற்றுநோவு, மார்நோவு, கைகால் குடைச்சல் முதலிய வாயு சம்பந்தமான ரோகங்களில் இதனை உபயோகிக்கலாம்.

## ஊர்க்குருவி லேகியம்.

நாற்பது ஆணடைக்கலாங் குருவிகளை அறுத்து உரோமம், குடல், கால், தலை, எலும்பு முதலியவைகளைப்போக்கி கறியை மாத்திரம் எடுத்துக்கொள்ள வேண்டும். இதனை ஒருசேர் கருங்கோழி யிரத்தத்திற் புரட்டி நெய்யில் பொரித்து இரத்தமும் குருவிக்கறியும் ஒன்றாகக் கருகிவருஞ் சமையத்தில் எடுத்துக் கல்லுரலிலிட்டு இடித்துத் தூளாக்கிக் கொள்ள வேண்டும். பிறகு இந்துப்பு, கல்லுப்பு, வளையலுப்பு நவச்சாரம், கறியுப்பு, பொரித்த வெண்காரம், சவர்க்காரம், மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, ஓமம், நற்சீரகம், கரியபோளம், கடையில் விற்கும் கெலோமெல் என்னும் பூரபுற்பம், கடையில் விற்கும் இரச செந்தூரம் இவை வகை-க-க்கு விராகனெடை-௨, மேற்கண்ட சரக்குகளில் இடிக்கவேண்டியவைகளைத் தனித்தனி யிடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கண்டஎடை நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். உப்புவகைகளையும், பூரபற்பம், இரசசெந்தூரம் ஆகியவைகளையும் மேற்கண்ட எடை எடுத்து ஒன்றாகச்சேர்த்துப் பொடித்துக் கொள்ள வேண்டும். மேற்கண்ட

மொத்த எடைக்கு சமன் சர்க்கரை, அரைப்பங் கெடை நெய், காற்பங்கெடை தேன்.

செய்முறை:—சர்க்கரையைப் பாகுசெய்து பாகு பதத்தில் மேற்கண்ட சூரணங்களையெல்லாம் ஒன்றாகக் கலந்து சிறுகச் சிறுகத் தூவி நன்றாக மிஸ்ரமித்துக் கீழிறக்கித் தேனையும், நெய்யையும் விட்டு மறுபடியும் நன்றாக மிஸ்ரமித்து ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-ளு, வ, வளு, காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகித்து வரலாம்.

உபயோகம்:—மகோதரம், சூதகத்திரட்சி, சூதகக்கட்டி, எண்பது வகை சூலைவாயு, வயிற்றுநோய், கால்வீக்கம், நீரேற்றம், வாயூறல், வர்ய்கொதிப்பு, மண்டைக்குத்து, மயக்கம், தலையிடி, ருதுகால வியாதிகள், கெற்பரோகங்கள், உருத்திரவாயு, குடல்வாயு, வாயுக்கட்டி, குடல்வலி, இரத்தக்கட்டி, சூதகவாயு, காச்ரோகங்கள், திமிர்வாதம், பக்ஷவாதம், கெண்டைவாதம், இடுப்புவலி, முழங்கால் வாதம், வாதவீக்கம், தேக இளைப்பு, நரம்புத் துடிப்பு, முதலிய அநேக ரோகங்கள் தீர்ந்து நித்திரையும் தேகாரோக்கியமும் உண்டாகும்.

குறிப்பு.

இந்த லேகியமானது போகர்சப்த காண்டம் மூன்றுங் காண்டத்தில் சொல்லப்பட் டிருக்கின்றது. இந்த முறையானது என் மூதாதைகளுக்கும் எனக்கும் பலதடவைகள் அனுபோக சித்திபெற்ற தாகையால்மற்றவர்களும் அந்தப் பிரயோசனத்தை யடையும்படி இப்போதினியின் மூலமாக வெளிப்படுத்தியிருக்கின்றேன். இதனைக் கையாண்டு அனுபோக சித்திபெற்றவர்கள் அநேக ரிருக்கலாம். இதனை யனுபவிக்காத அநேகர்களு மிருக்கலாம். அப்படி யனுபவ மில்லாத வர்களுக்காக எழுதினேனே தவிர அனுபவ சித்திபெற்ற வர்களுக்காக எழுதவில்லை. ஆகையால் அத்தகையினர்கள் அடியேன்மீது குறைசொல்லாமல் மன்னிக்கும்படியாய் மிகவுங் கேட்டுக் கொள்கின்றேன்.

கருங்கோழி யிரத்தம் ஒருசேர் அகப்பட்டால் மிகவும் உத்தமம். கருங்கோழியிரத்தம் அகப்படாத சமையங்களில் கருப்பு வருணமுள்ள கோழியிரத்தத்தைச் சேர்த்துக் கொள்ளலாம்.



இதனைத் தயவுடன் முழுதும் வாசித்துத்
தங்கள் நண்பர்களுக்கும் வாசிக்கக் கொடுக்கவும்.

---

மகா ஆனந்த புருஷகெம்பீர ஹல்வாவும்,
திலாவென்னும் மேற்பூச்சும்.



தளர்ந்த நரம்புகளை உற்சாகப் படுத்தவும், சோர்ந்த பேசிநரம்புகளைப் பலப்படுத்தவும், மேற்பூச்சு மாத்திரம் அதிகமாக உபயோகப்படாது. ஆகையால், மேற் பிரயோகத்துடன் உட்பிரயோகமும் ஆவசியகம். பாலியச் சேஷ்டையினாலும், அறியாமையினாலும்உண்டான தாதுநஷ்டம் முதலிய வியாதிகளுக்கெனபலவித விசித்திர நாமங்களோடு, வெளிப்பட்டுலாவும்போலி விளம்பரங்களை நம்பி ஏமாந்துபோகிறவர்கள்அனேகம். மேற்கண்ட ஔஷதங்கள் அவ்விதமானவைகள் அல்லன. இவை பரம்பரையாகவும்,நெடுநாள் அநுபவ சித்தமாகவும், கைவல்லியமான முறைகள். ஒருவரிருவரல்ல. நூற்றுக்கணக்கான அநேகரால் உபயோகப் படுத்தப்பட்டுக் குணங்காணப் பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

பாலிய சேஷ்டையினாலும், அறியாமையினாலும் முற்றும் போக நிர்வாக சக்தியற்று, தாது நஷ்டமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினாலும் தீராமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினால்கடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானால் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள்

தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஔஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனோற்பலம், தைரியம், வீரியம் முதலியவைகளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன் விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதாரரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

## அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையி லச்சாகி வெளிவரவில்லையென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட ரோகங்களுக்கு நானாவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட் டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆதியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, லிங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யக்கூடியவைகள். இவை யுக்தி புத்தி அனுபவம் முதலியவைகளுக் கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னுயுளையும் பொருளையும் அவமே யழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகளல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அனுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லா வகையாலும் லாபத்திற்கே பேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதி நூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட் டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கவசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட க்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-2-0 வி - பி 1 - 4 - 0.

## தன்வந்திரி சூக்ஷ்ம வைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளிபாகாத நூதன சிறிய கிரந்தம். இதில் பற்பல வகை மாத்திரைகள், எண்ணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நாக தைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷ்மமானவைகளும் பல தடவை அநுபவப்பட்டவைகளுமாம். இதனைப் பார்த்த க்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்றாய் விளங்கும். தம்முடையவும் தம் மினஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி -1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-0.

## ஞாய அஷ்டாங்க தீபம்.

இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகை தாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞான நூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்போரும் ஆனந்தப் படும்படியாக வெண்பா, துறை, ஆனந்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட் டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி 0-6-0

இராஜ அவுடத சாலை. 12 - வது நெ. அப்புமேஸ்திரி தெருவு, மாபுஸ்கான்தேவடி. மத்ராஸ்.

புத்தகம் - ரு. 1907௵ ஜுன்மீ 15உ இலக்கம் - க0.

## சுகாதார போதினி.

க . ம் பிரிவு.

### வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol III. பக்கம் 51.)

### இருதயத் துடிப்புரோகச் சிகிச்சைள்க.

தாளிசப் பத்திரியை யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் பலம் - உ௦, சினிசர்க்கரை பலம் - க0.

செய்முறை:—சர்க்கரையிற் கொஞ்சம் ஜலம்வார்த்துக் கரைத்து அடுப்பேற்றிச் சிறுதீயா லெரித்து ஒரு கொதிவந்தவுடன் வடிகட்டித் திப்பி முதலியவைகளை நீக்கி மறுபடியும் அடுப்பேற்றிக் காய்ச்சிப் பாகுபதத்தில் முன் சூரணத்தைக் கொட்டிக் கிண்டிக்கிளறிக் கீழிறக்கி சந்தனமத்தால் ஒருமணி நேரங் கடைந்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-ரு, ச.

உபயோகம்:—சீதளத்தி னுண்டான மார்பதிர்ச்சியை நீக்கும். ஆத்ம சக்திகளைப் பாதுகாக்கும். புஞ்சேந்திரியங்கள்,இரைப்பை, மண்ணீரல் ஆகியவைகளைப் பலப்படுத்தும், வியர்வை நாற்றத்தை நீக்கும், வாயுகளைக் கண்டிக்கும், சிறுகுடற்கள், தேகம், ஆகியவைகளை உஷ்ணப்படுத்தும், வாய்நாற்றத்தைப் போக்கடிக்கும், தலைநோய், அசுத்த சத்துக்கள் ஆகியவைகளைக் கண்டிக்கும், கஷ்டப் பிரசவத்தை நீக்கி சுகப் பிரசவத்திற் கேதுவாக்கும், பாண்டு ரோகத்திற்கும் உபயோகப்படும்.

### வேறு.

ஜவாஹிர் முஹரா என்னும் விஷநிவாரணக்கல் (இதனைப் பன்னீர் வார்த்துச் சந்தனக் கல்லில் இழைத்த குழம்பு.) அவ்விதமே யிழைத்த அக்கிக் குண்டுக் குழம்பு, எஷப்குழம்பு, பவளக்குழம்பு, பவளப்புற்றுக் குழம்பு. இவை வகை-க-க்கு இரண்டு பங்கு; பன்னீர்வார்த்திழைத் தெடுத்த கடற்றேங்காய்க் குழம்பு, ஜத்வார்ச்சூரணம், மூங்கிலுப்புச் சூரணம், இவை வகை - க - க்குப் பங்கு - க. பன்னீர் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு மேற்படி பன்னீரைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து ஒரே உருண்டையாக உருட்டி அகலக்கல்லை அதன்மேல வைத்தழுத்தி பில்லையாகச் செய்து அதன்மீது தங்கரேக்கைக் கவசித்துப் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—இதனைப் பன்னீர் வார்த்திழைத்து நான்கு குன்றிமணியெடை யெடுத்து ஒருபலம் பன்னீரிற் கரைத்துப் பானஞ் செய்யவேண்டும்.

உபயோகம்:—இருதயத் துடிப்பு, இருதய துர்ப்பலம், மனக்கவலை, வீண்கிலேசம், ஆகியவைகளை நீக்கி இருதயத்தை திடப்படுத்தி உற்சாகத்தையும் ஊக்கத்தையு முண்டாக்கும்.

### நிலா குல்கந்து.

வெண்டாமரைப்பூ விதழ்கள் பலம்-௪0, (இதிலுள்ள ஜலத்தை மெல்லிய வஸ்திரத்தால் துடைத்து ஈரமில்லாமற் செய்து கொள்ள வேண்டும்.) சன்னமாயிடித்த கற்கண்டுத் தூள் பலம்-அ0.

செய்முறை:—வாய் குறுகின ஒரு ஜாடியில் கொஞ்சம் கற்கண்டுத் தூளைப் பரப்பி அதன்மேல் கொஞ்சம் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற தாமரைப்பூ விதழ்களைப் போட்டுப் பரப்பி அதன்மேற் கற்கண்டுத் தூளைப்போட்டுப் பரப்பவேண்டும். இவ்விதம் ஒரு அடுக்கு கற்கண்டுத் தூளையும் மறு அடுக்கு தாமரைப்பூ விதழையும் முறையே அடுக்கடுக்காகப் போட்டு அதன்மீது பத்துப்பலம் பன்னீரை விட்டு வாய்பந்தனஞ் செய்து நிலாவில் நாற்பது நாள்வைத்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—பலம்-க. உ.

உபயோகம்:—இருதய அதிர்ச்சி, மனச்சோர்வு முதலியவைகள் நீங்கி இருதயத்தைப் பலப்படுத்தும்.

### குறிப்பு.

மேற்கண்டபடி செய்வதைப் பார்க்கினும் இதழ்களையும் கற்கண்டுத் தூளையும் சேர்த்து இரண்டுமூன்று மணிநேரம் கையால் நன்ருக மர்த்தித்துப்பிறகுஜாடியிற் போட்டு வாய்பந்தனஞ் செய்து மேற்கண்டபடி நிலவில் வைத்தெடுத்துக் கொள்வது சுலப மார்க்கம்.

வேறு

செந்தாமரைப்பூ விதழ்களையும் மேற்கண்படி யே செய்து மேற்கண்டபடியே உபயோகிக்க மேற்கண்ட குணங்களுண்டாகும்.

வேறு.

மேற்கண்டவாறே செடிச் சம்பங்கி, கொடிச்சம்பங்கி, மரசம்பங்கி ஆகியவைகளில் ஒன்றை மேற்கண்டபடியே செய்து மேற்கண்டபடியே உபயோகிக்க மேற்கண்டபல னுண்டாகும்.

வேறு.

செஞ்சந்தனம் விராகனெடை-கஉ, நெல்லிமுள்ளி, கொத்துமல்லி விதை, இவ்விரண்டும் வகை-க-க்கு விராகனெடை-கவ, (இவைகளைச் சிதைத்து பத்து பலம் ஜலத்தில் ஓரிரவு ஊறவைத்து மறுநாள் காலையில் நன்றாகப் பிசைந்து வடிகட்டித் திப்பிநீக்கின ஊறற் கஷாயத்தில் மூன்று விராகனெடை சீனிசர்க்கரையைக் கரைத்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் பிரதி காலையிலும் பானஞ் செய்துவர உஷ்ண சம்பந்தத்தினு லுண்டான மார்பு துடித்தல் ரோகம் நீங்கும்.

வேறு

காவுஜபான் விராகனெடை-உ, இலவங்கம் குன்றிமணி யெடை-ச, இவ்விரண்டையும் முக்கால் ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்தில் கொஞ்சம் சர்க்கரை சேர்த்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையும் பானஞ் செய்துவர, குளிர்ச்சி சம்பந்தத்தினலான மார்பு துடித்தல் ரோகம் தீரும்.

(இன்னும் வரும்)

---

சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் 51)

| | |
|---|---|
| நவச்சார உப்பு விராகனெடை | ௨ |
| இஞ்சிச்சாறு விராகனெடை | ச |
| சூட ஜலம் பலம் | ௫ |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்து வேளை ஒன்றுக்கு அரைப்பலம் வீதம் இரண்டுமணிக் கொருதடவை உபயோகித்து வந்தால், சுரரோகத்தா லுண்டான சோர்வு, தளர்ச்சி ஆகியவைகள் தீரும்.

வேறு.

| | |
|---|---|
| நவச்சார உப்பு விராகனெடை | ௨ |
| சோடா உப்பு விராகனெடை | க |
| ஜலம் பலம் | ௫ |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்து ஆறிலொரு பாகத்தை தினம் இரண்டு தடவை பானம்செய்துவர, வயிற்றில் ஆகாரம் ஜீரண மாகாமல் புளிப்பு தட்டி யிருப்பதும், அதனாலுண்டாகும் மார்பெரிச்சல், புளியேப்பம் ஆகியவைகள் தீரும்.

வேறு.

| | |
|---|---|
| நவச்சாரஉப்பு விராகனெடை | உ |
| வாதுமைப்பிசின் சூரணம்குன்றிமணியெடை | ௧௦ |
| திநீர் அல்லது சுத்தஜலம் பலம் | ௫ |

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்து அரைப்பல வீதம் ஒருமணிக் கொருதடவை யுபயோகித்து வந்தால் மந்தத்தினு லுண்டாகும் வாந்தி குணப்படும். இதனை வாந்தி நிற்கிறவரையிலுபயோகித்துக் கொண்டுவர வேண்டியது.

(இன்னும் வரும்.)

---

சுகாதார போதினி.

ரு - ம் பிரிவு.

ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-52.)

சதகுப்பை, கருஞ்சீரகம், மரமஞ்சள் இவற்றைத் தனித்தனி யிடித்த சூரணம்வகை-க-க்குப் பலம்-க, புட்டிவெல்லம் பலம்-ரு, இவைகளை ஒன்றாகச் சேர்த்தரைத்து லேகியம்போல் வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்,—விராகனெடை-உ, க.

உபயோகம்:—வீட்டுத்தூரம் நின்று சுத்த ஸ்நானம் செய்தநாள் முதற்கொண்டு காலை மாலை யிரண்டு வேளையும் சாப்பிட்டுவர உதிரச்சிக்கல், சூதகவாயு,

முதலியவைகள் தீர்ந்து கருப்பந்தரிக்க ஹேதுவாகும்.

குறிப்பு.

இந்த லேகியத்தை யுட்கொண்டு அதன்மீது இரண்டு பலம் சோம்பு திராவகத்தைப் பானஞ் செய்ய வேண்டும். சோம்பு திராவகம் இல்லாத சமயங்களில் காற்பலம் சோம்பை யிடித்து முக்கால் ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்ட வைத்திறக்கி வடிகட்டிப் பானஞ் செய்ய வேண்டும்.

மேற்கண்ட முறையில் இப்படிச் சொல்லியிருப்பினும் சூதகங்காண சுமார் மூன்று தினத்திற்கு முன்னும், சூதகங்கண்ட பின்மூன்று தினமும் உபயோகிக்க வேண்டும். இவ்விதம் மூன்று சூதகத்திற்கு உபயோகித்தால் போதுமானது. இவ்விதமே அநுபவத்தால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது,

வேறு

பருத்தி யிளம்பிஞ்சு, பருத்திக் கொழுந்து, இவைகளைத் தனித்தனி யிடித்தசாறு வகை-க - க்கு ஆழாக்கு-க. சர்க்கரை பலம் - உ௰, இவை யெல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து பாகுபதமாகக் காய்ச்சி இறக்கி சீஷாவில் வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—பலம்-க௰. உ.

உபயோகம்:—இதனைக் காலைமாலை யிரண்டு வேளையும் உபயோகித்துவர உஷ்ண சம்பந்தத்தினால் கருப்பையினுண்டாகி யிருக்கின்ற ரோகம் தீர்ந்து கருப்பந்தரிக்கும். பித்தம், அது சம்பந்தமான வியாதிகள் முதலியன தீரும். உஷ்ணத்தினால் இளைத்துப்போன தேகம் பருத்து புஷ்டி யடையும்.

வேறு

சீமை வெள்ளைச் சாமந்திப்பூ விராகனெடை-௩, இதனை ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டிக் கொஞ்சம் சர்க்கரையைச் சேர்த்துப் பானஞ் செய்யவும். இவ்விதம் செய்து வருவதால் கருப்பையின் வலிகள், நீரடைப்பு, கல்லடைப்பு, குன்மம், காமாலை ஆகியவைகள் நீங்கும். சுரமிருக்கும்போது பானஞ் செய்தால் வியர்வை யுண்டாகி சுரவேகந் தணியும்.

குறிப்பு.

இதனை அடிக்கடி கஷாயம் செய்வதைப் பார்க்கினும் பின்காணும் விதம் ஷர்பத்தாகச்செய்து உபயோகிப்பது உத்தமமாக விருக்கும். அது இது.

வெண்ணிறமான வெள்ளைச் சாமந்திப்பூ பலம்-உ0, இதிலுள்ள காம்பு முதலியவைகளை யெல்லாம் ஆய்ந்து நீக்கி வெறும் இதழ்களாக எடுத்துக்கொள்ள வேண்டும். நன்றாகக் கொதிக்கிற ஒருபடி வெந்நீரில் இதனைப்போட்டு ஐந்து நிமிஷநேரம் அடுப்பில் வைத்திருந்து உடனே யிறக்கி மூடிவைத்து நன்றாகக் குளிர ஆறினபின்பு கையால் செம்மையாகப் பிசைந்து வடிகட்டி திப்பிநீக்கின கஷாயத்தில் இருபத்தைந்து பலம் சீனிசர்க்கரையைக் கரைத்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துப் பாகுபதத்தி லிறக்கி ஆறினபின்பு சீஷாவிற் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—பலம்-௰. க,

உபயோகம்:——மேற்கண்ட குணங்களுண்டாகும்.

வேறு

விலாங்குமீன் தோலைப் பச்சையாகவாவது, அல்லது, உலர்த்தியாவது நெருப்பிற் போட்டுப் புகைபிடிக்கக் கருப்பைக் குகைவெளிப்பட்டிருத்தல், ஆசனம் வெளிப்பட்டிருத்தல் ஆகியவைகள் சுருக்கப்பட்டு உள்ளடங்கிப் போம்.

(இன்னும் வரும்)

---

சுகாதார போதினி.

ச - ம் பிரிவு.

பால வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Voll-II. பக்கம். 53.)

அக்கர சஞ்சீவி மாத்திரை.

மேற்றோல் சீவின அதிமதுரம், மேற்றோல் சீவின சுக்கு, கோஷ்டம்; ஜாதிக்காய், நற்சீரகம், இலவங்கப்பட்டை, கண்டத்திப்பிலி, மஞ்சட் கடுக்காய்த்தோல், ஜாதிக்காய், ஓமம், கொத்துமல்லி விதை, கஸ்தூரி மஞ்சள், சன்னராஷ்டம், தும்பராஷ்டம், இந்துப்பு, கருஞ்சீரகம், இவறறைத் தனித்தனி யிடித்த சூரணம் வகை-க-க்கு விராகனெடை-உ, கொடிக்

காய்ப்புளி, பழம்புளி, சீனிசர்க்கரை இவை வகை-க-க்கு விராகனெடை-உ. முலைப்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றுகக் கலந்து கல்வத்திலிட்டு மேற்படி முலைப்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து ஒரு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்,—குழந்தைகளுக்கு மாத்திரை - க, பெரியவர்களுக்கு மாத்திரை-உ. ௩.

அனுபானம்:—குழந்தைகளுக்கு வெற்றிலைச்சாறு தேன், முலைப்பால், ஆகியவைகளாம். பெரியவர்களுக்கு முலைப்பால், இஞ்சிச்சாறு, இன்னும் வியாதிகளுக்குத் தகுந்த கஷாயவகைகள் ஆகியவைகளாம்.

உபயோகம்:—குழந்தைகளுக் குண்டாம் மாந்தம், தோஷம், சுரம், சன்னி, முதலிய அநேக ரோகங்கள் தீரும். பெரியவர்களுக்குண்டாகும் சுரம், ஜன்னி, நாவறட்சி, தாகம், முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—ஏழுநாள் இச்சாபத்தியமாக இருந்து எட்டாநாள் ஸ்நானஞ் செய்யவேண்டும். இன்னும் வியாதிபலம், தேகபலம் முதலியவைகளுக்குத் தகுந்தபடியும் சமயோசிதம் போலவும் பத்தியம் வைக்க வேண்டியது. இங்கு ஏழுநாள் பத்தியமெனச் சொல்லி யிருப்பினும் வியாதிபலத்திற்குத் தகுந்தபடி அதிகநாள் உபயோகிக்க வேண்டிய திருந்தால் அத்தனை நாளுபயோகித்து உபயோகிக்கும் காலங்களிற் பத்தியமா யிருக்கவேண்டியது.

அமுதசஞ்சீவிமாத்திரை.

சாஸ்திரபேதி, ஏலரிசி, கோஷ்டம், இலவங்கம், ஜாதிபத்திரி, வெண்சந்தணம், கடுகுரோகணி, உலர்ந்த இலுப்பைப்பூ, நன்னாரிவேர், இலாமிச்சம்வேர், வெட்டிவேர். மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல், அரிசித்திப்பிலி, மேற்றோல்சீவின அதிமதுரம், விதைநீக்கின திராக்ஷப்பழம், கோரைக்கிழங்கு, உலர்த்தின பேரீச்சங்காய், இவற்றுள் திராக்ஷப்பழம்தவிர மற்றசரக்குகளைத் தனித்தனியிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் வகை-க-க்கு விராகனெடை-க, கோரோசனை விராகனெடை-க. எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளையெல்லாம் ஒன்றுகச்சேர்த்துக் கல்வத்திலிட்டு அரைமணிநேரமரைத்து மிஸ்ரமித்துப் பிறகு எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து நான்குசாமமரைத்து ஒரு குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—குழந்தைகளுக்கு மாத்திரை - க, பெரியவர்களுக்கு மாத்திரை - உ, ௩.

அனுபானம்:—குழந்தைகளுக்கு முலைப்பால், தேன் முதலியவைகளாம். பெரியவர்களுக்கு முலைப்பால், வெந்நீர், சந்தனக்கஷாயம், பன்னீர், இன்னும் வியாதிகளுக்குத் தகுந்த கஷாயங்கள் ஆகியவைகளாம்.

உபயோகம்:—குழந்தைகளுக்குண்டாகும் மாந்தரோகங்கள், கணரோகங்கள், சுரரோகங்கள், சன்னிரோகங்கள் முதலிய குழந்தைகள் ரோகமெல்லாம் தீரும். பெரியவர்களுக்குண்டாகும் உஷ்ண சம்பந்தமான ரோகங்கள், உஷ்ணசம்பந்தபேதி, தாபசுரங்கள், சன்னிகள், அழலைகள், கைகாலெரிவு முதலிய அநேக ரோகங்கள்தீரும். சுரத்தின்மீது தாகங் கண்டவர்களுக்கு முலைப்பாலில் அல்லது வெந்நீரில் இரண்டு மூன்று மாத்திரைகளை யிழைத்துவைத்துக்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக நாவில் தடவிவர நாவரட்சி, தாகம் ஆகியவைகள் தீரும். இந்த மாத்திரையை எல்லா வியாதிகளிலும் உபயோகிக்கலாம். அநேகருக்கு உபயோகித்துப் பலதடவைகளிலும் குணங் காணப்பட்டிருக்கின்றது. எந்த வியாதியின் ஆரம்பத்திலும் விகற்பமின்றி இதனை யுபயோகிக்கலாம்.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

ரு - ம் பிரிவு.

மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 46)

துத்தியிலை சுமார் ஒருபிடி. (இதனை ஒரு ஆழாக்கு ஜலத்தில் ஓரிரவு ஊறவைத்துக் காலையிற்பிசைந்து வடிகட்டி. வடிகட்டின ஊறற்கஷாயம் அரை ஆழாக்கு, இவ்விரண்டையுங்கலந்து பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் ஒவ்வொருவேளை காலையில்மாத்தி

ரம் பானஞ்செய்துவர இரத்த மூலரோகம் தீரும், மூல இரத்தப்போக்கு நிற்கும்.

பத்தியம்:—கருவாடு முதலிய உஷ்ண வஸ்துக்களை நீக்கிக் குளிர்ச்சியான வஸ்துக்களைச் சேர்த்துவர வேண்டும்.

வேறு.

இளநீர்ப்பூ வழுக்கை சுமார் பலம்-க, கற்கண்டுத்தூள் பலம்-உ. இவ்விரண்டையுஞ் சேர்த்துச் சாப்பிடவேண்டும். இவ்விதம் காலையில் ஒருவேளை தொடர்ச்சியாகச் சாப்பிட்டுவர, மூலச்சூடுதணிந்து இந்திரிய விளைவுண்டாகும்.

வேறு.

இரத்தச்சூரி சமூலச்சாறு ஆழாக்கு-க, பச்சரிசிநொய் ஆழாக்கு-ஹ, வெந்தயம் பலம்-ஹ, (இதனை வறுத்துக்கொள்ள வேண்டும்) தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ் பலம்-உ. தோலுரித்த வெங்காயம் பலம் - ச, (இதனைச் சன்னமாக அரிந்துகொள்ளவேண்டும்) தேங்காய்ப்பால் ஆழாக்கு-ஹ. நெய்பலம் - ஹ.

இவை யெல்லாவற்றையும் ஒன்றாகக்கலந்து பாகப்படி கஞ்சியாகச்செய்து வைத்துக்கொள்ளவும், ஒரு கோழிமுட்டையின் வெண்கரு, மஞ்சட்கரு ஆகியவிரண்டையுஞ்சேர்த்து நுரைகிளம்ப அடித்து முன் கஞ்சியிற் சூட்டுடன்கலந்து பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் பிரதி'தினம் காலையிலும் ஒவ்வொருவேளை செய்யவும். ஆட்டீரலின் துண்டை ஆசனத்தில் வைத்துக் கட்டவேண்டும். இவ்விதம் ஏழுநாள் முன்கஞ்சியை உள்ளுக்குச்சாப்பிட்டும் ஈரலின் துண்டை ஆசனவாயில்வைத்துக் கட்டியும் வந்தால் இரத்தமூலம் தீரும், மூலமுளை அற்று வீழ்ந்துபோகும்.

குறிப்பு.

மேற்கண்டபடி ஏழுநாட் சென்றபின்பு மறு மூன்றுநாள் பழம்பாசி யிலையையரைத்து மூன்றுகட்டு கட்டவேண்டும்.

வேறு

ஊமத்தம் விதையைச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து பசுவினெய்யிற் குழைத்து மூலமுளையின் அடிப்பாகத்திற் பூசிவர மூலமுளை அற்றுவீழும், ஆசனவலி நீங்கும்.

வேறு.

எருக்கம்பாலைப் பஞ்சில் துவட்டி மூலமுளைமேற்போட்டுவர, மூலமுளை அற்றுவிழும்.

குறிப்பு.

இது இரணமாகுஞ் சபாவமுடைய தாகையால் எல்லாத் தேகிகளுக்கும் பொருந்தாது. ஆகையால் முரட்டுச் சுபாவமுடையவர்களுக்கு உபயோகிக்க வேண்டுமேதவிர சுகுமாரதேகிகளுக்கு உபயோகிக்கலாகாது.

வேறு.

கண்டங் கத்திரிப்பூச் சாறு ஆழாக்கு-ஹ, வாதுமையெண்ணெய், அல்லது, சிற்றாமணக் கெண்ணெய் ஆழாக்கு-ஹ, இவ்விரண்டையு மிஸ்ரமித்து அடுப்பின்மீதுவைத்துச் சிறுதீயாக எரித்து நீர் வற்றினபின்பு சீஷாவில் வைத்துக்கொள்ளவும். இதனைமூலமுளைகளின்மீது மேற்பூச்சாகப் பூசிவர மூலமுளைகள் கரைந்து மூலரோகங் குணப்படும்.

வேறு.

தாளிசப் பத்திரியை யிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் பலம்-உ, இதில் தேகசுபாவத்திற்குத் தகுந்தபடி அரை முதல் ஒரு விராகனெடை நிறுத்தெடுத்து சுமார்-உ-முதல்-ரு-பலம் கட்டித் தயிரில் குழைத்துச் சாப்பிடவேண்டும். இவ்விதஞ் செய்துவந்தால் இரத்தமூலம், பேதி ஆகியவைகள் தீரும்.

மேற்படி சூரணத்தை மேற்கண்ட பிரமாணம் - ஹ, அல்லது ஒருபலம் பசுவினெய்யிற் குழைத்துச் சாப்பிட, சுவாச காசரோகம் தீரும்.

வேறு.

ஆற்று நண்டு, அல்லது, வயல் நண்டு (இதன்கால்களைப்போக்கி வயிற்றைப்பிளந்து சுத்தப்படுத்தி சுமார் பத்துப்பலமெடுத்துக் கொள்ளவேண்டும்.) இதில் மூன்றுஆழாக்கு ஜலத்தைவிட்டு ஒரு ஆழாக்கு ஜலமாகச் சுண்டவைத்து வடிகட்டின ஜலத்தில் ஒரு பலம் ஜவ்வென்னும் வாற்கோதுமை நொய்யைப்போட்டு கஞ்சிகாய்ச்சிப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் ஒவ்வொருவேளை காலையில் மாத்திரம் பானஞ் செய்துவர, மூலரோகம், க்ஷயரோகம், அஸ்திசுர முதலியவைகள் தீரும், உலர்ந்துபோன தேகம் செழித்து புஷ்டியுண்டாகும்.

வேறு.

விளாம்பிசின், கருவேலம்பிசின், புரசம்பிசின், ஆவாரம்பிசின் ஆகிய எல்லா வகைகளையும், அல்லது

கிடைத்த இரண்டு மூன்று வகைகளையும், அல்லது, ஒரு வகையை நெய்யிற் பொரித்த சூரணம் சுமார் விராகனெடை-௧௫, ௨. இதனைக் கொஞ்சம் ஜலத்துடன் உட்கொள்ள வேண்டும். இவ்விதம் செய்துவர, மூல இரத்தம், பெரும்பாடு முதலிய உதிரப்போக்கு வியாதிகள் தீரும்.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி.

௬-ம் பிரிவு

முன்தொடர்ச்சி (vol- III பக்கம். 55)

### இரசவாதம்.

இந்த வேலைக்காக தாம்பிரத்தை யுருக்கி அதில் சில சரக்குகளைக் கிராசஞ்செய்து சிவப்பு வருணமுள்ளதாக்கிக் கொள்ளவேண்டும். இம்முறைகள் நமது இரசவாத சிந்தாமணியில் அநேகம் சொல்லப்பட்டிருக்கின்றன. சமயம் வாய்க்கும்போது இங்கும் பலமுறைகள் எழுதப்படும். தாம்பிரத்தைச் சிவப்பு வருணமுள்ளதாக்கி அதனை வெள்ளியோடு சேர்த்துருக்கித் தகடடித்து கெந்தகம் மனோசிலை முதலிய சரக்குகளினால் அதனை மடித்துத் தூளாக்கி ஜீவபாணிதத்தால் உயிர்ப்பிக்கவேண்டும். அதாவது ஜீவபாணிதத்தைச் சேர்த்து உருக்கியெடுத்துக் கொள்வதேயாம். தாம்பிரத்தின் தோஷத்தைநீக்குவதற்கு உயர்ந்த காடியானது மிகவு முபயோகமானது. தாம்பிரத்தின்கடினத்தை நீக்கி நைப்பாகச் செய்வதற்கு ஆமணக்குமுத்து மிகவுமேற்றது. வெள்ளியோடு சுத்தித் தாம்பிரத்தைச் சேர்த்து மேற்கண்டபடி மடித்துப் பிறகு உயிருண்டாக்குவதினால் தாம்பிரத்தின் வருணமானது வெள்ளிக்கேறி பொன் வருணத்தைப் பெற்றுக் கொள்ளுகிறது. இவ்விதம் நாம் பலதடவை மடித்து மடித்து உயிர்ப்பிக்காத வரையில் வெள்ளிக்குமேற்படி குணமுண்டாகாது. ஆகையால் இந்தக் குணமுண்டாகிற வரையில் தாம்பிரமும் வெள்ளியும் சேர்ந்த மட்டத்தை நான்கைந்து தடவைகள் மடித்து மடித்து உயிருண்டாக்க வேண்டும். இவ்விதம் நான்கைந்து தடவை செய்தால் தாயைச் சேர்ப்பதற்கு தகுந்ததாகி விடும், அப்படி யாகாமல் இன்னுங் கறுப்பு வருண மிருந்தாலும் நீலப்புகை யெழும்பினாலும், நைப்பாயில்லாமற் கடினமாயிருந்தாலும் முன்கண்டபடி கொன்று கொன்று உயிர்ப்பிக்கிற வேலையைத் தொடர்ச்சியாகச்செய்து கொண்டிருக்க வேண்டும்.

தாம்பிரத்தையும் வெள்ளியையும் சேர்த்து நான்கு, அல்லது, ஐந்துதடவை மடித்து உயிர்ப்பித்த பின்பும் ஏதேனும் கறுப்பு முதலிய துர்க்குணங்களிருந்தால் காடித் திராவகத்தில் மேற்படி தகட்டைப் போட்டுக் காய்ச்சி அது கறுப்பானவுடன் அதை யிறுத்து நீக்கிவிட்டு மறுபடியும் அதில் முன் திராவகத்தை விட்டுக் காய்ச்சவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிச் செய்துகொண்டு வந்தால் அத்தக்கட்டிலுள்ள துர்க்குணங்க ளெல்லாம் நீங்கி வேலைக்குத் தகுந்ததாகிவிடும். மேற்படி திராவகத்தில் தகட்டைப் போட்டுக் காய்ச்சினால் திராவகத்தி லெவ்வித விகற்ப வருணமுமின்றி விட்ட திராவகம்போ லிருந்தால் அதுவே பக்குவமென நிதானித்து எடுத்துக்கொள்ள வேண்டியது. இந்த விஷயத்தைப்பற்றின விபரங்களெல்லாம் அவ்னுஸ்ஸின்அத் என்னுங் கிரந்தத்தில் வெகு விரிவாகவும், மிகவுந் தெளிவாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் அவை யெல்லாம் இத்தொழிலில் அதிகப் பிரியமுள்ளவர்க்கு அவசியமான தாகையாலும், அதனை விரிவாயெழுத இப்போதினி இடந்தரா தாகையாலும் அதிலுள்ள விஷயங்களை மிகவுஞ் சுருக்கமாக நமது போதினியின் அபிமானிகளுக்கு உபயோகப்படும் படியாக இங்கு எழுதி வருவோம்.

இன்னும் வரும்.

---

## சுகாதாரபோதினி

௭-ம், பிரிவு,

### பற்ப முறைகள்.

முன்தொடர்ச்சி (Vo-3-பக்கம்-47.)

### தாம்பிர பற்பம்.

சுத்திசெய்த தாம்பிரம் துலா-௧, (இதனைப் புளியிலைக் கனமுள்ள தகடாக அடித்துக் கொள்ளவேண்டும்.) சுத்திசெய்த இரசம் விராகனெடை-௫. சுத்திசெய்த கெந்தகம் விராகனெடை-௰, இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாம நேரமரைத்து மேற்படி தகட்டிற்குக் கவசஞ்செய்து வெயிலில் உலர்த்திக் கொள்ள வேண்டும். பிறகு சுத்திசெய்த கெந்தகம் துலா-௨, (இதனைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமநேர

மரைத்து மேற்படி தகட்டிற்குக் கவஞ்செய்து நிழலிலுலர்த்தி பத்துப்பலம் மணித்தக்காளி யிலையை யரைத்து அந்தத் தகட்டின்மீது கவசஞ்செய்து அதன்மீது ஏழுசீலைமண் செய்து உலர்த்தி இரண்டுபடி கொள்ளும்படியான ஒரு மண்பானையில் ஒருபடி மணலைக் கொட்டி அதன்மேல் சாம்பலைப் பரப்பி உப்பைக் கரைத்த ஜலத்தைத் தெளித்து அதன்மீது முன் சித்தப்படுத்தின கவசத்தை வைத்துப் பானையின் வாய்வரையில் மணலைக்கொட்டி நிறைத்து பானையின் வாயை மண்தாலத்தால் மூடி நான்கைந்து சீலைமண் செய்துலர்த்தி அடுப்பின் மீதேற்றித் தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி யென்னு முத்தீயும் முறையே யெரிக்க வேண்டியது. அதாவது:—ஆரம்பத்தில் ஒருசாமம் தீபாக்கினியாக எரிக்கவேண்டும். பிறகு கமலாக்கினியாக ஒருசாமம் எரிக்கவேண்டும், பிறகு இரண்டு சாமம் காடாக்கினியாக எரிக்கவேண்டும். இவ்விதம் முறையேயெரித்து ஒருநாள் ஆறவிட்டுமறுநாள் எடுத்தால் கடவுளினது கிருபையால் திவ்யமான பற்பமாயிருக்கும்.

குறிப்பு.

மகா கஷ்ட ரோகங்களாகிய குன்மம், க்ஷயம், குஷ்டம், முதலிய பலவகை ரோகங்களுக்கு ஆங்கிலம், யூநாநி, முதலிய வைத்தியங்களில் அறத்தீர்க்கும்படியான அவுடதங்கள் இல்லையாயினும் நமது ஆயுர்வேதத்திலோ அவ்வகை யெண்ணிறந்த பாகங்கள் சொல்லப்பட் டிருக்கின்றன. இந்த விஷயம் உண்மையும், மிகவும் நிச்சயமுமானதென இந்தசாஸ்திரப் பயிற்சியுள்ள அநேக ஐரோப்பிய, அமெரிக்க, இங்கிலீஷ் வைத்திய பண்டிதர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றது. நம்மவர்களுக்கு நம்முன்னோர்களால் ஏற்படுத்தப்பட்ட சாஸ்திரங்களில் உள்ள மகா அருமையான முறைகளெல்லாம் (கொல்லைப் பச்சிலை) யென்பதுபோல இலக்ஷியமே யில்லையாயினும் மேற்கண்ட ஐரோப்பிய, அமெரிக்க பண்டிதர்கள் மூலமாக நம்மவர்களுக்கு நம்முடைய அவுடதங்களில் இப்போது நம்பிக்கையுண்டாகி வருகின்றது. இவர்கள் விஷயந்தானிப்படி யென்றால் தான்றோன்றித் தம்பிரான்களாகிய அநேக வைத்தியர்களும் தலையெடுத்து சாஸ்திரவழி யின்னதெனத் தெரியாது தாங்கள் சென்றதே மார்க்கமென வெண்ணி வகை தொகையின்றி நமது சாஸ்திரங்களின் மகிமையைக் கெடுக்க ஏதுவா யிருக்கின்றார்கள்.

இன்னும் வரும்.



இதனைத் தயவுடன் முழுதும் வாசித்துத்
தங்கள் நண்பர்களுக்கும் வாசிக்கக் கொடுக்கவும்.

---

## மகா ஆனந்த புருஷகெம்பீர ஹல்வாவும், திலாவேன்னும் மேற்பூச்சும்.



தளர்ந்த நரம்புகளை உற்சாகப் படுத்தவும், சோர்ந்த பேசிநரம்புகளைப் பலப்படுத்தவும், மேற்பூச்சு மாத்திரம் அதிகமாக உபயோகப்படாது. ஆகையால் மேற் பிரயோகத்துடன் உட்பிரயோகமும் ஆவசியகம். பாலியச் சேஷ்டையினாலும், அறியாமையினாலும் உண்டான தாதுநஷ்டம் முதலிய வியாதிகளுக்கென பலவித விசித்திர நாமங்களோடு, வெளிப்பட்டுலாவும்போலி விளம்பரங்களை நம்பி ஏமாந்துபோகிறவர்கள் அநேகம். மேற்கண்ட ஔஷதங்கள் அவ்விதமானவைகள் அல்லன. இவை பரம்பரையாகவும், நெடுநாள் அநுபவ சித்தமாகவும், கைவல்லியமான முறைகள். ஒருவரிருவரல்ல. நூற்றுக்கணக்கான அநேகராக உபயோகப் படுத்தப்பட்டுக் குணங்காணப் பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

பாலிய சேஷ்டையினாலும், அறியாமையினாலும் முற்றும் போக நிர்வாக சக்தியற்று, தாது நஷ்டமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினாலும் தீராமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினால் கடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானால் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள்

தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஔஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனோற்பலம், தைரியம், வீரியம் முதலியவைகளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன் விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதாரரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

## அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையி லச்சாகி வெளிவரவில்லையென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட ரோகங்களுக்கு நானுவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட்டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆதியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, லிங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யக்கூடியவைகள். இவை யத்தி புத்தி அனுபவம் முதலியவைகளுக் கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னுயுளையும் பொருளையும் அவமே யழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றைகவைக ளல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அனுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லா வகையாலும் லாபத்திற்கே பேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதி நூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட்டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கவசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட தக்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-2-0 வி - பி 1 - 4 - 0.

## தன்வந்திரி சூக்ஷுமவைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளியாகாத நூதன சிறிய கிரந்தம். இதில் பற்பல வகை மாத்திரைகள், எண்ணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நாந தைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷுமமானவைகளும் பல தடவை அநுபவப்பட்டவைகளுமாம். இதனைப் பார்த்த தக்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்குய் விளங்கும். தம்முடையவும் தம் மினஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி -1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-0.

## ஞாய அஷ்டாங்க தீபம்.

இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகைதாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞான நூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்ப்போரும் ஆனந்தப் படும்படியாக வெண்பா, துறை, ஆனந்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட்டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி 0-6-0

இராஜ அவுடத சாலை. 12 - வது நெ. அப்புமேஸ்திரி தெருவு, மாபுஸ்கான்தேவடி. மத்ராஸ்.

புத்தகம் - ரு. 1907ஹு ஜூலைமீ 1௳ இலக்கம் - கக.

## சுகாதார போதினி.

க ௰ம் பிரிவு.

### வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol III. பக்கம் 74.)

### மார்பு துடித்தல் ரோகச் சிகிச்சை.

காவுஜபான் விராகனெடை-உ. பன்னீர் வார்த்திழைத்துலர்த்தின சந்தனம் விராகனெடை-உ, ரோஜாப்பூ விதழ் விராகனெடை—உ, ராமதுளசி, காவு ஜபான்பூ, நெல்லிமுள்ளி, மஞ்சட்கடுக்காய்த்தோல் இவை வகை-க க்கு விராகனெடை-கவ, விதைநீக்கின திராக்ஷப்பழம் விராகனெடை-க௨, குல்கந்து விராகனெடை-க௨: சீனிசர்க்கரை விராகனெடை-உரு.

செய்முறை:-சீனிசர்க்கரையையும்,குல்கந்தையும் தவிர மற்றவைகளை யெல்லாம் மூன்று ஆழாக்கு ஜலத்திற்போட்டு ஒரு ஆழாக்கு ஜலமாகச் சுண்டினபின்பு நன்றாகப் பிசைந்து வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்தில் குல்கந்தைக் கரைத்து மறுபடியும் வடிகட்டித் திப்பிநீக்கி அதிற் சர்க்கரையைச் சேர்த்துச் சிறுதீயா யெரித்துப் பாகுபதத்தில் இறக்கிச் சீஷாவில் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்,—விராகனெடை-உ௨. ரு.

உபயோகம்:—இருதயத் துடிப்பு, விண்கவலை, இருதய துர்ப்பலம் ஆகியவைகள் தீரும்.

வேறு.

புதிய சம்பங்கிப்பூ விராகனெடை-க, தேன், விராகனெடை-உ, இவ்விரண்டையு மென்று சாப்பிட வேண்டும்- இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையுஞ் சாப்பிட்டுவர இருதய அதிர்ச்சி, மனக்கவலை ஆகியவை தீரும்.

வேறு.

சிறு துத்தியிலைச்சாறு பலம்-௨, ஜலம் பலம்-க. சீனக்கற்கண்டுத் தூள் பலம்-ஆ, இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையும் சாப்பிட்டுவர, உஷ்ண சம்பந்தமான இருதயத் துடிப்பு,மனக்கவலை முதலியவைகள் தீரும்.

வேறு.

திருநூற்றுப் பச்சைவிதை விராகனெடை - ரு, இதனை அரை ஆழாக்கு ஜலத்தில்போட்டு காற்றுள்ள விடத்தில் வைத்துக் காலையில் சுமார் இரண்டு மூன்று விராகனெடை சர்க்கரையைச் சேர்த்துப் பீங்கான் கரண்டியால் கொஞ்சங் கொஞ்சமாகப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் பிரதி காலையிலுஞ் செய்துவர, உஷ்ண சம்பந்தத்தினு லுண்டான இருதய அதிர்ச்சி, திடுக்கம் ஆகியவைகள் தீரும். இந்த விதையானது இந்த வியாதிக்குச் சஞ்சீவிக் கொப்பானது.

வேறு.

இஸ்பகோல் விதை விராகனெடை - ரு, இதனை அரை ஆழாக்கு ஜலத்தில் மூன்றுமணி நேரம் ஊறவைத்து அதனை வடிகட்டி அதன் கோழையை மாத்திர மெடுத்துக்கொள்ள வேண்டும். பிறகு அதில் நான்கு விராகனெடை சீனிசர்க்கரையைச் சேர்த்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் தினம் ஒன்றிற்கு இரண்டு தடவைகள் செய்து வந்தால், உஷ்ண சம்பந்தமான மார்பதிர்ச்சி ரோகம் தீரும்.

வேறு.

நடுத்தரமான புளி (அதாவது அதிகம் புதிதல்லாதது அல்லது அதிகம் பழமை யல்லாதது) பலம்-௨, இதனை அரை ஆழாக்கு ஜலத்திற் கரைத்து ஓரிரவு வைத்துக் காலையில் அதின் தெளிவை மாத்திரம் இறுத்துக்கொள்ள வேண்டும். பிறகு அதில் அரைப்பலம் சீனிசர்க்கரையைச் சேர்த்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் பிரதி காலையிலும் பானஞ்செய்துவர, மலபந்தந் தீர்ந்து இருதய அதிர்ச்சி, மனக்கவலை ஆகியவைகள் தீரும்.

வேறு.

பிரதி காலையிலும் இரண்டு வெற்றிலைகளை மென்று தின்றுவர, குளிர்ச்சி சம்பந்தத்தினு லுண்டான இருதய அதிர்ச்சி, இருதயத் துடிப்பு, மனக்கவலை, ஆகியவைகள் தீரும்.

வேறு.

அரைக் குன்றிமணி யெடை அபினை ஆகாரத்திற்குப் பின் சாப்பிட்டுவர, உஷ்ண சம்பந்தமான இருதய அதிர்ச்சி தீரும்.

குறிப்பு.

இது ஆரம்பத்திற் குறைந்த அளவாக விருந்த போதிலும் நாளடைவில் இதனை விருத்திசெய்து நா

ளவில் லாகிரிப் பழக்கத்திற் கேதுவாகிவிடும். அப்பின் சாப்பிடப் பழக்கமாகி விட்டால், பிறகு அதனை விடுவது இலேசான காரியமல்ல. ஆகையால் இவ்வித மான அவுடதங்களைக் கூடிய வரையில் அதிக ஜாக்கிரதையுடன் உபயோகிக்க வேண்டியது.

வேறு.

துருஞ்சி நாரத்தம்பழச்சாறு பலம்-௧௦, சீனிசர்க்கரை பலம்-௧௦, இவ்விரண்டையுஞ் சேர்த்து ஷர்பத்தாகச் செய்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-௩, ௪.

உபயோகம்:—பித்த சம்பந்தத்தினு லுண்டான இருதய அதிர்ச்சி, இரைப்பை வியாதிகள், வாந்தி, அரோசகம், ஆகியவைகள் தீரும்.

வேறு.

சொண்டைக்கடலை விராகனெடை - ௪, இதனை அரை ஆழாக்கு ஜலத்தில் ஓரிரவு ஊறவைத்து மறுநாட் காலையில் நன்றாகப் பிசைந்து ஜலத்தை மாத்திரம் வடிகட்டி அதிற் கொஞ்சம் சர்க்கரையைச் சேர்த்து இனிப்பாக்கிப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் பிரதி காலையிலும் பானஞ் செய்துவர, இருதய அதிர்ச்சி, மனத்திடுக்கம், இருதயச் சோர்வு ஆகியவைகள் நீங்கும். இருதயம் பலப்படும். ஆனல் இதனை உபயோகித்துக் கொண்டு வரும்போது புளிப்பு வஸ்துக்கள், கரப்பான் வஸ்துக்கள், ஆகியவைகளை நீக்கிவைக்க வேண்டியது.

வேறு.

வெட்டிவேர் பலம்-௨௦, இதனைச் சன்னமாகத் துண்டித்து நான்குபடி ஜலத்திற்போட்டு இரண்டுநாளூறவைத்து மூன்றுநாள் வாலையிலிட்டு திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும்,

பிரமாணம்:—பலம் - ௧௨. ௬. பானஞ் செய்யும் போது கொஞ்சம் சர்க்கரை சேர்த்து இனிப்புண்டாக்கிக் கொள்ளலாம்.

உபயோகம்:—உஷ்ண சம்பந்தமான மார்பதிர்ச்சி, மனத்திடுக்கம் ஆகியவைகள் நீங்கும். மலபந்தம் நீங்கி அது கிரமப்படும். உஷ்ண சம்பந்தமான சுரம் ஆகியவைகளும் தீரும்.

வேறு.

மேற்றோல் நீக்கின கொத்துமல்லி விதை, காவுஜாபான், இவை வகை-௧-க்கு விராகனெடை-௬, ஏலக்காய், சம்பங்கிப்பூ, காவுஜாபான்பூ, ரோஜாப்பூ, சந்தனத்தூள், இவை வகை-௧-க்கு விராகனெடை-௧௰, தண்ணீரில் ஆழும்படியான அகர்க்கட்டை விராகனெடை-௩, கஸ்தூரி விராகனெடை-௨, பசுவின் பால் படி-௨௨, ஜலம் படி-௧௨.

செய்முறை:—அகர்க்கட்டை, ஏலக்காய், கொத்துமல்லி ஆகியவைகளை நன்றாகச் சிதைத்து மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து வாலையிலிட்டு திராவகம் இறங்கும் குழாயின் முனையில், கஸ்தூரியை மெல்லிய வஸ்திரத்தில் முடிந்து இறங்குந் திராவகமானது அதன் மூலமாக வரும்படியாய்க் கட்டித் தொங்கவிட வேண்டியது. பிறகு கிரமப்படி திராவகம் இறக்கி சீஷாவிற் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—பலம்-௧. ௩.

உபயோகம்:—இருதயத் துடிப்பு, திடுக்கம், மனக்கவலை, இருதய துர்ப்பலம், ஆகியவைகளை நீக்கும். இருதயத்தைப் பலப்படுத்தி மனக்களிப்பை யுண்டாக்கும்.

வேறு.

சிவப்புச் சந்திரமல்லி பலம்-௨௪, இதனை இரண்டுபடி ஜலத்திற்போட்டு வாலையிலிட்டு ஒருசீஷா திராவகம் முறைப்படி இறக்கிக் கொள்ளவும், இந்த திராவகத்திற்கு சமன், அல்லது, அரைப்பங்கு பன்னீரைச் சேர்த்து மொத்த எடைக்கு அரைப்பங்கெடை சர்க்கரையைச் சேர்த்துப் பாகுபதமாகக் காய்ச்சிக் குளிர ஆறினபின்பு ஜஹர் மொஹரா என்னும் விஷநிவாரணக் கல்லை இழைத்த விழுது விராகனெடை - ௧௨, மூங்கிலுப்புச் சூரணம் விராகனெடை-௧௨, இவ்விரண்டையும் அதிற் கலந்து சீஷாவில் விட்டுப் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௫, ௭௨.

உபயோகம்:—இருதயத் துடிப்பு, இருதய அதிர்ச்சி, மனத்திடுக்கம், மனக்கலக்கம், ஆகியவைகள் தீரும். இருதயச் சோர்வை நீக்கி அதை பலப்படுத்தும். மனதிற்கு ஆனந்தத்தையும் களிப்பையு முண்டாக்கும்.

குறிப்பு.

மேற்கண்ட முறைகளெல்லாம் ஏகச் சரக்காலானவைகள், அல்லது, சுலபமானவைகள் என அலக்ஷியமாக எண்ணலாகாது. இது பார்வைக்குச் சுலபமாகவிருந்தபோதிலும் இதனுலுண்டாகும் பிரயோசனம் அனந்தம்.

(இன்னும் வரும்)

## சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

---

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் 74)

| | |
|---|---|
| நவச்சார உப்பு விராகனெடை | ൨ |
| ரம்சாறுயம் விராகனெடை | ௫ |
| சாதாசர்க்கரை ஷர்பத் விராகனெடை | ௫ |
| சுத்தஜலம் பலம் | உ൦ |

இவை யெல்லாவற்றையும் ஒன்ருக மிஸ்ரமித்து இரண்டு பாகமாக்கி தினம் இரண்டு தடவையாகப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் செய்துவர மஹமேகம் தீரும். பலங்குறைந்தவர்களுக்கு, அல்லது, வயது தளர்ந்தவர்களுக்கு நாட்பட்ட இருமலில் கோழை வெளிப்படாமலிருந்தால் அதாவது அதிக துர்ப்பலத்தினுல் கோழையை வெளிப்படுத்த ஏலாதவர்களா யிருந்தால், அவர்களுக்கு மேற்கண்ட மருந்தைஉபயோகித்துவர, கபமானது தாராளமாக வெளிப்பட்டு இருமல் தணியும். அஜாக்கிரதையினுல் விஷமுண்டவர்களுக்கு இதனைக் கொடுக்க வாந்தியாகி வாந்தியுடன் அந்த விஷம் வெளிப்பட்டுப் போகும்.

வேறு.

| | |
|---|---|
| நவச்சார உப்பு விராகனெடை | உ൦ |
| நன்னரிஷர்பத்து பலம் | சு൦ |

இவ்விரண்டையு மிஸ்ரமித்து தடவை யொன்றுக்கு ஆறு விராகனெடை வீதம் தினமொன்றிற்கு ஒன்று, அல்லது, இரண்டு தடவைகள் உபயோகித்துவந்தால், நாட்பட்ட சரும ரோகங்கள், புண்கள் முதலியவைகள் நீங்கும். இதனை யுபயோகிக்கும்போது கொஞ்சம் பத்தியமாக உபயோகித்துவர வேண்டியது.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

ங - ம் பிரிவு.

---

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-75.)

சீனக்கற்கண்டு பலம்-ச. இலவங்கம் பலம் - க, வேம்பாடம் பட்டை பலம்-க, சுத்திசெய்த இரச கற்ரம் பலம் - க, பின்கண்டபடி சுத்தித்த கோர்வாளம் பலம்-க, ஜாதிக்காய் பலம்-வ, வேகவைத்தூற்றின சிற்றுமணக்கெண்ணெய் படி-൦.

செய்முறை:—இரச கற்பூரத்தைக் கல்வத்திற் பொடித்துக் கொள்ளவேண்டும். இலவங்கம், ஜாதிக்காய், வேம்பாடம்பட்டை, ஆகிய மூன்றையும் ஒன்ருகச் சேர்த்திடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். கற்கண்டை சன்னமாகத் தூள்செய்து கொள்ளவேண்டும், வாளத்தை அம்மியில் வைத்து விளக்கெண்ணெயைச் சிறுகச் சிறுக விட்டு கொஞ்சமுந் திப்பி யில்லாமல் வெண்ணெய்போலாகிறவரையி லரைத்து மற்றச் சரக்குகளையும் ஒன்ருகச் சேர்த்துக் கலந்தரைக்க வேண்டும். எல்லாம் வெண்ணெய்போ லானபின்பு எண்ணெயிற் கலக்கி மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டி நின்ற திப்பியை மறுபடியும் அம்மியில் வைத்தரைத்து எண்ணெயிற் கலக்கி மறுபடியும் மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டி மறுபடியும் நின்ற திப்பியையும் முன்போலரைத்து முன்போல் எண்ணெயிற் கலக்கிவிட வேண்டும். இவ்விதம் மூன்று தடவைகள் மடக்கி மடக்கிச் செய்யின் கொஞ்சமுந் திப்பி யில்லாமல் எல்லாம் அரைபட்டுப்போகும். பிறகு ஒருவாயகன்ற பீங்கான் பாத்திரத்தில் விட்டு வாய்க்கு மெல்லிய வஸ்திரத்தினுல் வேடுகட்டி வெயிலில் வைத்துவர வேண்டும். தொடர்ச்சியாக ஒருவாரம் வைத்தெடுத்துக் கொண்டால் மறுபடி வெயிலில் வைக்கவேண்டிய அவசியமில்லை. ஆயினும் இரண்டொரு வாரத்திற்கொருதடவை அல்லது, இரண்டு தடவை வெயிலில் வைத்துக்கொண்டு வந்தால் விசேஷந்தான். அப்படி வெயிலில்வைத்து வரும்போது தினம் இரண்டு மூன்று தடவைகள் குச்சியால் நன்ருகக் கலக்கியும் வரவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-൦. க. ஆரம்பத்தில் தேக சுபாவத்தை நிதானித்துப் பிறகு கொஞ்சம் அதிகப்படுத்தியுங் கொள்ளலாம். காலையில் மாத்திரம் ஒரு வேளைதான்சாப்பிடவேண்டும். பேதி யிரண்டொரு தடவையானுற் போதுமானது, பேதி அதிகமானுல அளவைக்குறைத்துக் கொள்ள வேண்டியது. பேதி சுத்தமாக ஆகாவிட்டால் அளவைக் கொஞ்சம் அதிகப்படுத்தி க் கொள்ளலாம். தேக சுபாவம் முதலியவைகளுக்குத் தகுந்தபடி அனுபவத்தின் மீது இரண்டொரு தினத்தில் இதனளவை நிச்சயித்துக் கொள்ளலாம்.

அனுபானம்.—இளநீர், சுக்குக்கஷாயம், சோம்பு திராவகம், சோம்புக் கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:—சூதகக்கட்டு, அக்கிரமமான சூதகம், சூதககாலங்களிலுண்டாகும் வயிற்றுநோய் முதலிய எல்லாவகை சூதகசம்பந்த ரோகங்கள், மலட்டுப்பூச்சி, மலட்டுவலி, மலட்டுநோவு முதலிய மலடு சம்பந்தமான வியாதிகள் ஆகியவைகள் நீர்ந்து கருப்பந்தரிக்கும். இன்னும் சூலை, மேகம், செங்கிரந்தி, விரைவாதம், கைகாற்பிடிப்பு, மேகஊறல் முதலிய அநேகரோகங்கள் தீரும்.

பத்தியம்:—வியாதி கடினமாயிருந்தால் உப்பில்லாபத்தியம் வைக்கவும், வியாதி இலகுவாயிருந்தால் இச்சாபத்தியம் வைக்கவும்.

குறிப்பு.

இதனை வியாதியின் பலத்திற்குத் தகுந்தபடி - ௩-நாள். ௭-நாள் உபயோகிக்க வேண்டியது. சூதகசம்பந்தமான வியாதியாயிருந்தால் சூதகங்காண வேண்டிய காலத்திற்கு முன்பு மூன்றுநாள், அல்லது, ஐந்துநாள் உபயோகித்து சூதகங்கண்டு சுத்த ஸ்நானத்திற்குப்பின்பு மூன்றுநாள், அல்லது, ஐந்துநாள் உபயோகிக்க வேண்டும். மலடு சம்பந்தமான ரோகமாயிருந்தால், சூதகங்கண்டு சுத்தஸ்நானத்திற்குப்பின்மூன்றுநாள் சாப்பிட்டு மூன்றுநாள் மறுபத்தியமிருந்து ஸ்நானஞ்செய்ய வேண்டும். இதனை உபயோகிக்கும் விதம் ஒவ்வொருவரின் தேகசுபாவம், வியாதிசுபாவம் ஆகியவைகளுக்குத் தகுந்தவிதமாக ஏற்படுத்தவேண்டியது. இதெல்லாம் அனுபவத்தில் இலகுவாகத் தெரிந்துகொள்வார்கள். இந்தஎண்ணெயினால் அநேகவித சுகிர்தங்களுண்டு. அவரவர்கள் அனுபவத்தினால் நிச்சயித்தறிந்து கொள்ளவேண்டும்.

எச்சரிக்கை.

நேர்வாளச்சுத்தி, இரசகற்பூர சுத்தி ஆகியவைகள் அநேகவகைகளுண்டு. ஒவ்வொருவருக்கு ஒவ்வொருவகை அநுபவப்பட்டேயிருக்கும். ஆயினும். இந்த முறையிற் சேர்ப்பதற்காகச்செய்யப்பட்டமுறைகளை நமது அபிமானிகளின் உபயோகத்திற்காக இங்கும் எழுதுவோம். அநேகருக்கு அம்முறைகளும்தெரிந்திருக்கலாம். அநேகருக்குத்தெரியாமலுமிருக்கலாம். எந்த வகை சுத்திசெய்ய வேண்டுமென அநேகர் சந்தேகப்படலாம். ஆகையால் -இதிற் சேரும் அனுபவமான முறையை யிங்கெழுதுவாம்.

நேர்வாளச் சுத்தி.

நேர்வாளக் கொட்டையை உடைத்துப் பருப்பெடுத்து மெல்லியவஸ்திரத்தில் தளர்ச்சியாக முடிந்து சாணிப்பாலிற்போட்டு வேகவைத்து எடுத்து உள்ளிருக்கிற முளையிலையை நீக்கி அதற்கிரண்டுபங்கு பச்சரிசியுடன் கலந்து ஜலம்வார்த்து அரிசியானது நன்றாய் அழிந்தபதமாகிறவரையில் வேகவைத்து ஆறவிட்டுப் பருப்பையெடுத்து இரண்டு மூன்று தடவை ஜலம்வார்த்துச் சுத்தமாகக் கழுவியெடுத்துக் கொள்ளவேண்டும். பிறகு நிழலிலுலர்த்தி சோற்றுக் கற்றாழை மடலை யிரண்டாகப்பிளந்து அதற்குள் இந்தப் பருப்புகளைவைத்து நூலால்கட்டி அதன்மேல் மண்ணைப்பூசி நெருப்பில் வதக்கியெடுத்து நிழலில் உலர்த்தி யெடுத்துக்கொள்வதே அதன்சுத்தியாம்.

இரச கற்பூரச் சுத்தி.

இரசகற்பூரத்தை ஓட்டில்வைத்து முலைப்பாலினால் இரண்டு சமம் சுருக்குக்கொடுத்துப் பிறகு தேனினால் இரண்டுசாமம் சுருக்குக்கொடுத் தெடுத்துக் கொள்வதே இரசகற்பூர சுத்தியாம். இன்னும் இரசகற்பூரத்தை வேறு எந்த வகையாகவும் சுத்திசெய்து கொள்ளலாம், ஆயினும் நமது அநுபோக வைத்திய நவநீதத்தில் திவ்யமான அநேகமுறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளுள் ஒருவகை யாகவும் செய்து இந்த பாகத்திற் சேர்த்துக் கொள்ளலாம்.

(இன்னும் வரும்.)

---

சுகாதார போதினி.

௪ - ம் பிரிவு.

பால வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 76.)

கணத்தெண்ணெய்.

வட்டத் துத்திவேர்பலம் - ௨௦, வெந்தயம் பலம்-௫, வெண்ணிறமான வெங்காயச்சாறு படி:௨, சிற்றாமணக்கெண்ணெய் பலம்-௪௦,

செய்முறை:—மேற்படிவேரைச் சன்னமாகத்தண்டித்து வாயகன்ற ஒரு ஜாடியிற்போட்டு அதன்மீது எண்ணெயைவிட்டு அதில் வெங்காயச்சாறு, வெந்தயம் ஆகியவைகளையும்போட்டு செவ்வையாகக் கு

னுக்கி வாய்க்கு வேடுகட்டி வெயிலில்வைத்து வரவேண்டும். கடு வெயிலாகவிருந்தால் இரண்டுவாரம் அல்லது இருபதுநாட் போதுமானது. ஆகையால் இதனை அதிக கோடைகாலத்திற்றான் செய்துகொள்ள வேண்டும்.

பிரமாணம்:—சிறுவர்களுக்கு துலா-வ, ஓ, பெரியவர்களுக்கு துலா-ஓ, க.

அனுபானம்:—சர்க்கரை ஷர்பத்து, நீராகாரம், சர்க்கரை முதலியவைகளுடன் அனுபானித்துக் கொடுக்கலாம். இவையின்றி இதனைத் தனியாகவும் உபயோகிக்கலாம். காலையில் ஒருவேளை மாத்திரந்தான் உபயோகிக்க வேண்டும்.

உபயோகம்:—எல்லாவகைக் கணரோகங்களும் தீரும். கணசம்பந்தமான கபரோகங்கள் முதலியவைகளும் தீரும், வெட்டைச்சூடு, அஸ்திச்சூடு ஆகியவைகளும் தீரும், இளைத்ததேகம் செழித்துப் பெருக்கும்.

பத்தியம்:—சீதள பதார்த்தங்கள், கரப்பான் பதார்த்தங்கள் ஆகியவைகளை நீக்கவேண்டியது.

குறிப்பு.

இந்தப்பாகத்தில் சிலர் ஒருவீசையெண்ணெய்க்குப் பதிலாக இரண்டுவீசை யெண்ணெய் சேர்த்துச் செய்வதுமுண்டு. ஆனால் அது கொஞ்சம் வேகங்குறைவாயிருக்கும். இஷ்டமானவர்கள் அப்படியும் செய்துகொள்ளலாம்.

குழந்தைகள் பெருக்க.

தண்ணீர் விட்டான் கிழங்குச் சாறு, பசுவின் பால், வெள்ளாட்டுப்பால், தேங்காய்ப்பால், பசுவினெய், இவை வகை-க-க்குப் படி-வ, சீனிசர்க்கரை, கற்கண்டு, இவை வகை-க-க்குப் பலம்-டு.

செய்முறை:—கற்கண்டை மெல்லிய தூளாகச் செய்து மற்றெல்லாவற்றையும் ஒன்றாகச்சேர்த்தடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து மெழுகுபதமாகச் சிவக்கும்போதிறக்கி வடிகட்டிப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-உ-ரூ. காலை மாலையிரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—எல்லாவகை கணங்கள், கணச்சூடு முதலியவைகள் நீங்கி துரும்புபோல் மெலிந்ததேகம் தூண்போற்பெருத்து அழகும் வடிவுமுண்டாகும். வைத்திய ரகசியமுறைகளுள் இதுவுமொன்று.

கிருமிப் பிரயோகம்.

தேங்காய்க் கொப்பரையைப் பெருந்துண்டுகளாக அறுத்து நெல்லோடு வேகவைத்து சுமார் அரைப்பலம் குழந்தைக்குத் தின்னக்கொடுக்க வேண்டும். இவ்விதம் இரண்டு மூன்று நாட்கள் செய்யின் மலம் வழியாகக் கிருமிகள் வெளிப்படும்.

கக்குவானுக்கு.

கலியாண முருக்கிலை சுமார் பலம்-க, கருஞ்சீரகம் விராகனெடை-க. இவ்விரண்டையும் நன்றாக நசுக்கிச் சாறுபிழிந்து கொள்ளவும். இதிற் சுமார் விராகனெடை-க, க,ஓ, எடுத்து அதில் ஒரு குன்றிமணியெடை கோரோசனையைச் சேர்த்துப் பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் காலை மாலை யிரண்டுவேளையுஞ்செய்ய கக்குவான் ரோகம் தீரும்.

இன்னும் வரும்.

## கடிதங்கள்.

நமது நண்பர்களுள் அநேகர் லோகோபகாரமாகத் தத்தமக்கு அநுபோகமான பாகங்களை இப்போதினியின் மூலமாக வெளிப்படுத்தும் படியாக தயவு செய்திருக்கின்றார்கள். ஆனால் அவை யெல்லாவற்றையும் ஏககாலத்திற் வெளிப்படுத்த இப்போதினி இடந்தரா தாகையால் சமையம் வாய்க்கும்போது சிற்சில பாகங்களை எழுதி வருகின்றோம். ஜீவகாருண்ய சிந்தையுடன் இப்பாகங்களை யெழுதின கனவான்களுக்கு நாம் இதய பூர்வமாக நன்றி செலுத்தக் கடமைப்பட் டிருப்பதுபோலவே இப்பாகங்களாற் பிரயோசன மடையும் ஒவ்வொருவரும் மேற்படி கனவான்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டவர்களாக இருப்பார்க ளென்பது திண்ணம். இப்போதினியின் அபிமானிகளுள் அநேகர் சிறந்த பண்டிதர்களாக விருப்பதால் மற்றவர்களும் தத்தமக்கு அனுபவமானவைகளை இப்போதினியின் மூலம் வெளிப்படுத்த தயவு செய்வார்களேயானால், உலகத்தாருக்குப் பெரும்பிரயோசன முண்டாமென்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. இதுவரையில் மௌனஞ் சாதித்தது

போல் இனியுமிராமல் இப்போதாயினும் அனுபோக மான பாகங்களை மனமுவந் தெழுதுவார்களென நம் புகின்றோம்.

மேக உசிதப் பிரயோகம்.

நுணுவிலைச்சாறு பலம்-க, நல்ல கெட்டித்தேன் பலம்-ஒ, இவ்விரண்டையு மிஸ்ரமித்துப் பானஞ் செய்விக்கவேண்டும். இவ்விதம் காலையில் ஒருவேளை மாத்திரம், அல்லது, காலைமாலை யிரண்டுவேளையும் வியாதியின் பலத்திற்குத் தகுந்தபடி பதினேழுநாள், இருபத்தொருநாள், முப்பத் தொருநாள், நாற்பதுநாள்சாப்பிட வேண்டும். இவ்விதம் சாப்பிட்டு வரும்போது மேற்படி இலையை யரைத்து மேலுக்குப்பூசி இரண்டொரு சாமம் தாமதித்து ஸ்நானமுஞ் செய்துவரவேண்டும். இவ்விதம் உள்ளுக்கும் சாப்பிட்டு, மேலுக்கும் பூசிவந்தால் கருமேகம், கிரந்திப்புண்கள், சிரங்குகள், சொறிகள், மேகத்தாலுண்டான எல்லாவகைப் புண்கள் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—கிரந்திப் பதார்த்தங்களை நீக்கி இச்சாபத்தியமா யிருக்கவேண்டியது.

அவுரி நெய்

(a) அவுரிவேர் பலம்-சு, சங்கம் வேர்ப்பட்டை முருங்கை வேர்ப்பட்டை, இவை வகை-க-க்குப் பலம்-உ. வேலிப் பருத்திவேர், சிவன்வேம்புவேர், சிறுகுறிஞ்சாவேர், மிளகரணைவேர், அழிஞ்சிவேர், கருநொச்சிவேர், இவை வகை-க-க்குப் பலம்-க.

(b) செங்கத்தாரிப்பட்டை, மஞ்சட் கடுக்காய்த் தோல், கருஞ்சீரகம், ஓமம், அழிஞ்சிவிதை, கடுகு, ரோகணி, தேற்றும்பட்டை, உலர்த்தின கார்த்திகைக் கிழங்கு, உலர்த்தின மருட்கிழங்கு, கார்போகரிசி, கஸ்தூரி மஞ்சள், பொன்முசுட்டைவேர், கீழ்க்காய் நெல்லிவேர், எட்டிவிதை, இவை வகை-க-க்கு விராகனெடை-கவ, கடப்பம் விதை பலம் - க, பசுவினெய் படி-க.

செய்முறை:—(a) யிலுள்ள வேர் வகைகளைச் சன்னமாகத் துண்டித்துப் பதினறுபடி தண்ணீரிற்போட்டு ஒருநா ளூறவைத்து மறுநாள் அடுப்பேற்றி எட்டிலொரு பாகமாகச் சுண்டவைத்து வடிகட்டி திப்பி நீக்கின கஷாயத்துடன் நெய்யைச்சேர்த்து அடுப்பேற்ற வேண்டும், (b) யிலுள்ள சரக்குகளை யெல்லாம் ஒன்றாக இடித்து மேற்படி கலவையிற் சேர்த்துச் சிறுதீயா யெரித்துக் கடுகு திரள்பதத்திலிறக்கி வடிகட்டி பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-உ, ச.

உபயோகம்:—எலிகடி முதலிய எல்லா ஜீவவிஷங்கள், நாபி முதலிய மூலிகை விஷங்கள், பாஷாண முதலிய கடைச்சரக்கு விஷங்கள் ஆகியவைகள் தீரும், காணுக்கடி, பூரான்கடி, மரவட்டைக்கடி, ஈழையிருமல் முதலிய பல ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—வியாதிபலம், தேகபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி உப்பு, புளியை அறவே நீக்கியும், அவைகளை முறையே வறுத்தும், சுட்டும்சேர்த்தும், அவைகளைக் குறைவாக அல்லது மிதமாகச் சேர்த்தும்வர வேண்டியது.புகை, பெண் ஆகியவைகளை நீக்கவேண்டியது அவசிய மென்பது தெரிந்த விஷயமே.

பிரமி நெய்.

(a) பிரமிச்சாறு படி-ச, பசுவினெய் படி-க, (b) சிவதை வேர்ப்பட்டை, மேற்றோல் சீவினசுக்கு, அரிசித்திப்பிலி, நெல்லிவற்றல், இந்துப்பு, விளாலரிசி, கற்கண்டு, வசம்பு, கஸ்தூரி மஞ்சள் இவை வகை-க-க்கு விராகனெடை-கஒ.

செய்முறை:—(a) யிலுள்ள இரண்டையுங் கலந்து (b) யிலுள்ள சரக்குகளை யிடித்து மேற்படி சாற்றைக் கொஞ்சம் வார்த்து வெண்ணெய்போ லரைத்து அதிற் கரைத்து அடுப்பேற்றி ஒருமணி நேரம் சிறுதீயா யெரித்து கொதிப்பிக்க வேண்டும். இவ்விதம் மூன்றுநாள் தினமொன்றிற்கு ஒவ்வொரு மணிநேரம் சிறுதீயாகக் கொதிப்பித்து, நான்காநாள்மெதுவாயெரித்துக் கடுகுதிரள் பதத்தில் இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கிப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௩. ௫. காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம், அல்லது காலையில் ஒருவேளை மாத்திரம் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—வாயு சம்பந்தமான ரோகங்கள், கபசம்பந்தமான ரோகங்கள் ஆகியவைகள் தீரும். அ

க்கினிமந்தம் தீர்ந்து பசிதீபன முண்டாகும். தேகம் பொன்னிறமாகும், புத்திவிருத்தியும், புத்திக்கூர்மையு முண்டாகும்.

பத்தியம்:—கைப்பு, புளிப்பு பதார்த்தங்களை நீக்கவும்.

## கண்டமாலை மெழுக்கு.

பால்துத்தம் விராகனெடை-௧0, சுத்திசெய்த இரசகர்ப்பூரம் விராகனெடை-௪, குங்குமப்பூ விராகனெடை-௫, பனங்கற்கண்டு பலம்-௨, கருங் கொள்ளுச்சாறு, அல்லது, சங்கங்குப்பிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளையெல்லாம் கல்வத்திற்போட்டு பொடித்து ஒருமணி நேரமரைத்து எல்லாம் ஒன்றாக மிஸ்ரமான பின்பு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து நான்கு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-௧. இது வேகமான மருந்தாகையால் காலையில் ஒருவேளை மாத்திரம் அல்லது, காலைமாலை யிரண்டுவேளையும் ஐந்துவேளை கொடுக்கவேண்டும். காலமே மருந்து சாப்பிட்டவுடன் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானஞ்செய்து உடனே தயிரும் பழைய சாதமும் திருப்தியாகச் சாப்பிடவும். மத்தியானம் வெள்ளாட்டிறைச்சிச் சூப்பும் சாதமும் சாப்பிடவேண்டும். நெய் பச்சைப்பயறு வெங்காயம் ஆகியவைகளைத் தாராளமாகச் சேர்க்கவேண்டும். இராத்திரிக்கும் கூடுமான வரையிற் சாப்பிடலாம். பசுவின்பால் சேர்த்துக் கொள்ளலாம், வாயுபதார்த்தம், பச்சைமீன், புளி, புகை ஆகியவைகளைத் தள்ளவேண்டும்.

உபயோகம்:—கண்டமாலைகள், கிரந்திப் புண்கள் ஆகியவைகள் தீரும்.

### குறிப்பு.

வியாதி கடினமாக விருந்தால் இடையில் இரண்டு மூன்றுவாரம் விட்டு விட்டு முன்கண்டபடி ஐந்துவேளை மூன்றுவேளை உபயோகிக்க வேண்டும்.



இதனைத் தயவுடன் முழுதும் வாசித்துத் தங்கள் நண்பர்களுக்கும் வாசிக்கக் கொடுக்கவும்.

## மகா ஆனந்த புருஷகேம்பீர ஹல்வாவும், திலாவேன்னும் மேற்பூச்சும்.



தளர்ந்த நரம்புகளை உற்சாகப் படுத்தவும், சோர்ந்த பேசிநரம்புகளைப் பலப்படுத்தவும், மேற்பூச்சு மாத்திரம் அதிகமாக உபயோகப்படாது. ஆகையால் மேற் பிரயோகத்துடன் உட்பிரயோகமும் ஆவசியகம். பாலியச் சேஷ்டையினாலும், அறியாமையினாலும் உண்டான தாதுநஷ்டம் முதலிய வியாதிகளுக்கெனபலவித விசித்திர நாமங்களோடு, வெளிப்பட்டுலாவும்போலி விளம்பரங்களை நம்பி ஏமாந்துபோகிறவர்கள்அனேகம். மேற்கண்ட ஔஷதங்கள் அவ்விதமானவைகள் அல்லன. இவை பரம்பரையாகவும்,நெடுநாள் அநுபவ சித்தமாகவும், கைவல்லியமான முறைகள். ஒருவரிருவரல்ல. நூற்றுக்கணக்கான அநேகராக உபயோகப் படுத்தப்பட்டுக் குணங்காணப் பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

பாலிய சேஷ்டையினாலும், அறியாமையினாலும் முற்றும் போக நிர்வாக சக்தியற்று, தாது நஷ்டமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினாலும் தீராமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினால்கடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானால் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள்

தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஔஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனோற்பலம், தைரியம், வீரியம் முதலியவைகளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன் விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதார ரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

---

## அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையி லச்சாகி வெளிவரவில்லை யென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட ரோகங்களுக்கு நானாவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட்டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆகியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, விங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யக்கூடியவைகள். இவை யுத்தி புத்தி அநுபவம் முதலியவைகளுக் கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னுயுளையும் பொருளையும் அவமே யழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகளல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அநுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லா வகையாலும் லாபத்திற்கே பேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதி நூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட்டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கலசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட தக்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-2-0 வி - பி 1 - 4 - 0.

---

## தன்வந்திரி சூக்ஷம வைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளியாகாத நூதன சிறிய கிரந்தம். இதில் பற்பல வகை மாத்திரைகள், எண்ணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நாக தைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷமமானவைகளும் பல தடவை அநுபவப்பட்டவைகளுமாம். இதனைப் பார்த்த தக்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்றாய் விளங்கும். தம்முடையவும் தம் மின ஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி -1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-0.

---

## ஞாய அஷ்டாங்க தீபம்.

இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகை தாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞான நூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்போரும் ஆனந்தப் படும்படியாக வெணபா, துறை, ஆனந்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட்டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி 0-6-0

இராஜ அவுடத சாலை. 12 - வது செ. அப்புமேஸ்திரி தெருவு, மாபுஸ்கான்தேவடி. மத்ராஸ்.

புத்தகம் - ௩. 1907ஹு ஜூலை 15ௗ இலக்கம்-௧௨.

சுகாதார போதினி.

௧. ம் பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol III பக்கம் 82.)

இரைப்பைசம்பந்தமான
வியாதிகளின் சிகிச்சை.

உண்ட ஆகாரம் ஜீரண மாகாமல் வயிற்றில் வலிகண்டால், ஜலத்திற் கொஞ்சம் உப்பைக் கரைத்துப் பானஞ் செய்வித்து வாந்தியால் ஜீரணமாகாத வஸ்துக்களை வெளிப்படுத்தி விடவேண்டியது. நல்ல பசியுண்டாகிற வரையில் எவ்வித ஆகாரமுங் கொடுக்காமல் நிறுத்தி வைக்கவேண்டியது. நல்ல பசியுண்டானால் இலகுவாய் ஜீரண மாகக்கூடிய மிருதுவான ஆகாரத்தைக் கொடுக்க வேண்டியது.

வயிற்றில் வலியானது இடம் மாறிமாறிக் கண்டால் வாயு சம்பந்தமானதென நிதானித்துக் கோதுமையுமி, உப்பு, கம்பு, வானுஞவை யரிசி, ஆகியவைகளிலொன்றை வறுத்து துணித்துண்டில் முடிந்து ஒற்றிடமிட வேண்டியது. மணலை வறுத்தும் ஒற்றிடமிடலாம். ஓமத்திராவகத்தைப் பானஞ் செய்விக்கலாம்.

திப்பிலி ஜவாரிஷ்.

அரிசித்திப்பிலியை வறுத்திடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் பலம் - ௨௦, சீனிசர்க்கரை பலம் - ௧௦.

செய்முறை:—சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் மேற்படி சூரணத்தைக் கொட்டிக் கிண்டிக்கிளறி ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௨. ௩.

உபயோகம்:—வாயுவைக் கண்டிக்கும், ஆகாரத்தை ஜீரணிக்கச் செய்யும், இரைப்பையைப் பலப்படுத்தும், தாதுபுஷ்டியை யுண்டாக்கும். இரைப்பையிலுள்ள கபமுதலிய அசுத்த திரவத்தை வறட்டும்.

சுக்கு ஜவாரிஷ்.

மேற்றோல் சீவின சுக்கை யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் பலம் - ௨௦, சீனிசர்க்கரை பலம்-௧௦.

செய்முறை:—மேற்கண்ட பாகப்படியே செய்யவும்.

பிரமாணம்:—விராகனெடை-௨. ௩.

உபயோகம்:—வாயுவைக் கண்டிக்கும், குளிர்ச்சியினால் இரைப்பையி லுண்டான நோயைத் தணிக்கும். ஆகாரத்தை ஜீரணிக்கச் செய்யும், மறதிரோகத்தைப் போக்கும். குளிர்ச்சியான இரைப்பையிலும் ஈரலிலும் சூட்டை யுண்டாக்கும்.

குறிப்பு.

மேற்படி சுக்குச் சூரணத்தை ஐந்துபலம் எலுமிச்சம் பழச்சாற்றிற் போட்டு வெயிலில் வைத்து உலர்ந்தபின்பு மறுபடியும் முன்போல் ஐந்துபலம் எலுமிச்சம்பழச் சாற்றைவிட்டு முன்போ லுலர்த்தவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி மூன்று தடவை அல்லது நான்கு தடவை செய்து முன்போல் லேகியம் செய்து கொள்ளவேண்டும். இதனால் விசேஷகுண முண்டாகும்.

இஞ்சி ஜவாரிஷ்.

இரண்டுபலம் மேற்றோல் போக்கின இஞ்சியைச் சிறு துண்டுகளாகத் துண்டித்து நெய்யில் வறுத்து பத்துப்பலம் பனைவெல்லத்தைச் சேர்த்து அம்மியில் வைத்து மைபோலரைத்து எடுத்துக் கொள்ளவும்.

பிரமாணம், உபயோகம் ஆகியவை மேற்கண்டபடியேயாம்.

சாம்பிராணி ஜவாரிஷ்.

சாம்பிராணியைப் பொடித்து வஸ்திரகாயஞ் செய்த தூள் விராகனெடை - ௨௦, சீனிசர்க்கரை பலம்-௧௦.

செய்முறை:—சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் மேற்படி சூரணத்தைக் கொட்டிக்கிளறி மிஸ்ரமித்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-௧௦. ௨.

உபயோகம்:—இரைப்பையைப் பலப்படுத்தும், ஜீரணசக்தியை விருத்தியாக்கும்.

குறிப்பு.

இதிற் புளிப்புண்டாக்க வேண்டிய அவசியமிருந்தால் மூன்றுபலம் எலுமிச்சம்பழச் சாற்றை மேற்படி பாகுடன் சேர்த்துக் காய்ச்சிக் கொள்ள வேண்டியது.

### அகர் ஜவாரிஷ்.

தண்ணீரில் போட்டால் ஆழும்படியான அகர்க் கட்டையை யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் விராகனெடை-உ௫, சீனிசர்க்கரை பலம்-க0.

செய்முறை:—முன் சொன்ன முறைப்படியே செய்து கொள்ளவும்.

பிரமாணம், உபயோகம் முதலியவைகளு மேற்கண்டவைகளேயாம்.

### குந்திரிக்க ஜவாரிஷ்.

குந்திரிக்கத்தைத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம், ஏலக்காய் விதைச் சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-உ, மேற்றோல் சீவின சுக்கு, சன்னராஷ்டம், ஓமம், ஜடாமாஞ்சில், கருஞ்சீரகம், ஏலரிசி, மிளகு, இவற்றைத் தனித்தனி யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் வகை-க-க்கு விராகனெடை-க, சீனிசர்க்கரை பலம்-ஈ௫.

செய்முறை:—சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் ஒன்றாகக் கலந்து மிஸ்ரமித்துச் சிறுகச் சிறுகத் தூவி சந்தனமத்தாற் கடைந்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-ஔ. கவ.

உபயோகம்:—கபசம்பந்தமான பேதியைக் கட்டும். ஜீரண சக்தியை யதிகப்படுத்தும், குளிர்ச்சியான இரைப்பையைப் பலப்படுத்தும்.

### ஆமலக ஜவாரிஷ்.

நெல்லிக்காய்ச்சாறு பலம்-உ௫. பன்னீர் பலம்-உ௫, (பன்னீரில்லா விட்டால் ஜலத்தைச் சேர்த்துக் கொள்ளவும்.) றாமிமஸ்தகிச் சூரணம் விராகனெடை-ரு, சீனிசர்க்கரை பலம்-க0.

செய்முறை:—முன்கண்ட திரவத்தையும், சர்க்கரையையுங் கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயா லெரித்துப் பாகுபதத்தில் இறக்கிக் குளிர ஆறினபின்பு மஸ்தகிச் சூரணத்தைச் சேர்த்து நன்றாக மிஸ்ரமித்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க௫. உ௫.

உபயோகம்:—இரைப்பையைப் பலப்படுத்தும். ஜீரண சக்தியை விருத்திசெய்யும், பித்தத்தைக் கண்டிக்கும்.

### ஓம ஜவாரிஷ்.

ஓமத்தை இளவறுப்பாக வறுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் பலம்-உ; இதனை ஒருபீங்கான் பாத்திரத்திற் போட்டு நான்குபலம் எலுமிச்சம்பழச் சாற்றைவிட்டு வெயிலில் வைத்து அந்தச்சாறு உலர்ந்தபின்பு மறுபடியும் நான்குபலம் எலுமிச்சம்பழச் சாற்றைவிட்டு உலர்த்தவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி மூன்றுதடவை எலுமிச்சம்பழச் சாற்றைவிட்டு உலரவைத் தெடுத்துக்கொள்ளவும். பிறகு பன்னிரண்டுபலம் சர்க்கரையைப்பாகு செய்து பாகுபதத்தில் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற தூளைச் சிறுக சிறுகத் தூவி மத்தாற் கடைந்து நன்றாக மிஸ்ரமிதது ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்:

பிரமாணம்:—விராகனெடை-க உ.

உபயோகம்:—ஆகாரத்தை ஜீரணிக்கச் செய்யும், பசிதீபனத்தை யதிகப்படுத்தும், வாயுக்களைக் கண்டிக்கும்.

### சன்னராஷ்டஜவாரிஷ்.

சன்னராஷ்டத்தை யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் பலம்-க, சீனிசர்க்கரை பலம்-ரு.

செய்முறை:—மேற்கண்ட பாகப்படியே செய்து கொள்ளவும்

பிரமாணம்:—விராகனெடை-க௫, உ௫.

உபயோகம்:—வாயுக்களைக்கண்டிக்கும், ஆகாரத்தை ஜீரணிக்கச் செய்யும் இரைப்பை, ஈரல் ஆகியவைகளுக்குஞ் சுகுணத்தைத்தரும். இரைப்பையிலுள்ள கபம் முதலிய துர்நீர்களைக் கண்டிக்கும். புளித்தஏப்பம், குளிர்ச்சியிலுண்டான நீர்க்குண்டிக்காயின் வலி ஆகியவைகளைக் கண்டிக்கும்.

### கருஞ்சீரக ஜவாரிஷ்.

கருஞ்சீரகம் பலம்-உ, இதனை ஐந்துபலம் காடியிற்போட்டு வெயிலில் வைத்துக் காடியானது சுண்டினபின் நன்றாயுலர்த்தி சட்டியில் வறுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் பலம் - உ, சீனிசர்க்கரை பலம்-உ0.

செய்முறை:—சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் மேற்படி சூரணத்தைக் கொட்டிக்கிளறி நன்றாக மிஸ்ரமித்துக் கீழிறக்கிவைத்து ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-உ, ச.

உபயோகம்:—கபத்தை வெளிப்படுத்தும். வாயு, வயிற்றுப்பிசம் ஆகியவைகளைக் கண்டிக்கும். வெறிநாய்கடி விஷம், மிருகங்களின் விஷம், ஆகியவைகளை நிவர்த்தி செய்யும், வயிற்றிலுள்ள கிருமிகளைக்கொல்லும். சூதகம், சூதகக்கட்டு, நீர்க்கட்டு ஆகியவைகளை உடைக்கும். நீர்க்குண்டிக்காயின் அஸ்மரியை வெளிப்படுத்தும். கருப்பை, நீர்க்குண்டிக்காய் ஆகியவைகளிலுள்ள வேதனையைக் கண்டிக்கும். நீர்ப்பையிலுள்ள தோஷத்தை நீக்கும். நாட்பட்ட சுரம், வாதசுரம், ஆகியவைகளைக் குணப்படுத்தும்.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் 83)

### கார்போனெட் ஆப் மாக்னீஷியா.

### CARBO NATE OF MAGNESIA.

### காந்தமண் பஸ்பம்.

இது வெள்ளையாயும், இலேசாயுமிருக்கும், தொட்டால் மிருதுவாயிருக்கும், வாசனை யற்றதாயிருக்கும், மண்ணுக்குள்ள ருசியையுடையதாயிருக்கும், காற்றுபட்டாற் கெட்டுப்போகாது; தண்ணீரிற் கரையாது.

வயிற்றிலுள்ள புளிப்பு, இரைப்பை, குலை இவைகளிலுள்ள எரிச்சல், குழந்தைகளின் அதிசாரம், மந்தாக்கினி ரோகம், சந்துவாதம், மலபந்தம், கல்லடைப்பு, கிரஹணி, நீர்க்கோர்வை முதலிய ரோகங்களில் இது உபயோகப்படும்.

உ௦, குன்றிமணி யெடை முதல்-௬௰ குன்றிமணியெடை வரையில் அடிக்கடியும், ௬௰ குன்றிமணி யெடை முதல் ௬௦ குன்றிமணி யெடை வரையில் ஒருதரமாயுங் கொடுக்கலாம். ௬௰-குன்றிமணி யெடை முதல் ௬௦ குன்றிமணி யெடைவரையிற் கொடுத்தால் மலமிளகும். இதனை நாட்படக் கொடுத்துவந்தால் வயிற்றிற் சேர்ந்து கல்லாகி விடுவதுமுண்டு.

இது சாதாரணமாய் எல்லா இங்கிலீஷ் மருந்து ஷாப்புகளிலு மிருக்கும். மாத்திரையின் விகார ரூபத்தை மாற்றுவதற்காக மாத்திரைகளோடு இதனைப் போட்டு நன்றாகக் குலுக்குவதினால் மேடுபள்ளங்கள் சரிப்பட்டு நல்ல ரூபமாகக் காணப்படும். மாத்திரைகளுடன் இது கலந்திருப்பது முண்டு. வயிற்றிற் புளிப்பு சேர்ந்திருக்கும்போது இது பெரும்பான்மையும் உபயோகப்படுத்தப் படுகிறது. ஆனால் வயிற்றிற் புளிப்பு சேர்ந்திருப்பதுடன் வயிற்றுப்பிசமு மிருந்தால், இதனை உபயோகிக்கலாகாது. அந்தச் சமையங்களில் இதனை உபயோகிப்பதால் வயிற்றுப்பிசம் அதிகப்பட ஹேதுவாகும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௩ - ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-84.)

இன்னும் வேறொரு பரிக்ஷையுமுண்டு. அது மிகவுஞ் சிரேஷ்டமானது. அது பின்வருகிற விதமாம்:-

சிரசானது ஆரம்பத்திலுதயமானால் தண்ணீர்க்குடம் உடைந்தவுடனே ஜலமானது வேகமாய் வெளிப்பட்டு உடனே நின்றுபோகும். ஏனெனில், ஆசனவாசலை தலைவந்து அடைத்துக் கொள்வதனால் தண்ணீர் வெளிப்பட ஏதுவில்லாமற் போகிறது. மற்றவகைகளிலோ ஒருதடவை வெளிப்பட ஆரம்பித்த ஜலமானது கொஞ்சங் கொஞ்சமாக வந்துகொண்டிருக்குமேயொழிய ஒரேகடவையாகக்கட்டுப்பட்டுப்போகாது அப்படிக் கட்டுப்பட்டுவிட்டால் பிரசவஸ்திரிக்கு திகவேதனைக் கேதுவாகும், ஏனெனில், ஜலமெல்லாம் வெளிப்பட்டுவிட்டால் சிசுவை வெளியே கொண்டுவந்து தள்ளும் வேலையை யார்செய்வார்கள்? ஆகையால், அதிக யூகமுள்ள மருத்துவஸ்திரீகள் இந்தத் தண்ணீர்ப்பையானது உடைந்துபோகாமல் அதிக ஜாக்கிரதையாக விருப்பார்கள். கருப்பையின் வாயானது நன்றாய் விரிவதற்கு முன்பே தண்ணீர்ப்பையானது கிழிந்துவிட்டால் வேதனை அதிகப்பட ஏதுவாகும்.

மருத்துவப் பெண்ணானவள் அங்கு தன்கையை அடிக்கடிச் செலுத்துவதினால் நகம்பட்டுக் கிழிந்துபோகும். ஆகையால் அப்படிச் செய்யாமல் ஜாக்கிரதையாக இருக்கவேண்டியது.

புட்டமானது ஆரம்பத்தில் வருவதாக மருத்துவப்பெண்ணிற்குத்தெரிந்தால் நாபிவரையில் தானே வெளிப்புறப்படுகிறவரையில் நிதானிக்கவேண்டியது. பிறகு ஆரம்பத்திற் கால் உதயமானால் என்ன செய்ய வேண்டியதோ அந்தப் பிரகாரம் செய்யவேண்டியது ஆவசியகம். அதன் விபரம் பின்னெழுதப்படும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௪ - ம் பிரிவு.



### பால வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 85.)

### பால கட்டுவாதி மாத்திரை.

ஒரு சாதிக்காயைக் குடைந்து அதற்குள் நான்கு குன்றிமணியெடை அபினியைச் செலுத்தி அரைத்தமஞ்சளாற் கவசஞ்செய்து கரிநெருப்பாக்கி அதற்குள் வைத்து வெந்தபதத்திலெடுத்து கவசத்தைநீக்கிக் கல்வத்தில்வைத்துப் பொடித்து முலைப்பாலைச் சிறுகச் சிறுகவிட்டு ஒருசாமமரைத்து மைபோலானபின்பு அரைக்குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-௧.

அனுபானம்:—முலைப்பால், தேன்.

உபயோகம்:—குழந்தைகளுக்குக் காணும் பேதி இரத்தங்கொட்டல் ஆகியவைகள் தீரும்.

### இரவித் தைலம்.

ஒற்றைக்கால் நண்டு விராகனெடை-௧௦, தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ் விராகனெடை-௫, மஞ்சட்சூரணம் விராகனெடை - ௫, வெள்ளைக் காக்கரட்டான்சாறு செல்லத்தக்க அளவு, தேங்காயெண்ணெய் பலம்-௩.

செய்முறை:—மேற்கண்ட மூன்றுவகைகளையும் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருசாமமரைத்து மேற்படி யெண்ணெயிற் கலக்கி பீங்கான் பாத்திரத்தில்விட்டு கடுவெயிலில் வைக்கவேண்டும். வெயிலி லிருக்கும்போது தூசு, மண் முதலியவை விழாதபடி மெல்லிய வஸ்திரத்தால் வேடுகட்டியும் வைக்கவேண்டும். பிரதிதினமும் இரண்டு மூன்று தடவைகள் நன்றாய்க் கலக்கிவிட்டு வரவும் வேண்டும். இவ்விதம் ஒருவாரஞ் சென்றபின் மெல்லிய வஸ்திரத்தால் வடிகட்டி சீஷாவிற் பத்திரப்படுத்திக் கொள்ளவேண்டும்.

உபயோகம்:—இந்த எண்ணெயில் கொஞ்சமெடுத்து இளஞ்சூடாகச் சுடவைத்து இரண்டுதுளி காதில்விட்டு பஞ்சைவைத்து அடைத்துவைக்க வேண்டும். இவ்விதம் தினம் இரண்டுதடவை செய்துவந்தால் காதிற் சீழ்வடிதல், காதிரைச்சல், காதுமந்தம் முதலியவைகள் நீங்கும்.

### கட்டுவாதி மாத்திரை (வேறு)

ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, மாசக்காய், சீரகம், அதிவிடயம், இலவங்கம், வெந்தயம்; கசகசா இவை வகை-௧-க்கு விராகனெடை-௧, இவை யெல்லாவற்றையும் தனித்தனி வறுத்துக்கொள்ள வேண்டும். அபின் விராகனெடை-௧, கோரோசனை விராகனெடை-௧, முலைப்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—முன்வறுத்த சரக்குகளையெல்லாம் இடித்து வஸ்திரகாயஞ்செய் தெடுத்துக்கொள்ள வேண்டும், அபினைக் கல்வத்திலிட்டுப் பாலைச் சிறுகச் சிறுக வார்த்தரைத்து அது அரைபட்டபின்பு கோரோசனையைச் சேர்த்தரைத்து அது அரைபட்டபின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற சூரணத்தைச் சேர்த்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டுசாமமரைத்து அரைக்குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—குழந்தைகளுக்கு மாத்திரை - ௧, ௧௨. பெரியவர்களுக்கு மாத்திரை-௨, ௩.

அனுபானம்:—குழந்தைகளுக்கு தேன், முலைப்பால் ஆகியவைகளாம். பெரியவர்களுக்கு தேன், வெண்ணெய், இலவங்கத்தை வறுத்து வேகவைத்த கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்—எல்லாவகைக் கழிச்சல் ரோகம், கிராணிரோகம், இரத்தபேதி, சீதபேதி ஆகியவைகள் தீரும்.

### வேறு.

சவுக்காரத்தை ரோஜாப்பூ எண்ணெயி லுரைத்து மேற்பூச்சாகப் பூசிவர குழந்தைகளுக்குத் தலையிற்காணும் சிறுசிரங்குகள் மாறும்.

வேறு.

சரியபோளத்தைக் கொத்துமல்லிக் கீரைச்சாற் றிலரைத்துப் பூசிவர குழந்தைகளுக்குக்காணும் செவ்வாப்பு, அக்கி முதலிய சிறு கொப்பளங்கள் தீரும்.

வேறு.

கீழ்காய் நெல்லிவேர் விராகனெடை-௧, மிளகு விராகனெடை-௩, மஞ்சட் கடுக்காய்த்தோல் விராகனெடை-௨, இம்மூன்றையும் பொடித்து வைத்துக் கொண்டு எட்டுக் குன்றிமணியெடை சூரணத்தை யிரண்டுபலம் புளித்த மோரிற்கலக்கிப் பானஞ்செய்விக்கவேண்டும், இவ்விதம் காலையில் ஒருவேளையாக மூன்றுநாள் அல்லது, ஐந்துநாள் செய்துவரின் சிறுபிள்ளைகள் சாம்பல், மண் முதலியவைகளைத் தின்றதனாலுண்டான-சோகைரோகங் தீரும்.

வேறு.

சிற்றாமணக்கெண்ணெய் பலம் - ௧0, பேயன் வாழைப்பழம் (இதன் தோலைநீக்கிச் சன்னமாகத் துண்டித்தது) பலம்-டு, கற்கண்டு பலம்-டு, ஜீரகம்பலம்-௧,

செய்முறை:—சீரகத்தையுங் கற்கண்டையுந் தூள்செய்து எண்ணெயிற்போட்டுக் வாழைப்பழத் துண்டுகளையும் அதிற்போட்டு நன்றாகக் குலுக்கிக் கடுவெயிலில் ஒருவாரம் வைத்து பிறகு எடுத்து பத்திரப்படுத்தவும்-

உபயோகம்:—சிறு குழந்தைகளுக்கு இதில் இரண்டொரு துண்டைக் கொடுத்துச் சாப்பிடச் செய்யவேண்டும். பெரியோர்களும் சாப்பிடலாம். ஆனால் நாலைந்து துண்டுகள் சாப்பிடவேண்டும். இவ்விதம் சாப்பிட்டு வருவதால் தேகத்திலுள்ள கணச்சூடு, வெட்டைச்சூடு ஆகியவைகள் தீரும், மலச்சிக்கல் நீங்கி மலம் கிரமப்படும். இளைத்த தேகம் பெருக்கும்.

வேறு.

பொரித்த வெண்காரம், கற்கண்டுத் தூள், நெருஞ்சிமுள்ளிச் சூரணம் இம்மூன்றையும் சமமாகச் சேர்த்து வைத்துக்கொண்டு வேளை-௧-க்கு நான்கு குன்றிமணியெடை கொஞ்சம் பசுவின்மோரில் அல்லது முலைப்பாலிற் கலந்து குடிப்பாட்டி வரவும். இவ்விதம் தினம் இரண்டு அல்லது, மூன்று தடவைகளாக ஏழுநாட்கள் உபயோகித்தால் குழந்தைகள் மூத்திரம் பெய்தால் சுண்ணாம்புக்கறை படிந்திருப்பதாகிய பாலனீருப்புருக்கி ரோகம் தீரும்.

பதியம்:—காரசார பதார்த்தங்களை நீக்கிவைக்க வேண்டியது.

வேறு.

உப்பை ஜெய்த்தூன் எண்ணெயி லரைத்து மேற்பூச்சாகப் பூசிவர, நெருப்புப்பட்ட இரணங்கள் உலர்ந்துபோகும்.

வேறு.

ஷர்த்ரு வென்னுங் கல்லை கோழிமுட்டையின் வெள்ளை யம்புலியில் உரைத்துப் பூசிவர, தீப்பட்ட புண்கள் ஆறும்.

வேறு.

தேன் பலம்-௧ வெள்ளைக் குங்கிலியம் பலம்-௰, கல்லுப்பு பலம்-௰, பின்சொன்ன இரண்டு சரக்குகளையும் பொடித்து மேற்படி தேனிற் கலக்கி வடிகட்டி சீஷாவில் வைத்துக்கொள்ளவும். அவசியமானபோது கொஞ்சம் இளஞ்சூடாகச் சுடவைத்து இரண்டு துளி காதில் விட்டு பஞ்சுவைத் தடைத்து வைக்கவும். இப்படிச் செய்வதினால் காதுவலி, காதிற் சீழ்வடிதல் ஆகியவைகள் தீரும்.

## கடிதங்கள்.

தாதுபுஷ்டி லேகியம்.

மேற்றோல் சீவின சுக்கு அதிமதுரம், பெருஞ்சீரகம், இலவங்கம், மிளகு, வால்மிளகு, அரிசித்திப்பிலி, யானைத்திப்பிலி, சிறுநாகப்பூ, மஞ்சட் கடுக்காய்த்தோல், ஜாதிக்காய், ஜாதிபத்திரி, இலவங்கப்பட்டை தாளிசப்பத்திரி, கோஷ்டம், அக்கராகாரம், செண்பகப்பூ, நீர்முள்ளிவிதை, அமுக்குராக் கிழங்கு, மராட்டிமொக்கு, இலவங்கப்பத்திரி, கண்டத்திப்பிலி, மதனகாமப்பூ, சீரகம், தான்றிக்காய்த்தோல், சிற்றரத்தை, பூமிசர்க்கரைக்கிழங்கு, கண்டுபாரங்கி, வாய்விளங்கம், ஜடாமாஞ்சில், அதிவிடயம், கருஞ்சீரகம், காட்டுச்சீரகம், குராசாணியோமம், நிலப்பனைக்கிழங்கு; நன்னாரிவேர், காட்டாத்திப்பூ, சுத்திசெய்துலர்த்தின புரசங்கொட்டைப் பருப்பு, ஓமம், சூரத்துநில ஆவாரை, கொத்துமல்லி விதை, கசகசா, சுத்திசெய்து வறுத்த கஞ்சா, இவை வகை-௧-க்குப் பலம்-௧, தோலுரித்த வாதுமைப் பருப்பு பலம்-௨0, காரமில்லாத சாரப்பருப்பு பலம்-௨0, தனித் தேங்காய்ப்பால் பலம்-டு, முருங்கைப்பூச்சாறு, தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு, ஒரிலைத் தாமரைச்சாறு, மகிழம்பட்டைச்சாறு, இவை வகை-௧-க்குப் படி-௰, நெய் பலம்-டு0, சீனிசர்க்கரை வீசை-௨, தேன் பலம்-௨0, பசுவின்பால் படி-௨.

செய்முறை:—முன்கண்ட சரக்குகளில் கசகசா வைத் தவிர மற்றவைகளை யெல்லாம் ஒன்றாகச் சேர்த்திடித்து வஸ்திரகாயஞ் செய்து தனியே வைத்துக் கொள்ளவும். வாதுமைப்பருப்பை ருசித்து அதிலுள்ள கைப்புப் பருப்புகளை நீக்கிவிட்டு சாரப்பருப்பையுஞ் சேர்த்து வெண்ணெய்போ லரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். கசகசாவிலுள்ள கல் முதலியவைகளை ஆய்ந்து நீக்கிவிட்டு அம்மியில் வைத்து மை

போலரைத்து வைத்துக் கொள்ளவும். சர்க்கரை, தேங்காய்ப்பால், பசுவின்பால், மற்ற சாறுவகைகள் ஆகிய எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து இரண்டு மூன்று கொதிவந்தபின்பு வாதுமைப் பருப்பு, சாரப்பருப்பு, கசகசா ஆகிய மூன்றையும் அதிற்போட்டு நன்றாகக் கடைந்து விட்டு அடிக்கடி துளாவிக்கொண்டு சிறுதீயா யெரித்துவர வேண்டும். பாகுபதத்தில் மேற்படி சூரணங்களைச் சிறுகத் தூவி மரமத்தால் நன்றாகக் கடைந்துவிட்டு கீழிறக்கித் தேனையும் நெய்யையும்விட்டுச் செவ்வையாக மிஸ்ரமித்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்,—விராகனெடை-௧. ௧௨. ஆகாரத்திற்குப் பிறகு சாப்பிட வேண்டும்.

உபயோகம்:—வாயு சம்பந்தத்தினா லுண்டான காது நஷ்டம், வாயுசம்பந்த ரோகங்கள், அஜீரண ரோகங்கள், ஆகியவைகள் தீரும். குளிர்ச்சி அதிகரித்துண்டான இந்திரிய சிராவகம், துரிதஸ் கலிதம், சொற்பன ஸ்கலிதம் ஆகியவைகளும் தீரும். சூடான தேகிகளுக்கு இதனை யுபயோகிக்க நேரிட்டால் பாற்பாயசம், பாலன்னம் ஆகியவைகளை உபயோகித்து வரவேண்டியது. இதனுடன் வெங்காய ஷர்பத், மஞ்சள் முள்ளங்கி ஷர்பத் ஆகியவைகளையும் உபயோகித்து வருவதினால் அதிக குணமுண்டாகும்.

குறிப்பு.

இந்த லேகியத்தை லாகிரியிற் பிரியமுள்ளவர்கள் பூரணதியாகச் செய்துகொள்ள இஷ்டப்பட்டால் ஆறுபலம் சுத்திசெய்த கஞ்சாவைச் சேர்த்துச் செய்துகொள்ளவும். ஆனால் அவரவர்கள் சுபாவத்திற்கு ஏற்றபடி அளவை நிதானித்துக் கொள்ளவேண்டும். இதனால் தீபனொளி, பூரணவொளி ஆகியவைக ளெல்லாம் தோற்றும், வெகு விநோதங்க ளெல்லாங் காணலாம்.

வித்தாதி லேகியம்.

(a) அத்திவிதை, ஆலம்விதை, துத்திவிதை, நத்தைச்சூரிவிதை, ஆவாரை விதை, வெட்பாலை யரிசி, கார்போகரிசி, கொத்துமல்லி விதை, நீர்முள்ளி விதை, பூனைக்காலிவிதை, காசினிவிதை, அரைக்கீரைவிதை, பாகல்விதை, அகத்திவிதை, தேற்றான்விதை, பூசணிவிதைப்பருப்பு, முருங்கைவிதை, முள்ளங்கிவிதை, அரசம்விதை, தாமரைவிதை, அல்லிவிதை, ஊமத்தம்விதை, கஞ்சாவிதை, மாதுளைவிதை, கசகசா, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, வால்மிளகு, மேற்றேல் சீவின சுக்கு, ஏலரிசி, இலவங்கம், மிளகு, இலவங்கப்பட்டை, மராட்டிமொக்கு, நிலப்பனைக் கிழங்கு, பூமிசர்க்கரைக் கிழங்கு, இவை வகை-௧-க்குப் பலம்-௧.

(b) கருவேலம் பிசின், முருங்கைப்பிசின், அத்திப்பிசின், பலாப்பிசின், ஆலம்பிசின், விளாம்பிசின், வாதுமைப்பிசின், சாலாமிஸ்றி, முள்ளிலவம் பிசின், மாம்பிசின், வேங்கைப்பிசின், வேப்பம்பிசின் இவை வகை-௧-க்குப் பலம்-௧.

(c) முருங்கைப்பூ, ஆவாரம்பூ, தென்னம்பூ, சிமை சாமந்திப்பூ, விளாம்பூ, தாமரைப்பூ, மாதுளம்பூ வேப்பம்பூ, தும்பைப்பூ, கிளாப்பூ, செவ்வல்லிப்பூ, செங்கழுநீர்ப்பூ, இவைகளை நிழல் வாட்டாக வுலர்த்தி வகை-௧-க்கு ஒவ்வொரு பலம் நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

(d) நன்னாரிவேர், வெட்டிவேர், சிறுகாஞ்சொறிவேர், தண்ணீர்விட்டான் கிழங்கு, பனைவேர், வெள்ளைச் சாட்டரணைவேர், இம்புராவேர், செந்தொட்டிவேர், கருந்துளசிவேர், வெட்பாலை வேர்ப்பட்டை, மகிழம்வேர்ப்பட்டை இவை வகை-௧-க்குப் பலம்-௫.

(e) அடைக்கலாங்குருவி-௪௦, உடும்பு-௨, முசல்-௧, புறா-௫, சேவல்-௧, காடை-௨௦, கௌதாரி-௧௦, ஆட்டிறைச்சி பலம்-௱,

(f) சீனிசருக்கரை பலம்-௧௨௦, நெய் பலம்-அ௰, தேன் பலம்-௪௰.

செய்முறை:—(e) யிலுள்ள வைகளை அறுத்து தலை, கால், குடல் முதலியவைகளை யெல்லாம் நீக்கிச் சுத்திசெய்து சிறு துண்டுகளாகச் செய்துகொள்ள வேண்டும். பிறகு ஆட்டு மாமிசத்துடன் சேர்த்து ஜலம்விட்டு நன்றாகக்கழுவிச் சுத்திசெய்து அதுகண்ட மொத்த எடைக்கு எட்டுப்பங்கு ஜலத்திற்போட்டு நாலுபங்கு ஜலமிருக்கும் படியாகச் சுண்டவைத்து இறக்கி இளஞ்சூடா யிருக்கும்போது நன்றாகப்பிசைந்து அஸ்தி, மாமிசம் முதலியவைகளையெல்லாம் நீக்கிவிட்டு ஒரு வஸ்திரத்தில் இந்தக் கஷாயத்தை வடிகட்டி வாலையிலிட்டு திராவகமிறக்கிக் கொள்ளவேண்டும்.-(d) யிலுள்ள வேர் வகைகளையெல்லாம் நன்றாகச்சிதைத்து அதுகண்ட மொத்த எடைக்கு எட்டுப்பங்கு ஜலத்திற்போட்டு எட்டிலொரு பாகமாகச் சுண்டவைத்திறக்கி இளஞ்சூட்டுடன் பிசைந்து திப்பிநீக்கி, வடிகட்டின கஷாயத்துடன் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற திராவகத்தையும் சேர்த்து அதில் சீனிசர்க்கரையைச் சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்துப் பாகுசெய்யவேண்டும். (a) (c) யிலுள்ள சரக்குகளை ஒன்றாகச் சேர்த்திடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொள்ள வேண்டும். (b) யிலுள்ள பிசின் வகைகளை நெய்யில்வறுத்து அம்மியிலரைத்துத் தூள்செய்துகொண்டு முன் சூரணத்துடன் கலந்துகொள்ள வேண்டும். அடுப்பிலிருக்கிற சர்க்கரையான

து. பாகுபதமாக வரும்போது மேற்படி சூரணங்களைச் சிறுகச் சிறுகத்தூவி சந்தனமத்தாற் கடைந்து கீழிறக்கித் தேனையும் நெய்யையும்விட்டு செவ்வையாக மிஸ்ரமித்து தான் வழிபடும் கடவுளை ஸ்தோத்திர முதலியவைசெய்து இயன்றவரையில் ஏழைகளுக்கு அன்னதானமுஞ்செய்து பீங்கான் ஜாடியிற் பத்திரப்படுத்தவேண்டும். இந்த லேகியத்தில் பதினாறி லொரு பாகத்தை ஏழை வியாதியஸ்தர்களுக்கு தர்மமாகக் கொடுக்கவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-க௨, ௨௦.

உபயோகம்:—இரத்த விருத்தியை யுண்டாக்கி தேகபுஷ்டி, தாதுபுஷ்டி, தேகபலம், தேகதிடம், மனோபலம், மனோற்சாகம், ஊக்கம், தைரியம் ஆகியவைகளை அதிகரிக்கச்செய்யும். இந்திரிய சிராவகம், சொற்பனஸ்கலிதம், துரிதஸ்கலிதம் ஆகியவைகளை அடியோடுபோக்கி தம்பனசக்தி முதலியவைகளை யுண்டாக்கும். இதனாலுண்டாகும் குணங்களை யிங்கெழுதி முடியாது. ஆனால் இதனைச்செய்து உண்டு அனுபவிப்பவர்கள் தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடும். இதன்பெருமையைச் சுருக்கிச்சொல்லில் விருத்தனையும் கௌமார திசையிலாக்கும். ஆகையாலிதற்கு விருத்த கௌமார கேசரியென்று சொல்லலாம்.

குறிப்பு.

மாமிசபட்சணி யல்லாதவர்கள் இதிற் சொல்லியிருக்கிற மாமிசவகைகளை நீக்கிவிட்டு தனியாகவுஞ் செய்து கொள்ளலாம். அல்லது, அதற்குபதிலாகத் தித்திப்பு திராட்சப்பழ ரசம் சுமார் இரண்டுபடி சேர்த்துச் செய்துகொண்டால் மிகவுஞ் சிரேஷ்டமாயிருக்கும். இன்னும் அதனுடன் தங்கரேக்கு, வெள்ளிரேக்கு ஆகியவைகளை அவரவர்களின் சக்திக்கியன்றவரையிற் சேர்த்துக்கொள்ளவும் வேண்டும்.

பத்தியம்:—அவரவர்கள் சக்திக்கியன்றவரையிலும் ஜீரணசக்திக் கேற்றபடியும் மிட்டாய்தினிசுகள், பாயசவகைகள், பால் அல்வாக்கள் முதலியவைகளை உபயோகிக்க வேண்டியது. மாமிச பட்சணிகளானால் ஆட்டிறைச்சி, காடை, கௌதாரி, உள்ளான், புறாக்குஞ்சு, கோழிக்குஞ்சு, விலாங்குமீன், பேராரால், விரால் ஆகியவைகளையும் உபயோகித்துவரலாம். நெய்யில்வறுத்த உழுத்தம்பருப்பு பலகாரங்கள், கடலைப்பருப்புப் பலகாரங்கள் ஆகியவைகளையும் உபயோகிக்கலாம். அவரவர்கள் சுபாவத்திற்கு ஒவ்வாத பதார்த்தங்களை நீக்கவேண்டியதுதான் பிரதானபத்தியம். தாதுநஷ்டப் பட்டிருப்பவர்கள் இதனை யுபயோகிக்கும்போது ஸ்திரீ சங்கமத்தை நீக்கிவைக்க வேண்டியது. கூடுமானால் புளியைக் குறைந்த அளவாகச் சேர்த்துக்கொள்ளலாம், புகையை நீக்கிவிடுவது உத்தமம்.



இதனைத் தயவுடன் முழுதும் வாசித்துத் தங்கள் நண்பர்களுக்கும் வாசிக்கக் கொடுக்கவும்.

---

மகா ஆனந்த புருஷகெம்பீர ஹல்வாவும், திலாவென்னும் மேற்பூச்சும்.



தளர்ந்த நரம்புகளை உற்சாகப் படுத்தவும், சோர்ந்த பேசிநரம்புகளைப் பலப்படுத்தவும், மேற்பூச்சு மாத்திரம் அதிகமாக உபயோகப்படாது. ஆகையால் மேற் பிரயோகத்துடன் உட்பிரயோகமும் ஆவசியகம். பாலியச் சேஷ்டையினாலும், அறியாமையினாலும் உண்டான தாதுநஷ்டம் முதலிய வியாதிகளுக்கெனபலவித விசித்திர நாமங்களோடு, வெளிப்பட்டுலாவும்போலி விளம்பரங்களை நம்பி ஏமாந்துபோகிறவர்கள் அனேகம். மேற்கண்ட ஔஷதங்கள் அவ்விதமானவைகள் அல்லன. இவை பரம்பரையாகவும், நெடுநாள் அநுபவ சித்தமாகவும், கைவல்லியமான முறைகள். ஒருவரிருவரல்ல. நூற்றுக்கணக்கான அநேகராக உபயோகப் படுத்தப்பட்டுக் குணங்காணப் பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

பாலிய சேஷ்டையினாலும், அறியாமையினாலும் முற்றும் போக நிர்வாக சக்திபற்று, தாது நஷ்டமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினாலும் தீரமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினால் கடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானால் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள்

தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஔஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனோற்பலம், தைரியம், வீரியம் முதலியவைகளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன் விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதாரரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

---

## அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையிலச்சாகி வெளிவரவில்லையென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட ரோகங்களுக்கு நானாவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட்டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆதியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, லிங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யக்கூடியவைகள். இவை யுத்தி புத்தி அனுபவம் முதலியவைகளுக் கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னையும் பொருளையும் அவமே யழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகளல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அனுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லா வகையாலும் லாபத்திற்கே யேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதி நூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட்டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கவசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட தக்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-2-0 வி - பி 1 - 4 - 0.

## தன்வந்திரி சூக்ஷம வைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளியாகாத நூதன சிறிய கிரந்தம். இதில் பற்பல வகை மாத்திரைகள், எண்ணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நான தைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷமமானவைகளும் பல தடவை அநுபவப்பட்ட வைகளுமாம். இதனைப் பார்த்த தக்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்றாய் விளங்கும். தம்முடையவும் தம் மினஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி -1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-0.

## ஞாய அஷ்டாங்க தீபம்.

இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகை தாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞான நூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்போரும் ஆனந்தப் படும்படியாக வெண்பா, துறை, ஆனந்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட்டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி 0-6-0

இராஜ அவுடத சாலை. 12 - வது நெ. அப்புமேஸ்திரி தெருவு, மாபுஸ்கான்தேவடி. மத்ராஸ்.

புத்தகம் - ௩. 1907௵ ஆகஸ்டுமீ 1௨ இலக்கம்-க௩.

சுகாதார போதினி.

க. ம் பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol III. பக்கம் 91.)

இரைப்பை சம்பந்தமான வியாதிகளின் சிகிச்சை.

கமூனி ஜவாரிஷ்.

பாகப்படுத்தின கருஞ்சீரகச் சூரணம் பலம்-உ௦, ஜடாமாஞ்சில் சூரணம் பலம்-க. மிளகுச் சூரணம் பலம்-க, சீமைப் பூங்காவி, அல்லது, நாட்டுப் பூங்காவித்தூள் பலம்-வ, தேன் பலம்-க௫.

செய்முறை:—தேனை அடுப்பின் மீதேற்றிச் சிறுதியா யெரித்துக் காய்ச்சி இரண்டுகொதி வந்தபின்பு மேற்படி சூரணங்களை ஒன்றாக மிஸ்ரமித்து அதிற் சிறுகத் தூவிச் செம்மையாகக் கிண்டிக்கிளறிக்கீழிறக்கி ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்திற் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க௦, ச.

உபயோகம்:—வயிற்றுநோய், இரைப்பையிலுண்டாகி யிருக்கிற கபக்கட்டு, இரைப்பையிலுண்டாகி யிருக்கிற வாயு, அஜீரணம், ஆரம்ப குன்மரோகம், ஆகியவைகளைக் கண்டித்து இரைப்பையைப் பலப்படுத்தி ஜீரண சக்தியை யதிகப்படுத்தும்.

கருஞ்சீரக பாகம்.

கருஞ்சீரகம் பலம்-௫, திராக்ஷக்காடி அல்லது, நாட்டுக்காடி பலம்-க௦, காடியை ஒரு பீங்கான் பாத்திரத்திற் விட்டு அதிற் கருஞ்சீரகத்தைப் போட்டு பனிரண்டு மணிநேரம் ஊறவைத்துப் பிறகு வெயிலில் வைத்துலர வைக்கவேண்டும். ஈரமில்லாமல் உலர்ந்தபின்பு இரண்டாந் தடவையும்-க௫, பலம் காடியை விட்டு முன்போல் வெயிலில் வைத்துலர்த்த வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி மூன்று தடவைகள் செய்து முடிவில் செம்மையாக உலர்த்தி இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கண்ட எடை நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

அவசரமாக வேண்டிய காலங்களில் கருஞ்சீரகத்தில் காடியைவிட்டு அடுப்பில் வைத்து எரித்துக் காடி சுண்டினவுடன் முன்போல் மறுபடியும் காடியை விட்டு முன்போல் சுண்டவைக்க வேண்டும். இவ்விதம் மடக்கிமடக்கி மூன்று தடவைகள் செய்து ஓட்டில் வறுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கண்ட அளவு எடுத்துக்கொள்ள வேண்டும்.

கமூனி ஜவாரிஷ் (வேறு)

பாகப்படுத்தின கருஞ்சீரகச் சூரணம் பலம்-௩, மேற்றேல் சீவின சுக்குச் சூரணம் பலம்-க. ஓமச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், ஜடாமாஞ்சிச் சூரணம், பெருலவங்கப்பட்டைச் சூரணம், சீமைப் பூங்காவி, அல்லது, நாட்டுப் பூங்காவித்தூள் இவை வகை-க-க்கு விராகனெடை-உ, தேன் பலம்-க௫.

செய்முறை:—முன் சொல்லி யிருக்கின்ற பாகப்படியே செய்து கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க௦. ௩.

உபயோகம்:— இரைப்பையிலுள்ள வாயுக்கள், இரைப்பையிலுள்ள குளிர்ச்சி, ஆகியவைகளைக் கண்டித்து இரைப்பையைப் பலப்படுத்தும். ஜீரண சக்தியை அதிகப்படுத்தி ஆகாரத்தைச் செம்மையாக ஜீரணிக்கச் செய்யும். ஆரம்ப குன்மரோகம், வயிற்றில் அங்குமிங்கும் ஓடித் திரியும் ஓடு வாயுக்கள் ஆகியவைகளையும் கண்டிக்கும்.

போதின ஜவாரிஷ்.

உலர்த்தின பொதின இலைச்சூரணம் பலம்-க௦, மேற்றேல் சீவின சுக்குச் சூரணம், ஓமச் சூரணம், கருஞ்சீரகச்சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-௬, ஏலக்காய் விதைச் சூரணம், சோம்புச் சூரணம், மிளகுச் சூரணம் இவை வகை-க-க்குப் பலம்-௨, சீனிசர்க்கரை பலம்-கக.

செய்முறை:—சர்க்கரையிற் கொஞ்சம் ஜலத்தைச் சேர்த்துக் காய்ச்சி இரண்டு கொதிவந்தவுடன் இறக்கி வடிகட்டி மறுபடியும் அடுப்பிலேற்றிச் சிறுதீயா யெரித்துப் பாகுபதத்தில் மேற்படி சூரணங்களையெல்லாம் ஒன்றாக மிஸ்ரமித்து மேற்படி பாகில் சிறுகத் தூவிச் செவ்வையாகக் கிண்டிக்கிளறிக் கீழிறக்கி ஆறினபின்பு பாத்திரத்திற் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க. ௩.

உபயோகம்:—இரைப்பையிலுண்டாகும் வாயுவைக் கண்டிக்கும், மந்தாக்கினி ரோகம், அஜீரண ரோகம், ஏப்பரோகம், ஆகியவைகளைப் போக்கும், இ

ரைப்பையைப் பலப்படுத்தி ஜீரண சக்தியை அதிகரிக்கச் செய்யும்.

### அனிஸூன் ஜவாரிஷ்.

பாகப்படுத்தின அனிஸூன் சூரணம் பலம்-உ; தேன் பலம்-உச.

செய்முறை:—தேனைக் காய்ச்சி இரண்டுமூன்று கொதி வந்தவுடன் மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டி நுரை முதலியவைகளை நீக்கி மறுபடியும் அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து மேற்படி சூரணத்தைச் சிறுகச் சிறுகத் தூவிச் செவ்வையாகக் கிண்டிக்கிளறிக் கீழிறக்கி ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-உ, ௪.

உபயோகம்:—இரைப்பையைப் பலப்படுத்தி ஜீரண சக்தியை அதிகப்படுத்தும். பசிதீபனத்தை விருத்தியாக்கும். கப சம்பந்தத்தினு லுண்டாகும் பேதியைக் கட்டும். வயிற்றுவலி, வயிற்றுப்பிசம், வயிற்றிலுள்ள வாயுரோகம் ஆகியவைகளையும் கண்டிக்கும்.

### அனிஸூன் பக்குவம்.

அனிஸூன் பலம்-டு, சீமைக்காடி அல்லது, நாட்டுக்காடி பலம்-௩0, இதனை ஒரு பீங்கான் பாத்திரத்தில் விட்டு அதில் மேற்படி அனிஸூனைப் போட்டு அந்தக் காடி அதில் சுவறிப்போன பிறகு நிழலில் உலர்த்தி வறுத்து இடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கண்ட எடை எடுத்துக்கொள்ள வேண்டும்.

### மண்டூரே ஜவாரிஷ்.

பாகப்படுத்தின மண்டூரம் பலம்-௩0, சூரத்துக் கடுக்காய்த்தோல். தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, மேற்றேல் சீவின அதிமதுரம், மேற்றேல் சீவின சுக்கு, ஏலரிசி, ஜடாமாஞ்சில், ரோஜாப்பூ, இவற்றைத் தனித்தனி யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் வகை-க-க்குப் பலம்-௩0, சுத்தமான பனைவெல்லம் பலம்-உடு.

செய்முறை:—பனைவெல்லத்தைக் கரைத்துப்பாகுசெய்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து இரண்டு கொதி வந்தபின்பு வடிகட்டித் திப்பிநீக்கி மறுபடியும் அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துப் பாகுபதத்தில் மேற்படி சூரணங்களை யெல்லாம் ஒன்றாக மிஸ்ரமித்துச் சிறுகச் சிறுகத் தூவிச் செவ்வையாகக் கிண்டிக்கிளறிக் கீழிறக்கிக் குளிர ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க-உ௰.

உபயோகம்:—பசிதீபனத்தை அதிகமாக விருத்திசெய்யும், இரைப்பையிலுள்ள துர்ப்பலத்தைநீக்கி அதைப் பலப்படுத்தி அதிலுள்ள வியாதிகளைத் துரத்திவிடும். தாதுநஷ்டத்தை நீக்கி தாது விருத்தியையுண்டாக்கும். வெளுத்த தேகமானது கறுத்தவருணமாகி மினுமினுப்பும் பளபளப்பு முண்டாகும். மூலரோகத்தையும் கண்டிக்கும்.

### மகா திரிப்லாதி.

(a) மஞ்சட் கடுக்காய்த்தோல், சூரத்துக் கடுக்காய்த்தோல், கறுப்பு வருணமான கடுக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, இவை வகை-க-க்கு விராகனெடை-௧உ. (b) அரிசித்திப்பிலி, மிளகு இவை வகை-க-க்கு விராகனெடை-௧உ, மேற்றேல் சீவினசுக்கு, சித்திரமூல வேர்ப்பட்டை, வெட்பாலையரிசி, மேற்றேல்போக்கின எள்ளு, வெள்ளைக் கசகசா, கற்கண்டு, இவை வகை-க-க்கு விராகனெடை-௪, தேன் பலம்-௩௰.

செய்முறை:—(a) யி லுள்ளவைகளை ஒன்றாகவிடித்து வஸ்திரகாயஞ்செய்து பசுவினெய்யைச் சிறுகச் சிறுகத்தெளித்து நெய்ப்பசையுண்டாக்கி வைத்துக்கொள்ளவேண்டும். (b) யி லுள்ளவைகளில் எள்ளையும், கசகசாவையுந் தவிர மற்ற சரக்குகளை ஒன்றாயிடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொள்ள வேண்டும். எள்ளையும், கசகசாவையும் அம்மியில்வைத்து மைபோலப்பொடித்து எல்லாச் சூரணங்களையும் ஒன்றாக மிஸ்ரமித்து வைத்துக்கொள்ள வேண்டும். பிறகு தேனைக்காய்ச்சி இரண்டு மூன்று கொதிவந்தபின்பு மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டித் திப்பி முதலியவைகளைநீக்கி மறுபடியும் அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற சூரணத்தைச் சிறுகத்தூவிச் செவ்வையாகக் கிண்டிக்கிளறிக் கீழிறக்கிக் குளிர ஆறினபின்பு பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க௰, ௩.

உபயோகம்—இரைப்பையைப் பலப்படுத்தும், இரைப்பையிலுள்ள வாயுக்களைக் கண்டிக்கும், உப்பிசத்தைப்போக்கும், தேகவருணக் கெடுதியைமாற்றி நல்ல வருணத்தை யுண்டாக்கும். தலைமூளையிலுள்ள

அசுத்த தோஷங்களை நீக்கி அதைப் பலப்படுத்தும், தலைநோய், கண்வியாதி, காதுவியாதி ஆகியவைகளுக்கும் உபயோகமாம்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் 91

#### காந்தமண் பஸ்பம்.

| | |
|---|---|
| காந்தமண் பஸ்பம் விராகனெடை | உ. |
| ரேவல்சீனிச் சூரணம் குன்றிமணியெடை | உ௦ |
| பரிமள நவச்சாரமது விராகனெடை | ச. |
| இஞ்சிமுரப்பாவை யிடித்துப்பிழிந்த ரசம் விராக | ச. |
| தண்ணீர் பலம் | ச, |

செய்முறை:—இவையெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்து ஆறிலொருபாகத்தைத்தினமொன்றிற்கு இரண்டுதடவையாக உபயோகித்துவந்தால் வயிற்றுநோவு, வாயில் அதிகமாய் எச்சி ஊறுதல் ஆகியவை தீரும்.

வேறு.

| | |
|---|---|
| காந்தமண் பஸ்பம் விராகனெடை | கஓ. |
| நவச்சார உப்பு விராகனெடை | கஓ. |
| இஞ்சி முரப்பாவையிடித்துப் பிழிந்தரசம் விரா | உ |
| பெப்பரமெண்டு ஜலம் பலம் | ௫ |

செய்முறை:—இவையெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்து நான்கு விராகனெடை வீதம் வியாதிக்குத் தகுந்தபடி உபயோகிக்கவேண்டும். அதாவது ஒருதடவை யுபயோகித்துக் குணங்காணுவிட்டால்ஒரு மணிநேரஞ்சென்று மறுபடியும் உபயோகிக்கவேண்டும், வயிற்றிற் புளிப்புண்டாகி அது நிமித்தம் இருதயத்தில் நோவுகண்டால் மேற்படி மருந்தை யிரண்டொருதடவை யுபயோகிக்க வயிற்றிலுள்ள புளிப்பு நீங்கி அந்தநோய் மாறிப்போகும்.

மூத்திரத்தில் செந்நிறமான ஹஸ்மரி (அதாவது மணல்) வந்துகொண்டிருந்தால் மேற்படி மருந்தை யுபயோகித்தால் குணமுண்டாகும். மூத்திரத்தில் மணல்வருவதற்குமுக்கியகாரணம் அதிகப் புளிப்பாகையால் மேற்படி மருந்தானது உவர்ப்பானதாகையால் அதனை மாற்றிவிடுகிறதே காரணம். மலபந்தத்தை நீக்குவதற்காக இலகுபேதி உபயோகிக்கவேண்டிய சமயங்களில் ரேவல்சீனி முதலிய சூரணங்களுடன் மேற்படி காந்தமண் பஸ்பத்தைச் சேர்த்துபயோகிப்பதினால் அதிககுணத்தைத் தரும். இதன் விபரத்தை ரேவல்சீனியென்னும் தலைப்பில்பார்க்கத் தெரியவரும்.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி.

ஈ - ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-92.)

#### கருப்பசூலை யெண்ணெய்.

(a) பேய்க்கொமட்டிச்சாறு, ஆடாதோடை யிலைச்சாறு, அவுரியிலைச்சாறு, திருகுகள்ளிச் சாறு, வீழியிலைச்சாறு, கைபாகந்தகரைச்சாறு, முடக்கொத்தானிலைச்சாறு, வேப்பம்பட்டைச்சாறு, சிற்றாமணக்கெண்ணெய், இவை வகை-க-க்குப் படி-க, வெள்ளாட்டு மூத்திரம், எருக்கிலைப்பழுப்புச்சாறு, சதுரக்கள்ளிச்சாறு, இவை வகை-க-க்குப்படி-அ.

[b] மேற்றோல் சீவினசுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த் தோல், நெலவிமுள்ளி, வெண்காரம், கறியுப்பு, வெடியுப்பு, சினக்காரம், பூநீறு, கல்லுப்பு, வளையலுப்பு, நவச்சாரம், எவட்சாரம், வாய்விளங்கம், சுடுகு, கடுகுரோகணி, யானைத்திப்பிலி, கண்டத்திப்பிலி, மரமஞ்சள், கருஞ்சீரகம் இவை வகை-க-க்குப் பலம்-ஒ.

செய்முறை:—(b) யி லுள்ள சரக்குகளில் இடிக்க வேண்டியவைகளை யிடித்துச் சூரணஞ் செய்து கொள்ளவேண்டும். மற்ற உப்பினங்களை அம்மியில் வைத்துத் தூள்செய்து கொள்ளவேண்டும். இவ்விரண்டையும் ஒன்றாகக்கலந்து மேற்படி சாறுவகைகளை யெண்ணெயுடன் கலந்து அதிற்கலக்கி அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்துக் கடுகு திரள் பதத்தில் இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கிப் பீங்கான்பாத்திரத்தில் வைத்து வாய் பந்தனஞ்செய்து சுமார் நாற்பதுநாள் தானியபுடம்வைத்து உபயோகிப்பது உத்தமம். அப்படிக்கூடாத காலங்களில் சமயோசிதம்போற் செய்யவும்.

இந்த எண்ணெய் எத்தனைகெத்தனை பழமையாகிறதோ அத்தனைக்கத்தனை விசேஷகுணத்தைத் தரும்.

பிரமாணம்:—விராகனெடை க-க௰, தேகசுபாவத்தை இரண்டொருநாள் நிதானித்து அளவை யேற்படுத்திக்கொள்வது சிகிச்சகர்களின் கடமையாம். இது வேகமான மருந்தாயினும் வியாதிக்குத் தகுந்ததுபோலும் தேகசுபாவக்திற்குத் தகுந்ததுபோலும் உபயோகித்துவந்தால் எவ்விதமான கஷ்டரோகங்களும் தீரும். இதனைக் காலையில் ஒருவேளையாக மூன்றுநாளுபயோகித்தாற் போதும். ஒருநாள் இடையில் விட்டு ஐந்தாம்நாள் ஸ்நானஞ்செய்விக்க வேண்டும்,

அனுபானம்:—இளநீர், சோம்புத் தீநீர், சோம்புக் கஷாயம், காப்பித் தண்ணீர், கொத்துமல்லிக் கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:—கருப்பச்சூலை, கருப்பவாயு, கருப்ப விப்புருதி, கருப்பக்கட்டி, சூதகக்கட்டி, கருப்பைரணம், கள்ளிப்பூக் கிரந்தி, அரிகிரந்தி, கருப்பச் சிதைவு ரோகம் முதலிய கருப்பை சம்பந்தமான அநேக ரோகங்கள் தீரும்.

பத்தியம்:-வியாதி கடினமாயிருந்தால் புளி, உப்பு ஆகியவைகளை சுத்தமாக நீக்கி பாற்சாதம், வெந்நீர்சாதம், உபயோகிப்பது உத்தமம். வியாதி யிலகுவா யிருந்தால் உப்பை வறுத்தும் புளியைச் சுட்டும் உபயோகித்துக் கொள்ளலாம் தேக சுபாவம், தேகபலம், வியாதிபலம் ஆகியவைகளை நிதானித்துப் பத்தியம் ஏற்படுத்த வேண்டியது சிகிச்சகர்களின் கடமையாம்.

புத்திர சஞ்சீவி யெண்ணெய்.

வெள்ளைக் குங்கிலியம், பொரித்த வெண்காரம், அரிசித்திப்பிலி, அதிமதுரம், களிப்பாக்கு, மிளகு, லவங்கம், சீரகம் இவை வகை-ங-க்கு பலம்-க, சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு பலம்-ச, மஞ்சள் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி இவை வகை-க-க்கு விராகனெடை-ரு, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, இவை வகை-க-க்கு விராகனெடை-ங சுத்திசெய்த நெல்லிக்காய் கெந்தகம், விராகனெடை-சு, சுத்திசெய்த துருசு, ஊசிக் காந்தம், இவை வகை-க-க்கு விராகனெடை-க௰. எள்ளெண்ணெய் படி-க. எலுமிச்சம் பழச்சாறு படி - க, கோழி யாவாரைச் சாறு படி-க.

செய்முறை.—மேற்கண்ட சரக்குகளில் இடிக்க வேண்டியவைகளை இடித்துச் சூரணஞ்செய்துக் கொள்ளவும். கல்வத்திலரைத்து தூள்செய்ய வேண்டியவைகளை தூள் செய்து கொள்ளவும். இவ்விரு வகைகளையும் ஒன்றாய்க் கலந்து எலுமிச்சம் பழச்சாற்றை அல்லது பசிரியிலைச் சாற்றை சிறுகச் சிறுக வார்த்து வெண்ணெய்போ லரைத்து எடுத்துக்கொள்ளவும். எண்ணெய் மேற்படி சாறுவகைகள் ஆகியவைகளை ஒன்றாய்க்கலந்து முன் அரைத்த சரக்குகளையும் அதிற் கரைத்து அடுப்பேற்றி ஒரு ஜாதிவிறகால் மெதுவா யெரித்து கடுகுதிரள் பதத்தில் இறக்கி ஆறவிட்டு வடிகட்டி பிங்கான் ஜாடியில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை - உ. க௰. இதனை தேக சுபாவ முதலியவைகளை நிதானித்து அனுபவத்தில் இதன் பிரமாணத்தை நிதானித்து மேற்கண்ட அளவிற்குக் குறைத்து அல்லது அதிகப்படுத்தி உபயோகிக்க வேண்டியது.

உபயோகம்:—பிள்ளை யில்லாதவர்களுக்கு வீட்டுத் தூரம் காணுமுன் ங - நாள், ரு - நாள் கொடுக்க வேண்டும். முதல் மாதத்திலேயே கருப்பந்தரிக்கும். அப்படி தரிக்காவிட்டால் மறு மாதத்தில் முன் போலவே கொடுக்க வேண்டும். அப்போது அவசியம் கருப்பந்தரித்து விடும். தெய்வ சங்கற்பத்தால் அப்போதுந் தரிக்காவிட்டால் மூன்றும் மாதமும் முன் போலவே உபயோகிக்க வேண்டும். கடவுள் கிருபையினாலும் பெரியோர்கள் ஆசீர் வாதத்தினாலும் கட்டாயம் கருப்பந் தரித்துவிடும்.

அடிக்கடி கர்ப்பச்சிதைவு உண்டாகும் ஸ்திரீகளுக்கும் மேகச் சூட்டினால் தேகம் உலர்ந்துபோகும் ஸ்திரீகளுக்கும் காலையில் மாத்திரம் ஒவ்வொரு வேளை ஏழுநாள் உபயோகிக்க வேண்டும்.

மேகவெட்டை, குஷ்டம், கைகால் பிடிப்பு, ஆகிய ரோகங்களுக்கு ஒவ்வொரு வேளை காலையில் மாத்திரம் ஒன்பதுநாள் உபயோகிக்க வேண்டும்.

சூதகம் கட்டுப்பட்டிருக்கிற ஸ்திரீகளுக்கு காலையில் மாத்திரம் ஒவ்வொரு வேளை ஐந்துநாள் உபயோகிக்க வேண்டும்.

பாலர்களின் எல்லாவகை மாந்தத்திற்கும் மேற்படி எண்ணெயை விரலில் தொட்டு அதன் நாவில் த

டவி அதன் தாயாருக்கும் காலையில் ஒருவேளை ஐந்து நாள் உபயோகிக்க மேற்படி மாந்தரோகங்கள் தீரும்.

யானைத்தோல் மேகம், யானைக்கால் வாதம் முதலிய எல்லாவகை மேகரோகங்களுக்கும் காலையில் மாத்திரம் ஒவ்வொரு வேளை பதினைந்துநாள் உபயோகிக்கவும்.

மேற்கண்டபடி மேற்கண்ட ரோகங்களுக்கு உபயோகித்தால் மேற்கண்ட நாள்களுக்குள் மேற்கண்ட வியாதிகள் தீர்ந்துபோகும். ஆனால் அந்த வியாதிகள் கஷ்டமானவைகளாயிருந்தாலும் அல்லது நாள்பட்டவைகளாயிருந்தாலும், அல்லது மேற்கண்ட நாட்கள் உபயோகித்து அவ்வியாதிகள் போகாதிருந்தாலும் தேக சுபாவத்தை நிதானித்து இடையில் ஒரு வாரம் அல்லது பத்துநாள் விட்டு மறுபடியும் உபயோகிக்க வேண்டியது. தேக பலமுள்ளதாயிருந்தால் தொடர்ச்சியாகவே உபயோகிக்கலாம். இந்த எண்ணெயானது மிகவும் உயர்ந்ததாகையால், அநுபோக சாலிகள் இதனை உபயோகிக்கும் விதமாக உபயோகித்தால், மேற்கண்ட ரோகங்கள் எவ்வித கஷ்டமானதாயினும் பரிஷ்காரமாக தீர்ந்துபோகும்.

பத்தியம்,—புளி, புகை, ஆகிய இவைகளை நீக்க வேண்டியது அவசியம். சுகுமார தேகிகளானால் கடும் பத்தியமாக வைக்காமல் சற்று இலகுவான பத்தியமாக வைக்கலாம். அவரவர்களின் தேக சுபாவம், தேகபலம், வியாதிபலம் ஆகிய இவைகளை நிதானித்து பத்தியம் ஏற்படுத்த வேண்டியது சிகிச்சகர்களின் அபிப்பிராயமாம்.

குறிப்பு.

சிலர் இதன் பத்தியத்தைப் பற்றி கவனிக்கலாம். பலநாள் துன்பப்படுவதைவிட ஒருவாரமல்லது பத்துநாள் கொஞ்சம் கஷ்டப் படுவது ஒரு பெரிய காரியமன்று. இரசம், வீரம், பூரம் முதலியவைகளை உபயோகித்து தேகம் கெட்டுவிடுவதுபோல இந்த எண்ணெயினால் எவ்வித கெடுதலுமுண்டாகாது. வியாதியின் வேரையறுத்து அதை நிர்மூல மாக்குவது இந்த எண்ணெயின் மகிமையாகையால் இதனைச் செய்து உபயோகிப்பவர்கள் இதனருமை பெருமைகளை செவ்வையாகத் தெரிந்துகொள்ளுவார்கள்.

இந்த எண்ணெயானது எத்தனைநாள் பழமையாகிறதோ அத்தனைக் கத்தனை விசேஷ குணத்தைத் தரும். இவ்விடம் சொல்லியிருக்கிற வியாதிகளைத் தவிர இன்னுமனேக கஷ்ட வியாதிகளும் தீருகின்றபடியால், இஷ்டமானவர்கள் இதனைச் செய்து தாம் தாமே அனுபவ சித்தமாக நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டுமென அவற்றை இங்செழுதாது நிறுத்தினேம்.

கருப்ப ஸ்திரீ குளிர்ச்சி யெண்ணெய்.

சிற்றாமணக் கெண்ணெய் படி-வ, வில்வக்கொழுந்து விராகனெடை - ௫, வில்வவேர்ப்பட்டை விராகனெடை-௫. சீனக்கற்கண்டு விராகனெடை-௩, லவங்கம் விராகனெடை - க௰, வால்மிளகு விராகனெடை க௰,

செய்முறை:—மேற்கண்ட வேர், கொழுந்து, மற்ற சரக்குகள் ஆகிய இவைகளை அம்மியில் வைத்து வெண்ணெய்போலரைத்து எண்ணெயிற் கலக்கி, அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து கடுகுதிரள் பதத்திலிறக்கி வடிகட்டி சீஷாவில் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-உ, ஸ்ரீ. கருப்ப ஸ்திரீக்கு 5-வது மாதமுதல் 10-வது மாதம் வரையில் ஒவ்வொரு மாதத்திலும் இரண்டுநாள் அல்லது மூன்றுநாள் காலையில் மாத்திரம் ஒவ்வொரு வேளை கொடுக்கவேண்டும்.

உபயோகம்:—கருப்ப ஸ்திரீகளுக் குண்டாகும் வாயுகள், இடுப்புநோவு, கைகால் நோவு முதலிய ரோகங்கள் தீரும். பிரசவிக்குங் காலங்களில் சுகப்பிரசவமாக ஹேதுவாக்கும். கருப்பஸ்திரீக்கும் வயிற்றிலுள்ள பிண்டத்திற்கும் பலவிதமான நன்மைகளைச் செய்யும். குழந்தை பிறந்த பின்பும் செவ்வாப்பு முதலிய பாலரோகங்க ளுண்டாகாமல் தடுக்கும். கருப்ப ஸ்திரீக்குண்டாகும் அழலை, நீர்ச்சுருக்கு நீர்க்கடுப்பு முதலிய உஷ்ண சம்பந்தமான ரோகங்களை நீக்கி தேகத்துக்கு ஆரோக்கியத்தையும் உற்சாகத்தையு முண்டாக்கும்.

பத்தியம்:—இதற் கெவ்விதமான பத்தியமுங் கிடையாது.

குறிப்பு.

எல்லாவகை கருப்பஸ்திரீகளும் மேற்கண்ட எண்ணெயை மேற்கண்டபடி உபயோகிக்கலாம். கருப்பமில்லாத ஸ்திரீகளும் உபயோகிப்பதினுல் கருப்பையிலுள்ள உஷ்ணசம்பந்தமான ரோகங்கள் தீரும். கணச்சூடுள்ள குழந்தைமுதலியவர்களுக்கும் உபயோகிக்கலாம்.

கருப்போற்பத்தி எண்ணெய்.

(a) வீழியிலைச்சார்படி-க. தைவேளைச்சார்படி-க. பிரமியிலைச்சார் படி-க. கொட்டைக் கரந்தையிலைச்சார் படி-க, நிலவாகைச்சார் படி-க. பசுவின்பால் படி-க. சிற்றாமணக்கெண்ணெய் படி-க.

(b) மஞ்சள், கடுகு, இந்துப்பு, வெண்காரம், மஞ்சள் கடுக்காய்த்தோல், வெள்ளைப்பூண்டிதழ், ஆண்வசம்பு, மேல்தோல் சீவினசுக்கு, இவை வகை-க-க்கு விராகனெடை-ரு.

செய்முறை:—(b) யிலுள்ளவைகளுள் இடிக்கவேண்டியவைகளை யிடித்தும், தூள்செய்யவேண்டியவைகளைத் தூள்செய்தும், மற்றவைகளையும் ஒன்ருகச் சேர்த்து அம்மியில்வைத்து மைபோல் பொடித்து (a) யிலுள்ள எண்ணெய், சாறு வகைகளெல்லாவற்றையும் ஒன்ருகக்கலந்து அதிற்கரைத்து அடுப்பேற்றி சிறுதீயாயெரித்து கடுகுதிரள் பதத்திலிறக்கி, வடிகட்டி, பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-கூ, உ௦. தேக சுபாவம் முதலியவைகளை நிதானித்து இந்த அளவை அதிகப்படுத்தியும் குறைத்துங் கொள்ளலாம்,

அனுபானம்:—சோம்பு திராவகம், சோம்புக்கஷாயம், சுக்குகஷாயம் முதலிய அனுபானங்களில் உபயோகிக்கலாம்.

வீட்டுதூரமாகி சுத்த ஸ்நானமானபிறகு மூன்றுநாள் காலையில்மாத்திரம் ஒவ்வொருவேளை உபயோகிக்கவேண்டும்.

பத்தியம்:—இதனை உபயோகிக்கும்போது வறுத்த உப்புசேர்த்து புளியில்லாமல் பத்தியமிருக்கவேண்டியது. கடின பதார்த்தங்களை உபயோகிக்காமலிருப்பது உத்தமம். மூன்றுநாள் மருந்து சாப்பிடும்போது மேற்கண்டபடி பத்தியமிருந்து நாலாம்நாள் மருந்து சாப்பிடாமல் அவ்விதமாகவே பத்தியமிருந்து ஐந்தாநாள் முதல் இஷ்டமானதைச் சேர்த்துக்கொள்ளலாம். இந்த எண்ணெயை உபயோகிக்கும்போது பகல் நித்திரைகூடாது.

உபயோகம்:—கருப்பச்சூலை, கருப்பப்புழு, கருப்பக்கிரந்தி முதலிய கருப்பசம்பந்தமான ரோகங்களெல்லாந்தீர்ந்து கருப்பந்தரிக்க ஹேதுவாகும்.

குறிப்பு.

இந்த எண்ணெயை உபயோகித்தான மறுநாட்காலையில் வேலிப்பருத்திவேரைச் சிதைத்து வலதுநாசியில் ஒன்று அல்லது இரண்டுதுளி பிழிந்தால், ஆண்குழந்தையும், இடது நாசியிற்பிழிந்தால் பெண்குழந்தையு முண்டாகும்

(இன்னும் வரும்.)

---

சுகாதார போதினி.

௬-ம் பிரிவு.

பால வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 93.)

பாலபேதி மாத்திரை.

லவங்கம், ஏலம், சன்ன லவங்கப்பட்டை, அதிமதுரம், கோஷ்டம், செண்பகமொக்கு, சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு, இவை வகை-க-க்கு பலம்-ஃ, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—வாளத்தைத்தவிர மற்ற சரக்குகளைத் தனித்தனியிடித்து வஸ்திரகாயஞ்செய்து தனித்தனி மேற்கண்டவைகளை நிறுத்துக்கொண்டு ஒன்ருகமிஸ்ரமித்துக் கொள்ளவும். பிறகு வாளத்தைக் கல்வத்திலிட்டுப்பொடித்து எலுமிச்சம்பழச்சாற்றைச் சிறுகச்சிறுகவார்த்து ஒருமணிநேர மரைத்துப்பிறகு மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து மூன்று சாமநேர மரைத்து அரை குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க, ௨.

அனுபானம்.—வெல்லம், வாழைப்பழம், சுக்குக் கஷாயம், முலைப்பால் முதலியவைகளாம்.

உபபோகம்:—இதனை அரைக் குழந்தைகள் முதல் எல்லாக்குழந்தைகளுக்கும் உபயோகிக்கலாம். ஆனால் வயதிற்குத் தகுந்தபடி மாத்திரைக்ளை அதிகரித்து உபயோகிக்கவேண்டும்.

உபயோகம்:—வயிற்றிலுள்ள கட்டுகள், புளித்த மலங்கள் ஆகிய அசுத்தங்கள் வெளிப்பட்டு, தேக சௌக்கிய முண்டாகும். குழந்தைகளுக்குப் பசிதீபனமுண்டாக்கும். இதனைவாரத்துக்கு இரண்டு அல்லது மூன்றுதடவை உபயோகித்துவந்தால், பிள்ளைகளுக்கு வேறு வியாதிகள் வராமல் பாதுகாத்துவரும்.

பால கட்வோதி மாத்திரை.

மேல்தோல் சீவினசுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, சுத்திசெய்த ஜாதிலிங்கம், இவை வகை-௧-க்கு விராகனெடை-௨, துளசிச்சார், ஆடாதோடையிலைச்சார், வேலி பருத்திச்சார், இவைத் தனித்தனி செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளுள் ஜாதிலிங்கம் தவிர மற்றவைகளைத் தனித்தனியிடித்த சூரணம் மேற்கண்ட அளவு எடுத்து, எல்லாவற்றையும் ஒன்றுய்ச்சேர்த்தெடுத்துக் கொள்ளவும். ஜாதிலிங்கத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து மற்றச்சூரணங்களை அதிற்சேர்த்து எல்லாம் செவ்வையாக மிஸ்ரமிக்கும்படி பத்து நிமிஷமரைத்துத் துளசிச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாமமும் ஆடாதோடையிலைச் சாற்றால் இரண்டுஜாமமும், வேலிப்பருத்தி யிலைச்சாற்றால் யிரண்டுஜாமமுமரைத்து அரை குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை - ௧, ௨.

உபயோகம்:—பாலர்களுக் குண்டாகும் எல்லா வகை பேதிகளையுங் கட்டுப்படுத்தும்.

பத்தியம்,—இச்சாபத்தியம், காரம் மட்டாகச் சேர்க்கவும்.

(இன்னும் வரும்)

---



இதனைத் தயவுடன் முழுதும் வாசித்துத் தங்கள் நண்பர்களுக்கும் வாசிக்கக் கொடுக்கவும்.

---

மகா ஆனந்த புருஷகேம்பீர ஹல்வாவும், திலாவேன்னும் மேற்பூச்சும்.



தளர்ந்த நரம்புகளை உற்சாகப் படுத்தவும், சோர்ந்த பேசிநரம்புகளைப் பலப்படுத்தவும், மேற்பூச்சு மாத்திரம் அதிகமாக உபயோகப்படாது. ஆகையால், மேற் பிரயோகத்துடன் உட்பிரயோகமும் ஆவசியகம். பாலியச் சேஷ்டையினாலும், அறியாமையினாலும்உண்டான தாதுநஷ்டம் முதலிய வியாதிகளுக்கெனபலவித விசித்திர நாமங்களோடு, வெளிப்பட்டுலாவும்போலி விளம்பரங்களை நம்பி ஏமாந்துபோகிறவர்கள்அனேகம். மேற்கண்ட ஔஷதங்கள் அவ்விதமானவைகள் அல்லன. இவை பரம்பரையாகவும்,நெடுநாள் அநுபவ சித்தமாகவும், கைவல்யமான முறைகள். ஒருவரிருவரல்ல. நூற்றுக்கணக்கான அநேகராக உபயோகப் படுத்தப்பட்டுக் குணங்காணப் பட்டவைகள்; இது பல்லாண்டுகளாய் இரகசியமாக வைக்கப்பட்டு வந்தபோதிலும், இதனையுண்டு அநுபவித்த நண்பர்களில் பலரின் விருப்பத்தின்படி லோகோபகாரமாக இப்போது வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

பாலிய சேஷடையினாலும், அறியாமையினாலும் முற்றும் போக நிர்வாக சக்தியற்று, தாது நஷடமடைந்து நிராசையானவர்களும், இதனை உபயோகித்தால் கடவுளினது கிருபையால் அவர்களுக் குண்டான துர்க்குணங்கள் நீங்கி, தேகசக்தி, போகசக்தி முதலியவையுண்டாகும். பல சிகிச்சைகளினாலும் தீராமல் கைவிடப்பட்ட தாது நஷ்டப்பட்டவர்களும் அவநம்பிக்கைப் படாமல் இதனை உபயோகிப்பதினாலகடவுளினது கிருபையால் தங்கள் கோரிக்கையைப் பூரணமாய் அடைவார்களென்பது நிச்சயம். இதன் பெருமையைப்பற்றி எழுதுவதானால் அதிக விரிவெய்தும். ஆகையால் இதனையுண்டு அனுபவிப்பவர்கள்

தாம்தாமே தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இங்கு சுருக்கமாகக் காண்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஔஷதங்களை இருபதுநாள் உபயோகித்தால் சோர்ந்து, வாடி, வதங்கியிருக்கிற தேகமானது, செழித்து, தளிர்த்து, மதத்து, தேகபுஷ்டி, தேகவன்மை, மனோற்பலம், தைரியம், வீரியம் முதலியவைக ளுண்டாகும். இதனைத் தொடர்ச்சியாக உபயோகித்துவந்தால், காயசித்தியையுண்டாக்கும் ஒரு அரிய கற்பத்திற்கிது ஒப்பாகும்.

இதன் விலை மேற்கண்ட ஹல்வா 20 நாள் மருந்துள்ள டப்பி - 1, 20 - நாள் உபயோகிக்கத் திலாவென்னும் மேற்பூச்சு சிறு சீஷா-க-ஆக இரண்டும் ரூபாய் 10.

வி - பி - சார்ஜ் பிரத்தியேகம். இவை கீழ்க்காணும் விலாசதார ரிடத்திற் கைவிலைக்கும் வி - பி - மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

---

## அகஸ்தியர் பள்ளு.

இந்நூதன கிரந்தம் இதுவரையி லச்சாகி வெளிவரவில்லை யென்பது நிச்சயம். பற்பலவித கஷ்டப்படுத்தும் துஷ்ட ரோகங்களுக்கு நானாவித யோகங்களான சூரணம், புகை, உசிதப் பிரயோகம் முதலிய நூதன முறைகள் இதில் சொல்லப்பட் டிருக்கின்றன. இரசவாதத்திற்கு ஆதியாகிய அயச்செம்பு, துருசுச்செம்பு வகைகள், கெந்தகச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார்சிங்கிச் செம்பு, லிங்கச்செம்பு, முதலியவைகளும், அவற்றின் போக்குகளுமான அநேக வகைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. சாதாரணமாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்குகளால் இலகுவாகச் செய்யக்கூடியவைகள். இவை யுத்தி புத்தி அனுபவம் முதலியவைகளுக் கொத்தவைகள். வழிதுறையின்றித் தன்னுயுளையும் பொருளையும் அவமே யழித்து ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகளல்லன. இரசவாதம் பொய்யெனச் சாதிப்பவர்களும் நம்பத்தக்க அறிகுறியான அருமைநூல். இவை பலதடவை அனுபவப்பட்டவைகளாகையால், கிரமப்படி செய்பவர்களுக்கு எல்லா வகையாலும் லாபத்திற்கே பேதுவானவைகள். இரசவாதம் தெரிந்துகொள்ள இச்சையுள்ளவர்களுக்கு இதுவே முதனூலும் ஆதி நூலுமாம். கற்றோர் மற்றோர் முதலிய யாவருக்கும் பிரயோசனப் படும்படி தெள்ளிய தமிழ்வசன நடையிலும் எழுதப்பட் டிருக்கிறது. இகபர சுகானுபவங்களை யிச்சிப்பவர்களுக் கவசியமான நூல். இதன் அருமை பெருமை இதனைப் பார்வையிடுபவர்களுக்கு இதனைப் பார்வையிட்ட தக்ஷணமே தெரியுமாகையால், இங்கு விரித்தெழுதாது விடுத்தனம். பிரதி - க - க்குக் கைவிலை 1-2-0 வி - பி 1 - 4 - 0.

---

## தன்வந்திரி சூக்ஷும வைத்தியம்.

இதுவும் இதுவரையில் அச்சாகி வெளியாகாத நூதன சிறிய கிரந்தம். இதில் பற்பல வகை மாத்திரைகள், எண்ணெய்கள், குழித்தைலங்கள், ஸ்நான தைலங்கள், உசிதமுறைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. இவை அதிக சூக்ஷுமமானவைகளும் பல தடவை அநுபவப்பட்ட வைகளுமாம். இதனைப் பார்த்த தக்ஷணமே அநுபவசாலிகளுக்கு இதன் சீரும் சிறப்பும் நன்றாய் விளங்கும். தம்முடையவும் தம் மின ஜன பந்து மித்திரர்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கத்தக்கது. பிரதி -1 - க்கு கைவிலை ரூபா 0-5-0. வி-பி 0-7-0.

---

## ஞாய அஷ்டாங்க தீபம்.

இது - ஸ்ரீ - ல - ஸ்ரீ - தே - வே - வாலாம்பிகைதாச சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு சிறந்த ஞான நூல். ஆத்மரக்ஷிப்பிற்கு அவசியமான யோகமுறைகள் யாவரும் தெரிந்துகொள்ளும்படியாக மிகவும் தெளிவாகவும், சுருக்கமாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. படிப்போரும் கேட்போரும் ஆனந்தப் படும்படியாக வெண்பா, துறை, ஆனந்தக்களிப்பு, கும்மி முதலிய பல வண்ணங்களாகச் செய்யப்பட் டிருக்கிறது. தன்ரக்ஷிப்பை விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இது இருக்கத்தக்கது.

இதன் பிரதி-1-க்கு கைவிலை 0-4-0, வி-பி 0-6-0

இராஜ அவுடத சாலை. 12 - வது நெ. அப்புமேஸ்திரி தெருவு, மாபுஸ்கான்தேவடி. மத்ராஸ்.

புத்தகம்-௩. 1907ஷு ஆகஸ்டு 15௳ இலக்கம்-௧௪.

சுகாதார போதினி.

௧-ம், பிரிவு.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 98.)

அநுஷ்தாரு என்னும் ஜீரண சக்தி லேகியம்.

நெல்லிக்காய்ச்சாறு பலம்-௩௩, (பச்சை நெல்லிக்காய் அகப்படாத காலங்களில் இருபதுபலம் நெல்லி முள்ளியில் - ௪ - படி ஜலத்தைவிட்டு ஒருநாளூற வைத்து மறுநாள் காய்ச்சி எட்டிலொரு பாகமாகச் சுண்டவைத்து வடிகட்டித் திப்பிநீக்கியெடுத்துக்கொள்ளவும்.)

ரோஜாப்பூச் சூரணம், விராகனெடை-௬, கோரைக்கிழங்குச் சூரணம் விராகனெடை-௫, ஏலக்காய் விதைச் சூரணம் விராகனெடை-௪, சடாமாஞ்சிச் சூரணம், நிலக்கடம்புச் சூரணம், சிற்றரத்தைச் சூரணம், இலவங்கப்பத்திரிச் சூரணம், இவை வகை-௧-க்கு விராகனெடை-௩. தாளிசப்பத்திரிச் சூரணம், றாமிமஸ்தகிச் சூரணம், துரிஞ்சி நாரத்தந்தோற் சூரணம், அவ்லது, கிச்சிலி நாரத்தம் பழத்தோற் சூரணம், கிச்சிலிக்கிழங்குச் சூரணம், இவை வகை-௧-க்கு விராகனெடை-௨, சீனிசர்க்கரை பலம்-௨௬.

செய்முறை:—றாமிமஸ்தகிச் சூரணத்தைத் தவிர மற்றெல்லாச் சூரணங்களேயும் மிஸ்ரமித்து வைத்துக்கொள்ள வேண்டும். நெல்லிக்காய்ச் சாற்றில், அல்லது, நெல்லிமுள்ளிக் கஷாயத்தில் சீனிசர்க்கரையைக் கரைத்து அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்துப் பாகுபதத்தில் முன் சூரணத்தைச் சிறுகச் சிறுகத் தூவி சந்தனமத்தால், அல்லது, வேறுவகை மத்தாற் கடைந்து இறக்கி வைத்துக் குளிர ஆறினபின்பு றாமிமஸ்தகிச் சூரணத்தைத் தூவி மறுபடியும் நன்றாகக் கடைந்து பீங்கான் ஜாடியிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௧. ௨. காலே மாலே யிரண்டு வேளேயும் உபயோகிக்கலாம். ஆகாரத்தின் மீது உபயோகிப்பது உத்தமம்.

உபயோகம்:—ஜீரண சக்தி விருத்தியாகும், மந்தாக்கினி ரோகந் தீர்ந்து பசிதீபன மதிகரிக்கும், பித்த வாந்தி, அரோசகம், ஒக்காளம் முதலியவைகளேக் குணப்படுத்தும், ஈரல், இரைப்பை ஆகியவைகளேப்பலப்படுத்தும்.

குறிப்பு

றாமிமஸ்தகியை லேகியங் குளிர்ந்தபின்பு சேர்க்கவேண்டியது. அப்படிச் செய்யாமல் சூட்டுடன்சேர்த்தால் அதிகக் கசப்பாகிச் சாப்பிடுவதற் கொவ்வாமற்போம்.

இலவண மாத்திரை.

கறியுப்பு, இந்துப்பு, கருப்புப்பு, இவை வகை-௧-க்கு விராகனெடை-௩௰, உலர்த்தின பொதினஇலேச் சூரணம், கிச்சிலிக்கிழங்குச் சூரணம், இவை வகை-௧-க்கு விராகனெடை-௬௰, மஞ்சட்கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், நெல்லிமுள்ளிச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், மிளகுச்சூரணம், மேற்றோல் சீவின சுக்குச் சூரணம், சுட்டெரித்த வசம்புப் பற்பம், கருஞ்சீரகச் சூரணம், நற்சீரகச் சூரணம், வளேயலுப்புத்தூள், இவை வகை-௧-க்கு விராகனெடை-௧௧௰. கொத்துமல்லி விதைச்சூரணம், விராகனெடை-௮, சோம்புச் சூரணம். ஓமச் சூரணம், இவை வகை-௧-க்கு விராகனெடை-௨0, எலுமிச்சம்பழச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, அல்லது, நெல்லிமுள்ளிக் கஷாயம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட இலவணங்களேயும், சூரணங்களேயும் ஒன்றாக மிஸ்ரமித்து ஒரு பீங்கான் பாத்திரத்திற் போட்டு எலுமிச்சம் பழச்சாற்றைவிட்டுப் பிசைந்து மூன்றுநாள் வைத்துப் புளிப்பேற்றி வெயிலில் வைத்துலர்த்திக் கொள்ளவேண்டும். பின்பு முன்போலவே நெல்லிக்காய்ச் சாற்றை, அல்லது நெல்லிமுள்ளிக் கஷாயத்தை விட்டுப் பிசைந்து மூன்றுநாள் வைத்துப் புளிப்பேற்றி நான்காநாள் வெயிலில் வைத்துலர்த்திக் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமநேரமரைத்து அரை விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி யெடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-௧. ௨. ஆகாரஞ் செய்தபின் உட்கொள்வது சிரேஷ்டம். காலே மாலே யிரண்டுவேளேயும் உபயோகித்து வரலாம்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுவைக்கண்டிக்கும். இரைப்பையைப் பலப்படுத்தி சீரண சக்தியை விருத்திசெய்யும். மந்தாக்கினியைக் கண்டிக்

து தீபாக்கினியை விருத்திசெய்யும். விக்கலைக் கண்டிக்கும்.

### ஆவாரை லேகியம்.

குச்சி, காம்பு முதலியவை நீக்கி வெயிலிலுலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரத்துநில ஆவாரைச் சூரணம், மேற்புறணியைச் சீவி உள்நரம்பை நீக்கிப் பாலில் வேகவைத்துலர்த்தின சீமைச்சிவதை,அல்லது, காட்டுச் சிவதைவேர்ச் சூரணம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், மேற்றோலைச் சீவியிடித்து வஸ்திரகாயஞ்செய்த சுக்குச்சூரணம் இளவறுப்பாய் வறுத்திடித்து வஸ்திரகாயஞ் செய்த அரிசித்திப்பிலிச் சூரணம்; மாதுளம்பழச் சுளையை வெயிலுலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-உ, சீனிசர்க்கரை பலம்-ஙு.

செய்முறை:—சக்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் மேற்படி சூரணங்களைச் சிறுகச் தூவி நன்றாய்க் கடைந்துவைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-உ, க, காலையில் வெறும்வயிற்றிற் சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—இலகு பேதியாகும், இரைப்பையிலுள்ள துர்மலங்களை நீக்கி அதைப் பலப்படுத்தும், பசிதீபனம் அதிகப்படும்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

உ-ம் பிரிவு.



### குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் -99)

முன்தொடர்ச்சி (Vo - 3 - பக்கம் -99)

### கோய்னைன்

### (Sulphate of Quinine)

இது பார்க் ப்வுடர் என்னுஞ் சூரணத்திலிருந்து எடுக்கிற உப்பு. இது ஒரு பிரசித்தமான சுரமருந்து. இது இங்கிலீஷ் மருந்து ஷாப்புகளிற் பெரும்பான்மையுங் கிடைக்கும். இந்த உப்பு நூற்போன்ற கம்பிகளைப்போன்றும், பனிக்கட்டியைப்போன்ற வெள்ளை நிறமுடைய வைகளாகவு மிருக்கும். பளபளப்பாயிருக்கும். வாசனையில்லை. அதிகக் கசப்புடையது. காற்றுப்படப் புட்டியைத் திறந்துவைத்தால் உப்பாயிருப்பது மலர்ந்து சூரணமாகிவிடும். இந்தச் சரக்கு விலையுயர்ந்த தாகையால் சர்க்கரை, அரரோட்மா முதலியவைகளோடு கலந்து விற்பதுண்டு. இது தனியாய் ஜலத்திற் கரையாது. ஆனால் இதனை ஜலத்திற்போட்டு ஒரு குன்றிமணியெடைக்கு இரண்டு, அல்லது, நான்குதுளி வீதம் துளாவின கெந்தகத்திராவகத்தை விட்டால் உடனே கரைந்துபோகும். குவய்னை கலந்திருக்கிற ஜலம் கொஞ்சம் நீலச்சாயலுள்ளதா யிருக்கும்.

தற்காலத்தில் பலவகைக் குவய்னை கடையில் விற்கப்படுகிறது. ஆனல், ஹாவோர்ட் மார்க்குள்ள குவய்னைன்தான் அதிக சிரேஷ்டமானது. இது ஹாவொர்ட் என்பது குவய்னைசெய்யும் ஒருவர்பெயர். சீமையில் குவய்னை செய்கிற கம்பெனிகள் அநேகமுண்டு. ஆனல், மேற்படி ஹாவொர்ட் என்பவர் உண்மையாக உயர்ந்த விதமாய்ச் செய்வதினல் அவர் பெயர் பிரசித்தியாய் விட்டது. மேலும் அவர் கம்பெனியா லனுப்பப்படும் சீஷாக்களின்மீது அவர் முழுப்பெயரெழுதப்பட்டிருக்கும். ஆனல் சில மோசக்கார வியாபாரிகள் அந்தப் பெயருள்ள சீஷாவிலுள்ள மருந்து செலவாகியவெறும்புட்டிகளில் தங்களாற் செய்யப்பட்ட கொய்னைவையடைத்து ஹாவொர்ட் கம்பெனிப் பெயரால் புரட்டாக விற்கின்றார்கள். இவ்வித மோசம் இந்தியாவில் மாத்திரமல்ல. சீமைமுதலிய விடங்களிலும் நடந்துவருகிறது. ஆகையால், அசல் தரமான குவய்னை இக்காலத்தில் அகப்படுகிற தில்லையெனச் சிலர் சந்தேகிப்பதற் கிடமாகிறது. குவய்னைவைக் கண்ணுற் பார்ப்பதினல் மாத்திரம் எது அசலானது? எது கலப்பானது? என அறிந்துகொள்ள முடியாது. ஆனல் கீழ்க்கண்ட விதமாகப் பரிக்ஷித்துத் தெரிந்துகொள்ளலாம். அதாவது:—

ஒரு குன்றிமணியெடை குவய்னைவில் நான்குதுளி விளாவின கெந்தகத் திராவகத்தைவிட்டு அதில் இரண்டு விராகனெடை ஜலத்தைச் சேர்த்தால் கலப்பற்ற குவய்னைவாயிருந்தால் எவ்வித அணுக்களும் மேவேயும் மிதக்காது, கீழேயும் ஆழ்ந்து தங்காது. எல்லாங் கரைந்துபோகும். அந்த ஜலமானது கொஞ்சம் நீலவர்ணமுள்ளதாக விருக்கும்.

இப்படிக்கில்லாமல் ஜலத்தின்மேலே ஏதேனும் அணுக்கள் மிதந்தாலும், அல்லது, ஜலத்திற்குள் ஏதேனும் அணுக்கள் ஆழ்ந்தாலும், அந்த ஜலமானது கொஞ்சம் நீலவர்ணச் சாயலாயில்லாமல் வெண்ணிற

முள்ளதா யிருந்தாலும், அந்த குவய்னா கலப்பானதெ
ன அறியவேண்டும்.

ஜலத்தின்மீது அணுக்கள் மிதக்காமலும், ஜலத்திற்குள் அணுக்கள் ஆழாமலும் எல்லாங்கரைந்துபோய் நீலவர்ணச்சாயல் மிகவுங் குறைந்திருந்தால் அதுமட்டமான குவய்னாவெனத் தெரிந்துகொள்ள வேண்டும்.

இந்தப் பரீக்ஷையை அவரவர்கள் கையினால் ஒருதடவைசெய்து தாம்தாம் நேரே பார்த்துக்கொண்டால், குவய்னாவின் உயர்வு தாழ்வை இலகுவாய்த்தெரிந்துகொள்ள ஏதுவாகும்.

கொய்னாவைச் சர்க்கரையுடன் கலந்து கொடுப்பதுமுண்டு, கொய்னாவை வாயிற்போட்டுக்கொண்டு அதன்மீது கொஞ்சம் ஜலத்தைக் குடிப்பாட்டி விழுங்கச்செய்வது முண்டு, அல்லது, கொஞ்சம் பாலிற் சேர்த்துக் குடிப்பாட்டுவது முண்டு. பாலிற்கலந்து குடிப்பாட்டுவதினால் அதின் கசப்பாகிய ருசி தெரிகிறதில்லை. அரைக் குன்றிமணியெடை குவய்னின் ருசியை மாற்றுவதற்கு சுமார் ஒருபலம் பசும்பால் அவசியமாயிருக்கும். அல்லது, மேற்கண்டபடி விளாவின கெந்தகத்திராவகத்திற் சம்பந்தப்படுத்திக் கொடுப்பது முண்டு. இப்படிச் செய்வது பெரும்பான்மையும் மலத்தைக்கட்ட உபயோகமாம். ஆனால், இருமலிருக்கும்போது புளிப்பு வஸ்துக்களைக் கொடுப்பது நம்மவர்களுக்கு ஏற்காதாகையால் அவ்விதஞ்செய்ய அநேகர் இசையார்கள். கெந்தக ஜலமானது ருசியிற் புளிப்பாயிருந்தபோதிலும் அது இருமலைச் சாந்தப்படுத்தும். இது பெரும்பான்மையும் மாத்திரை ரூபமாக உபயோகப்படுத்தப்படுகிறது. நோயாளி இலகுவாய் விழுங்கக்கூடும். இதன் ருசி தெரியாமலிருக்கும். இதனை குல்கந்து, சர்க்கரைப்பாகு, கருவேலம்பிசின் பாகு ஆகியவைகளில் ஒன்றில்சேர்த்து மாத்திரைகளாகச் செய்யப்படுகிறது. இதனுடன் எலுமிச்சம்பழச்சாறு, திராக்ஷை யுப்பு எலுமிச்சம்பழ உப்பு ஆகியவைகளில் ஒன்றைச்சேர்த்து மாத்திரைசெய்தால் மிகவுஞ் சிரேஷ்டமானதா யிருக்கும்.

(இன்னும் வரும்)

## சுகாதார போதினி.

### ௩-ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

• முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-102.)

### சூதகக் கட்டு லேகியம்.

குப்பைமேனி யிலை பலம்-௫, கருஞ்சீரகம் விராகனெடை-௩௫, பனைவெல்லம் பலம்-௨; நெய் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—சட்டியிற் கொஞ்சம் நெய்தெளித்து நெய் சூடு கண்டவுடன் மேற்படி யிலையைப்போட்டு வறுக்கவேண்டும். மொறுமொறென வறுபட்டபதத்திலெடுத்துக் கொள்ளவும். சீரகத்தை வறுத்துத் தூள்செய்து முன் வறுத்த இலையையும் சேர்த்து அம்மியில்வைத்து வெண்ணெய்போ லரைத்துக்கொள்ளவும். பனைவெல்லத்திற் கொஞ்சம் ஜலத்தைவிட்டுக் கரைத்து அடுப்பேற்றி ஒரு கொதி வந்தவுடன் வடிகட்டித் திப்பிநீக்கி மறுபடியும் அடுப்பேற்றிப் பாகுபதத்தில் முன் சித்தப்படுத்தி யிருப்பதைச் சேர்த்துக் கடைந்து லேகியபதமாக எடுத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-௧௨, ௨, காலை மாலை யிரண்டு வேளையும் ஏழுவேளை சாப்பிட்டாற் போதுமானது.

உபயோகம்:—எல்லாவகைச் சூதக பந்தகங்களும் நீங்கும்.

### சூதகவாயு உப்பு.

உப்பு பலம்-அ, கொட்டைக் கரந்தையிலைச்சாறு செல்லத்தக்க அளவு, சிறு செருப்படிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—உப்பைக் கல்வத்திலிட்டுக் கொட்டைக் கரந்தைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமநேர மரைத்து பில்லைதட்டி யுலர்த்தி ஒட்டில் வைத்து மேலோடு மூடி-டு, சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் ஏழு பங்கெடை விராட்டியிற் புடமிட்டாறினபின் னெடுத்து முன் சாற்றையே விட்டு முன்போலரைத்து முன்போற் புடம்போடவும். இவ்விதம் மடக்கி மடக்கி ஐந்து புடமான பின்பு முன் போலவே சிறு செருப்படிச் சாற்றில் மடக்கி மடக்கி

ஐந்து புடமிடவும். ஆகப் பத்துப் புடமுந் தீர்ந்தால் உப்பானது செங்கழுநீர்ப் புஷ்பம்போல செந்தூரமாகி யிருக்கும்.

பிரமாணம்:—விராகனெடை-க. முதல்நாள் பேதிக்குக் கொடுத்து வயிற்றிலுள்ள துர்மலங்களை நீக்கி மேற்படி யுப்பை மேற்கண்ட பிரமாணப்படி வெள்ளைப்பூண்டுத் தைலத்தில் அனுபானித்துக் கொடுக்க வேண்டும். மறுநாட் காலையிலும், மூன்றுநாட் காலையிலும் இவ்விதமே கொடுக்கவேண்டும்.

உபயோகம்:—சூதகவாயு, சூதக்கட்டு, அக்கிரம சூதகம் முதலிய சூதக சம்பந்தமான எல்லா வியாதிகளும் தீரும்.

பத்தியம்:—மருந்து சாப்பிடுகிற மூன்றுநாளும், மறுஇரண்டுநாளும் பச்சையரிசியும், பச்சைப்பயறுஞ் சேர்ந்த கஞ்சிஆகும். மற்றொன்று மாகாது. ஆறும் நாள் தலைமுழுகி வறுத்த உப்பைச் சேர்த்துக் கொள்ளவும். மறுநாள் முதல் எல்லாவற்றையும் சேர்த்துக் கொள்ளலாம்.

குமட்டிக்கா யுப்பு.

ஆற்றுத் தும்மட்டிக்காய்ச்சாறு படி-க, கறியுப்பு படி-க. எருமைமோர் படி-உ.

செய்முறை:—மோரை ஒரு வாயகன்ற புதியமண் சட்டியில் விட்டு அதில் உப்பையும் சாற்றையும் விட்டுக் கரைத்து ஒரு இரவு முழுவதும் வைத்துக் காலையில் வலைத்துணியில் வடிகட்டி மஷ்டை நீக்கிச் சட்டியைக் கழுவி அதில்விட்டு அடுப்பேற்றிச் சிறுதீயா யெரிக்கப் பழுப்புச் சர்க்கரைபோல உப்பாகும். அதை யெடுத்து வெயிலிலுலர்த்திச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க-உ, இதனை வாயில் விட்டுச் கொஞ்சம் ஜலம்சாப்பிட அரைமணி நேரத்திற் குணந்தெரியும்.

உபயோகம்:—சூதகவாயு, சூதகபந்தம், குன்மம், சூலை, அஜீரணம், புளியேப்பம், முதலியவைகள் தீரும்.

சூதகவாயு எண்ணெய்.

பேய்க்குமட்டிச் சாறுபடி-௨, மலைவேம்பின் இலைச்சாறுபடி-௨, சித்திரமூல இலைச்சாறு படி-௨, வெண்ணிறமான வெங்காயச்சாறு படி-௩, எலுமிச்சம் பழச்சாறுபடி-௩, விளக்கெண்ணெய் படி-௨.

செய்முறை:—எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து காய்ச்சி மெழுகுபதத்தி லிறக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க௨, உ.

அனுபானம்:—குளிர்ந்தஜலம்.

உபயோகம்:—சூதகட்டு, சூதகவாயு, அக்கிரம சூதகம், ஆகியவைகள் தீரும்.

சூதகட்டியுள்ள சிலருக்குக் கட்டி யுடைந்து இரத்த சிராவக முண்டாவது முண்டு. இரத்தம் அதிகமாய்ப் போனால் குளிர்ந்த ஜலத்தைப் பானஞ்செய்தால் உடனே நின்றுவிடும்.

பத்தியம்:—வறுத்தஉப்பு, சுட்டபுளி, துவரை, முருங்கைப்பிஞ்சு, கத்திரிப்பிஞ்சு, வெள்ளாட்டிறைச்சி ஆகியவைகளாகும்.

இன்னும் வரும்.



சுகாதார போதினி.

ச-ம் பிரிவு



பால வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 103)

மாந்தக் குளிகை.

சுத்திசெய்த இரசகர்ப்பூரம், கடுகுரோகணி, வாய்விளங்கம், மேற்றோல் சீவினசுக்கு, அரிசித்திப்பிலி, மிளகு, சுட்டெரித்த வசம்புச்சாம்பல், இவை வகை-க-க்குப் பலம்-௨. சுத்திசெய்த வாளம் விராகனெடை-க, உலர்த்தின உத்தாமணி வேர்ப்பட்டை பலம்-௩, கோழிமுட்டை வெள்ளையம்பிலி-க.

செய்முறை:—பூரமும் வாளமுந்தவிர மற்றச் சரக்குகளையிடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவேண்டும். வெள்ளையம்பிலியை இரும்புக்கரண்டியில் வார்த்து அதிற் பூரத்தைப்போட்டு அம்புலி சுண்டும்படியாகச் சுண்டவைத்து எடுத்துக் கொள்ளவும். வாளத்தைக் கல்வத்திற்போட்டுப் பொடித்துப் பூரத்தையும் பொடித்துச்சேர்த்து முன் சித்தம்படுத்தின சூரணத்தையுஞ்சேர்த்து முலைப்பாலைச் சிறுகச்சிறுகவார்த்து இரண்டுசாமமரைத்து அரைக் குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மூன்று மர்தத்திய குழந்தைகளுக்கு இரண்டுமாத்திரை, பெரிய பிள்ளைகளுக்கு நான்கு மாத்திரை.

உபயோகம்:—எல்லாவகை மாந்தரோகங்களும் தீரும்.

சவலை மாந்த மாத்திரை.

ஜாதிக்காய், இலவங்கம், மேற்ரோல் சீவினசுக்கு மிளகு, வசம்பு, கஸ்திமஞ்சள், ஏலம், சடைக்கஞ்சா, கற்கண்டு, மாசிக்காய், தாளிசப்பத்திரி, சீரகம், ஓமம், அரிசித்திப்பிலி, ஆமையோட்டுப பற்பம், வெள்ளைப்பூண்டு இவை வகை-க-க்குப் பலம்-வ.

செய்முறை:—மேற்படி சரக்குகளுள் இடிக்க வேண்டியவைகளை யிடித்துச் சூரணஞ்செய்து மற்றவைகளையுஞ்சேர்த்து வெந்நீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து அரைக்குன்றிமணியெடை மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ, முலைப்பால், வெந்நீர் முதலியவைகளில் அனுபானித்துக் கொடுக்கவும்.

உபயோகம்:—சவலைப் பிள்ளைகளுக்குக் காணும் ஏழுவகை மாந்தரோகங்களும் தீரும்.

பாலாமிருத சஞ்சீவி.

கோரோசனை, ஏலரிசிச் சூரணம், அதிமதுரச் சூரணம், செண்பகப்பூச் சூரணம், சாஸ்திரபேதிச்சூரணம் இவை வகை-க-கக்கு விராகனெடை - க, வெட்டிவேர், விலாமிச்சம்வேர் இவை வகை-க-க்குப் பலம்-௧, இவ்விரண்டையும் சேர்த்திடித்து ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து வடிகட்டின கஷாயம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளைக் கல்வத்திலிட்டு மேற்படி கஷாயத்தைச் சிறுகச் சிறுக வார்த்துஇரண்டு ஜாமமரைத்து குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க. க௧.

அனுபானம:—முலைப்பால், வெந்நீர், சர்க்கரை.

உபயோகம்:—எட்டுவகை மாந்தரோகங்கள், நீர்ப்படுவன், அஸ்திசுரம், வெப்பு முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

பால சஞ்சீவிக் குளிகை.

மேற்ரோல் சீவின சுக்கு, ஏலம், இலவங்கம், மராட்டிமொக்கு, அரிசித்திப்பிலி, தாளிசப்பத்திரி, இரசசெந்தூரம், ஆமையோட்டுப் பற்பம், குங்குமப்பூ கோரோசனை, இவை வகை-க-க்கு விராகனெடை-க, சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு விராகனெடை-கக, முலைப்பால், துளசிச்சாறு, கைம்மாறு வெற்றிலைச்சாறு இவை வகை-க-க்குச் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளில் இடிக்க வேண்டியவைகளைத் தனித்தனி யிடித்துத் தனித்தனி நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். வாளத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து முலைப்பாலைவிட்டு மைபோலரைத்து பிறகு குங்குமப்பூவைச் சேர்த்தரைத்து அது நன்றுயரைபட்ட பின்பு கோரோசனம், இரசசெந்தூரம், ஆமையோட்டுப் பற்பம் ஆகியவைகளைச் சேர்த்து அரைத்து அவை நன்றுயரைபட்டபின்பு மற்ற சூரணங்களையுஞ் சேர்த்து முலைப்பாலைச் சிறுகச்சிறுகவார்த்து இரண்டுசாமமரைத்து, துளசிச்சாற்றிலொருசாமமும் மேற்படி வெற்றிலைச்சாற்றிலொரு சாமமு மரைத்து, அரைக் குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-க௧.

அனுபானம்:—முலைப்பால், வெற்றிலைச்சாறு, துளசிச்சாறு முதலியவைகளாம்.

உபயோகம்:—பிள்ளைகளுக் குண்டாகும் எல்லாவகைரோகங்களுக்கும் உபயோகிக்கலாம். இந்த மருந்தின் விசேஷம் அனுபவ சாலிகளுக்கு நன்கு புலப்படும்.



சுகாதார போதினி.

௫ - ம் பிரிவு

மூலரோகம்

முன்தொடர்ச்சி (vol- III பக்கம். 78)

மூலரோகச் சிகிச்சை.

பசுவின் வெண்ணெய் விராகனெடை-௬, கற்கண்டுத்தூள் விராகனெடை-௩, இவ்விரண்டையு மிஸ்ரமித்துப் பிரதி காலையிலும் சாப்பிடவேண்டும். இவ்விதம் தவறுமல் ஒரு மாதஞ்செய்து வந்தால் இரத்தமூலம், வாயுமூலம் ஆகியவைகள் குணப்படும். தேகத்திலுள்ள வறட்சி முதலியவைகள் தீரும்.

வேறு

கரியபோளம் விராகனெடை-௬, வேப்பங்கொட்டைப் பருப்பு விராகனெடை-௬, மிளகுத்தூள் விராகனெடை-கஉ.

செய்முறை:—கரிய போளத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து வேப்பங்கொட்டைப் பருப்பைச் சேர்த்தரைத்து இரண்டும் அரைபட்டபின்பு மிளகுத் தூளையுஞ் சேர்த்துத் தண்ணீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமநேர மரைத்துக் கடலைப் பிரமாணமுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும்,

பிரமாணம்:—மாத்திரை-௧௪, ௧௨, குளிர்ந்த ஜலத்துடன் சாப்பிடவேண்டும். இவ்விதம் காலைமாலையிரண்டு வேளையும், அல்லது, காலையில் ஒருவேளை மாத்திரம் வியாதிபலம் தேகபலம் முதலியவைகளுக்குத் தகுந்தபடி உபயோகிக்க வேண்டும். இன்னும் வியாதிபலத்திற்குத் தகுந்தபடி ஒருமாதம், அல்லது, நாற்பதுநாள் தொடர்ச்சியாகவும் உபயோகித்துவர வேண்டும்.

உபயோகம்:—இரத்தமூலம், வாயுமூலம், வறள்மூலம் முதலிய மூலரோகங்கள் தீரும்.

வேறு

வெண்ணிறமான வெங்காயத்தைச் சிறு துண்டுகளாக அறுத்துப் பசுவினெய்யில் வறுத்து மரவுரலில் மைப்போல இடித்து அடையாகச்செய்து ஆசனவாயில் வைத்துக்கட்ட சில நிமிஷங்களுக்குள் மூலமுளைகளிலுள்ள எரிவந்தம் அவற்றாலுண்டான வீக்கம் முதலியவைகள் தீர்ந்து சௌக்கிய முண்டாகும்.

வேறு

வெண்ணிறமான வெங்காயத்தை ஜலத்திற்போட்டு அழியும்படியாக வேகவைத்து மைபோல இடித்துப் பசுவினெய்யைக் காய்ச்சி இளஞ்சூட்டுடன் மூலமுளையின்மீது வைத்துக்கட்ட அங்குள்ளநோவு, எரிவந்தம், வீக்கம் முதலியவைகள் தீரும்.

வேறு.

ஆடாதோடை யிலை பலம்-௰, சுவற்று முள்ளங்கியிலை பலம்-௰, எள்ளெண்ணெய் பலம்-௨௰.

செய்முறை:—மேற்படி யிரண்டுவகை யிலைகளையும் - ௨- ஆழாக்கு ஜலம்விட்டு அடுப்பேற்றி மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின்பு கீழிறக்கி இளஞ்சூடாக ஆறினபின்பு நன்றாகப் பிசைந்து வடிகட்டித் தெளிவித்த கஷாயத்துடன் எண்ணெயைச் சேர்த்து அடுப்பேற்றிக் காய்ச்சி நீரெல்லாஞ் சுண்டி கடுகு திரள்பதத்தில் எண்ணெயை மாத்திரம் வடிகட்டிச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இதனை மூலமுளைகளின்மீது இரண்டு மூன்று தடவை தினம்தடவி வரவேண்டும். இவ்விதம் ஒருவாரம் அல்லது பத்துநாட் செய்துவந்தால் மூல முளையிலுள்ள வேதனைகள், எரிவந்தம், முதலியவைகள் தீரும்.

வேறு.

வெங்காயச் சமூலச்சாறு பலம் - ௫, நல்லெண்ணெய் பலம்-௰, இவ்விரண்டையும் சேர்த்துக்காய்ச்சி நீர்சுண்டின பின்பு எண்ணெயை யெடுத்து அதில் மூன்று விராகனெடை மைசாக்ஷியைச் சேர்த்து மைப்போலரைத்துச் சிமிழில் வைத்துகொண்டு மூலமுளைகளின்மீது மேற்பூச்சாகப் பூசிவர அங்குள்ள வேதனை, எரிவந்தம், முதலியவைகள் தீருவதுடன் மூலமுளைகளுங் கரைந்துபோம்.

வேறு.

மிருதார்சிங்கியை சம்பங்கி யெண்ணெயில் பித்தளைப் பாத்திரத்தில் தேய்த்து மூலமுளைகளின்மீது பூசிவர மூலமுளைகளின் வேதனை, எரிவந்தம் முதலியவைகள் தீர்ந்து மூலமுளைகள் கரைந்துபோகும். ஆனால் அப்போதைக் கப்போது புதிதாக இழைத்துத் தடவவேண்டும்.

வேறு.

ஒட்டை யிலத்தியை உலரவைத்துப் புளியமரத்தின் மேற்புறணியை நெருப்பாக்கி அதிற்போட்டு முறைப்படி ஆசனத்திற் புகை காட்டிவர, மூலமுளையிலுள்ள வேதனை, வீக்கம் முதலியவைகள் தீரும்.

வேதுபிடிக்கும் முறையாவது:-ரோகியைச் சக்கரமாகத்துவாரமிட்டஒரு நாற்காலியி லுட்காரச்செய்து நாற்காலிக்குங்கீழ் மேற்படி நெருப்புச்சட்டியை வைத்துப் புகை வெளியிற் போகாமல் நாற்காலியைச் சுற்றிலும் துப்பட்டியால் திரைகட்டி நெருப்பில் மேற்படி யிலத்திகளைப் போடவேண்டும். அதிலிருந்துண்டாகும் புகையானது ஆசனத்திற் படும்படியாகவு மிருக்கவும் வேண்டும். இவ்விதம் பத்து நிமிஷமுதல் பதினைந்து, இருபது நிமிஷம் வரையிற் புகைப்பிடிக்கலாம். தினம் இரண்டு அல்லது மூன்று தடவையுஞ் செயலாம். வியாதிக்குத்தகுந்தபடி ஒருவாரம் பத்துநாள் இரண்டுவாரம் வரையிலும் செய்யலாம். இவ்விதம் செய்து வருவதால் மூல முளையிலுள்ள வேதனைகள் தீர்ந்து அவை கரைந்துவிடும்.

வேறு.

மேற்கண்ட விதமாகவே ஒறுயின் விட்டையைச் செய்வதினாலும் மேற்கண்ட குணங்களுண்டாகும்.

(இன்னும் வரும்.)

## சுகாதார போதினி.

௬-ம் பிரிவு



### இரசவாதம்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 78.

இரசவாதமானது பலவகை யாயினும் முக்கியமாய் ஜடவாதம், சூக்ஷுமவாதமென இருவகையுண்டு. அதில் சூக்ஷுமவாதமாவது:—குருபற்பம், செந்தூர முதலியவைகளை முடித்துப் பலவுலோக சம்பந்தமில்லாமல் ஒரு உலோகத்தின்மீது கொடுத்து வர்ணிப்பதாம். இவ்விருவகையில் இதுவே சிரேஷ்டமானதும்; முதன்மையானதுமாம். ஆனால், இது எல்லோருக்கும் கைவல்லியமாவது கொஞ்சம் பிரயாசை யாகையால் இதனைநீக்கி ஜடவாதத்தை முன்னர் எழுத ஆரம்பிப்பாம். இதற்கு உலோக வாதமென்றும் பெயர், உலோக வாதமாவது:—இரண்டு அல்லது, பலவுலோகங்களை முறைப்படி தொந்திப்பதாம், ஆரம்பமாய் இரசவாதத்தைக் கற்றுக்கொள்ள வேண்டியவர்கள் முன்னர் முன்னர் இம்முறைகளை அப்பியாசித்துப் பின்னர் சூக்ஷுமவாதத்திற்குப் பிரயத்தனப்படவேண்டும். ஆகையால், இந்தத் தொழிலிற் பிரியமுள்ளவர்கள் பின்னெழுதும் விஷயங்களைக் கவனிக்க வேண்டியது ஆவசியகம்.

தாம்பிரத்தை மடித்து அதை வெள்ளியுடன் சேர்த்து வெள்ளிக்கு வர்ணமுண்டாக்கி அதனுடன் தங்கத்தைச் சேர்த்துக் கொள்வதுதான் ஜடவாதத்தில் ஆகியானதும் பிரதான மானதுமாம். ஆகையால் தாம்பிரத்தை யெவ்விதம் மடிக்கவேண்டும், அதை யெவ்விதம் வெள்ளியுடன் சேர்க்கவேண்டும், எவ்விதம்வெள்ளிக்கு வர்ணமுண்டாக்க வேண்டும் என்னும் விபரங்கள் பல கிரந்தங்களிலும் பலவாறாக எழுதப்பட்டிருக்கின்றன. ஆகையால், அவற்றுள் முக்கியமானவைகளும் கைவல்யமானவைகளுமான இரண்டொரு முறைகளையும் அந்த விஷயங்களில் முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய சில விதி விலக்குகளையும் எழுதுவதால் இத்தொழிலிற் பிரியமுள்ள அபிமானிகளுக்குப்போதுமானவைகள் என உத்தேசிக்கப்படுகிறது.

1. சுத்தியான தாம்பிரம் ஒருபங்கு, நெல்லிக்காய்க் கெந்தகம் இரண்டு பங்கு, தாமபிரத்தை மெல்லிய தகடா யடித்துக் கெந்தகத்தை நெய்யை, அல்லது, எலுமிச்சம் பழச்சாற்றை விட்டரைத்துத் தகட்டின்மீது இரண்டு புறமுந்தடவி ஒட்டில்வைத்து மேலோடுமூடி இரண்டு சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் இருபதுபங்கெடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின்னெடுக்கச் செம்பானது கறுத்து நொறுங்கிப்போ யிருக்கும். இதனைக் கல்வத்திலிட்டுப் பொடித்து இதற் கிரண்டுபங்கு கெந்தகத்தைச் சேர்த்தரைத்து பில்லைசெய்துலர்த்தி அகலில்வைத்து மேலகல்மூடி இரண்டுசீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் பத்துப்பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின்னெடுத்து முன்போல் மூன்றுந்தடவையும் கெந்தகத்தைச் சேர்த்துப் புடமிடவேண்டும்.

2. தாம்பிரத்தைச் சுத்திசெய்வது இலேசானகாரியமல்ல. அதற்குக் கஷ்டம் அதிகமாக வேண்டியதிருக்கிறது. சுத்திசெய்யாத தாம்பிரத்தை மேற்கண்ட விதமாகச்செய்து வெள்ளியுடன் சேர்ப்பதால் நல்லவர்ணமுண்டாகிறதில்லை. மட்டத்தில் கறுப்புப்படர்ந்திருக்கிறது. அந்தக் கறுப்பை நீக்குகிறதற்காகத் திராவகத்திற்போட்டால் முன்னுண்டான வர்ணம் குறைந்தபோக நேரிடுகிறது. மேலும் வெள்ளியும் கரைந்துபோக ஆரம்பமாகிறது. ஆகையால், சாதாரண தாம்பிரத்தை மேற்கண்ட விதமாகச்செய்து சேர்த்துக் கறுப்பை நீக்கவேண்டுமானால் திராவகத்திற் போடுவதற்குப் பதிலாகக் காடியைத் திராவகமாக இறக்கி வர்ணமேற்றியவெள்ளியைத் தகடாகச்செய்துஅதிற்போட்டு அதிலுள்ள மாசைநீக்க முயற்சிசெய்யவேண்டும்.

3. மேற்கண்ட விதமாக மூன்றுதடவை மடக்கி மடக்கி மடித்தாலும் வெள்ளியுடன் சேர்க்காத வரையில் அது பூரணமாக மடிந்திருப்பது, அல்லது, அது அரைகுறையா யிருப்பது தெரியாதாகையால் அதை வெள்ளியுடன் சேர்த்து பரீக்ஷிக்க வேண்டியது.

4. மேற்படி பற்பத்தை வெள்ளியுடன் சேர்க்கு முறையாவது:—வெள்ளி ஒருபங்கு, மேற்படி தாம்பிரக்களங்கம் இரண்டுபங்கு இதனை இரண்டு பாகமாக்கி ஒரு பாகத்தை மூசையிற்போட்டு அதன் நடுவில்வெள்ளியை வைத்து அதன்மீது மறுபாகத்தையும் போட்டுத் துருத்தியாற் பலமாக ஊதவேண்டும். நன்றாயுருகினபின்பு மூசையை யெடுத்து ஆறவைத்து மூசையை யுடைத்தெடுத்தால் கருமையான ஒரு உருண்டையா யிருக்கும். அதனை யுடைத்தால் நடுவில் மஞ்சள்வர்ணமேறின வெள்ளியிருக்கும். ஆனால் மேற்படி களங்கத்தின் பூரணம், அரைகுறை ஆகியவைகளுக்குத் தகுந்தபடி வெள்ளியானது நல்ல வர்ணமுள்ளதாகவும் எடை குறைவானதாகவும், கெட்ட வர்ணமுள்ளதாகவும், எடை அதிகப்பட்டதாகவும் வர்ணங்குறைவுள்ளதாகவும், சுத்தமா வர்ண மில்லாததாகவும். தாம்பிரக் களங்கத்திற்குத் தகுந்தபடி யிருக்கும்.

குறைந்தவர்ண முள்ளதாகவும், கெட்டவர்ணமுள்ளதாகவு மிருப்பதற்குக் காரணம் தாம்பிரத்தின் கெடுதியேயாம். தாம்பிரமானது சுத்திசெய்யப்பட்டதா யிருந்தால் மேற்கண்ட குற்றங்கள் உண்டாவதற்கேதுவிராது.

எடையில அதிகப்பட்டிருந்தால் அதற்குக் காரணமாவது:-தாம்பிரமானது பூரணமாய்க் களங்காகாமல் பச்சையாக இருந்ததுவே காரணமாம், பூரணமாய் மடிந்து போகாமல் அரைகுறையா யிருந்தபடியால் வெள்ளியுடன் தாம்பிரமுஞ் சேர்ந்துவிட்டதே காரணமாம்.

வெள்ளியில் எடை குறைந்துபோவதற்குக் காரணமாவது தாம்பிரக் களங்கத்தில் கெந்தகம் மடிந்து போகாமல் பச்சையா யிருந்ததினால் வெள்ளியைக் கொண்டு அது குறைய ஏதுவாவதேயாம்.

கெட்ட வர்ணம், அல்லது, குறைந்த வர்ணமாக இருந்தால. பழையபடியும் தாம்பிரக் களங்கத்தைக் கொடுத்து ஊதியெடுக்கவேண்டும். இவ்விதம் சமயத்திற்குத் தகுந்தபடி இரண்டு மூன்று தடவை மடக்கி மடக்கிக் களங்கத்தை வைத்தூதி வெள்ளிக்கு வர்ணமேற்றிக் கொள்ளவேண்டும்.

இப்படி மடக்கி மடக்கிச் செய்வதால் மட்டமானது கெட்டியாகிக் கடினமாய்ப் போவதுமுண்டு. இவ்விதம் நேரிடுவதும் தாம்பிரத்தின் அசுத்தத்தன்மையினாலேயேயாம். தாம்பிரமானது சுத்தமாக இருந்தால் இவ்விதம் நேரிடாது. ஆகையால் தாம்பிரத்தைச் சுத்திசெய்து கொள்ள வேண்டும். தாம்பிரசுத்தி வகைகள் பின்னெழுகப்படும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி

### ௭-ம் பிரிவு.

### பற்ப முறைகள்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம்-79)

தாம்பிரபற்ப பிரமாணமும் அனுபானங்களும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை - ௮, ௧.

சீதா செங்கழுநீர்க் கிழங்குச்சாறு விராகனெடை - ௩, தேன் விராகனெடை-௩. இவ்விரண்டையு மிஸ்ரமித்துமேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண,எல்லாவித சுரரோகங்களும் தீரும், பசிதீபனம் அதிகப்படும்.

பசுவின் தயிர் விராகனெடை-௧௨, பழையவெல்லம் விராகனெடை-௬, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படியனுபானித்துண்ண, வாயுவினாலுண்டான அதிதாகரோகம் தீரும்.

வெண்டாமரைப் பூச்சாறு விராகனெடை - ௪, தேன் விராகனெடை-௨, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண மார்பதிர்ச்சி ரோகந்தீரும்.

இஞ்சிச்சாறு விராகனெடை - ௨, துளசிச்சாறு விராகனெடை-௨, மிளகுச்சூரணம் குன்றிமணியெடை -௪, இவற்றை மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, சன்னிபாதரோகங்கள் தீரும்.

பசுவின்வெண்ணெய் விராகனெடை-௩, சிறுநாகப்பூச் சூரணம் குன்றிமணியெடை - ௨, தேன் விராகனெடை-௩, இவற்றை மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, இரத்தபேதி, பேதி முதலியவைகள் தீரும்.

ஆலம்விழுது விராகனெடை-௮, பச்சரிசிக் கழுநீர் விராகனெடை-௧௮, தேன் விராகனெடை-௨. ஆலம்விழுதைக் கழுநீர்வார்த்து வெண்ணெய்போ லரைத்துத் தேனிற்குழப்பி வைத்துக்கொள்க. மேற்படி பற்பத்தைப் பிரமாணப்படி முக்கால் விராகனெடை தேனிற் குழைத்துட்கொண்டு அதன்மீது முன் சித்தப்படுத்தி வைத்திருப்பதைச் சாப்பிடவேண்டும். இவ்விதஞ் செய்துவர, நாட்பட்ட இரத்தபித்தரோகம், நாட்பட்ட அதிசாரரோகம் முதலியவைகள் தீரும்.

ஆலம்விழுதுச்சாறு விராகனெடை-௬, கற்கண்டுத்தூள் விராகனெடை-௩. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, ஆம அதிசாரரோகந் தீரும்

காட்டுவாகைப்பிசின் சூரணம் விராகனெடை - ௰, சாலாமிஸ்றிச்சூரணம் விராகனெடை - ௧, தேன் விராகனெடை-௩, இவற்றை மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்டு அதன்மீது மூன்றுபலங் வெள்ளாட்டுப்பாலைப் பானஞ் செய்துவர வேண்டும். இவ்விதஞ் செய்துவருவதால் இரத்தமூலம், பெரும்பாடு முதலிய இரத்தப்போக்கு வியாதிகளினாலுண்டான தேகதுர்ப்பலம், தேகச்சோர்வு, அசதி முதலியவைகள் நீங்கி இரத்தவிருத்தி பலாபிவிருத்தி, சுரு சுருப்பு முதலியவைக ளுண்டாகும்.

வில்வ இலைச்சாறு விராகனெடை-௩, மாங்கொழுந்துச்சாறு விராகனெடை-௬, தேன் விராகனெ-௬, கற்கண்டுச்சூரணம் விராகனெடை-௧௮. இவைகளை மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, வாந்தி, அதிசாரரோகம் ஆகியவைகள் தீரும்.

(இன்னும் வரும்.)

புத்தகம்-௩. 1907ஸு செப்டம்பர்மீ 1உ இலக்கம்-௧௫.

சுகாதார போதினி.

௧-ப், பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

இரைப்பை ரோகச் சிகிச்சை.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 106.)

ஆவாரை மாத்திரை (வேறு)

குச்சிகாம்பு முதலியவைகளை ஆய்ந்த சூரத்துநில ஆவாரைச் சூரணம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், மிளகுச் சூரணம் இவை வகை-௧-க்கு விராகனெடை - ௨௰, விதை முதலியவைகளை நீக்கிச் சுத்தி செய்த திராக்ஷைப்பழம் விராகனெடை-௩0.

செய்முறை:— மேற்கண்ட எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துக் கல்லுரலிலிடித்து வெண்ணெய் போலான பின்பெடுத்துக் கல்வத்திலிட்டுக் கொஞ்சம் ஜலந்தெளித்து இரண்டொரு மணிநேர மரைத்து இரண்டு விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:— மாத்திரை-௧, ௧வ. காலை ஒருவேளை உபயோகித்தாற் போதுமானது. வியாதி கடினமாயிருந்தால் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம். சில தேகிகளுக்கு இரண்டு மாத்திரை உபயோகிக்கும்படியாகவும் நேரிடும். ஆகைபாற் சமயோசிதம் போல் உபயோகித்துக் கொள்ளவேண்டும்.

உபயோகம்:—மலபந்தம், மலச்சிக்கல் ஆகியவைகள் நீங்கி மலங் கிரமப்படும். வயிற்றுப்பிசம் நீங்கும். மந்தாக்கினி ரோகந்தீர்ந்து பசிதீபனம் அதிகப்படும்.

வெண்கார மாத்திரை.

கரியபோளம் விராகனெடை-௧௬, மிளகுச் சூரணம் விராகனெடை - ௧௨, ஓமச்சூரணம் விராகனெடை-௧0௫, பொரித்த வெண்காரம் விராகனெடை-௨, சோற்றுக் கற்றாழைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—கரியபோளத்தைத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ள வேண்டும். பிறகு எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டுச் சோற்றுக் கற்றாழைச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து இரண்டு சாமநேர மரைத்து அரைக் குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்துகொள்ள வேண்டும்.

பிரமாணம்:——வாயு ரோகங்களைக் கண்டிப்பதற்காக வேளை யொன்றுக்கு மூன்று மாத்திரை யுட் கொள்ளவேண்டும். மலபந்தத்தை நீக்குவதற்காக வேளையொன்றுக்கு இரண்டு மாத்திரைகள் போதுமானவை. ஆயினும் சமயோசிதம்போல தேக சுபாவத்திற்குத் தகுந்தபடியும் அனுபோகப்படியும் உபயோகித்துக் கொள்ளலாம்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுவைக் கண்டித்து அதனாலுண்டாகும் வயிற்றுவலிமுதலியவைகளைப் போக்கும், பசிதீபனம் அதிகப்படும்.

ஜீரண மாத்திரை.

கருஞ்சீரகம், கடுகு இவை வகை-௧-க்குப் பலம்-௧, (இவ்விரண்டையும் வறுத்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ள வேண்டும்.) பனைவெல்லம் பலம்-௪, பசுவினெய் பலம்-௧௫, தேன் பலம்-௧௫.

செய்முறை:—வெல்லத்தைப் பாகுசெய்து அடுப்பேற்றிச் சிறுதீயாக வெரித்துஒருகொதி வந்தவுடன் வடிகட்டி அதிலுள்ள திப்பி முதலியவைகளை நீக்கிவிட்டு மறுபடியும் அடுப்பேற்றிக் காய்ச்சிப் பாகுபதத்தில் மேற்படி சூரணங்களைத் தூவிக் கிண்டிக்கிளறி நெய்யையும் தேனையுஞ் சேர்த்து மிஸ்ரமித்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௫, ௧. காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம். ஆகாரத்தின்மீது உபயோகிப்பது உத்தமம்.

உபயோகம்:—ஆகாரத்தைச் சீரணிக்கச் செய்யும், இரைப்பையிலுள்ள வாயுவைக் கண்டிக்கும், சீரணசக்தி யதிகப்படும்.

ஷை (வேறு)

மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், குச்சி காம்பு முதலியவைகளை நீக்கின சூரத்துநில ஆவாரைச் சூரணம், வகை-௧-க்கு விராகனெடை-௪, விதை குச்சிமுதலியவைகளை நீக்கின திராக்ஷைப்பழம் விராகனெடை - ௨௰, மேற்றோல் நீக்கி யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சுக்குச்சூரணம் விராகனெடை-௧, நாட்டுச் சர்க்கரை விராகனெடை-டு.

செய்முறை:—எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து கல்லுரலிலிட்டு மைப்போலிடித்துஒவ்வொரு விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை - க. இரவில் நித்திரை செய்யப் போகும்போது சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—மலச் சிக்கல், மலபந்தம் ஆகியவைகளை நீக்கி மலத்தைக் கிரமப்படுத்தும், மந்தாக்கினிரோகத்தைக் கண்டித்து ஜீரண சக்தியை விருத்தியாக்கும். உட்கொண்ட ஆகாரத்தை ஜீரணிக்கச் செய்யும்.

### காய மாத்திரை.

மேற்றோலைச் சீவியிடித்து வஸ்திரகாயஞ்செய்த சுக்குச் சூரணம் பலம்-க, பொரித்த வெண்காரம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், இந்துப்பு, பெருங்காயம் இவை வகை-க-க்குப் பலம்-௨, முருங்கை வேர்ப்பட்டைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—பெருங்காயத்தை ஓட்டில் பொரித்துப் பொடித்து மேற்படி சூரணங்களையுஞ் சேர்த்துச் சற்று அரைத்துக் கலந்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமநேர மரைத்து நான்கு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலி லுலர்த்தி ஈரமில்லாமல் நன்றாயுலர்ந்த பின்பு கொஞ்சம் நெய்யைத் தெளித்து இளஞ்சூடாக வறுத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க, உ. ஆகாரம் சாப்பிட்ட பின்பும் உட்கொள்ளலாம்; காலைமாலை யிரண்டு வேளையு முட்கொள்ளலாம்.

உபயோகம்:—இரைப்பை, மண்ணீரல் முதலியவைகளி லுள்ள வாயுவைக் கண்டிக்கும். உட்கொண்ட ஆகாரங்களை ஜீரணிக்கச்செய்யும், பசிதீபனத்தை விருத்தியாக்கும். மாந்தம், அஜீரணம், அஜீரணபேதி ஆகியவைகளைக் கண்டிக்கும்.

### குறிப்பு.

முருங்கை வேர்ப்பட்டை அகப்படாத காலங்களில் முருங்கைப்பட்டைச் சாற்றைச் சேர்த்துக்கொள்ளலாம். அதுவும் அகப்படாத காலத்தில் முருங்கையிலைச் சாற்றைச் சேர்த்துக் கொள்ளலாம்.

### ஜீரணத் திரிபலாதி லேகியம்.

மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், நெல்லிவற்றற் சூரணம், கருப்புப்பு, குச்சிகாம்பு முதலியவைகளை ஆய்ந்த சூரத்துநிலஆவாரைச் சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-௨, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சூரணங்களைக் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமநேர மரைத்து ஒரு விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலி லுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை - உ - ௩. நித்திரைக்குப் போகும்போது இதனை யுட்கொண்டு கொஞ்சம் வெந்நீரருந்தி நித்திரை செய்யவேண்டும். தேக சுபாவத்தை நிதானித்து மாத்திரைகளை யதிகப்படுத்தியுங்கொள்ளலாம், குறைத்துங் கொள்ளலாம்.

உபயோகம்:—மலபந்தத்தை நீக்கி மலத்தைக் கிரமப்படுத்தும், ஜீரண சக்தியை யதிகப்படுத்தும்.

### போதின மாத்திரை.

உலர்ந்த பொதினவிலைச் சூரணம், இந்துப்புத்தூள், சுக்கான்கீரை விதைச்சூரணம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், சோம்புச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-௩, மேற்றோல் சீவின சுக்குச்சூரணம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், கொடிவேலி வேர்ப்பட்டைச் சூரணம், ஓமச்சூரணம், இவை வகை-க க்கு விராகனெடை-[illegible], எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—எல்லாவற்றையும் ஒன்றாகச்சேர்த்துக் கல்வத்திலிட்டு மேற்படி பெலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாம நேரமரைத்துக் கால்விராகனெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலி லுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ-௩-காலைமாலை யிரண்டுவேளையு முபயோகிக்கலாம். ஆகாரம் உட்கொண்டவுடனேயும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—மந்தாக்கினிரோகம், குன்மரோகம், அஜீரணரோகம் ஆகியவைகளைக் கண்டிக்கும், பசிதீபனத்தை விருத்தியாக்கும், புளித்தஏப்பம், வாயுவினாலுண்டாகும் ஏப்பம், வயிறுப்பிசம், வயிற்றிலுண்டாகும் வாயுக்கள் ஆகியவைகளை நீக்கி இரைப்பையைப் பலப்படுத்தும்.

### வேறு.

கருப்புப்புத்தூள், சுக்கான்கீரை விதைச்சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை - ௩, ஓமச் சூரணம் விராகனெடை-௨, இலவங்கச்சூரணம், மிளகுச் சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை - வ, சுக்கான்கீரைச்சாறு, அல்லது, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சூரணங்களைக் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாமநேர மரைத்து கால் விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்துவைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-௧-௨. ஆகாரஞ் சாப்பிட்டு அதன்மீது உட்கொள்ள வேண்டும்.

உபயோகம்:—ஜீரணசக்தியை யதிகப்படுத்தும்; வயிற்றிலுள்ள ஆகாரத்தை ஜீரணிக்கச்செய்யும், மந்தாக்கினி ரோகத்தைக் கண்டித்து இரைப்பையைப் பலப்படுத்தும்.

ஆமில பேதம்.

அரிசித்திப்பிலிச் சூரணம், மஞ்சட் கடுக்காய்த் தோற் சூரணம், இந்துப்புத்தூள், கறியுப்புத்தூள், கறுப்புப்புத்தூள், பொரித்த வெண்காரத்தூள், சுத்திசெய்த பூநீறு (இது நல்லதா யகப்படாவிட்டால் இங்கிலீஷ் ஷாப்புகளில் விற்கிற சோடாவைச் சேர்த்துக்கொள்ளவும்) இவை வகை-௧-க்குப் பலம்-௨, எலுமிச்சம்பழச்சாறு படி-௨, புளிப்பு மாதுளம்பழச்சாறு படி-௨.

செய்முறை:—மேற்படி சூரணங்களை யெல்லாம் ஒரு பீங்கான் பாத்திரத்திற்போட்டு மேற்படி யெலுமிச்சம்பழச்சாற்றைவிட்டு வெயிலில் வைக்கவேண்டும். அதில் தூசி முதலியவை விழாதபடி மெல்லிய வஸ்திரத்தை வேடுகட்டி வைக்கவும் வேண்டும். தினம் இரண்டொருதடவை மூங்கிற்குச்சியால், அல்லது, மரஅகப்பையால், அல்லது, பீங்கான் கரண்டியால் கலக்கியும் வரவேண்டும். அதிலுள்ள சாறெல்லாஞ் சுண்டினபின்பு புளிப்பு மாதுளம்பழச் சாற்றைவிட்டு முன்போல் வெயிலில்வைத்துச் சுண்டவைக்க வேண்டும்.

குறிப்பு.

இப்பாகத்தில் எலுமிச்சம் பழச்சாறு, புளிப்பு மாதுளம்பழச்சாறு, இவை வகை-௧-க்குக் காற்படியென எழுதப்பட்டிருக்கிறது. ஆனால், அநுபவத்தில் வகைக்கு முக்காற்படி சாற்றில தடவையொன்றிற்கு மேற்கண்டபடி காற் காற்படி சாறாக மாற்றி மாற்றிச் சுண்டவைத்துக் கொண்டால் அதிக விசேஷ குணத்தைத் தருகிறது.

பிரமாணம்:—விராகனெடை-௨. இதனை வாயிற் போட்டுக்கொண்டு அதன்மேல் கொஞ்சம் வெந்நீரை, அல்லது, குளிர்ந்த ஜலத்தைப் பானஞ்செய்யவேண்டும். காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம், அல்லது, ஆகாரம் சாப்பிட்டவுடனும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—உட்கொண்ட ஆகாரத்தை ஜீரணிக்கச்செய்யும், பசிதீபனத்தை அதிகப்படுத்தும். குன்மரோகம், பாண்டுரோகம் ஆகியவைகளுக்கும் உபயோகமாம். வயிற்றிலுள்ள வாயுக்களைக் கண்டித்து இரைப்பையைப் பலப்படுத்தும்.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

௨-ம் பிரிவு.

குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo - III - பக்கம்-107)

கோய்னேன்

(Sulphate of Quinine)

முந்திரியுப்பு, எலுமிச்சம்பழ உப்பு ஆகியவைகள் இங்கிலீஷ் மருந்து ஷாப்புகளிற் கிடைக்கின்றன. அவற்றுடன் குவய்னைவைச்சேர்த்து மாத்திரைகள்செய்யவேண்டுமானால் கீழ்க்காணும் விதமாகச் செய்துகொள்ளவேண்டும்.

குவய்னேன்-௪-பங்கு மேற்கண்ட உப்புகளிரண்டினுள் ஒன்று ஒருபங்கு. இவ்விரண்டையுங் கல்வத்திவிட்டு நன்றாகவரைத்து விளாம்பிசின் கோழையை, அல்லது, ஜலத்தைக் கொஞ்சம்சேர்த்து உடனே மாத்திரைகளாகச் செய்துகொள்ள வேண்டும். மேற்படி கோழையை, அல்லது, ஜலத்தைச்சேர்த்த க்ஷணமே மாத்திரைகளாகச் செய்துகொள்ளாவிட்டால், அது உலர்ந்துபோய் மாத்திரைசெய்யப் பக்குவமாயிராது. அப்படி யுலர்ந்துவிட்டால் மறுபடியுங் கொஞ்சம் முன்போற்சேர்த்து உடனே மாத்திரைகளாகச் செய்துகொள்ள வேண்டும். சிலசமயம் மேற்படி திரவம் அதிகமாய் விழுந்து மாத்திரைசெய்யப் பக்குவப்படாமலிருக்கும் அவ்விதம் நேரிட்டால் அப்படியே கல்வத்துடன் விட்டுவிட்டு ஐந்து, அல்லது, பத்து நிமிஷநேரந் தாமதிக்க மாத்திரைகளாகச் செய்துகொள்ளப் பக்குவமாயிருக்கும். அந்தச் சமயத்திலுடனேமாத்திரைகளாகச் செய்துகொள்ள வேண்டும். ஒரு குன்றிமணி, அல்லது, ஒன்றரைக்குன்றிமணி எடைக்கதிகமான மாத்திரைகளாகச் செய்யலாகாது. பெரு மாத்திரைகளை விழுங்குவது கஷ்டமாயிருக்கும்.

அரைக்குன்றிமணி, அல்லது, ஒரு குன்றிமணியெடை குவய்னைவைப் பலமுண்டாக உபயோகிக்கப்படுகிறது. இரண்டரைக் குன்றிமணியெடை முதல், பத்தரைக் குன்றிமணியெடை வரையில் முறைரோகங்களைத் தடுக்கிறதற்காக உபயோகப் படுத்தப்படுகிறது.

இதன் குணம்.

முறைரோகத்தைத் தடுக்கும், சுரத்தைக்கண்டிக்கும் இருதய நடையைச் சமப்படுத்தும். அவையவ

ங்கள் அழுகிப்போதலைத் தடுக்கும். முறைக்காய்ச்சல், தாபசுரம்; சந்ததசுரம் ஆகிய இவைகளுக்குக் கொய்னுவானது சஞ்சீவிக் கொப்பானதென்பது பிரசித்தமான விஷயம். ஆனல், பித்ததேகிகளுக்கும் வேறு சில தேகிகளுக்கும் இது ஏற்காமல் நன்மைக்குப் பதிலாகக் கெடுதிசெய்வதால் தகுந்த அனுபானங்களுடன் உபயோகிக்கவேண்டியது, அல்லது, இதனை உபயோகிக்காம லிருப்பதே உத்தமம், விடாசுரத்தில் குவய்னுவானது அவ்வளவு நன்மைசெய்கிறதில்லை. சன்னிபாதசுரம், அதிசார சன்னிபாதசுரம் இவைகளுக்குக் குறைந்த அளவில் திராவகங்களிற் கலந்துகொடுத்தால் நன்மைசெய்யும். ஆனல், இந்தச்சமயங்களில் அனுபவசாலிகளான வைத்தியர்கள் உபயோகிக்கவேண்டியதே தவிர மற்றவர்கள் உபயோகிக்காம லிருப்பது உத்தமம். காய்ச்சற்கட்டிக்கு இதனோடு அன்னபேதி,ரேவல்சினி ஆகியவைகளைக் கலந்துகொடுத்தால் குணப்படுத்தும். காலக்கிரமமாய் வருகிற வேதனைகளைத்தடுக்க இதற்கு நல்ல வல்லமையுண்டாகையால் தகுந்தலேகியம் முதலியவைகளுடன் அநுபானித்துக் கொடுக்கலாம். பாலசுவாசபந்தம், நுரையீரல் தாபனரோகம் சுவாசநோய், நுரையீரல் தாபனரோகத்திற் காணும் பலஹீனம், நுரையீரலிற்காணும் ஓர்ஜாதி அழிப்புண், கண்வலி, கக்கிருமல், இருமல்,நேத்திரமண்டல தாபனரோகம், அக்கி, எரிச்சலோடுங்கூடிய கரப்பான், தேகத்தில் காணும் ஒருஜாதி அழிப்புண், கன்னம், உதடு இவைகளினுட் புறத்தில் காணும்புண், விரண சன்னி, க்ஷயம் இவைமுதலிய ரோகங்களுக்குக் கொடுத்து சௌக்கியங் கண்டதாக அனுபோகத்திற் சிறந்த பல ஆங்கிலேய வைத்தியர் களினல் சொல்லப்பட்டிருக்கிறது.

குவய்னுவை உபயோகிக்கும்போது மலபந்தம், தலைநோய், காதில் ரீங்காரத்தொனி இவைகள் பிறப்பதுமுண்டு. குவய்னுவை அதிகமாயாவது, அடிக்கடியாவது சாப்பிட்டால் காது செவிடுபடுவது முண்டு. இதனை உபயோகித்து வரும்போது காதிரைச்சல் கண்டால் உடனே நிறுத்திவிடவேண்டியது. இந்த மருந்து தேகத்தில் ஊறினதற்குக் குறி. வாந்திக்கும் பேதிக்குக்கொடுத்து வயிற்றிலுள்ள மஷ்டிக்களைநீக்கி இதைப் பிறகு உபயோகித்தால் உடம்பிற் சீக்கிரம் பற்றும். இதை மிதமாய்க் கொடுத்தால் ஜலிப்பு, அற்பசுரம் முதலியவைகள் நீங்கும்; விஷக்காற்றினுற் காணும் விஷபேதிக்கும் கொடுப்பதுண்டு.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

ரு - ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-108.)

#### கருப்ப முண்டாக.

ஆற்றுத் தும்மட்டிக்காய்ச்சாறு படி-அ, கறியுப்பு படி-அ.

செய்முறை:—கல்வத்தில் உப்பைப்போட்டுமேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து அரைத்துச் சாறெல்லாஞ் சென்றபின்பு பில்லை செய்துலர்த்தி ஒட்டிலிட்டு மேலோடுமூடி ஐந்து சீலைமண்செய்து உலர்த்திக் கவசத்தின் ஏழு பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின் னெடுத்துப் பத்திரப் படுத்தவும்.

புடம்போடக் கூடாத சமயத்தில் பில்லையை உலர்த்தி ஒரு சட்டியில் வைத்து மேற்சட்டிமூடி ஏழுசீமண் செய்துலர்த்தி அடுப்பேற்றிக் காடாக்கினியாக இரண்டு சாமமெரித்துக் குளிர ஆறினபின் எடுத்துப் பொடித்துப் பத்திரப்படுத்தவும். இப்படி யெரித்தால் சிறிது பாகம் பதங்கமாகவும், சிறிது பாகம் அடியிலும் தங்கிநிற்கும். இரண்டையும் சேர்த்துப் பொடித்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-க, க உ.

அனுபானம்:—குளிர்ந்தஜலம், இளநீர், சோம்புத் திராவக முதலியவைகளாம்.

உபயோகம்:—சூதக சம்பந்தமான வியாதிகள் நீங்கிக் கருப்பமுண்டாகும்.

#### சூதகவாயு சஞ்சீவி.

கல்லுப்பு, இந்துப்பு, வளையலுப்பு, வெடியுப்பு, அப்ளாக்காரம், வெண்காரம், சவுக்காரம் இவை வகைக-க-க்குப் பலம்-அ, வெள்ளைப் பூண்டிதழ் பலம்-உ, சுத்திசெய்த நேர்வாளம் பலம்-உ, பெருந்தேங்காய் மூடி-க. (இதனைத் துருவிப் பாலெடுத்துக் கொள்ளவும்) பருமனன எலுமிச்சம்பழம் இருபத்தைந்து (இவைகளைச் சாறுபிழிந்து கொள்ளவேண்டும்.)சிற்றுமணக் கெண்ணெய் படி-க.

செய்முறை:——வாளத்தைக் கல்வத்திலிட்டுக் கொஞ்சம் எலுமிச்சம் பழச்சாற்றை விட்டு மைபோலரைத்து எண்ணெயிற் கலக்கி ஒருகொதி வந்தபிறகு வெள்ளைப்பூண்டை மைப்போ லரைத்து அதிற் போடவும். பிறகு தேங்காய்ப்பாலை விடவும், பிறகு மேற்படி உப்புகளை நன்மையாக நுணுக்கிப் போட

வும். உடனே எலுமிச்சம் பழச்சாற்றை விட்டு மெதுவாக எரித்து மெழுகுபதத்தி லிறக்கிக் கொள்ளவும். இதனை வடிகட்டாமல் உப்புகளுடன் வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-உ-ங.

அனுபானம்:—குளிர்ந்தஜலம், இளநீர், சோம்பு திராவகம், சுக்குக்கஷாயம், முதலியவைகளாம்.

உபயோகம்:—சூதக சம்பந்தமான வியாதிகளெல்லாம் தீரும்.

பத்தியம்:—தேகபலம், வியாதிபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி பத்தியம் ஏற்படுத்த வேண்டும்.

## குங்குமப்பூ லேகியம்.

குங்குமப்பூ, கோரோசனை, பாலேந்திர போளம், கரியபோளம், இரத்தபோளம், கருஞ்சீரகச் சூரணம், மேற்றோல் சீவின சுக்குச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், மிளகுச் சூரணம், இலவங்கச் சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-கவ, தேன் பலம்-க.

செய்முறை:—முன்னுள்ள ஐந்து சரக்குகளையும் தனித்தனி பொடித்து ஒன்றாகக் கலந்து மற்றச் சூரணங்களையும் ஒன்றாகக் கலந்து அதிற்சேர்த்துக் கல்வத்திலிட்டுத் தேனைச் சிறுகச் சிறுக வார்த்துத் தேனெல்லாஞ் சென்றபின்பு இரண்டு குன்றிமணி பெடையுள்ள மாத்திரைகளாகச் செய்துவைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-ங.

உபயோகம்:—பிரசவ ஸ்திரீகளுக்கு இதனை உபயோகிக்க பிரசவ அழுக்குத் தங்கிநிற்குதல், அதனாலுண்டாகும் சுரம், சன்னி, தோஷம் முதலியவைகள் நீங்கும்.

## இலவணதி லேகியம்.

இந்துப்பு, வெடியுப்பு, கறியுப்பு, வளையலுப்பு, சூடன், சவுட்டுப்பு, அப்பளாக்காரம், பூண்டு, ஓமச்சூரணம், மேற்றோல் சீவின சுக்குச் சூரணம், பனைவெல்லம் இவை வகை-க-க்குச் சமனெடை. நீர்முள்ளிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:— உப்புகளையெல்லாம் சேர்த்துப் பொடித்து மற்றவைகளையுஞ் சேர்த்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-வ, ௨.

உபயோகம்:— பிள்ளைப்பெற்று அழுக்குத்தங்கி அதனாலுண்டாகும் கைகால் வீக்க முதலியவை நீங்கும்.

இன்னும் வரும்.



## சுகாதார போதினி.

ச - ம் பிரிவு.



## பால வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 109)

### மாந்த மாத்திரை.

மேற்றோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, ஓமம், இலவங்கம், கருஞ்சீரகம், வாய்விளங்கம், சுத்திசெய்த வெருகங்கிழங்கு, நாயுருவியிலை இவை வகை-க-க்குப் பலம்-வ, சுத்திசெய்த இரச கர்ப்பூரம், கோரோசனை, ஜாதிக்காய்ச் சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-க, இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளைத் தனித்தனி யிடித்துச் சூரணித்து தனித்தனி நிறுத்தெடுத்துக் கொள்ளவும். பிறகு எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டு இஞ்சிச்சாற்றால் இரண்டு சாமமரைத்து அரைக் குன்றிமணி பெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க. ௨.

அனுபானம்:—இஞ்சிச் சுரசம், முலைப்பால்.

உபயோகம்:—எல்லாவகை மாந்த ரோகங்களும் தீரும்.

### மாந்தமாரணக் குளிகை.

இரசம், பொரித்த வெண்காரம் இவை வகை-க-க்குப் பலம்-௨, சுக்குத்தூள், கெல்லிக்காய்க் கெந்தகம் இவை வகை-க-க்குப் பலம்-வ, சுத்திசெய்த நேர்வாளம் பலம்-ஸ, முருங்கையிலையைப் பிட்டவித்துப் பிழிந்த இரசம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையும் சேர்த்தரைத்து இரச மடிந்தபின்பு மற்ற சரக்குகளை

யுஞ் சேர்த்தரைத்துத் தூளாக எடுத்து வைத்துக் கொள்ளவும். வாளத்தைக் கல்வத்திலிட்டு அரைத்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருமணி நேரமரைத்த பின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற தூளையுஞ் சேர்த்து இரண்டு சாமநேரமரைத்து அரைக் குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க.

அனுபானமும், உபயோகமும்:—முருங்கை யிலையைப் பிட்டவித்துப் பிழிந்த சாற்றிலனுபானித்துக் கொடுக்க; கபம் செண்டுசெண்டாய் வெளிவந்து கபசம்பந்தமான ரோகம் தீரும்.

சூரத்துக்கடுக்காய்க் கஷாயத்திற் கொடுக்க கபம் வெளிப்பட்டு அள்ளு முதலியவைக ளெல்லாந் தீரும்.

பெரியவர்களுக்குத் தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி மூன்று நான்கு மாத்திரையைப் பேதிக்கு உபயோகிக்கலாம். இதனை யுட்கொண்டு குளிர்ந்தஜலம் சாப்பிடப் பேதியாகும். வெந்நீர்பட்டால்பேதி நின்று விடும்.

### பாலசஞ்சீவி மாத்திரை.

மேற்றோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, மிளகு ஓமம், இலவங்கம், வெண்காரம் இவற்றின் தனித்தனி சூரணம் வகை-க-க்குப் பலம்-ரு, சுத்திசெய்த ஜாதிலிங்கம் பலம்-ரு, எலுமிச்சம் பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—கல்வத்தில் லிங்கத்தைப் போட்டுப் பொடித்து மற்ற சூரணங்களையுஞ் சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து அரைக்குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க, உ.

அனுபானம்:—தேன், முலைப்பால், இஞ்சிச்சுரசம் முதலியவைகளாம்.

உபயோகம்:—பாலர்களுக்குண்டாகும் எல்லாவகை சுரங்கள், எல்லாவகை மாந்தங்கள் ஆகியவை தீரும்.

### மகாபால சஞ்சீவி.

ஓமம், தோலுரித்த வெள்ளைப் பூண்டிதழ், வசம்பு, மிளகு, அரிசித்திப்பிலி, வாய்விளங்கம், கருஞ் சீரகம், காட்டுச் சீரகம், கார்போகரிசி, கஸ்தூரி மஞ்சள், கடுகு, ஆமைபோடு பொடுதலைக்காய், கழற்சிக்காய்ப் பருப்பு, வெள்ளைக் காக்கரட்டான் வேர்ப்பட்டை, வெள்ளைச் சாட்டரணை வேர்ப்பட்டை, வெள்ளைக் கண்டங்கத்திரி வேர்ப்பட்டை, கொட்டாங்கச்சிக்கரி, புளியம்புறணி, பொரித்த வெண்காரம், சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த இரசகர்ப்பூரம், சுத்திசெய்த வெண்ணுபி, சுத்திசெய்த நெல்லிக்காய்க் கெந்தகம் இவை வகை-க-க்கு விராகனெடை-க, உத்தாமணிச்சாறு, பொடுதலைச்சாறு இவை வகை-ந-க்குச் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவற்றுள் இரசம், பூரம், கெந்தகம் தவிர மற்றவைகளுள் இடிக்கவேண்டியவைகளை யிடித்தும் தூள் செய்யவேண்டியவைகளைத் தூள்செய்தும் ஒன்றாகச்சேர்த்து வைத்துக்கொள்ளவும். முன்னர் கெந்தகத்தையும் இரசத்தையும் சேர்த்தரைத்து நன்றாய்க் கறுத்தபின்பு பூரத்தையும் சேர்த்தரைத்து முன் சித்தப்படுத்தின சூரணத்தையும் சேர்த்துக் கலந்தரைத்து உத்தாமணிச்சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து ஒருசாமமும், பொடுதலைச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருசாமமுமரைத்து இரண்டு குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அனுபானம்:—வெற்றிலைச்சாறு, நல்ல வேளைச்சாறு, வெள்ளைப்பூண்டுத்தைலம், கோழியாவாரைச் சாறு முதலியவைகளாம்.

உபயோகம்:—எல்லாவகை மாந்த ரோகங்கள், இன்னும் குழந்தைகளுக்குண்டாம் பலவித ரோகங்கள் ஆகியவைகள் தீரும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௫-ம் பிரிவு

## மூலரோகம்

முன்தொடர்ச்சி (vol- III பக்கம். 110)

### மூலரோகச் சிகிச்சை.

சுத்திசெய்த இரசம், நாட்டு நவச்சாரம் இவை வகை-க-க்கு விராகனெடை-கரு, ஜங்கால்பச்சை, தாளிக்காத சுண்ணாம்பு வகை-க-க்கு விராகனெடை-௬

குந்திரிக்கம், கௌரிப்பாஷாணம், வகை-௧-க்குவிராகனெடை-௨௰, சோடா விராகனெடை-௧௰, திராக்ஷாகாடி செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளைத் தனித்தனி பொடித்துப் பிறகு கல்வத்திலிட்டு திராக்ஷாக்காடியைச் சிறுகச்சிறுகவார்த்து நான்குசாம நேரமரைத்து வெயிலிலுலர்த்திப் பிறகு இரும்புக் கல்வத்திலிட்டு ஜலத்தைச் சிறுகச் சிறுக வார்த்து நான்குசாம நேரமரைத்துப் பீங்கான் சிமிழில் வைத்துக்கொள்ள வேண்டும்,

உபயோகம்:—இந்தக் களிம்பை மூலமுளையின் மீது ஒருநாள் தடவிவைக்க மூலமுளைகளெல்லாம் நாசமாகிவிடும். மறுநாள் தடவ நேரிடாது. ஒருசமயம் ஏதேனும் முளைகள் பாக்கியாயிருந்தால் இரண்டொருநாள் விட்டு மறுபடியும் ஒருநாள் தடவினால் எல்லாம உதிர்ந்துபோகும்.

பத்தியம்:—இதனை உபயோகிக்கும்போது அதிகவெயிலில் திரிதல், குளிர்ச்சியான காற்றுப்படும்படியுலாவுதல், புளி, புகை ஆகியவைகளை நீக்கவேண்டியது. மருந்தை உபயோகிக்காதிருந்தாலும் மருந்தை உபயோகித்த இரண்டு மூன்று நாள்வரையில் மேற்கண்ட பத்தியங் காக்கவேண்டும்,

வேறு.

ஜங்கால்பச்சை, பொரித்த படிக்காரம் இவ்விரண்டும் வகை-௧-க்குப் பலம்-௫, இவ்விரண்டையுங் கல்வத்தில் மைபோலரைத்து மூல முளைகளின்மீது கொஞ்சம் தூவவேண்டும். தினம் இரண்டொரு தடவை தூவலாம். இவ்விதம் இரண்டு மூன்று தடவைகள் செய்தால் மூல முளையானது நாசமாகிவிடும், இரண்டுநாளைக்கதிகம் தேவையிராது. ஒரு சமயம் ஏதேனும் பாக்கியிருந்தால் இடையில் இரண்டுநாள்விட்டு மூன்றுநாள் ஒருநாள் உபயோகிக்க மூல முளை அற்றுப்போம்.

வேறு

தாளிக்காத கற்சுண்ணாம்பு (இதனை மைபோலப் பொடித்து மெல்லிய வஸ்திரத்தில் இரண்டு மூன்று தடவை வஸ்திரகாயஞ்செய்து மறுபடியுங் கல்வத்திலிட்டுச் சமனெடை பசுவின்வெண்ணெயை அல்லது பம்விநெய்யைச் சேர்த்து ஒருமணிநேரமரைத்து மூலமுளையின்மீது கொஞ்சம் பூசவேண்டும். தினம் இரண்டொருநாட் பூசினாற் போதுமானது. இரண்டுநாளைக்குள் மூலமுளைகள் அற்றுவிழுந்துவிடும். மூன்றுநாள் உபயோகிக்கும்படியான அவசியமிராது. முளைகளில் ஏதேனும் சேஷமிருந்தால் மறுபடியும் ஒருநாட்பூசினாற் போதுமானது. சுகுமாரதேகிகளாயிருந்தால் வெண்ணெயை அல்லது நெய்யை அதிகமாகச் சேர்த்து உபயோகிக்க வேண்டியது.

மூலநாச எண்ணெய்.

வெள்ளைப் பாஷாணம் விராகனெடை-௧௰, மயில்துத்தம் விராகனெடை-௯, பொரித்த படிக்காரம் விராகனெடை-௧௨; சுத்தமான எள்ளெண்ணெய் விராகனெடை-௨௬.

செய்முறை:—ஒரு இரும்புக் கரண்டியில் மேற்படி யெண்ணெயைவிட்டு அடுப்பில்வைத்துச் சூடுகண்டவுடன் மயில் துத்தத்தையும் படிக்காரத்தையும் பொடித்து அதிற்போட்டு இரண்டும் நன்றாக மிஸ்ரமானபின்பு கீழிறக்கிப் பாஷாணத்தை நுண்மையாகப் பொடித்து அதிற்போட்டு மிஸ்ரமித்து நன்றாய்க் குளிர ஆறினபின்பு வாயகன்ற சீஷாவில் விட்டு வைத்துக்கொள்ள வேண்டும். காக்கை யிறகினால் கொஞ்சமெடுத்து மூலமுளைகளின்மீது பூசவேண்டும். இந்த எண்ணெயைப் பூசினால் ஆசனம் கொஞ்சம் வீங்கிக்கொஞ்சம் நோவு முண்டாகும். இவை இரண்டொருநாள் தானிருக்கும். மறுநாள் முதற்கொண்டு படிப்படியாய்க் குணமாகிவிடும், இரண்டொருநாட் கஷ்டப்பட்ட போதிலும் மூலமுளைகளெல்லாம் வேரற்று நாசமாகிப் போய்விடும்,

குறிப்பு.

அதிக சுகுமார தேகிகளுக்கு இதனை உபயோகிப்பது அவ்வளவு சிரேஷ்டமானதல்ல, முரட்டுத்தேகிகளா யிருப்பவர்களுக்கு இதனை உபயோகிக்கலாம். வேறு மருந்துகளால் தீராதசமயங்களில் சுகுமார தேகிகளுக்கு இதனுடன் நல்லெண்ணெயை அதிகமாகச் சேர்த்து உபயோகிக்கவேண்டியது. இவ்விஷயங்களையெல்லாம் சிகிச்சகர்கள் கவனித்துச் செய்யவேண்டியது. அப்படிச் செய்யாவிட்டால் மருந்தினுடைய பெருமைக்குக் குறைவுநேரிடும். அனுபவசாலிகளுக்கு நாம் அதிகமா யெழுத வேண்டியதில்லை.

பத்தியம்:—இதனை யுபயோகிக்கும்போது பாற்கஞ்சி, பாற்பாயசம், பாலன்னம் முதலியவைகளை யுப

போகிக்க வேண்டியது. சீனிச்சர்க்கரை, கற்கண்டு ஆகியவைகளாகும். புளிப்பு, புளிப்பு வஸ்துக்கள், புகை முதலியவைகளை நீக்கவேண்டியது. இதனை உபயோகிக்கும்போது எழுந்து திரிந்துலாவலாகாது. கூடியவரையில் அமைதியாகவே யிருக்கவேண்டியது. மிளகாய், மிளகு முதலிய காரமான வஸ்துக்களைச் சேர்க்கலாகாது. மாமிச பக்ஷணிகளானால்வெள்ளாட்டிறைச்சிச் சூப்பு, நெய்யிற் பொரித்த மாமிசம் முதலியவைகளை உபயோகிக்க வேண்டியது. பச்சைமீன், கருவாடு, கத்தரிக்காய் முதலிய உஷ்ண பதார்த்தங்களை நீக்கவேண்டியது. முக்கியமாய் அவரவர்களின் தேக சுபாவத்திற்கு ஒவ்வாத பதார்த்தங்களை நீக்கியும் சேர்க்கும் பதார்த்தங்களைச் சேர்த்துக் கொண்டும் வருவதுதான் பிரதானமான பத்தியம். கஷ்டத்திற்குப் பால்மாறாமல் இதனை உபயோகித்தால் வியாதி அடியோடு தீர்ந்துபோகும். ஆயினும் சிகிச்சகர்கள் சமயோசிதம்போல் உபயோகிப்பதுதான் சிலாக்கியம்.

(இன்னும் வரும்.)

## சுகாதார போதினி.

### வினா விடை.

வினா:—என் சிநேகிதரொருவருக்குக் கீழ்க்காணும்வியாதியானது நீண்டகாலமாகக்கீழ்க்கண்ட இலட்சணங்களுண்டாகிக்கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றார். அதற்காக அநேக சிகிச்சைகள் செய்யப்பட்டும் நல்ல பிரயோசன முண்டாகவில்லை. ஆகையால் தங்களுக்கு அல்லது, தங்கள் பத்திரிகையின் அபிமானிகளுக்கு அநுபவசித்தமான ஒருமுறையையெழுதத் தயவுசெய்யும்படி மிகவுங் கேட்டுக் கொள்கின்றேன். வியாதியின்னதென்பதையுந் தெரிவிக்கும்படியாகக் கேட்டுக் கொள்கின்றேன். வியாதியின் விபரம்.

சிறுநீரானது சொட்டுச் சொட்டாக இறங்கிக் கொண்டிருக்கிறது, அடிக்கடியும் நீருக்கு வருகிறது போலிருக்கிறது, இராப்பகல் சுமார் முப்பது முப்பத்தைந்து தடவை நீருக்கு உட்காரவேண்டியதா யிருக்கிறது, நீருக்கிருக்கும்போது எரிவந்தமும், வேதனையும் அதிகமாக விருக்கின்றன, நீர்த்தாரையில் அடைப்பிருப்பதனால் அதிக நேரம் முக்கவேண்டியதா யிருக்கிறது, இதற்குள் சலாகையைச் செலுத்திச் சிகிச்சையுஞ் செய்யப்பட்டிருக்கிறது, அதனாலும் அதிகப் பிரயோசன முண்டாகவில்லை, நீர்க்குண்டிக் காய்கள் துர்ப்பலப்பட்டிருப்பதாகவுந் தெரிகிறது கைகால்முதலிய ஸ்தானங்களிலும் அதிக எரிச்சலிருக்கிறது, நாளுக்குநாள் துர்ப்பலமும் அதிகப்பட்டு வருகிறது, ஆகார முதலியவைகள் வழமைபோற் குறைவின்றிச் சீரணமாகி வருகின்றன. இந்த இலட்சணங்களேயாம்.

A. B.

### விடை.

கந்தபே ரோஜா (தேவதாருப் பிசின்சத்து) பலம் - ௨௰, ஏலக்காய் பலம் - ௧௰, றூமிமஸ்தகி பலம்-௧௪.

செய்முறை:—பின்னுள்ள இரண்டு சரக்குகளையுங் கொஞ்சம் இடித்துச் சிதைத்து மேற்படி கந்தபே ரோஜாவிற் சேர்த்துப் பிசைந்துவைத்துக் கொள்ளவேண்டும். இரண்டு புதிய தோண்டிகளை யெடுத்து வாய்பொருந்தும்படியாகத் தேய்த்து ஒருதோண்டியில் முன் சித்தப்படுத்தி வைத்திருப்பதைப் போட்டு அதன்மீது மறுதோண்டியால் மூடி தோண்டிகளின் சந்திற்கு ஏழு சீலைமண்செய்து சணல்நார்க் கயிற்றால் இரண்டு தோண்டிகளின் கழுத்தையுங்கட்டி அதன்மீதும் இரண்டு மூன்று சீலைமண் செய்துலர்த்தி மருந்து வைத்திருக்கிற தோண்டியை அடுப்பின்மீது பக்கவாட்டமாகச் சாய்த்துவைத்து மறுதோண்டியானது வீழ்ந்துபோகாமல் முட்டுக்கொடுத்து வைத்து அதன் விலாவின் கீழ்ப் பக்கத்தில் சிறு துவாரமிட்டு அதில் குதிரை வால்மயிர்களைச் செருகிவைத்து அடுப்பை மெதுவா யெரித்துவர இந்தத் துவாரத்தின் வழியாகத் தயிலமிறங்கும். இந்தத் தைலத்தை வேறு சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணமும், உபயோகமும்:——முதல்நாள் அரை ஆழாக்கு நீராகாரத்தில் ஐந்துதுளி திராவகத்தை விட்டுப் பானஞ்செய்விக்க வேண்டும். மறுநாள் ஏழுதுளி திராவகத்தைவிட்டுப் பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் பிரதிதினமும் இரண்டு துளிகளை அதிகப்படுத்திக் கொண்டே ஏழுநாள் உபயோகிக்க வேண்டும். கடவுளினது கிருபையினாலும்,பெரியோர்களின் ஆசீர்வாதத்தினாலும் மேற்கண்ட வியாதி நீங்கிப்போம். மேற்கண்ட வியாதிக்கு நாட்பட்ட பிரமேகம் என்றும் பெயர். மூத்திரக் கிரிச்சரம் முதலிய பல நாமங்களு முண்டு.

ப-ர்,

புத்தகம்-௩. 1907௵ செப்டம்பர்௴ 15௳ இலக்கம்-௧௧.

சுகாதார போதினி.

௧-ம், பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம் 115.)

இரைப்பை சம்பந்தமான வியாதிகளின் சிகிச்சை.

கடுக்காய் மாத்திரை.

பிஞ்சுக் கடுக்காய்ச் சூரணம் பலம்-௨, கிச்சிலிக் கிழங்குச் சூரணம், சோம்புச் சூரணம் இவை வகைக்-க்குப் பலம்-௧, பொரித்த வெண்காரச் சூரணம் பலம்-௮.

செய்முறை:—மேற்படி சூரணங்களைக் கல்வத்திலிட்டு குளிர்ந்த ஜலம்வார்த்து இரண்டு சாமநேர மரைத்து அரை விராகனெடை யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்துவைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—பெரியவர்களுக்கு இரண்டு மூன்று, பாலர்களுக்கு ஒன்று ஒன்றரை.

அனுபானம்:—சீனிசர்க்கரை, வெல்லம், வெந்நீர், பன்னீர், முலைப்பால் முதலியவைகளாம்.

உபயோகம்:—மலபந்தம், மலச்சிக்கல் ஆகியவைகளை நீக்கி மலத்தைக் கிரமப்படுத்தும். இரைப்பையிலுள்ள வாயு, கபக்கட்டு, குளிர்ச்சி ஆகியவைகளை நீக்கி இரைப்பையைக் கிரமப்படுத்தி அதனைப் பலப்படுத்தும்.

குறிப்பு.

இந்த மாத்திரையானது பால்குடிக்கும் குழந்தைகளுக்கு அதிகமா யுபயோகப்படத் தக்கது. இதனை வாரத்தில் இரண்டு மூன்று தடவை அல்லது ஒன்றை விட்டொருநாள் பால்குடிக்கும் குழந்தைகளுக்கு உபயோகித்து வருவதினுல் வயிற்றில் பாற்கட்டு, வாயுக்கட்டு, புளிப்பு முதலியவைகள் சேராமல் இரைப்பையைச் சுத்திசெய்து நல்ல சுகத்தைக் கொடுக்கும்.

இலவணாதி மாத்திரை.

லாகூருப்பு, இந்துப்பு, கடப்பைக்காரம், கறுப்புப்பு, சோடாவுப்பு, மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், நெல்லிமுள்ளிச் சூரணம், சோம்புச் சூரணம், ஓமச் சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-க, கருஞ்சீரகச் சூரணம், நற்சீரகச் சூரணம், கொடிவேலி வேர்ப்பட்டைச் சூரணம், மேற்றோலைச் சீவியிடித்த சுக்குச் சூரணம், மிளகுச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், பொரித்த வெண்காரச் சூரணம், நவச்சாரம், குச்சிகாம்பு முதலியவை நீக்கின சூரத்துநிலவாவாரைச் சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-க௨, பொரித்த பெருங்காயச் சூரணம், விராகனெடை-வ, எலுமிச்சம் பழச்சாறு படி-வ.

செய்முறை:—உப்புகளையெல்லாஞ் சேர்த்துப் பொடித்து மற்ற சூரணங்களையுஞ் சேர்த்துச் சற்றுநேர மரைத்துக் கலந்து எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து அரைத்து சாறெல்லாஞ் சுண்டினபின்பு திரள்பதத்தில் கால் விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க. ௨.

உபயோகம்:—வாயுக்களைச் செம்மையாகக்கண்டிக்கும். உட்கொண்ட ஆகாரத்தைச் சீரணிக்கச்செய்யும். அஜீரணபேதி, மந்தபேதி ஆகியவைகளைக் கண்டிக்கும், இரைப்பையிலுள்ள தோஷங்களைநீக்கி அதைப்பலப்படுத்தும்.

குறிப்பு.

இதனை ஆகாரம் சாப்பிட்டபின்பும் சாப்பிடலாம். காலைமாலை யிரண்டு வேளையும் உபயோகிக்கலாம். அவசியமான மற்ற நேரங்களிலும் உபயோகித்துக் கொள்ளலாம்.

இங்குவாதி மாத்திரை.

உயர்தரமான பெருங்காயம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், மேற்றோலைச் சீவியிடித்த சுக்குச் சூரணம், கறுப்புப்பு, வாய்விளங்கச் சூரணம், கொடிவேலி வேர்ப்பட்டைச் சூரணம், இவை வகை க-க்குப் பலம்-௮, பனைவெல்லம் பலம்-௨0.

செய்முறை:—பெருங்காயத்தைப் பொரித்துச் சூரணித்து மற்றச் சூரணங்களையுஞ் சேர்த்து மைப்போலரைத்துக்கொள்ளவும். வெல்லத்தைக் கொஞ்சம் ஜலத்திற்கரைத்து அடுப்பேற்றிக் கொதிக்கவைத்து ஒருகொதி வந்தவுடன் வடிகட்டித் திப்பிமுதலியவைகளை நீக்கி மறுபடியும் அடுப்பேற்றிக் காய்ச்சி கெட்டிப் பாகுபதத்தில் இறக்கிவைத்துக் கொண்டு முன் சூரணத்திற் சேர்த்து ஒருமணிநேர மரைத்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-கவ. க௨. இதனைக் காலையி லொருவேளை யுட்கொண்டு அதன்மேற் கொஞ்சம் வெந்நீரைப் பானஞ்செய்ய வேண்டும்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுக்கள், வயிற்றிரைச்சல், வயிற்றுப் பொருமல், வயிற்றிலுண்

டாகுஞ் சத்தம், வாயு சம்பந்தமான குன்மரோகம், கபசம்பந்தமான குன்மரோகம் ஆகியவைகள் தீரும்.

## இலவணுதிச் சூரணம்.

கருப்புப்பு பலம்-ரு, மேற்றோல் சீவியிடித்த சுக்குச் சூரணம் விராகனெடை - கஉ, ஓமச் சூரணமும், கொடிவேலி வேர்ப்பட்டைச் சூரணம், இவை வகை -க-க்கு விராகனெடை-எ, அரிசித்திப்பிலிச் சூரணம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ, எலுமிச்சம் பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—எல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாம நேரமரைத்து வெயிலி லுலர்த்தவேண்டும். ஈரமில்லாமல் நன்று யுலர்ந்த பின்பு மறுபடியுங் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்போல் எலுமிச்சம்பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாம நேரமரைத்து முன்போல் வெயிலிலுலர்த்த வேண்டும். மூன்றுந் தடவையும் எலுமிச்சம் பழச்சாற்றினலரைத்து முன்போ லுலர்த்திப் பொடித்து சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

## பசிதீபன உசிதமுறை.

மிளகாயை வெயிலிலுலர்த்திப் பொடித்த சூரணம் பலம்-உ௰, எலுமிச்சம் பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சூரணத்தைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாம நேரமரைத்து வெயிலில் வைத்துலர்த்த வேண்டும். மறுநாள் காலையில் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்போல் எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து முன்போல் ஒருசாம நேரமரைத்து முன்போலுலர்த்த வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி அரைத்தும் உலர்த்தியும் நாற்பதுநாட்செய்து இரண்டு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-உ. இதனை ஒரு வெற்றிலையில் வைத்து மென்று சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—அடங்காப் பசியை யுண்டாக்கும் தாம்பிர பற்பம் பாஷாண பற்பம், முதலியவைகளை உபயோகித்து அடங்காப் பசியுண்டாவது வழமை. நாம் தினந்தோறும் உபயோகித்து வரும் இந்தசொற்ப வஸ்துவை மேற்கண்ட விதமாகப் பக்குவப் படுத்துவதினல் மேற்படி ஆச்சரிய குணமுண்டாகி விடுவதால், ஒவ்வொன்றைரிம் அதனதன் கிரமப்படி பக்குவப்படுத்துவதின் விசேஷம் நன்குவிளங்கும்.

## குறிப்பு.

மேற்கண்ட விதமாக இதனை நாற்பதுநாள் அரைக்க சோம்பல் படுகிறவர்கள் குறைந்தபக்ஷம் ஒருவார மேனும் மேற்கண்ட விதமாகப் பக்குவப்படுத்தி உபயோகித்தால் அஜீரண ரோகம், மந்தாக்கினி ரோகம் முதலியவைகள் தீரும். விஷபேதிக்கு இதனை உபயோகித்துக் குணங்கண்டிருப்பதாக நமது நண்பர்களுள் ஒருவரால தெரிய வந்திருக்கிறது வாஸ்தவத்தில் அவ்வித குணமுண்டென்பதற்குச் சந்தேகமில்லை.

## வேறு.

மேற்றோல் சீவின சுக்குச் சூரணம் பலம் - க. சோம்புச் சூரணம் பலம்-ரு, பெருங்காயம் பலம் - க௰, எலுமிச்சம் பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—கல்வத்திற் பெருங்காயத்தைப்போட்டு இடித்துத் தூள்செய்து மேற்படி சாறதைச் சிறுகச் சிறுக வார்த்து அரைத்து வெண்ணெய்போலான பின்பு மற்ற சூரணங்களையுஞ் சேர்த்து மேற்படி சாற்றையே சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாம நேரமரைத்து ஒரு விராகனெடையுள்ள பில்லை. மாத்திரைகளாகச்செய்து இரும்புச் சட்டியைக் கரிநெருப்பிற் சிவக்கக்காய்ச்சி அதன்மீது வைத்து பில்லைகள் சிவந்துபோன பக்குவத்தில் எடுத்துப் பொடித்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-வ, ௰. இதனையுட்கொண்டு மேலே கொஞ்சம் வெந்நீர்பானஞ் செய்யவும்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுக்கள், வயிற்றுப்பொருமல், வயிற்றிரைச்சல் முதலியவைகள் தீரும். வயிற்றுநோவு, மந்தாக்கினிரோகம், அஜீரணரோகம் முதலியதைகள் நீங்கும். மந்தபேதி, அஜீரணபேதி ஆகியவைகளுங் குணமாம். இரைப்பையின் அக்கிரமத்தை நீக்கிக் கிரமப்படுத்தி அதைப் பலப்படுத்தும்.

## ஓம மாத்திரை.

ஓமச்சூரணம் பலம்-௰, கருப்புப்பு பலம் - ௰, கையாந்தகரைச் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு மேற்படிசாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து ஒருசாம நேரமரைத்துக் கால்விராகனெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-உ-௩. பாண்டுரோகிகளுக்கு கையாந்தகரைச்சாற்றி லனுபானித்துக் கொடுக்கலாம்.

உபயோகம்:—அஜீரண ரோகம், மந்தாக்கினி ரோகம் முதலியவைகள் தீர்ந்து ஜடாராக்கினி அதிகப்படும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

உ - ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo - III - பக்கம்-116)

#### குவய்னு.

குளிர்சுரத்தின் முறையை நிறுத்துவதில் இதுமிகவுங் கைவல்யமானதும் மற்ற மருந்துகளைக் காட்டிலும் சீக்கிரம் குணஞ்செய்வதிலும் இதுமிகவும்பிரசித்திபானதுமாம் பிரதிதினமும்வருகிற குளிர்சுரம்அல்லது, மூன்றுநாளைக் கொருதரம் வருகிறமூன்றுமுறை சுரம் அல்லது நான்குநாளைக் கொருதடவை வரும் நான்காமுறைசுரம் முதலிய எல்லாவகைமுறை சுரங்களில் இது மிகவும் சிறந்த மருந்தென அனுபவத்தால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது ஆனால், சுரமிருக்கும்போது அல்லது சுரம் வருவதற்கு முன்னுண்டாகும் கொட்டாவி, முறுக்குவிடுதல் ஆகியவைகள் ஆரம்பமானபோதும் இதனை உபயோகிக்கலாகாது. ஆனால் சுரமில்லாத சமயங்களில் ஒவ்வொன்று அல்லது, இரண்டிரண்டு குன்றிமணியெடை குவய்னுவை மும்மூன்றுமணிக் கொருதடவை உபயோகிக்கவேண்டியது. சுரமானது காலையில்வந்து பிற்பகலில் நின்றுவிடுகிறதாயிருந்தால் சுரம் நின்றபின்பு ஒவ்வொரு குன்றிமணியெடை குவய்னுவை இரண்டு அல்லது, மூன்றுதடவைகள் படுக்கைக்குப் போகிறவரையிற் கொடுத்து அதிகாலையிற் சுரம் வருவதற்குமுன் இரண்டரைக் குன்றிமணியெடை குவய்னுவை உபயோகிக்கவேண்டும். இப்படிச் செய்வதால் இரண்டொரு நாட்களில் சுரம் நின்றுபோகும். இவ்விதமே மூன்றுமுறை, நான்காமுறை சுரங்களிலும் செய்யவேண்டியது. அதாவது முறையில்லாத நாட்களில் ஒன்று அல்லது ஒன்றரைக் குன்றிமணியெடை குவய்னுவை மும்மூன்றுமணிக் கொருதடவை உபயோகித்துவந்து சுரம் வரும் முறைதினத்தின் அதிகாலையில் இரண்டுகுன்றிமணியெடை குவய்னுவைக்கொடுத்து சுரம்வர இரண்டுமணிக்கு முன்னும் இரண்டரைக் குன்றிமணியெடை குவய்னுவைக் கொடுக்கவேண்டும். இவ்விதம் செய்தால் சுரமானது அவசியம் நின்றுபோகும்.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி.

௩ - ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-117.)

#### பெரும்பாட்டுப் பிரயோகம்.

ஓலைத் தாமரையிலை ரசம் பலம்-கவ, சர்க்கரை பலம்-உ. இவ்விரண்டையும் கலக்கிப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் சாப்பிட்டுவரப் பெரும்பாட்டிரத்தம் நிற்கும்.

#### வேறு.

மந்தாரப்பட்டை பலம்-உ, வெங்காயம் பலம்-உ, வெல்லம் பலம்-உ. இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு மைபோலரைத்து ஆறு உருண்டைசெய்து காலை மாலை யிரண்டுவேளையுமாக மூன்றுநாட் சாப்பிடப் பெரும்பாடு நிற்கும்.

#### வேறு.

ஏலம் விராகனெடை-க, படிக்காரம் விராகனெடை-க. இவ்விரண்டையும் முள்ளங்கிச்சாறு விட்டரைத்து ஏழு உருண்டைசெய்து அரிசிக் கழுநீரிற்கலக்கிச் சாப்பிடவேண்டும். இவ்விதம் ஏழுநாட் காலையிற் சாப்பிடப் பெரும்பாடு நிற்கும்.

#### வேறு.

நாவல்பட்டையை யரைத்தவிழுது பலம்-உ, இதனை மோரிற்குழப்பிப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலையில் மூன்றுநாள் பானஞ்செய்யப் பெரும்பாடு நிற்கும்.

#### வேறு

புளியைவேண்டிய அளவுகரைத்து அதில் துணியைநனைத்துக் காயவைக்க வேண்டும். ஈரமில்லாமல் உலர்ந்த பின்பு முன்போல் புளியைக்கரைத்து முன்போல் நனைத்து உலர்த்தவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி ஐந்துதடவைகள்செய்து அதனைக் கொளுத்திச் சாம்பலாக்கி அந்தச் சாம்பலுக்குச் சமனெடை பனைவெல்லத்தைச் சேர்த்தரைத்து சுமார் இரண்டு விராகனெடை சாப்பிட வேண்டும். இப்படி மூன்றுவேளை சாப்பிட்டால் பெரும்பாட்டிரத்தம் நிற்கும்.

#### வேறு லேகியம்.

கசகசாத்தோல், கர்க்கடகசிங்கி இவற்றின் சூரணம் வகை-க-க்குப் பலம்-க, மராட்டி மொக்குச்சூர

ணம் விராகனெடை-௧௰, பனைவெல்லம் பலம்-௨, தேன் பலம்-௮.

செய்முறை:—வெல்லத்தைப் பாகுசெய்து பாகுபதத்தில் மேற்படி சூரணத்தைக் கொட்டிக் கிண்டிக்கிளறி இறக்கித் தேனைவிட்டு மிஸ்ரமித்து எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௧௮-௨. காலைமாலை இரண்டுவேளையும் ஐந்துநாட் சாப்பிடவும்.

உபயோகம்:—பெரும்பாடு தீரும்.

பத்தியம்:—வெந்நீர்ச்சாதம், வறுத்த துவரை ஆகியவைகளாம், மற்றதொன்று மாகாது.

### கெற்பஸ்திரீ நீர்ச்சுருக்கிற்கு.

சிறுநெருஞ்சிமுள், சீரகம் இவை வகை-௧-க்குப் பலம்-௧, சீனிச் சர்க்கரை பலம்-௨, முன் இரண்டு சரக்கையும் வறுத்து இடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து சீனியையுஞ் சேர்த்து வேளையொன்றிற்கு இரண்டு விராகனெடை விதம் காலைமாலை யிரண்டு வேளையுஞ் சாப்பிட்டுவர மேற்படி ரோகந்தீரும்.

### கெற்பமுண்டாக வுசிதம்.

பொன்னுவரைச்சாறுபலம்-௧, பசுவின்பால் பலம்-௫. இவ்விரண்டையுஞ் சேர்த்துக் காலையிற் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் சூதக சுத்த ஸ்நானஞ்செய்தபின்பு ஏழுநாள் உபயோகிக்க கெற்பமுண்டாகும்.

### கெற்பத்தில் மரித்தபிண்டம் வெளிப்பட.

குங்குமப்பூ விராகனெடை-௨. (இதனை ஜலத்திலரைத்து உருண்டைசெய்து உள்ளுக்குக் கொடுக்க மறித்தபிண்டம் உடனே வெளிப்படும்.

### வேறு.

அரசங்கொழுந்து பலம்-௨, ஏலரிசி பலம்-௮. இவ்விரண்டையுமரைத்து ஒருபலம் வெண்ணெயிற் குழைத்துக்கொடுக்க அரைமணிநேரத்திற்குள் மரித்தபிண்டம் வெளிப்படும்.

### வேறு.

கார்த்திகைக் கிழங்கை அரைத்து அடிவயிற்றிற்பூசி அனல்காட்ட வயிற்றில் மரித்த பிண்டம் உடனே வெளிப்படும்.

(இன்னும் வரும்)

## சுகாதார போதினி.

௪-ம் பிரிவு



### பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 118).

### மாந்த எண்ணெய்.

(a) சிற்றாமணக் கெண்ணெய் படி-௨, துளசிச்சாறு, முசுமுசுக்கைச்சாறு, உத்தாமணிச்சாறு, சீந்திற் கொடிச்சாறு, தேள்கொடுக்கி யிலைச்சாறு, சிறுசெருப்படிச்சாறு, கையாந்தகரைச்சாறு, வல்லாரைச்சாறு, மணத்தக்காளிச்சாறு, நுணாவிலைச்சாறு, கஞ்சாங் கோரைச்சாறு, கொழிஞ்சி யிலைச்சாறு, வெள்ளறுகுச்சாறு, பிரமி யிலைச்சாறு இவை வகை-௧-க்குப் படி-௰, சோற்றுக் கற்றாழைச்சாறு படி-௬, வாகு வைக்கோலைச் சுற்றி யெரித்து இடித்துப் பிழிந்த ஆற்றுத் தும்மட்டிக்கா யிலைச்சாறு படி-௯.

(b) கருஞ்சீரகம், சீரகம், சன்ன லவங்கப்பட்டை, வெந்தயம், கோஷ்டம் இவை வகை-௧-க்குப் பலம்-௮, செண்பகமொக்கு விராகனெடை-௧. இவையெல்லாவற்றையும் சேர்த்திடித்து ௮-பலம் தோலுரித்த வெள்ளைப் பூண்டிதழைச் சேர்த்து அம்மியில் வைத்து ஜலம் வார்த்தரைத்து வெண்ணெய்போலெடுத்து வைத்துக் கொள்ளவும்.

செய்முறை:—(a) யி லுள்ளவைகளை யெல்லாம் ஒன்றாகக் கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துச் சோற்றுப் பதமாய் வரும்போது (b) யிற் சொன்னபடி சித்தப்படுத்தி யிருப்பதைப் போட்டு நன்றாகக் கிளறிவிட்டு கடுகு திரள்பதத்தி லிறக்கி வடிகட்டிச் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௰, ௮, ௬, ௧, ௧௰ ௧௮.

அனுபானம்:—மூலைப்பால், சுக்குக் கஷாயம், ஓமக் கஷாயம், ஓமத் திராவகம், தேன் முதலியவைகளாம்.

உபயோகம்:—குழந்தைகளுக்குண்டாம் எல்லா வகை மாந்தரோகங்களும், அள்ளு முதலிய கபசம்பந்தமான ரோகங்களும் தீரும்.

காலையில் மாத்திரம் ஒருவேளை யெண்ணெயைக் கொடுக்க வேண்டும். மாலையிற் பின்காணும் கஷாயத்தை உபயோகிக்க வேண்டும். அது இது:—

ஒரு விராகனெடை மிளகை வறுத்துச் சாம்பலாக்கி அரையரை விராகனெடை துத்தியிலை, வெந்தயம் ஆகியவைகளையும் சேர்த்துச் சிவக்கவறுத்து-௩ ஆழாக்கு ஜலம்விட்டு-வ ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டிப் பானஞ் செய்விக்கவும். கஷாயம் சாப்பிடாதவர்களுக்கு வசம்பைச் சுட்டுச் சாம்பலாக்கித் தேனிலிழைத்துக் கொடுக்கவும்.

### நாக்குப்பூச்சி யெண்ணெய்.

(a) சிற்றுமணக் கெண்ணெய் சேர்-௨, சதுரக் கள்ளிப்பால் சேர்-௧, பசுவின்பால் சேர்-௮.

(b) கருஞ்சீரகம் பலம் ௮, கார்போகரிசி, வெட்பாலையரிசி, வசம்பு, தோர்லுரித்த வெள்ளைப்பூண்டிதழ் இவை வகை-௧-க்குப் பலம்-௮, தோலுரித்த வெங்காயம் பலம்-௨.

செய்முறை:—(a) யி லுள்ளவைகளை யொன்றுகக் கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து ஒரு கொதி வந்தவுடன் (b) யி லுள்ளவைகளை யெல்லாம் சேர்த்திடித்து அரைத்து அதிற்போட்டு எரித்துக் கடுகு திரள்பதத்தில் இறக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—பெரியவர்களுக்கு விராகனெடை-௧, சிறுவர்களுக்கு விராகனெடை-வ, ௮

அனுபானம்:—இளநீர், பால், சர்க்கரை, தேன் முதலியவைகளாம்.

பேதி அதிகமானல் மிளகுநீருஞ் சாதமுஞ் சாப்பிடப் பேதி நின்றுவிடும்.

உபயோகம்:—வயிற்றிலுள்ள பழைய மலங்களெல்லாம் வெளிப்பட்டுப் போகும். பெரும்பூச்சிகள், சிறுபூச்சிகள், கிருமிகள், முதலிய எல்லாவகைப் பூச்சிகளும் வெளிப்பட்டுப் போகும்.

### குளிர்ச்சி யெண்ணெய்.

சிற்றுமணக் கெண்ணெய் படி-வ, ஆவாரம்பூ விதழ் பலம்-௨௮, சோற்றுக் கற்றுழைச்சோறு பலம்-௫, வெண்ணிறமான வெங்காயச்சாறு வீசை-௮, வெந்தயம் பலம்-௩, கற்கண்டு பலம்-௨௮.

செய்முறை:—இவற்றுள் சரக்குகளைச் சிதைத்துப்போட்டுக் கற்றுழைச் சோற்றையும் சேர்த்து வெயிலில் பத்துநாள் வைத்துப் பிறகு எடுத்து உபயோகிக்க வேண்டும். நீரிருந்தால் இளஞ்சூட்டில் வைத்து நீரில்லாமல் எரித்துப் பத்திரப்படுத்திக்கொள்ளவேண்டும். வெயிலில் வைக்கக் கூடாத சமயங்களில் அடுப்பின்மீது வைத்து தீபாக்கினியாக எரித்துப் பத்திரப்படுத்திக் கொள்ளலாம்.

பிரமாணம்:—விராகனெடை-௧. ௪.

உபயோகம்:—கணச்சூடு, அஸ்திச்சூடு, கெற்பச்சூடு முதலியவைகள் தீர்ந்து தேகங்குளிர்ந்து நல்லபுஷ்டி யுண்டாகும். தேகம் செழிப்பாகும்.

(இன்னும் வரும்)

—

## சுகாதார போதினி.

௫-ம் பிரிவு

—

### மூலரோகம்

முன்தொடர்ச்சி (vol- III பக்கம்.120)

### மூலரோகச் சிகிச்சை.

கொண்டைக்கடலை சுமார் பலம்-௧௫, இதனை இரவில் ஜலத்திற்போட்டு ஊறவைத்து மறுநாட் காலையில் அடுப்பேற்றி வேகவைக்க வேண்டும். தண்ணீரைச் செல்லத்தக்க அளவு சேர்த்துக் கொள்ளவும். அடுப்பை மெதுவாகவும் எரித்து வரவேண்டியது. கடலைப் பருப்பானது நன்றாய்வெந்தும்வெளுத்தும் ஜலமானது நன்றாய்க் கருத்தும் இருக்குஞ் சமயத்தில் அடுப்பை விட்டிறக்கி வடிகட்ட வேண்டும். வடிகட்டின கஷாயத்தில் - 13 - பலம் பூண்டிதழ்களைப் போட்டு அடுப்பேற்றி வேகவைத்து நன்றாய்வெந்து அழிந்துபோன பதத்தில் சுமார் இருபத்தைந்து பலம் எருமைப்பாலை அதில் விட்டுக் காய்ச்சவேண்டும். பாலெல்லாஞ் சுண்டினபின்பு ஆறுபலம் பசுவினெய்யை யதில்விட்டு நன்றாய்க் கிளறிவர எல்லாம் பால் கவ்வா மாதிரி ஆகிவிடும். அதனை யெடுத்துத் தாம்பிர பாத்திரத்திற் போட்டு மரமத்தால் நன்றாகக் கடைந்து திறமான தேன் பலம்-௨௪, இதனை அதில்விட்டு மறுபடியும் அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து லேகிய பதமான சமயத்திற் கீழிறக்கிக் கீழ்க்காணும் சரக்குகளைச் சேர்க்கவேண்டும்.

வெள்ளைத் தூதரிவிதைச் சூரணம் விராகனெடை-௧௨, கருஞ்சீரகச் சூரணம் விராகனெடை - ௧௨, சிற்றரத்தைச் சூரணம் விராகனெடை-௧௨, இலவங்கபபட்டைச் சூரணம் விராகனெடை-௧௨, மிளகுச்சூர

ணம் விராகனெடை-கஉ. அரிசித்திப்பிலிச் சூரணம் விராகனெடை-கூ.

இவை யெல்லாவற்றையு மொன்றாகக் கலந்து மூன் சித்தப்படுத்தி வைத்திருப்பதில் சிறுகச் சிறுகத் தூவி நன்றாகக் கடைந்து நெய்ப்பசையான பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-ங, காலையில் ஒரு வேளை மாத்திரம் சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—எல்லாவகை மூலரோகங்களும் தீரும். மூலரோகத்தா லுண்டான தேக துர்ப்பலம், அசதி, சோர்வு முதலியவைகள் நீங்கித் தேகதிடம் தேகபலம் ஆகியவைகளுண்டாகும்.

பத்தியம்:—கடலை ஊறவைத்த ஜலத்தில் அன்ன முதலியவைகளைச் சமைத்து உபயோகிக்க வேண்டியது. வாயு பதார்த்தம், குளிர்ச்சியான பதார்த்தம் ஆகியவைகளை நீக்கவேண்டியது. வியாதி நாட்பட்டதா யிருந்தால் இதனை அதிகநாள் தொடர்ச்சியாக உபயோகித்துவர வேண்டியது. வியாதி ஆரம்பமானதா யிருந்தால் சீக்கிரம் குணமாகிவிடும்.

வேறு.

மிளகாய் பலம்-க, மணக்கத்தி யரிசி அல்லது, கருங்குறுவை யரிசிமா பலம்-ச, கொப்பரைத் தேங்காய்ப்பால் பலம்-க, (இதனைத் தோலைச்சீவி யரைத்துப் பால்பிழிந்து மேற்கண்ட எடை நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும்.) பீதரோகணி, ஒரிலைத் தாமரை யிலைஇவை வகை-க-க்கு விராகனெடை-கவ. (இவ்விரண்டையும் அம்மியில் தனித்தனி மைபோ லரைத்துக் கொள்ளவேண்டும்) பசுவினெய் பலம்-உ௦.

செய்முறை:—மேற்படி மாவை ஒரு புதுமண் சட்டியிற் போட்டு அரைப்படி ஜலத்தைவார்த்து ஓரிரவு ஊறவைத்து மறுநாட் காலையில் செம்மையாய்க் கரைத்துத் தனியே வைத்துக்கொள்ள வேண்டும். மிளகாயைப் புதுச் சட்டியிலிட்டு அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து அரைவாசி வறுபட்ட பின்பு முன்பு கரைத்து வைத்திருக்கும் மாவின் ஜலத்தைச் சிறுகச் சிறுகத் தெளித்து வறுத்து மிளகாயெல்லாம் எரிந்து வெண்ணிறமாகிய பஸ்பமான சமயத்தில் மேற்படிதேங்காய்ப்பாலை விட்டுப் பிறகு முன்னரைத்து வைத்திருக்கு மருந்துகளையுஞ் சேர்த்து நன்றாய்க்கிளறி நெய்யையும் விட்டு மத்தாற்கடைந்து லேகியபதத்தில் எடுத்துப் பீங்கான் பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-௦. க. காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

பத்தியம்:—வியாதி பலமாயிருந்து தேகபலமுமிருந்தால், உப்பு, புளி முதலியவைகளை நீக்கி கடும்பத்தியம் வைத்தால் வெகுசீக்கிரம் வியாதி குணப்படும். இந்தப் பிரயோகம் பெரும்பான்மையும் பலசாலிகளுக்கே உபயோகப்படும். சுகுமார தேகிகளுக்கு விசேமா யுபயோகப்படாது. அவர்களுக்கும் உபயோகிக்க ஆவசியகமானால் இலகுவான பதியமாக வைக்கவேண்டியது.

உபயோகம்:—வாதசம்பந்த மூலரோகம், வறள் மூலரோகம முதலிய மூலரோகங்கள் தீரும்.

குறிப்பு.

மிளகாயானது மூலரோகிகளுக்குக் கூடாத வஸ்துவா யிருந்தும் அந்த வஸ்துவினாலேயே அந்த ரோகத்திற்கு முறை யேற்பட்டிருப்பது பெரியோர்களின் புத்தி நுட்பத்தையும், கடவுளின் அற்புத மகிமையையும் விளக்குகின்றது. இந்த மூலரோகத்திற்கு மிளகாய் சம்பந்தமான வேறொரு முறையும் முன்சொல்லப்பட் டிருக்கிறது.

வேறு.

சாட்டரணைவேர் பலம்-க, மிளகு, வெங்காயம், கருவேப்பிலை, சீரகம், புளி இவை செல்லத்தக்க அளவு, பசுவினெய் பலம்-௦.

செய்முறை:— மேற்படி வேரைச் சிறுதுண்டுகளாகத் துண்டித்து ஜலத்திற்போட்டு இரண்டுமூன்று தடவை யலம்பிக் கழுவிச் சுத்திசெய்து வேறுபாத்திரத்திற் போட்டுக் கொஞ்சம் ஜலத்தைவிட்டு வேகவைத்து நன்றாய் அழிய வெந்தபின்பு மத்தாற்கடைந்து அதிலுள்ள திப்பிநீக்கி விட்டு மற்ற சம்பாரங்களையும் தேவையான அளவு அரைத்துச்சேர்த்து அரை அல்லது முக்கால் ஆழாக்கு ஜலம்விட்டுக் கரைத்துக் கொள்ளவும். நெய்யைச் சட்டியில் வார்த்து அடுப்பேற்றிச் செம்மையாகச் சூடுகண்டபின்பு ஒருபலம் வெங்காயத்தை மெல்லியதாக அரிந்து ஏழுதடவை ஜலத்திற் கழுவி மேற்படி நெய்யிற்போட்டு வறுக்கவேண்டும். சிவந்த வர்ணமான பதத்தில் முன் சித்தப்படுத்தி வைத்திருப்பதை அதில்விட்டு மறுபாத்திரத்தால் மூடி வைக்கவேண்டும். மூன்று நான்குகொதி வந்தபின்பு கீழிறக்கி ஆறவிட்டு இளஞ்சூட்டுடன் காலையில் சுமார் அரைப்பலம் சாப்பிடவேண்டும். சாதம் சமைத்துச் சுடுசாதத்துடனும் இரண்டுமூன்றுபலம் சாப்பிட

வேண்டும். இவ்விதம் தினமொன்றிற்குக் காலையில் ஒருவேளை விதமாக இருபதுநாள் உபயோகித்து வந்தால் சிழ்மூலம் குணமாகிவிடும் ஒருவாரம் பத்துநாளைக்குள்ளாகவே இதன் குணம்தெரியும். வியாதி நாட்பட்டதாகவும், கஷ்டமானதாகவு மிருந்தால் ஆரம்பத்தில் இருபதுநா ளுபயோகித்து இடையிற் பத்துஅல்லது, பதினைந்து நாள்விட்டு மறுபடியும் இருபதுநாளுபயோகிக்க வேண்டும். இவ்விதம் வியாதியின் பலத்திற்குத் தகுந்தபடி இரண்டுமூன்று தடவைகள் விட்டுவிட்டு உபயோகிக்கின் எவ்வித நாள்பட்ட சிழ்மூல ரோகமுந் தீரும்.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி·

௪-ம் பிரிவு.

### இரசவாதம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 112)

மேற்கண்ட விதமாக சர்வ ஜாக்கிரதையுடன் இருந்தும் வெள்ளியானது குறைய நேரிட்டால் அப்போது அதன் காரணத்தை நிதானித்து அறியவேண்டியது ஆவசியகம். ஏனெனில், வெள்ளியானது எரிந்துபோகிற வஸ்துவல்ல. மேற்கண்ட விதமாகக் கெந்தகத்தின் கெடுதியில்லாம லிருந்தால் அதை உருக்கின கும்மட்டியில் கீழே சிந்திப்போ யிருக்கவேண்டும். (இவ்விதம் நமது அனுபவத்தில் பலதடவை கண்டிருக்கின்றோம்) ஆகையால் மேற்கண்டபடி வெள்ளியானதுவைத்த எடைக்குக் குறைவாயிருந்தால் கெந்தகத்தின் கெடுதியா? அல்லது, கும்மட்டியில் சிந்திப்போயிருக்கிறதாவென யூகித்து நிதானித்தறிய வேண்டியது. "மந்திரங்கால் மதிமுக்கால்" என்னும் ஆன்றோர் வாக்கியத்திற் கொக்க இந்த விஷயங்களிலெல்லாம் யூகித்தறிதலே பிரதானமானது.

முதற் றடவையில் வெள்ளியானது பொன் வர்ணமாகி விடவேண்டும், (இவ்விதம் அனுபவத்தில் பலதடவை காணப்பட்டிருக்கிறது) இவ்விதம் சிவப்புச்சாயலான மஞ்சள் வர்ணமாகா விட்டால் இரண்டாந்தடவையும் தாம்பிரக் களங்கத்தைச் சேர்த்து உருக்கி ஊதி வர்ணமேற்ற வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் பொன்னானது நல்ல வர்ணமுள்ளதாக விராது. சிலசமயம் எட்டுத் தடவை மடக்கிமடக்கிச் சேர்த்துருக்கித் தாம்பிர வருணமாக்கப்பட்டிருக்கிறது. சேர்மானத்திலும் சிரேஷ்டமானதாகக் காணப்பட்டிருக்கிறது. ஆகையால், இதன் நிதானத்தையும் அனுபவத்தினால் யூகித்தறிந்து கொள்ளவேண்டும். ஏனெனில், சிலசமயம் ஒரேதடவையில் வர்ணமேறிப் போவதும் பலதடவையில் வர்ணமேறிப் போவதும் அனுபவத்தால் நிச்சயிக்கப் பட்டிருப்பதே காரணம்.

வெள்ளிக்குச் செம்மையாக வருணமேறாத மட்டத்தைப் பூதக்கண்ணாடியால் பரிசோதித்தபோது வெள்ளிமுழுவதும் வருணமேறாமல் சிறிதிடங்களில் வருணமாகியும், சிலதிடத்தில வருணமேறாமல் வெள்ளையாயு மிருந்தது. இதனைத் தங்கத்தோடு சேர்த்தபோது அதிகங் குறைந்த மாற்றுள்ள பொன்னானது. ஆகையால், வெள்ளியைப் பூரணமாக வருணமேற்றியே பொன்னோடுசேர்க்க வேண்டியது. இந்த விஷயத்தில் அதிக புத்திநுட்பமும் அதிக யூகமும் வேண்டியது. இந்த மர்மத்தையறியாத அநேகர் வீணே யேமாந்து ஏங்குகின்றார்கள். இந்த விஷயத்தைக் கவனித்துச் செய்பவர்கள் ஒருபோதும் நஷ்டமடையார்கள். இந்தவிஷயத்தைக் கவனியாதவர்கள் அவசியம் நஷ்டமடைவார்கள்.

### வருணமேற்றிய வெள்ளியைப் பக்குவப்படுத்தும் வகை.

மேற்கண்ட விதமாகத் தாம்பிரக்களங்கத்தை அல்லது தாம்பிரத்தைச்சேர்த்து வருணமேற்றிய வெள்ளியை அன்னபேதி ஜலத்தில் உருக்கிச் சாய்க்கவேண்டும். (ஒருபலம் அன்னபேதியைப் பொடித்து ஐந்துபலம் ஜலத்திற்கரைத்து எடுத்துக்கொள்வதே அன்னபேதி ஜலமாம்) இவ்விதம் சாய்த்தால் வெள்ளியில் அபச்சத்துச்சேர்ந்து தங்கி விடுகிறது. ஆகையால், அதனை மறுபடியுருக்கும்போது உப்பிவிடுகிறது அல்லது, கொப்பளித்து விடுகிறது. ஆகையால் மடக்கி மடக்கி நான்கைந்து தடவை யுருக்கிச் சாய்க்க நேரிடுகிறது. இப்படி மடக்கி மடக்கி யுருக்கிச் சாய்த்தால் உப்பாமலும் கொப்பளிக்காமலும் இருப்பதுடன் நல்ல ஊட்டமும் உண்டாகி விடுகிறது. ஆகையால் வருணமேற்றிய வெள்ளியை மேற்கண்ட விதமாகப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டியதும் முக்கியமான விஷயம்.

### குறிப்பு.

நல்லபொன்னானது அதனை யுருக்கினால் அது ஒருபோதும் உப்பாது அல்லது கொப்பளிக்காது. ஆ

கையால் சரியான பக்குவம்வரும் வரையில் மடக்கி மடக்கி யுருக்கவேண்டியது தான் பிரதானம்.

இன்னும் நாம் முன்சொல்லி யிருப்பதுபோல் பொன்னையுருக்கினால் மேற்பக்கம் உருண்டைவடிவமாகவும், மீன்முதுகைப் போன்று மிருக்கும். வெள்ளியையுருக்கினால் தட்டையாகவுஞ் சமமாகவுமிருக்கும். வருணமேற்றின வெள்ளியானாலும் சரியே வேறு மருந்து கொடுக்கப்பட்ட எவ்வித மட்டமானாலுஞ் சரியே அதையுருக்கினால் மேற்பக்கம் உருண்டையாகவும் மீன் முதுகைப்போன்று மிராதவரையில் அதனோடு தங்கத்தைச்சேர்க்க முயலலாகாது இந்த இலட்சண முண்டானால்தான் சரியான மட்டமென நிதானித்து, மறுபடி அதனோடு தாயைச்சேர்க்க வேண்டும். இதற்காகவும் அடிக்கடி யதனை மடக்கி மடக்கி யுருக்கவேண்டியது தான் முறை. அவசரப்பட்டுத் தாயைச்சேர்ப்பதினால் குறைந்த மாற்றுள்ள பொன்னாகும். அதனால் நஷ்டத்திற் கேதுவாகுமே யொழிய இலாபத்திற்கேதுவிராது. இவ்வித விஷயங்களை யெல்லாம் கவனியாது அநேகர் இரசவாதத்தில் அநேகமாயிரம் ரூபாயை வீணாய்ச் செலவுசெய்து முடிவில்லொன்றும் பிரயோசன மடையாமல் இரசவாதம் பொய்யென்றே சாதித்துத் திரிகின்றார்கள். புத்தி நுட்பத்தினால் தாங்களேயாவது, அல்லது அனுபவசாலிகளான ஆசான்கள் மூலமாகவாவது கிரமப்படி செய்வார்களாயின் எவ்விதத்திலும் நஷ்டமடைவதற் கேதுவிராது.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி

### எ-ம் பிரிவு.

### பற்ப முறைகள்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம்-112)

### தாம்பிரபற்பம் (வேறு.)

சேராங் கொட்டைக் கொம்பு இரண்டடிநீளம் (இதனை ஆக்கரினால் மூக்காற்பங்குவரை தவாரமிட்டு வைத்துக்கொள்ள வேண்டும்) மேற்படி கொம்பானது சுமார் நான்கு, அல்லது, ஐந்து அங்குல கனமுள்ளதாக இருக்கவேண்டும். சுத்திசெய்த சுமார் இருபத்தைந்து, அல்லது, முப்பது தாம்பிரசல்லிகளை அடைத்து முன் சக்கையைவைத்துச் செம்மையாகக் கெட்டித்து மேற்படி சேராங்கொட்டை ஆப்பையை த்தடித்து ஏழு சீலைமண்செய்து உலர்த்தி கெஜபுடமிடவேண்டும். புடம் ஆறினபின்னெடுக்கக் கடவுளினது கிருபையால் வெண்ணிறமான பற்பமாகியிருக்கும்.

### குறிப்பு.

மேற்கண்ட சல்லிகளில்லாத சமயத்தில் தாம்பிரத்தைச் சுத்திசெய்து தகடடித்துச் சல்லியைப்போற் கத்தரித்துக்கொள்ளலாம். சிறு துண்டுகளாகத் தரித்தும் சேர்த்துக்கொள்ளலாம்.

பிரமாணம்:—அரைக்குன்றிமணிமுதல், ஒருகுன்றிமணியெடை வரையில்.

அனுபானமும், உபயோகமும்:—இலவங்கப்பட்டைச்சூரணம் குன்றிமணியெடை - ச, தேன் விராகனெடை-ரு. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, மூர்ச்சைரோகம், பிரமியரோகம், கபரோகம் ஆகியவைகள் தீரும்.

ஓமச்சூரணம் குன்றிமணியெடை - ச, தேன் விராகனெடை-ரு. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித் துண்ண மந்தாக்கினிரோகம், அஜீரணரோகம் ஆகியவைகள் தீரும்.

வெங்காயவேர்ச் சூரணம் விராகனெடை-உ, நெய் விராகனெடை-ரு. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, சாக்கைவலி, முயல்வலி முதலிய வலிப்புரோகங்கள் தீரும்.

மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், நெல்லிவற்றற் சூரணம் இவை வகை-க-க்கு குன்றிமணியெடை-ய, தேன் விராகனெடை-ரு. இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ணப் பறங்கிப்புண், வெண்குஷ்டம் ஆகியவைகள் தீரும்.

மாதுளம்பழ ரசம், இஞ்சிரசம் இவை வகை-க-க்கு விராகனெடை-க, தேன் விராகனெடை-ரு. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, பித்தரோகம், உதரரோகம், வாதமூலரோகம், சங்கிரஹணி, சூதகக்கட்டு ஆகியவைகள் தீரும்.

இன்னும் வரும்.

புத்தகம்-௩. 1907ஹ அக்டோபர்மீ 1௨ இலக்கம்-௪.

## சுகாதார போதினி.

க-ம், பிரிவு.

### வைத்தியக் குறிப்புகள்.

### இரைப்பை சம்பந்தமான வியாதிகளின் சிகிச்சை.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 123.)

இராமபத்திரி யிலை பலம்-க, சுத்திசெய்த பாலரசம் விராகனெடை-க.

செய்முறை:—மேற்படி யிலையைக் கல்வத்திலிட்டு ஒருசாம நேரமரைத்து வெண்ணெய்போலான பின்பு மேற்படி இரசத்தைச் சேர்த்து இரண்டு சாமநேரமரைத்து இரசமானது செம்மையாக மடிந்தபின்பு பீங்கான் சிமிழில் வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—அரிசியெடை-க உ. காலையி லொருவேளை மாத்திரம் வெற்றிலையில்வைத்து மென்று சாப்பிடவேண்டும். வெயிற்காலத்தில் இருபதுநாட் சாப்பிட்டாற்போதுமானது. மழைகாலமா யிருந்தால் நாற்பதுநாட் சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வியாதிகள் தீர்ந்து, பசிதீபனம் அதிகமுண்டாகும். தாதுவிருத்தி தேகபல முதலியவைகளு முண்டாகும்.

#### குறிப்பு.

இராமபத்திரி யிலையானது ஜாதிப்பத்திரியைப் போலிருக்கும். சுவைத்தால், ஜாதிப்பத்திரியின் சுவையேயிருக்கும். அதன் வாசனையும் ஜாதிப்பத்திரி வாசனையே மணக்கும். இது பெரும்பாலும் தென்னந்தோப்புகள் முதலிய விடங்களிலுண்டாகும். இந்த மூலிகையின் பலத்தினால் இரசமானது பச்சையா யிருந்தும் எவ்வித தோஷமுமுண்டாகாது.எல்லாத் தேகிகளுக்கும் பொருந்தும்.

#### வேறு.

ஓமம் தேவையான அளவு, சோற்றுக்கற்றாழைச் சாறு செல்லத்தக்க அளவு, எலுமிச்சம் பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—ஓமத்தைப் புடைத்துக் கல் முதலியவைகளை ஆய்ந்து சுத்திசெய்து ஒரு பீங்கான் பாத்திரத்திற் போட்டுச் சோற்றுக் கற்றாழைச் சாற்றை விடவேண்டும் இந்தச் சாறானது ஓமத்தின் மேல் ஒரு அங்குலம் வரையில் நிற்கவேண்டும். இவ்விதம் ஒருநாள் ஊறவைத்து மறுநாள் நன்றாகப் பிசறிவைத்துச் சாறெல்லாஞ் சுவறினபின்பு வெயிலில் உலர்த்திக்கொள்ள வேண்டும். ஈரமில்லாமல் உலர்ந்தபின்பு முன்போல் எலுமிச்சம் பழச்சாற்றைவிட்டு ஓரிரவு ஊறவைத்து மறுநாள் வெயிலிலுலர்த்திக் கொள்ளவேண்டும். இவ்விதம் மூடக்கிமடக்கி எலுமிச்சம் பழச்சாற்றில் ஏழுதடவைகள் ஊறவைத்து உலர்த்திக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௨, ௩, ௪. இதனை மென்று சாப்பிட்டுவிட்டு மேலே கொஞ்சம் வெந்நீர் சாப்பிடலாம்.

உபயோகம்:—மந்தாக்கினி ரோகம், அஜீரணரோகம், வயிற்றுப்பிசம், வயிற்றுப்பொருமல் ஆகியவைகள் தீரும்.

சிறுவர்களுக்கானால் மேற்படி அளவிற் குறைந்த அளவாக எடுத்துத் பொடித்துத் தேன், சர்க்கரை முதலியவைகளி லனுபானித்து உபயோகிக்கலாம். பால்குடிக்குங் குழந்தைகளுக்கு ஒரு குன்றிமணியெடை மேற்படி சூரணத்தைப் பாலி லனுபானித்துக் குடிப்பாட்டிவர, பசிதீபனம் அதிகமாயுண்டாகும். இரைப்பையில் பால் கட்டுப்பட்டு மாந்தம் முதலியவைகள் உண்டாகா.

#### திரிகடுகுச் சூரணம்.

மேற்றோல் சீவின சுக்குச்சூரணம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம் இவை வகை-க-க்குப் பலம்-க.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-௱. க,௨.

அனுபானம:—தேன், நெய், சர்க்கரை முதலியவைகளாம்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுக்களைக் கண்டிக்கும், தீபாக்கினி யதிகப்படும், ஜீரண சக்தியை அதிகப்படுத்தும்.

#### குறிப்பு.

அவசியமானால் மேற்கண்ட சூரணத்துடன் மூன்றுபலம் சீனி சர்க்கரையைச் சேர்த்துச் சாப்பிடலாம். அல்லது, சர்க்கரையைப் பாகுசெய்து அதிற் சூரணத்தைப்போட்டு லேகியமாகச்செய்தும் உபயோகிக்கலாம். இஷ்டமானால், நெய் தேன் ஆகியவைகளை வகை-க-க்கு ஒன்றரைப்பலம் வீதம் லேகியமாகச் செய்தும் உபயோகிக்கலாம்.

#### சதுர்சாங்கச் சூரணம்.

பெரு லவங்கப்பட்டை, இலவங்கப் பத்திரி, சிறுநாகப்பூ, ஏலரிசி, இவற்றின் தனித்தனிச் சூரணம் வகை-க-க்குப் பலம்-க, சீனிச்சர்க்கரை பலம்-௪.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்று க மிஸ்ரமித்து வைத்துக்கொள்வதே யாம்.

பிரமாணம்:—விராகனெடை-௧. ௨. காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம். ஆகாரம் சாப்பிட்டவுடனேயும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுக்களைக் கண்டிக்கும், சாப்பிட்டவுடனுண்டாகும் வயிற்றுநோயைப் போக்கும், சாப்பிட்டவுடன் மலம்போவது சிலருக்கு வழமை; அவ்விததுர்வழக்கத்தையும் நீக்கும். இரைப்பையைப் பலப்படுத்தும், ஜீரண சக்தியை யதிகப்படுத்தும்.

பஞ்சகோலச் சூரணம்.

மேற்றோல் சீவின சுக்குச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், சித்திரமூல வேர்ப்பட்டைச் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், கண்டத்திப்பிலிச் சூரணம், இவை வகை-௧-க்குப் பலம்-௫. சீனிசர்க்கரை பலம்-௨௫.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றுகச் சேர்த்துவைத்துக் கொள்வதேயாம்.

பிரமாணம்:—விராகனெடை-௧. ௨.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயு, கபக்கட்டு ஆகியவைகளைக்கண்டித்து, நல்லபசிதீபனத்தையுண்டாக்கும்.

ஏரண்டத் தேண்ணேய்.

சிற்றுமணக்கு அல்லது, பேராமணக்கு இலைச்சாறு படி-௪, சிற்றுமணக்கெண்ணெய் படி-௪.

செய்முறை:—இரண்டையுஞ் சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துச் சாறெல்லாஞ் சுண்டினபின்பு, வடிகட்டி யெண்ணெய்மாத்திர மெடுத்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—பலம்-௪, ௫. காலையில் ஒருவேளை மாத்திரம் உபயோகிக்க வேண்டும். வயிற்றின்மீதும் மேற்பூச்சாகப் பூசலாம்.

உபயோகம்:—வாயு சம்பந்தத்தினு லுண்டாகும் வயிற்றுநோய், மலபந்தத்தினு லுண்டாகும் வயிற்றுநோய் ஆகியவைகள் தீரும். மலபந்தம், மலச்சிக்கல், ஆகியவைகளும் தீரும். குன்மரோகத்திற்கு முதவும்.

சதகுப்பை யெண்ணெய்.

சதகுப்பைக் கீரை யிலைச்சாறு படி-௫, நல்லெண்ணெய் ஆழாக்கு-௧.

செய்முறை:—இவ்விரண்டையு மிஸ்ரமித்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துச் சாறெல்லாஞ் சுண்டினபின்பு இறக்கி வடிகட்டி எண்ணெயை மாத்திர மெடுத்துப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—பலம்-௪, ௫. இதனை மேலுக்கும் மேற்பூச்சாகப் பூசலாம்.

உபயோகம்:—குளிர்ச்சி சம்பந்தான வயிற்றுநோய், வாயுவினுலுண்டாகும் வயிற்றுநோய் ஆகியவைகள் தீரும். இன்னும் தேகத்திலுண்டாகும் வாயு சம்பந்தமான வலிகளுக்கு இதனைப் பூசித் தேய்ப்பதினுலுங் குணமுண்டாகும்.

வேறு சூரணம்.

மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல், மேற்றோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, மிளகு, கண்டத்திப்பிலி, இக்லீலுல்மூல்க், கொடிவேலி வேர்ப்பட்டை, சிறுநாகப்பூ, இந்துப்புத்தூள், இவற்றின் சூரணம் வகை-௧-க்குப் பலம் - ௫, பெருங்காயம் பலம்-௫, (இதனை ஒட்டிற்பொரித்து வறுத்துக்கொள்ளவும்)

செய்முறை:—சூரணங்களை யெல்லாம் ஒன்றுக மிஸ்ரமித்து வைத்துக்கொள்வதேயாம்.

பிரமாணம்:—விராகனெடை-௧. ௨.

உபயோகம்:—வயிற்றுநோய், குன்மரோகம், அஜீரணரோகம், மந்தாக்கினிரோகம் முதலியவைகள் தீர்ந்து பசிதீபனம் அதிகப்படும்.

(இன்னும் வரும்.)

---

சுகாதார போதினி.

௨-ம் பிரிவு.

குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo - III - பக்கம்-123)

குவய்னு குன்றிமணியெடை ௧அ
மிளகாய்ச் சூரணம் குன்றிமணியெடை ௬
விளாம்பிசின் பாகு தேவையான அளவு.

செய்முறை:—மேற்கண்ட இரண்டு சூரணங்களையும் ஒன்றுகச் சேர்த்தரைத்து விளாம்பிசின் பாகைச் சிறுகச் சிறுக விட்டு திரள்பதத்தில் - ௧௨ - மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—சுரம் விட்டிருக்கின்ற சமயத்தில் நான்குமணிக் கொருதடவை ஒன்று அல்லது, இரண்டு மாத்திரைகளை உட்கொள்ளவேண்டும்.

உபயோகம்:—குளிர்சுரம், நடுக்குச்சுரம், முறைசுரம் ஆகியவைகள் தீரும். இது டாக்டர் தாம்ஸ் துரையவர்கள் அனுபவமுறை.

வேறு.

| | |
|---|---|
| குவய்னைன் குன்றிமணியெடை ௧௦-முதல் | ௧௨ |
| சீனிச்சர்க்கரை விராகனெடை | ௨ |

இவ்விரண்டையுஞ் சேர்த்து ஆறுபாகமாகச் செய்துவைத்துக் கொண்டு காலையி லொருபங்கும் மாலைலை லொருபங்குமாக உட்கொள்ள வேண்டும்.

உபயோகம்:—நரம்புகள் துர்ப்பலத்துட னிருக்கிற குளிர்சுரம், முறைசுரம் ஆகியவைகள் தீரும்.

வேறு.

| | |
|---|---|
| குவய்னா குன்றிமணியெடை | ௧௬ |
| சாதா ஷர்பத்து பலம் | ௭ |

இவ்விரண்டையு மிஸ்ரமித்து தினம் இரண்டு மூன்று தடவைகள் இரண்டு விராகனெடை ஷர்பத்து உட்கொண்டுவர வேண்டும்.

உபயோகம்:—மூன்றுமுறை சுரம், நான்காமுறைசுரம் முதலிய முறைசுரங்கள் தீரும். இது டாக்டர் பொலன்ட் துரையவர்கள் முறை.

எப்போதும் விடாசுரமா யிருக்குஞ் சமயத்தில் சில சமயங்களில் சுரம் குறைந்திருக்கும். அந்தச் சமயத்தில் குவய்னாவை உபயோகிப்பதால் அதிக குணமுமுண்டாகும், குளிர்சுரமும், மேற்கண்ட சுரமும் உண்டாகுங் காரணம் ஒன்றேயாம். இந்த சுரங்கள் பெரும்பான்மையும் இலை, தழைகள் அழுகிப்போவதா லுண்டாகும் விஷக்காற்றினால் உண்டாகின்றன. ஆனால் இந்த சுரமானது குளிர்சுரத்தைப் பார்க்கிலும் அதிக வேகமானது. இந்த சுரத்தில் பெரும்பான்மையும் உள்ளவயவங்களில் அழலையுண்டாகி விடுகிறது, அல்லது, இரத்தம்சேர்ந்து கட்டிப்போவது முண்டு. இந்தச் சமயத்தில் இந்தச் சுரத்தில் குவய்னாவை ஒருபோதும் உபயோகிக்கலாகாது.

டாக்டர். ஜெ. கூட் துரையவர்களின் அபிப்பிராயமாவது:-சுரம் ஆரம்பிப்பதற்கு முன்பு ஆறுமணிக்கு முன் குவய்னாவை உபயோகப்படுத்த வேண்டியது. ஏனெனில் குளிர் ஆரம்பிக்காததற்கு முன்னும் தேகத்திற் சூடுண்டாவதற்கு முன்னும் நோயாளின் மூத்திரத்தில் அமுரியுப்பு அதிகமாக வெளியாகிறதென்பது அனுபவத்தால் நிச்சயிக்கப்பட் டிருக்கிறது, அமுரியுப்பு அதிகம் வெளிப்படாமல் தடுப்பதற்காக கொய்னாவை உபயோகிக்க வேண்டியது ஆவசியகம். இன்னும் மூத்திரப் பரிக்ஷையினால் தெரிய வந்திருக்கிறதாவது தினசுரத்தில் குளிர் ஆரம்பிக்கும் இரண்டுமணிக்கு முன்பே அமுரியுப்பானது அதிகம் வெளிப்படுகிறது. மூன்றுமுறை சுரத்தில் சுரங்காண எட்டுமணிக்குமுன்பே அமுரியுப்பு அதிகமாக வெளிப்படுகிறது. நான்காமுறை சுரத்தில் பனிரண்டு மணிகளுக்கு முன்பே அது அதிகமாய் வெளிப்பட ஆரம்பமாகிறது. ஆகையால் தினசுரத்தில் சுரம் ஆரம்பிப்பதற்கு எட்டுமணிக்கு முன்பு குவய்னாவை யுபயோகிக்க வேண்டும். மூன்றுமுறை சுரத்தில் பனிரண்டு மணிகளுக்கு முன்பு ஆரம்பிக்க வேண்டும். நான்காமுறைசுரத்தில் பனிரண்டுமுதல் பதினைந்து மணிகளுக்கு முன்பு ஆரம்பிக்க வேண்டுமென்பதே.

வேறு சிலரின் அபிப்பிராயமாவது:-குவய்னாவுடைய குணம் தேகத்திற்குள் வெகுசீக்கிரம் குறைந்துபோய் விடுகிறது. ஆகையால் ஒரே தடவையில் ஏழரைக் குன்றிமணியெடை குவய்னாவைக் கொடுத்துவிடவேண்டும். இரண்டரை இரண்டரைக் குன்றிமணியெடை தாமதித்துத் தாமதித்து உபயோகிக்கலாகாது என்பதே. ஆனால் இந்தக் கருத்திற்கு விரோதமாக அநேக பண்டிதர்கள் அபிப்பிராயப் படுகின்றார்கள்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௩-ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-92-ம் 124-ம்.)

#### பிரசவத்தில் முழங்கால் அல்லது,பாதம்முன்தோன்றுதல்.

சிலசமயங்களில் ஒருகால், சில சமயங்களில் இரண்டு கால்கள் வெளிப்படுவதுண்டு. அந்தச் சமயத்தில் மருத்துவப் பெண்ணானவள் தன் கையைச் செலுத்தி மெதுவாகப் பரிக்ஷித்தால், உதயமானது முழங்காலா யிருந்தால், முழங்காலின் இரண்டு பக்கங்களிலும் உருண்டையான முடடு எழும்பி யிருப்பது தெரியவரும். இவ்விரண்டிற்கு மிடையிலும் ஒன்றுமில்லாமல் வெளியாகக் காணப்படும். முழங்கால்கீல்களும் நன்றாகப் புலப்படும். காலின் பாதம், முழங்கை, தோள் ஆகியவைகளிலும் மேற்கண்ட முட்டெலும்பு காணப்படு மாகையால், கீழ்க்கண்ட விஷயங்களைக் கவனத்தில் வைக்கவேண்டியது. அவை பின்வருகிற விதமாம்.

உதயமானது பாதமாயிருந்தால் ஒரு எலும்பிருக்கும். முழங்காலிலோ எடுப்பான இரண்டு எலும்புகள் காணப்படும். முழங்கையாயிருந்தால், கூர்மையான ஓர் முட்டெலும்பே காணப்படும். தோளாயிருந்தால் எடுப்பான ஓர் முட்டெலும்பு காணப்படும், மே

னும் கையினலதைச் சுற்றிப் பரிசித்தால் கழுத்தெலும்பு, பிடரியெலும்பு ஆகியவைகளும் அதன் சமீபத்தில் தெரியவரும், ஆகையால் முழங்கால் முட்டெலும்புக்கும் மற்ற எலும்புகளுக்குமுள்ள வித்தியாசங்களைக் கண்டறிந்துகொள்ள வேண்டும்.

கால் உதயமானல் அது உடனே தெரிந்துகொள்ளக் கூடுமெனினும், காலிலும் கையிலும் சில ஒற்றுமைகளிருப்பதால் அப்போதும் சந்தேகத்திற் கேதுவாகும். ஆகையால் கீழ்க்காணும் விஷயங்களைக் கவனத்தில் வைக்கவேண்டியது.

1. கால் விரலானது காற் பெருவிரலி லிருந்து முறையே படிப்படியாய்க் குட்டையான வைகளாய்க் காணப்படும். கையின் விரற்களோ அப்படியன்று.

2. காற் பெருவிரலானது மற்ற விரல்களுக்குச் சமீபித்ததா யிருக்கும், கையின் பெருவிரலோ மற்ற விரல்களினின்றும் சற்று தூர விலக்கப்பட்டதா யிருக்கும்.

3. கைப் பெருவிரலைப் பார்க்கினும் காற் பெருவிரலானது அதிகம் பருமனனதா யிருக்கும்,

4. காற்பெரு விரல் எந்தப் பக்கத்தி லிருக்கிறதோ அந்தப் பக்கமானது காலின் சிறுவிரல் இருக்கிற பக்கத்தைப்பார்க்கிலும் அதிக மொத்தமானதாகவும், சற்று உருண்டையானதாகவு மிருக்கும்.

5. கையில் குதிக்காலைப்போன்று ஒருபக்கம் தடிப்பும் உருட்சியுமாக விராது.

6. கையானது புஜத்தோடு சேர்க்கப்பட்டதாயிருக்கும். பாதம் அப்படியிராது.

இவையன்றி, இன்னொரு பரிக்ஷையாவது:—பிரசவவேதனை கண்டவுடனே மருத்துவப்பெண்ணனவள் தன் கையைச்செலுத்திப் பரிக்ஷித்தால், சிசுவின்தேகம் பரிசிக்கப்படாவிட்டால் முழங்கால், அல்லது, கால் முன்னர் உதயமாகுமென நிதானிக்கலாம். தலை, அல்லது, புட்டம் உதயமாகிறதா யிருந்தால் சிசுவின்தேகம் பரிசிக்கப் படும். ஆகையால், புட்டம் உதயமானல் என்ன பரிகாரங்கள் செய்யவேண்டுமோ அந்தப் பரிகாரமே முழங்கால் அல்லது பாதம் உதயமானலும் செய்யவேண்டும்.

சிசுவானது நாபிவரையில் வெளிவருகிறவரை ஒன்றுஞ் செய்யவேண்டிய அவசியமில்லை. மருத்துவப் பெண்ணனவள் தன் கையைக்கொடுத்து பாரம்விழாமல் தாங்கிக்கொண்டிருந்தாற் போதுமானது, சீக்கிரமாகப் பிரசவிக்கச் செய்யவாவது, சிசுவையிழுத்துப் போடவாவது கொஞ்சமும் முயற்சிசெய்யலாகாது. காலிலிருந்து மார்புவரையில் வெளிப்படுத்தப் பட்டால், தலையானது இலகுவாய் வெளிப்பட்டுப்போம், ஏனெனில், காலிலிருந்து மார்புவரையில் தேகமானது கிரமேணுவாய் பெருத்திருக்கிறது. பெருத்திருக்கிற பாகம் வெளிப்பட்டுப் போனபின்பு சிறுத்திருக்கிற பாகமான சிரசு வெளிப்படப்போதுமான இடம் தானே யுண்டாகிவிடும். என்பதே.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

### ௪-ம் பிரிவு

### பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 126.)

### சர்வ மாந்த எண்ணெய்.

(a) சிற்றாமணக் கெண்ணெய்படி-௧, சங்கம்வேர்ப்பட்டை, பூவரசம்பட்டை, புங்கம்வேர்ப்பட்டை இவை வகை-௩-க்குப் பலம்-௧.

(b) சுத்திசெய்த இரசகர்ப்பூரம் பலம்-௧.

செய்முறை:—(a) யி லுள்ள மூன்றுவகைப் பட்டைகளையும் மைபோலரைத்து எண்ணெயிற்கலக்கி அடுப்பேற்றிச் சிறுதீயாலெரித்து மெழுகுபதத்திலிறக்கி வடிகட்டி வைத்துக்கொள்ளவும். பிறகு (b) யிலுள்ள இரசகர்ப்பூரத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன் சித்தப்படுத்திவைத்திருக்கிற எண்ணெயைச் சிறுகச்சிறுகவிட்டு அரைத்து எண்ணெயுடன் கலந்து சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௨, ௩, ௪, ௧. பெரியவர்களுக்கு தேகசுபாவத்திற்குத் தகுந்தபடி-௧-௨-விராகனெடையும் உபயோகிக்கலாம்.

அனுபானம்:—முலைப்பால், இளநீர், சோம்புத்திராவகம், ஓமத்திராவகம், சுக்குக்கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:—பிள்ளைகளுக் குண்டாகும் மாந்தரோகங்கள், மண்டைக்கரப்பான், கால்கடுவன், செவ்வாப்பு முதலிய அநேகரோகங்கள் தீரும். பெரியவர்களுக்குண்டாகும் வெள்ளை, கொருக்கு முதலிய எல்லா மேகரோகங்களும் தீரும். வியாதி பலத்திற்குத் தகுந்தபடி ஐந்துநாள், ஏழுநாள் உபயோகிக்கவும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

### கண எண்ணெய்.

(a) ஜாதிக்காய், மஞ்சட் கடுக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, கரியபோளம், செண்பகப்பூ, கோஷ்டம்

மாசிக்காய், மரமஞ்சள், வெந்தியம், இலவங்கப்பட்டை, ஏலரிசி, இலவங்கம், கருஞ்சீரகம், நற்சீரகம், கார்போகரிசி, தான்றிக்காய்த்தோல், அதிமதுரம், செங்கழுநீர்க்கிழங்கு, சிற்றரத்தை, கஸ்தூரிமஞ்சள், வால்மிளகு, வாலுளுவையரிசி, மிளகு, மேற்றோல்சீவின சுக்கு, அதிவிடயம் இவை வகை-க-க்கு விராகனெடை-உ. இவை யெல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்திடித்துவஸ்திரகாயஞ்செய்து தனியேவைத்துக்கொள்ளவும்.

(b) குட்டி விளாவிலை, வேலிப்பருத்தியிலை, நாயுருவியிலை, புங்கையிலை, நுணாவிலை, கருநொச்சியிலை, கருவேப்பிலை, சிறுபூளையிலை, அவரையிலை, முருங்கையிலை, துத்தியிலை, பெருந்தும்பையிலை, சிறுதும்பையிலை, கௌதும்பையிலை, அவுரியிலை, கோவையிலை, நீர்ப்பூலாவிலை, வறட் பூலாவிலை, சிறுநெருஞ்சியிலை, குன்றிமணியிலை, சிறுகீரையிலை, சின்னியிலை, கோழியாவரையிலை, குப்பைமேனியிலை இவைகளின் தனித்தனிச் சாறு வகை-க-க்குப் படி-வ.

செய்முறை:—(b) யி லுள்ள எண்ணெயுடன் மற்றெல்லாச் சாறுவகைகளையுஞ் சேர்த்து அடுப்பேற்றிக் காய்ச்சி முக்காற்பாகஞ் சுண்டினவுடன் (a) யிலுள்ள சூரணங்களைத் தூவிக் காய்ச்சி மெழுகுபதத்தில் வடித்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க. ௪. தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி கொடுக்கவும்.

அனுபானம்:—முலைப்பால், இளநீர், சுக்குக்கஷாயம், சோம்புத்திராவகம், முதலியவைகளாம்.

உபயோகம்:— பிள்ளைகளுக்குண்டாகு மாந்தரோகங்கள், ஊதுமாந்தம், தோஷ வகைகள், கணரோகங்கள், தெற்கித்தி கோவென்னுங் கணரோகம்முதலிய எல்லாவகைக் குழந்தை ரோகங்களும் தீரும். பெரியவர்களுக்குச் சூலைநோய், வாதப்பிடிப்பு, வயிற்றுவலி, சூதகவாயு, வெள்ளை, கொருக்கு, இருபத்தொருவகை மேகரோகங்கள், எண்பதுவகை வாதரோகங்கள் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

ஜாதிக்காய் லேகியம்.

ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, இலவங்கம், இலவங்கப்பட்டை, கசகசா, சுத்திசெய்த அதிவிடயம், இவை வகை-க-க்குச் சமனெடை. இவை யெல்லாவற்றையுஞ் சேர்த்திடித்து சமன் சர்க்கரையைப் பாகு செய்து பாகுபதத்தில் மேற்படி சூரணங்களைத் தூவி லேகியமாகச் செய்து கொள்ளவும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-உ. அ. தேனில் அனுபானித்துக் கொடுக்கவும்.

உபயோகம்:—பக்ஷிதோஷம், பறவைதோஷம், தூங்குபுள் தோஷம் கிராணி, வயிறு கொட்டுதல், மூலம் ஆகியவைகள் தீரும்.

காதிற் சீழ்வடிதலுக்கு.

நல்லெண்ணெய் படி-வ, பசுவின்பால் படி-வ, வெள்ளைமிளகு பலம்-க, கருநொச்சி யிலைச்சாறு படி-வ, கையாந்தகரைச்சாறு படி-வ.

செய்முறை:—எண்ணெயையும் சாறு வகைகளையும் ஒன்றாகக்கலந்து மிளகைத் தூள்செய்து போட்டுக்காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கி வடிகட்டி வைத்துக்கொள்ளவும்.

உபயோகம்:—வாரம் இருமுறை ஸ்நானஞ்செய்துவர காதிற் சீழ்வடிதல், காதிரைச்சல் முதலிய கர்ணரோகங்கள் தீரும்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

### ௫-ம் பிரிவு

### மூலரோகம்

முன்தொடர்ச்சி (vol- III பக்கம்.127)

மூலரோகச் சிகிச்சை.

௫-பலம் வெங்காயத்தைச் சிறு துண்டுகளாகத்துண்டித்துப் பசுவினெய்யிற் சிவக்க வறுத்து பாதியை உள்ளுக்குச் சாப்பிடக் கொடுத்து பாதியை ஆசனத்தில் வைத்துக்கட்டி வரவேண்டும். இவ்விதம் வியாதியின் பலத்திற்குத் தகுந்தபடி இரண்டுவாரம், அல்லது, இருபதுநாட் செய்துவரின் மூலரோகந் தீரும். மூலச்சூடு, மூலரோகத்தா லுண்டான துர்ப்பலம் முதலியவைகளும் தீரும்.

வேறு.

விராலியிலையை யரைத்தவிழுது விராகனெடை-உ௰ இதனை ஐந்துபலம் பசுவின் தயிரிற் குழப்பிக் காலையிற் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் இருபதுநாட் செய்துவரின் மூலமுளையானது கரைந்துபோய் விடும்.

வேறு.

சுத்தித்த நெல்லிக்காய்க் கெந்தகம் விராகனெடை-௬, பூங்காவி விராகனெடை-௬. இவ்விரண்டையும் பொடிசெய்து சீஷாவில் வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-வ, ௨, வியாதியின் பலத்திற்குத் தகுந்தபடி உபயோகிக்க வேண்டும். காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கவும்.

அனுபானம்:—வெண்ணெய், நெய், ஆலம்விழுதை யரைத்தவிழுது முதலியவைகளாம்.

பத்தியம்:—நெய், பால் ஆகியவைகளை அதிகமாய்ச் சேர்க்கவேண்டும். மாமிச பக்ஷணிகளானால் இறைச்சியை நெய்யில் வறுத்து உபயோகித்துக்கொள்ளலாம். அல்லது, இஷ்டப்படி காரமில்லாமற் சூப்பாகவுங் குழம்பாகவுஞ் செய்து கொள்ளலாம்.

உபயோகம்:—இரத்தமூலம் அதிசீக்கிரம் நிற்கும், இரத்தம் நின்றுபோனவுடன் மருந்தையும் நிறுத்திவிட வேண்டியது.

வேறு.

வெருகங்கிழங்கை யரைத்தவிழுது குன்றிமணியெடை-அ, இதனைப் பசுவின் வெண்ணெயிற் குழைத்துச் சாப்பிடவேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையுமாக இருபதுநாள் உபயோகித்துவரின் இரத்தமூல முதலியவைகள் தீர்ந்துபோகும்.

வேறு.

முள்ளங்கிக் கிழங்குச்சாறு படி-வ, கற்கண்டுத்தூள் பலம்-௧௨.

மேற்படி சாற்றை மண்சட்டியிற் போட்டுக் காய்ச்சினால் மேலே ஏடுபோற் படர்ந்து பிறகு முறிந்துபோம். அந்தத் தெளிவை மாத்திரம் இறுத்துக்கொண்டு அதிற் கற்கண்டைப் போட்டுப் பானஞ் செய்ய வேண்டும், இவ்விதம் காலையில் மாத்திரம் ஒருவேளை அல்லது காலைமாலையிரண்டு வேளையுமாக இருபதுநாள் உபயோகித்துவரின் இரத்தமூலம் முதலிய மூல ரோகங்கள் தீரும்.

(இன்னும் வரும்)

---

சுகாதார போதினி.

௬-ம் பிரிவு.

இரசவாதம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 128)

மட்டம் சுத்தமா யிருப்பதின் பரிக்ஷை.

மட்டத்தை யுருக்கி ஆறவைத்தெடுத்தால் அதன் கீழ்ப்பாகத்தில் வலையைப்போன்ற கண்களுண்டாகி அவை யெவ்வளவு வட்ட வடிவமா யிருக்கின்றதோ அவ்வளவு சுத்தமா யிருக்கிறதென நிதானிக்கவேண்டியது. அது எவ்வளவாய் வட்டாகாரமான குழிகள் விழுந்திருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு சுத்தமாகி விட்டதென ஞாபகத்தில் வைக்கவேண்டியது. மட்டத்தையுருக்கி ஆறவைத்தெடுத்தால் அதன் கீழ்ப்புறத்தில் வட்டாகாரமான குழிகள் இல்லாதிருக்கில் தாரையைச் சேர்க்க முயலலாகாது. அந்தச் சமயங்களில் மட்டத்தை மடக்கிமடக்கி யுருக்கியெடுக்க வேண்டியது. இப்படிச் சிலதடவைகள் செய்தால் மேற்கண்ட குணமுண்டாகிவிடும். வீணாக அவசரப்பட்டுத் தாரையைச் சேர்ப்பதினால் நஷ்டத்திற் கேதுவாகும் ஆகையால், இந்த விஷயத்தைக் கவனத்தில் வைத்து சமயோசிதம்போல பக்குவப்படுத்திக் கொள்ள முயற்சி செய்ய வேண்டியது. கஷ்டத்தை யுத்தேசித்து மேற்கண்ட விதமாகப் பக்குவப் படுத்தாதவர்கள் வீண் நஷ்டத்திற்கு இலக்கானவர்க ளென்பதில் என்ன சந்தேக முண்டு.

மட்டத்தைக் காய்ச்சும்போ துண்டாகும்

கறுப்பை நீக்கும் வகை.

தாம்பிரமானது சுத்தியானதா யிருந்தால், அல்லது, பின் சொல்லப்படும் வகையாகச் சங்கு திராவகத்திற் சுத்திசெய்யப்பட்டிருந்தால், அல்லது, பின் சொல்லப்படும் வகையாக கொம்பரக்கினாலும் லூதப்பட்டையினாலும் கிராசித்துச் சுத்தியாகியிருந்தால், மட்டமானது காய்ச்சியெடுத்தால் முன்னிருந்த வர்ணமே இருக்கும். சுத்திசெய்யாத தாம்பிரத்தினால் வர்ணிக்கப்பட்ட மட்டமாயிருந்தால் அதைக் காய்ச்சியெடுத்தவுடனே அது கறுப்பா யிருப்பதுடன் கடினமாகவு மிருக்கும். ஆகையால் பின்காணும் விதமாக அதைச் சுத்திசெய்து கொள்ளவேண்டும்.

அவ்விதமான மட்டத்தை இன்னும் முன் வர்ணித்ததுபோல தாம்பிரத்தைப் பார்க்கிலும் அதிகவர்ணமுள்ளதாகஇருக்கும்படி வர்ணமேற்றிப் பின்சொல்லப்படும் தாம்பிர சுத்தியைப்போல அதனை ராவி சங்கு திராவகத்திற் போட்டு முறைப்படி சுத்திசெய்து கொள்ளவேண்டும். அல்லது, கொம்பரக்கையும், லூதப்பட்டையையும் முறைப்படி கிராசித்துசுத்திசெய்து கொள்ளவேண்டும். இவ்விதஞ் சுத்திசெய்த பின்பு அதனை நெருப்பிற்காய்ச்சி யெடுத்தால் அதிலுண்டாகும் கறுப்புத் தோஷம் நீங்கிப்போகும்.

இன்னும் வேறு சில மட்டங்களைக் காய்ச்சி யெடுத்தால் கறுப்பாயில்லாமல் மண்வருண முள்ளதாகவிருக்கும். அவ்வித மட்டங்களோடு தாரையைச் சேர்

ப்பதினாலும் அதிகங் கெடுதியுண்டாகிறதில்லை. இவ்விதம் அனுபவத்தால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

குறிப்பு.

சாதாரணமான தாம்பிரத்தை மடித்து வெள்ளிக்கு வருணமேற்றினால் தாமதமாக வெள்ளியில் வருணமேறும். அப்படி வருணமேயினபோதிலும் பூரணமான வருணமாயில்லாமல் அரைகுறையான வர்ணமாகவிருக்கும். தாம்பிரமானது செம்மையாக மடிக்கப்படாதிருந்தால் வெள்ளியில் வருணமேயேறுகிறதில்லை. இவ்விஷயமும் அனுபவத்தில் பலதடவை காணப்பட்டிருக்கிறது.

மட்டத்துடன் தாயைச்சேர்த்த பின்பு அதில் கறுப்பு தோஷமிருந்தால், அதனைத் தகடாக அடித்து அதனைக் காடிதிராவகத்திற்போட்டு ஓரிராப்பகல்வைத்திருந்து மறுநாட்காலையி லெடுத்துக் கழுவிச் சுத்திசெய்ய அக்கறுப்பு தோஷம்நீங்கிப்போம், அல்லது, காடிதிராவகத்தில் மேற்படி தகட்டைப்போட்டுச் செம்மையாகக்காய்ச்சிக் கழுவிச் சுத்தி செய்வதினாலும் அந்த தோஷம்நீங்கிப்போகும். வெள்ளியானது வருணித்தபடியேயிருக்கும். மட்டத்துடன் ஏதேனும் கொஞ்சம் தாம்பிரம் தங்கி நின்றிருந்த போதிலும் மேற்படி காடி திராவகத்தில்போட்டு இரண்டு மூன்று தடவை மடக்கி மடக்கிக் காய்ச்சுவதினால் அந்தத் தோஷம் நீங்கிப்போகும். மட்டத்தைக் காடிதிராவகத்தில் எவ்வளவுக் கெவ்வளவாய் ஊறவைக்கின்றோமோ, அல்லது, காய்ச்சியெடுக்கின்றோமோ அவ்வளவுக் கவ்வளவாய் மட்டத்தின் வருணமானது தெளிவுகொடுத்துச் சுத்தமாகியிருக்கும்.

மட்டத்தில் நவச்சாரங்கோடுத்து
பரிட்சிக்கும் வகை.

வருண்மேற்றின வெள்ளியை அல்லது சுத்திசெய்த மட்டத்தை நெருப்பிற் காய்ச்சினால் அப்போது சிவப்புச் சுவாலையெழும்பினால் அது சுத்தமான தென்பதற்கோ ரறிகுறி. தகட்டை நெருப்பிற் பழுக்கக் காய்ச்சியெடுத்து அதன்மீது நவச்சாரத்தூளைக் கொஞ்சம் கிராசித்தால் தகட்டின்மீது வெண்ணிறமான கீற்றுகள் அல்லது வெண் புள்ளிகள் விழுந்தால் வெள்ளியின் அணுக்களில் எல்லாவற்றிலும் வர்ணமேறவில்லையென்ன நிச்சயிக்கவேண்டியது. இவ்வித மட்டத்தோடு தாயைச் சேர்க்கலாகாது. மிஞ்சிச் சேர்த்தால் நட்டத்திற்கே யேதுவாகும். நவச்சாரத்தைக் கிராசித்தால் எங்கும் ஒரேவருணமாக இருந்தால் அதுதான் பக்குவமான மட்டமென நிதானித்தறிய வேண்டியது. அப்படிக் கில்லாத பட்சத்தில் மட்டம் அரைகுறையாயிருக்கிறதென நிதானித்து அது உபயோக மற்றதெனவுந் தீர்மானிக்க வேண்டியது.

குறிப்பு.

நவச்சாரத்தைத் தகட்டின்மீது கிராசித்தால் முன்னிருந்த வருணமாறாமல் முன் வருணமே யிருந்தால் அதுவே உயர்ந்த முறை மட்டமென நிதானிக்கவேண்டியது. அதனால் எவ்வித கெடுதியும், நஷ்டமும் வராது, நவச்சாரத்திற்கு ஜெயித்த மட்டத்துடன் தங்கத்தைச் சேர்த்தால் அந்த இரசவாதப் பொன்னானது எல்லாவிதப் பரிக்ஷைக்கும் ஜெயித்து நிற்கும். திராவக முதலியவைகளுக்கும் பின்வாங்காது. அரைகுறையான வர்ணமாயிருந்தால் நவச்சாரத்தைக் கிராசித்தவுடன் ஏறினவர்ணங் குறைந்து முடிவாய் ஒன்றுமில்லாமற் பறந்துபோம். இந்த இலட்சணமுள்ள மட்டத்துடன் தாயைச்சேர்த்தால் இரசவாதப் பொன்னானது எந்தப் பரிக்ஷைக்கும் ஒத்துநிற்காது. இவ்விதமான பொன்னை விற்கவு முயற்சிசெய்கிறவர்கள் மோசமென்னுங் கட்டத்திற்குள்ளாக ஏதுவாகும். ஆகையால், மட்டத்துடன் தாயைச்சேர்க்குமுன்பே தகட்டைக்காய்ச்சி நவச்சாரத்தைக் கிராசித்துப் பரீக்ஷித்து நிச்சயித்துத் தொழிலுக்கு ஏற்படவேண்டும். இப்படி நிச்சயித்துச்செய்தால் எவ்வித நஷ்டத்திற்கும் பாவத்திற்கும் ஏதுவிராது. இத்தொழிலிற் பிரியமுள்ளவர்கள் இந்தப் பரிக்ஷையையும் கையாடிவரவேண்டியது. ஒருபாகத்தின் முறைப்படிசெய்த மட்டத்தை முதல்தடவையில் பலவிதப்பரிக்ஷைகளையும்செய்து பரீக்ஷித்துக்கொண்டால், மறுதடவைகளில் அடிக்கடி பரீக்ஷிக்கவேண்டிய அவசியமிராது. சாஸ்திரப்படி ஏற்பட்டிருக்கிற எல்லாவிதப் பரிக்ஷைகளையும் பரிட்சித்து நிச்சயித்தபின்பே வெளியேறவேண்டும். அப்படிச்செய்யாத வரையில் பலவித அவதூறுக்காளாக வேண்டும்.

மட்டத்தின் கடின மிருதுவின் பரிக்ஷை.

மட்டமானது காய்ச்சி யெடுத்தவுடன் கறுப்பு தோஷமுண்டானால் அது கடினமாகவு மிருக்கும். அதனை முன் சொல்லியிருக்கிறபடி காடி திராவகத்திற் போட்டு ஊறவைத்தோ, அல்லது, காய்ச்சியோ கறுப்

புதோஷத்தை நீக்கினல் அதன் கடினமு நீங்கி மிருதுவாகிவிடும். அப்படிச் செய்தும் இன்னுங் கடினமாயிருந்தால் பின் எழுதப்படும் முறைப்படிசெய்து மிருதுவாக்கிக் கொள்ளவேண்டும்.

மட்டத்தை வெட்டிரும்பினல் வெட்டினல் துண்டுமுழுவதும் வெட்டுப்பட்டுப் போனபோதினும் அது ஒடிந்து வேருகிப்போகாமல் நசுங்குண்டிருந்தால் உயர்தரமான மிருதுவென நிச்சயிக்கவேண்டும். கால்பாகம் ஒட்டிக்கொண்டிருந்தபோதிலும் அதுவும் மிருதுவானதென நிதானிக்கவேண்டும். இப்படிக்கில்லாமல் வெட்டிரும்பினல் வெட்டினவுடன் பட்டென இரண்டு துண்டாகிவிட்டால் அது கடினமானதென, அல்லது, அது வெட்டையானதென நிதானிக்கவேண்டியது.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி

### ௭-ம் பிரிவு.

### பற்ப முறைகள்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம்-128)

தாம்பிரபற்பம் (வேறு)

சுத்திசெய்த தாம்பிர அரபொடி பலம்-௨, ஜன்தியாறு இலைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:--மேற்படி அரபொடியைக் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து பனிரண்டு சாமநேரமரைத்து ஒரு உருண்டையாகச் செய்து வெயிலிலுலர்த்த வேண்டும். செம்மையாக உலர்ந்தபின்பு குழியகலில் வைத்து மேலகல்மூடி ஏழுசீலைமண்செய்து வெயிலிலுலர்த்தி நன்ருக வுலர்ந்தபின்பு கெஜபுடத்திற் புடமிடவேண்டும். புடம் குளிர ஆறினபின்பு எடுக்கத் தாம்பிரமானது பற்பமாகியிருக்கும். ஒருபுடத்தில் அவ்விதம் பற்பமாகாவிட்டால் மறுபடியும் முன் சாற்றையே விட்டு நான்குசாமநேர மரைத்துப் பில்லைசெய்துலர்த்தி அகலில்வைத்து மேலகல்மூடி ஏழுசீலைமண் செய்துலர்த்தி அரைக்கெஜ புடமிடவும், கடவுளினது கிருபையால் திவ்வியமான பற்பமாகிவிடும். இந்தப் பற்பமானது குஷ்டரோகங்கள், பெருவியாதி, கைகால் முடக்கு, மேகவியாதிகள் முதலிய அநேக ரோகங்களுக்கு உபயோகமாம்.

பிரமாணம்:--குன்றிமணியெடை-௧.

அனுபானமும், உபயோகமும்:--சரக்கொன்றையிலைச்சாறு விராகனெடை-௩, தேன் விராகனெடை-௧. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண ஜலோதர ரோகந் தீரும்.

கடுகுரோகணி விராகனெடை-௧௦. இதனைச் சிதைத்து அரையாழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டின கஷாயத்துடன் இரண்டு விராகனெடை தேனையுஞ்சேர்த்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண கபபித்தரோகம், சுவாசரோகம், இருமல், பிரமியரோகம், குறைநோய் ஆகியவைகள் தீரும். வயிற்றிலுள்ள கிருமிகள் நாசமாய்ப்போகும்.

நிலவேம்பு விராகனெடை-௧௦ இதனைச் சிதைத்து அரைஆழாக்கு ஜலத்தைவிட்டு மூன்றிலொருபாகமாகச் சுண்டவைத்த கஷாயத்துடன் மூன்று விராகனெடை தேனையுஞ் சேர்த்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண ஜன்னிபாத சுரங்கள், சுவாசரோகங்கள் ஆகியவைகள் தீரும்.

வெட்பாலைபரிசி விராகனெடை-௧௦. இதனை மேற்கண்ட விதமாகக் கஷாயஞ்செய்து அதனுடன் மூன்று விராகனெடை தேனைச்சேர்த்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, இரத்தமூலரோகம் தீரும்.

நாகையிலைச்சாறு, அல்லது, நாகப்பழச்சாறு விராகனெடை-௩, தேன் விராகனெடை-௩, இந்துப்புத்தூள் குன்றிமணியெடை-௩. இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்தண்ண உதரரோகங்கள் தீரும்.

கோஷ்டம் விராகனெடை-௧௦, இதனை மேற்கண்ட விதமாகக் கஷாயஞ்செய்து அதனுடன் மூன்று விராகனெடை தேனையுஞ் சேர்த்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண,மேன்மூச்சு ரோகம் தீரும்.

பிரமதண்டு வேர்ச்சாறு விராகனெடை-௩, தேன் விராகனெடை - ௩. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, கம்பவாதரோகம், வாதகபசுரம் ஆகியவைகள் தீரும்.

(இன்னும் வரும்.)

புத்தகம்-௩. 1907௵ அக்டோபர்௴ 15௳ இலக்கம்-௧௮.

சுகாதார போதினி.

௧-ம், பிரிவு.

## வைத்தியக் குறிப்புகள்

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம் 130.)

### இரைப்பை ரோகச் சிகிச்சை.

மேற்றோல் சீவின சுக்குச்சூரணம் விராகனெடை-௧௦, சோம்புச் சூரணம் விராகனெடை-௫, ருமிமஸ்தகிச்சூரணம் விராகனெடை-௩, கற்கண்டுத்தூள் விராகனெடை-௨௦.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துக் கல்வத்திலிட்டு அரைமணிநேரம் அரைத்து எடுத்துக் கொள்வதேயாம்.

பிரமாணம்:—விராகனெடை-௧, ௧௨. காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள அசுத்த மாசுக்களை நீக்கி அதைச் சுத்திசெய்யும், பசிதீபனத்தை அதிகப்படுத்தும், பித்தத்தைச் சமப்படுத்தும்.

### நிலஆவாரைச் சூரணம்.

குச்சி, காம்பு முதலியவைகளை ஆய்ந்து சுத்தி செய்த சூரத்துநில ஆவாரைச் சூரணம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், கறுப்புப்புத்தூள் இவை வகை-௧-க்குப் பலம்-௧௨.

செய்முறை:—இவை யெல்லாவற்றையுங் கலந்து கல்வத்திலிட்டு அரைமணி நேரமரைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௫, ௬. இதனை யுட்கொண்டு அதன்மேற் கொஞ்சம் வெந்நீர்பானஞ் செய்யவும். இரண்டொரு தடவை மலம்போகும். காலையில் ஒருவேளை மாத்திரம் போதுமானது. தேக சுபாவத்தை நிதானித்து இதன் பிரமாணத்தைக் குறைத்தும் உபயோகிக்கலாம் அதிகப்படுத்தியு முபயோகிக்கலாம். அவசியமானால் இதன் சமனெடை சர்க்கரையைச் சேர்த்தும் சாப்பிடலாம்.

உபயோகம்:—வயிற்றுநோய், குன்மநோய், ஆகியவைகளைக் கண்டிக்கும். வாதநீர், பித்தநீர், கபநீர் ஆகிய மூவகை நீரையும் மலவழியாகக் கழிக்கும். பசிதீபனத்தை யுண்டாக்கும்.

### கறியாதிச் சூரணம்.

மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், கறுப்புப்பு இவை வகை-௧-க்கு விராகனெடை-௮, பொரித்த வெண்காரத்தூள் விராகனெடை-௪, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து எட்டுசாம நேரமரைத்துப் பிறகு உலர்த்தி மறுபடியுங் கல்வத்திலிட்டுப் பொடித்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-௪, முதல் எட்டுவரையில். ஆகாரத்தின்மீது சாப்பிட வேண்டும்.

உபயோகம்:—பசிதீபனத்தை யுண்டாக்கும், மந்தாக்கினிரோகம், அஜீரணரோகம் ஆகியவைகளைக் கண்டிக்கும்.

### கடுவாதிச் சூரணம்.

காபிலிக் கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், நெல்லிவற்றற் சூரணம் இவை வகை-௧-க்கு விராகனெடை-௭, அரிசித்திப்பிலிச் சூரணம், கொடிவேலி வேர்ப்பட்டைச் சூரணம், லாஹூருப்புத்தூள் அல்லது, இந்துப்புத்தூள் இவை வகை-௧-க்கு விராகனெடை-௩௨.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து கல்வத்திலிட்டு அரைமணி நேரமரைத்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-ஞெ. ௧.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுவைக் கண்டிக்கும், கபக்கட்டு முதலியவைகளை நீக்கும்; அக்கினிமந்தம், அஜீரணரோகம் ஆகியவைகளை நீக்கிப் பசிதீபனத்தை யதிகப்படுத்தும்.

### கிருஷ்ண லவணச் சூரணம்.

கருப்புப்புத்தூள் விராகனெடை-௫௦, தான்றிக்காய்த்தோற் சூரணம் விராகனெடை-௧௦, மிளகுச் சூரணம், ஓமச்சூரணம், கொடிவேலி வேர்ப்பட்டைச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம் இவை வகை-௧-க்கு விராகனெடை-௯, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்குசாம நேரமரைத்து வெயிலிலுலர்த்தவேண்டும். ஈரமில்லாமல் நன்று யுலர்ந்தபின்பு மறுபடியுங் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்போலவே யெலுமிச்சம் பழச்சாற்றை விட்டு நான்குசாம நேரமரைத்து முன்போலுலர்த்த வேண்டும். முன்போல் ஈரமில்லாம லுலர்ந்தபின்பு முன்போற் பொடித்து முன்போல் முன் சாற்றைவிட்டு நான்குசாம நேரமரைத்து உலர்த்திச் செம்மையாக வுலர்ந்தபின்பு பொடித்து சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க. இதனைக் காலைமாலை யிரண்டுவேளையு முபயோகிக்கலாம். ஆகாரத்தின்மீதும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுக்கள், கபக்கட்டுகள் ஆகியவைகளைக் கண்டிக்கும். வயிற்றுவலி குன்மரோகம் ஆகியவைகளைப் போக்கும். மந்தாக்கினி ரோகம், அஜீரணரோகம் ஆகியவைகளைக் கண்டித்து தீபன சத்தியையும், பசிதீபனத்தையு முண்டாக்கும்.

சிறு லவணாதி லேகியம்.

இந்துப்புத்தூள் விராகனெடை-ரு, மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம் விராகனெடை-கரு, குச்சி, விதை முதலியவை நீக்கின திராக்ஷைப்பழம் விராகனெடை-௬0.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் உரலிலிட்டு வெண்ணெயபோலிடித்து லேகியபதமாக எடுத்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க, ரு, காலையில்ஒருவேளை மாத்திரம் உபயோகித்து வந்தாற் போதுமானது. சில சமயங்களில் சில தேகிகளுக்கு இரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—மலபந்தத்தை நீக்கும். மலச்சிக்கலை நீக்கி மலத்தைக்கிரமப்படுத்தும். பசிதீபனத்தையுண்டாக்கும்.

சாரமாதிச் சூரணம்.

நவச்சாரம் (இதனைத் தூள்செய்து ஓட்டிலிட்டு ஈரம் உலரும்படியாக வறுத்துப் பொடித்து நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும்) மேற்றோல் சீவினசுக்குச் சூரணம், மிளகுச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், இலவங்கச் சூரணம், ரோஜாப்பூச் சூரணம், கறுப்புப்புத் தூள் இவை வகை-க க்குப் பலம்-க.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றுகக் கலந்து கல்வத்திலிட்டு ஒருமணி நேரமரைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-க, காலைமாலை யிரண்டுவேளையு முபயோகிக்கலாம்.

உபயோகம்:—வயிற்றுநோய், குன்மரோகம், அஜீரணரோகம் முதலியவைகளைக் கண்டிக்கும். நீரையதிகப்படுத்தி பாண்டுரோகம், வீக்கம் முதலியவைகளைக் குணப்படுத்தும்.

மாதுளைச் சூரணம்.

மாதுளம்பழச் சுளையை வெயிலிலுலர்த்தி விராகனெடை-௬0, மேற்றோல் சீவினசுக்கு, நற்சீரகம், இவை வகை-க-க்கு விராகனெடை-ரு லாஹூருப்புத் தூள், அல்லது, இந்துப்புத் தூள் பலம்-கஉ௰.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் சேர்த்திடித்து வஸ்திரகாயஞ் செய்யாமல் தெள்ளியெடுத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-உ௰, ௩௰ காலைமாலை யிரண்டுவேளையு முபயோகிக்கலாம். சமயோசிதம்போல இதன் பிரமாணத்தை அதிகப்படுத்தியும் குறைத்துங் கொள்ளலாம்.

உபயோகம்:—மந்தாக்கினிரோகம், அஜீரணரோகம் ஆகியவைகளைக் கண்டித்துப் பசிதீபனத்தை விருத்தியாக்கும். இரைப்பையைப் பலப்படுத்தும். பித்தபேதி, உஷ்ணபேதி ஆகியவைகளைக் கட்டும். இன்னும் பித்த மயக்கம், பித்தவாந்தி முதலிய பித்தசம்பந்த ரோகங்களுக்கும் உபயோகமாகும். பித்த வாயுவையுங் கண்டிக்கும்.

ஜீரணவிருத்திச் சூரணம்.

மஞ்சட் கடுக்காய்த்தோல் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், நெல்லிவற்றற் சூரணம், சீரகச்சூரணம், சோம்புச் சூரணம், கறுப்புப்புத்தூள், குச்சி காம்பு முதலியவைகள் நீக்கப்பட்ட சூரத்து நிலஆவாரைச் சூரணம், இவை வகை - க-க்கு விராகனெடை-௩, மேற்றோல் நீக்கின சுக்குச் சூரணம் விராகனெடை-க௰.

செய்முறை:—மேற்படி சூரணங்களை யெல்லாம் ஒன்றாகக்கலந்து கல்வத்திலிட்டு ஒருமணிநேரமரைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௧வ, ௧௨. இரவில் நித்திரைசெய்யப் போகும்போது சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—மலபந்தத்தை நீக்கும், மலச்சிக்கலைநீக்கி அதைக்கிரமப்படுத்தும் அஜீரணரோகத்தை நீக்கிப் பசுதீபனத்தை யதிகப்படுத்தும். ஆகாரத்தை ஜீரணிக்கச் செய்யும்.

வேறு.

உப்பைவறுத்துப் பற்பமாக்கின தூள் விராகனெடை-௫, சோம்புச்சூரணம், பொதினாச்சூரணம், தாளிசப்பத்திரிச் சூரணம் இவை வகை-௧-க்கு விராகனெடை-௨௦, மேற்றோல் சீவின சுக்குச்சூரணம், பொரித்த பெருங்காயச்சூரணம், வறுத்த மிளகுச் சூரணம் இவை வகை ௧-க்கு விராகனெடை-௧வ.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துக் கல்வத்திலிட்டு ஒருமணி நேரமரைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௧, ௧வ. இதனைக் காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவரலாம். ஆகாரத்தின்மீதும் சாப்பிடலாம்.

உபயோகம்:—வயிற்றுவலி, குன்மரோகம் ஆகியவைகளைக் கண்டிக்கும். மந்தாக்கினிரோகம், அஜீரணரோகம் ஆகியவைகளைப்போக்கி இரைப்பையைப் பலப்படுத்தும்.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி.

௨-ம் பிரிவு.

## குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo - III - பக்கம்-123)

### குவய்னு.

இது சுரசஞ்சீவி யென்பது பிரசித்தமான சங்கதி. ஆனால் இது வேறு வியாதிகளிலும் அதிகமாக உபயோகப்பட்டு வருகிறது.

நரம்பு சம்பந்தமான ஒருதலைநோய் பிரபலப்பட ஒருமணிக்குமுன்பே இரண்டரை அல்லது ஐந்து குன்றிமணியெடை குவய்னுவைச் சாப்பிட்டால் தலைநோயானது பிரபலப்படாமல் சாந்தமாகிவிடும்.

சுவாசகாசம், அல்லது, விக்கல் முறைக்கிரமமாய்க்காணுகிறதா யிருந்தால், மேற்கண்ட விதமாகக் கொய்னாவை யுபயோகிப்பதினால் அந்த வியாதி தடைப்பட்டு சௌக்கியத்திற் கேதுவாகும்.

விஷக்காற்றினால் உண்டான சீதபேதி ரோகத்திலும் மற்ற சிகிச்சைகளுடன் குவய்னுவையுங் கொடுக்க ஆவசியகமாகிறது.

மேகசம்பந்தமான கண் தாபிதரோகத்தில் அது முறைக்கிரமமாய் வருகிறதாயிருந்தால் அதை மேற்கண்டபடி யுபயோகிப்பதினால் குணமுண்டாகும்.

இன்னும்.

குவய்னு குன்றிமணியெடை-௦. அல்லது-௧.

சோடா குன்றிமணியெடை-௨. அல்லது-௨௦.

சீனிச்சர்க்கரை குன்றிமணியெடை-௰

இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்து இரவிற் படுக்கப் போகும்போது சாப்பிடவேண்டும். இவ்விதம் செய்து வருவதினால் மேகசம்பந்தமான கண்தாபிதரோகம்குணமாகும். மேற்படி ரோகமானது முறையாய் வரும்பக்ஷத்தில் மாத்திரம் உபயோகிக்க வேண்டியது.

சுரக்கட்டி கண்டிருக்கின்றவர்களுக்கு ஒவ்வொரு குன்றிமணியெடை குவய்னுவாகத் தினமொன்றிற்கு இரண்டு மூன்று தடவையாக நெடுநாள் உபயோகித்துவந்தால் அதிக குணமுண்டாகும்

வயது தளர்ந்தவர்களும், பட்டண வாசிகளும், தேகப் பயிற்சியில்லாமல் ஒரே இடத்தி லிருப்பதினால், அல்லது, ஜலம், காற்று முதலியவைகளின் விகற்பத்தால் கிரமமான பசியில்லாதிருந்தால் அரை அல்லது, ஒரு குன்றிமணியெடை குவய்னுவைக் காலை மாலை யிரண்டுவேளையு முபயோகித்து வருவதினால் கிரமமான பசியுண்டாகும்.

### எச்சரிக்கை.

குவய்னுவானது அநேக வியாதிகளில் உபயோகப்படுகிறது உண்மையேயாயினும் அதனை யுபயோகிக்

கும்போது கீழ்க்காணும் சிலவிஷயங்களைக் கவனித்து உபயோகிக்க வேண்டியது,

1. குவய்னைவை யுபயோகிப்பதற்கு முன்பு ஏதேனுமொருவகை பேதிக்குக்கொடுத்து இரைப்பையைச் சுத்திசெய்து கொள்ள வேண்டியது ஆவசியகம்.

2. குவய்னைவை வயிறு நிறைந்திருக்கும்போது உபயோகிப்பதைப்பார்க்கிலும் வயிறு வெறுமனேயிருக்கும்போது உபயோகித்தால் அதிகப் பிரயோசனத்தைத் தரும்.

3. குவய்னைவை மாத்திரையாக, அல்லது, சூரணமாக உபயோகிப்பதற்குப் பதிலாக விளாவின கெந்தகத்திராவகத்தை விட்டுப் பாகப்படுத்திக் கொடுத்தால் அதி சீக்கிரம் குணத்தைத்தரும்.

குவய்னைவை முந்திரியுப்பு, எலுமிச்சம்பழவுப்பு ஆகிய வைகளுள் ஒன்றுடன்கலந்து கொடுப்பதுண்டு அம்முறையாவது:—

| | |
|---|---|
| குவய்னை குன்றிமணிபெடை-உ௦. | |
| முந்திரியுப்பு, அல்லது, எலுமிச்சையுப்பு குன்றிமணியெடை | உ௦. |
| குளிர்ந்த ஜலம் பலம் | க. |

இவை யெல்லாவற்றையும் ஒரு சீஷாவிற்போட்டு நன்றாகக்குலுக்கி எல்லாம் கரைந்துபோன பின்பு பானஞ்செய்யவேண்டும். இது ஒருமுறைக்காம் அளவு. இவ்விதம் அவசியமான அளவு சித்தப்படுத்திக் கொள்ள வேண்டியது.

4. குவய்னைவை அதிக அளவாய் உபயோகித்ததினிமித்தம் அல்லது, தொடர்ச்சியாக அதனை உபயோகித்து வந்ததினிமித்தம் கீழ்க்காணும் லட்சணங்கள் உண்டாகும். அதற்கு கொய்னை விஷமித்த லட்சணங்கள் என்றும் இங்கிலீஷில் கொய்னிஜம் என்றும் பெயர். அவையாவன:—

நாவு வறண்டுபோதல், நீருக்கு அடிக்கடி வருவதுபோலிருத்தல், துளித்துளியாக நீரிறங்குதல், தேகம் திமிர்த்ததுபோலிருத்தல், தலைநோய், தலைசுற்றுதல், காதுமந்தப்படுதல், காதில் ஒருவகை யிரைச்சலுண்டாதல், வெருட்டலாயிருத்தல், கண்களுக் கெதிரில் பொரிபறத்தல்போலிருத்தல் ஆகியவைகளாம். ஆகையால் இந்த இலட்சணங்களில் ஏதேனுமொன்று உண்டானல் உடனே குவய்னைவை நிறுத்திவிட வேண்டும்.

5. இரத்தக்கூறு மிகுந்ததேகிகளுக்கு, அல்லது, சிரசின் பக்கம் இரத்தவோட்டம் மிகுந்திருக்கும்போது அதிக ஜாக்கிரதையுடன் குவய்னைவை யுபயோகிக்கவேண்டியது. இந்தஜாக்கிரதை அதிக அனுபவசாலிகளான தேர்ந்த பண்டிதர்களினற் செய்யக்கூடுமேயொழிய மற்றவர்களால் முடியாது. ஆகையால் சாதாரணமானவர்கள் இந்தச் சமயங்களில் குவய்னைவை யுபயோகிக்காம லிருப்பதே மகா உத்தமமான விஷயம்,

6. மூளையைப் பற்றின வியாதிகளில், அல்லது, சிறுகுடல் தாபிதரோகங்களில் குவய்னைவை யுபயோகிக்கலாகாது. இவ்விதமே சுரரோகங்களில் குடலில் தாபிதங் கண்டிருக்கும்போது தேர்ந்த வைத்தியர்களுடைய அனுமதியின்றிக் குவய்னைவை யுபயோகிக்கலாகாது.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௩-ம் பிரிவு.

### ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-132.)

பிரசவ நோவானது கிரமமாகக் கண்டுகொண்டிருக்கிறதா? இல்லையா? வென்பதைக் கவனித்துவரவேண்டியது. அந்த நோவானது குறைந்துபோனலும், அல்லது, சுத்தமாக இல்லாதிருந்தாலும் உந்திக்கொடி வெளிப்படத் தாமதப்பட்டாலும் ஒரு குன்றிமணியெடை இப்பிக்காக்கைக் கொடுக்கவேண்டும். அச்சமயத்தில் அம்மருந்தில்லா விட்டால் வயிற்றின்மீது கையை வைத்து மெதுவாகத் தடவிக் கொடுப்பதினல் நோவு ஆரம்பிக்கும். காலிலிருந்து மார்புவரையில் உள்ள அவயவங்களில் புட்டம் வெளிப்படுவதுதான் கஷ்டமான ஒன்று. ஆகையால் அது வெளிப்படத் தாமதப்பட்டால் மருத்துவப் பெண்ணனவள் தான் அதை வெளிப்படுத்தவேண்டும். தன்னுடைய ஒருவிரலைச் சிசுவின் தொடையில் மாட்டி மெதுவாக நோவிருக்குஞ் சமயத்தில் இழுத்து வெளிப்படுத்த வேண்டும். ஆனல் அதை யிழுக்கும்போது மர்மஸ்தானத்தை மறுகையால் தாங்கிக்கொண்டிருக்கவேண்டியது ஆவசியகம்.

நாபிவரையில் வெளிப்பட்டு விட்டால் அந்தச் சமயத்தில் மருத்துவப் பெண்ணானவள் தன்புத்தியை அதிகம் செலவளிக்க வேண்டி யிருக்கிறது. ஏனெனில் கருப்பைக்குள் நஞ்சுக் கொடியானது ஒட்டிக்கொண்டு பிள்ளையின் நாபியுஞ் சம்பந்தப்பட்டிருக்கும். இதற்கு நச்சுக் கொடியென்றும் பெயர் வழங்குவதுமுண்டு. உண்மையில் இந்தக்கொடியானது மூன்றுவகையுண்டு, இரண்டு சிறியன, ஒன்று மொத்தமானது. சிறிய இரண்டு கொடிகள் மூலமாக கெட்டுப்போன இரத்தமானது திரும்பிப்போகிறது. தடித்த கொடி மூலமாக நல்லிரத்தமானது சிசுவுக்குட்செல்லுகிறது.

அந்த இரண்டு சிறு கொடிகளும் ஒரே கொடியைப்போல தோற்றுவதாகப் பெருங் கொடியுடன் சேர்ந்து சுற்றிக்கொண்டிருக்கும். இவ்விதம் பிள்ளை ஜீவித்திருப்பது இக்கொடிகளின் மூலமென்பது நன்ன்கு விளங்கும்.

நாபிவரையிற் சிசுவானது வெளிவந்து விடுவதால் அக்கொடியானது மேற்பக்கமிருக்கும். அது மார்புவரையில் வெளிவரும்போது அந்தக்கொடி அறுபட்டுச் சிசுவுக்கு அபாயமுண்டாக ஏதுவாகும். ஆகையால் உடனே வெளிப்பட்ட தக்ஷணம் மருத்துவப்பெண்ணானவள் தன் ஒரு விரலை யுட்செலுத்திக் கொடியை யிழுத்துப் பிரசவ ஸ்திரீயின் வயிற்றெலும்புக்குச் சமீபத்தில் வெறுமையா யிருக்கின்ற விடத்தில் வைத்துவிட வேண்டும். இப்படிச் செய்வதினால்கொடியானது தளர்ச்சியாகி அது வெளிப்படும்போது பிகுவா யிராமலிருக்கும். ஆனால் இந்த விஷயத்தில் அதிஜாக்கிரதை வேண்டும். இச்சமயத்தில் மருத்துவப் பெண்ணானவள் ஸ்திரீயின் சமீபத்திலேயே யிருக்கவேண்டும். இருதயம் துடிப்பதுபோல அந்தக்கொடியானது அடிக்கடி துடிக்கிறதாவென அடிக்கடி கவனித்து வரவேண்டும். அக்கொடியானது அடிக்கடி நன்றாய்த் துடித்துக் கொண்டிருந்தால் மருத்துவப்பெண் ஒன்றும் செய்யவேண்டிய அவசியமில்லை. கொடியானது நன்றாய்த் துடிப்பதின் அருத்தமாவது சிசுவானது கஷ்டமின்றிச் சுவாசித்துக் கொண்டிருப்பதென்பதுதான். ஆனால் கொடியானது அடிக்கடி செம்மையாகத் துடிக்காமல் மெதுவாகக் குறைய ஆரம்பிக்கும் பக்ஷத்தில் சிசுவானது சீக்கிரம் வெளிப்படாவிட்டால் சிசு மரித்துப் போமென நிதானிக்க வேண்டியது.

இரத்தவோட்டம் குறைந்து போனதற்கு இன்னொரு அறிகுறியு முண்டு. அதாவது சிசுவானது தேம்ப ஆரம்பிப்பதே. இவ்வித சமயங்களில் தாமதிக்காமல் குழந்தைபைக்கையைக் கொடுத்துத் தலையை வெளிப்படுத்திவிட வேண்டும்.

நமது நாட்டு மருத்துவப்பெண்கள் தங்களுடைய அறிவீனத்தால் சிசுவின்கால் வெளிப்பட்டவுடன் இழுத்துப்போட ஆரம்பித்து விடுகின்றார்கள், இதனால் பிரசவ ஸ்திரீக்குப் பலவித கஷ்டங்களுண்டாகின்றன. கால் ஆரம்பத்தில் வெளிப்பட்டால் எல்லாத் தேகத்துடன் தலைவெளிப்படுவது கஷ்டமான காரியம். நாம் முன்சொல்லி யிருக்கிறதுபோல கால்முன்னர் உதயமானவுடன் அங்குள்ள நீரெல்லாம் வெளிப்பட்டு விடுகிறது. கழுத்துவரையில் வெளிப்படுவதற்குள் கருப்பையானது தண்ணீரில்லாமல் வெறுமையாகி விடுகிறது. தலையாத்திரம் உள்ளே தங்கி நின்றுவிடுகின்றது. கருப்பையில் தண்ணீர் இருப்பதினால் சிசுவை வெளிப்படுத்தும் சக்தி அதற்குண்டாகின்றது இவ்விதம் இப்போது தண்ணீரில்லாமற் போவதினால் தலையானது எவ்விதம் வெளிப்படும். இந்தச் சமயத்திலும் தலைவெளிப்படத் தாமதப்பட்டாலும் நாபிக்கொடி துடித்தல் குறைவுபட்டாலும் கையைக் கொடுத்துச் சிசுவை வெளிப்படுத்தி விடவேண்டும். இந்தச் சமயத்தில் வெளிப்படுத்தும் வகையாவது:—

இடதுகையின் இரண்டொரு விரல்களைப் பிள்ளையின் வாயில் கொடுத்து வலதுகையின் இரண்டொரு விரல்களைச் சிசுவின் பிடரியின் பின்பக்கத்தில் வைத்துப் பிடித்துக்கொண்டு சமமான பலம்போட்டு மிகவும் மெதுவாக இழுத்து வெளியிற் கொண்டுவரவேண்டும். ஆனால் சில மருத்துவப்பெண்கள் சிசுவின் இரண்டு தோள்களைப் பிடித்து இழுத்து வெளிப்படுத்துகின்றார்கள். இவ்விதம் செய்வதில் நூற்றிற்கிருபது தேறுவதும் மகாகடஷ்ம் சிசுவின் பிடரியில் பலம்விழுந்து அது இறந்துபோக நேரிடுகிறது.

குறிப்பு.

முழங்கால், கால்கள் ஆகிய இவைகள் உதயமாகும் விஷயம் ஒரேயிடமாக எழுதப்பட் டிருக்கிறது. ஏனெனில் இவ்விரண்டின் பரிகாரமும் ஒரே மாதிரியா யிருப்பதே காரணம். முழங்கால்முன்னர் உதயமாகினும் இரண்டொரு தடவை நோவு கண்டவுடன் காலும் உதயமாகிவிடும்; சிசுவானது தேம்பினபின்

பு பிறந்தால் அதிக துர்ப்பலப்பட் டிருப்பதால் உடனே அழாது. ஆகையால் பின் சொல்லப்படும் சிகிச்சைகளை அந்தச் சமயத்திற் செய்யவேண்டியது.

(இன்னும் வரும்.)

## சுகாதார போதினி.

௪-ம் பிரிவு

### பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 133.)

### பாலசுரக் குழம்பு.

நெல்லிக்காய்ச் செந்தகம் பலம்-௫, ஜாதிலிங்கம் பலம்-௨. இவ்விரண்டையும் சேர்த்து செவ்வையாகத் தூள்செய்து வைத்துக் கொள்ளவும். நான்கு வாழைப்பழங்களை தோலை நீக்கிப் பீங்கானிற்போட்டுப்பு து மூங்கிலின் மேற்புறணியைக் கத்தியினாற்சீவி சுமார் அரைப்பலந் தூளை அதிற்போட்டுப் பிசைந்து சற்று தாமதித்துப் பிழிந்தால் முத்துப்போல் ஜலம்வரும் அந்த ஜலத்தைத் தனியே வைத்துக் கொள்ளவும்.

செய்முறை:—முன் சித்தப்படுத்தி யிருக்கிற தூளை ஒரு பெரிய இரும்புக் கரண்டியிற்போட்டு அடுப்பில் விளக்குப்போல் நெருப்பை பெரியவிட்டுக் கரண்டியை அதிற்பிடிக்க அதிலுள்ள மருந்தானது உருகிவரும். அப்பொழுது முன் சித்தப்படுத்தின பழத்தின் ஜலத்தைச் சிறுகச் சிறுக வார்த்து தீய்ந்து போகாமல் புரட்டிவர மெழுகு பதமாய்வரும். அந்தச் சமயத்திலிறக்கிப் பீங்கான் சிமிழில் வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-௨. க. தேனிலனுபானித்துக் கொடுக்கவும்.

உபயோகம்:—குழந்தைகளுக்குண்டாம் எல்லா வகை மாந்தரோகங்கள், சுரங்கள் ஆகியவைகள் தீரும்.

### கணநெய்.

கூரெள்ளெண்ணெய் பலம்-அ, வெள்ளாட்டுநெய் பலம்-அ, சித்திரமூல வேர்ப்பட்டை பலம்-௨, குங்குமப்பூ பலம்-௵, கோரோசனை பலம்-௵, வெட்டிவேர் பலம்-௫, விலாமிச்சம்வேர் பலம்-௫, தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு பலம்-௪.

செய்முறை:—எண்ணெயையும் நெய்யையும் ஒன்றாகக்கலந்து சாற்றையும் அதிற்சேர்த்து மற்றசரக்குகளையும் அதிற்போட்டுக் காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கிக் கொள்ளவேண்டும்.

### குறிப்பு.

கோரோசனையையும்; குங்குமப்பூவையும் நெய்யைக் காய்ச்சி யிறக்கி வடிகட்டினபின்பு சேர்த்துக் கொள்வது உத்தமம்.

பிரமாணம்:—விராகனெடை-க. ௨.

உபயோகம்:—எல்லாவகை கணரோகங்களும் தீரும்.

### ஐங்காயச் சூரணம்.

மேற்றோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, மிளகு, ஓமம், கருஞ்சீரகம், குராசாணி யோமம், இலவங்கம், இலவங்கப்பட்டை, ஏலம், மஞ்சட் கடுக்காய்த்தோல், வாய்விளங்கம், கண்டத்திப்பிலி, தாளிசப்பத்திரி, மாசிக்காய், அதிமதுரம், அக்கிராகாரம், வெட்பாலையரிசி, தான்றிக்காய், கடுக்காய்ப்பூ, சோம்பு, கறிமஞ்சள், வால்மிளகு, கொத்துமல்லிவிதை, வகை-க-க்குப் பலம்-௨, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, கோரோசனை, இவை வகை-க-க்கு விராகனெடை-க.

செய்முறை:—கோரோசனை தவிர மற்றவைகளையெல்லாம் ஒன்றாகச் சேர்த்திடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணத்துடன் கோரோசனையைப் பொடித்துச் சேர்த்து நன்றாக மிஸ்ரமித்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-௪. அ, தேன், நெய், வெண்ணெய் முதலியவைகளி லனுபானித்துக் கொடுக்கவும்.

உபயோகம்:—இதனைத் தொடர்ந்தேற்றியாகக் கொடுத்துவர, எல்லாவகை மாந்தரோகங்களும் தீரும். பசிதீபனம் அதிகமாக வுண்டாகும், தேகபுஷ்டி யுண்டாகும்.

### கரப்பான் எண்ணெய்.

தேங்காயெண்ணெய், புங்கெண்ணெய், வேப்பெண்ணெய், இவை வகை-க-க்குப் பலம்-ரு, சூடன், கருஞ்சீரகம், கோஷ்டம், நஞ்சுக்கொட்டை இவை வகை-க-க்குப் பலம்-கஅ.

செய்முறை:—மேற்படி மூன்று எண்ணெய்களையும் ஒன்றாகக் கலந்து நான்கு சரக்குகளையும் இடித்து அதிற்போட்டுக் காய்ச்சி வைத்துக்கொண்டு சிரங்கின்மீது பூசிவர கரப்பான் சிரங்கு, ஆறாதபுண் முதலியவைகளிலுள்ள கிருமிகள் செத்து எவ்விதகரப்பான் சிரங்கும் ஆறிப்போகும்.

கக்குவான் மாத்திரை.

படிக்காரத்தைப் பொடித்துத் தேன்விட்டு ஒரு மணி நேரமரைத்து மிளகுபோல் மாத்திரைகள் செய்துவைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை க. உ. முலைப்பால், தேன் முதலியவைகளி லனுபானித்துக் கொடுக்கவும்.

உபயோகம்:—கக்குவான் வகைகள் தீரும்.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

ரு - ம் பிரிவு

மூலரோகம்

முன்தொடர்ச்சி (vol- III பக்கம்.134)

அந்தி மந்தாரைக்கிழங்கு. (இதனைச் சிறு துண்டுகளாகத் துண்டித்து நிழலிலுலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் பலம்-டு, சீரகத்தை வறுத்திடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் பலம்-டு, சீனிசர்க்கரை பலம்-டு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து அரைமணி நேரமரைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—பலம்-வ, உ, இதனை யுட்கொண்டு காலை நேரங்களில் கால், அல்லது, அரை ஆழாக்கு நீராகாரத்தைப் பானஞ் செய்யவேண்டும். மாலையில் கொஞ்சம் பசுவின்பாலைப் பானஞ் செய்யவேண்டியது. இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையுமாக இருபது நாட்கள் செய்துவரின் மூலமுளைகள் வேருடன் அற்றுப்போகும். ஏதேனும் பாக்கியிருந்தால்இடையிற் பத்துநாள் விட்டு மறுபடியும் இருபதுநாள் உபயோகிக்கவேண்டும். நாட்பட்ட மூலமுளைகளும் கரிந்து நாசமாகிப்போம்.

பத்தியம்:—உப்பு, புளி, காரவஸ்துக்கள் ஆகியவைகளை நீக்கிவிட வேண்டியது பாலன்னத்தைச் சர்க்கரையுடன் உபயோகிக்கவேண்டியது. பாற்பாயசம், பாற்கஞ்சி ஆகியவைகளையு உபயோகிக்க வேண்டியது. மற்றொன்று மாகாது. ஆனால் சுகுமார தேகிகளானாலும் பத்தியம் ஏற்படுத்தக் கூடாதவர்களாயிருந்தாலும் உப்பை வறுத்தும், புளியைச் சுட்டும் காரமில்லாமல் உபயோகிக்க வேண்டியது. ஆனால் மேற்கண்டபடி பத்தியம் ஏற்படுவதும், பத்தியத்தைக் குறைத்து வைப்பதும், தேகபலம், வியாதிபலம், தேகசுபாவம் முதலியவைகளுக் கேற்றபடி யாதலினால் சிகிச்சகர்கள் இவ்விஷயங்களையெல்லாம் செம்மையாக நிதானித்துச் சமயோசிதம்போல ஏற்படுத்த வேண்டியது. இவ்வித நுட்பமான விஷயங்களையெல்லாம் இங்கு எழுதி முடியாது. சிகிச்சகர்கள் தேகசுபாவம் முதலியவைகளுக்குத் தகுந்ததுபோல் ஏற்படுத்தி வியாதியை வசப்படுத்துவதுதான் சாமர்த்தியம். இது ஒரு தகுந்தமுறையா யிருக்கினும் இதற்கேற்படுத்தப் பட்ட பத்தியமானது கடினமானதாக விருக்கிறது. ஆனால் நெடுநாள் கஷ்டப்படுவதைப் பார்க்கிலும் சிலநாள் கஷ்டப்படுவது உசிதமேயாம் ஆகையால், இஷ்டமானவர்கள் செய்து கொள்ளலாமே தவிர கஷ்டமாயிருப்பவர்கள் எல்லா விதத்திலும் இதனை உபயோகிக்காம லிருக்கலாம்.

வேறு

மேற்படி கிழங்கை மேல்தோலைச்சீவி ஒருபலமெடுத்துக்கொள்ள வேண்டியது. இதனுடன் உப்பு, மிளகு, சீரகம், மஞ்சள், புளி, வெங்காயம், வெந்தயம் முதலிய சம்பாரங்களைத் தேவையான அளவு சேர்த்து அரை, அல்லது, முக்கால் ஆழாக்கு ஜலத்திற் கரைத்து அடுப்பேற்றி இரண்டொருகொதி வந்தபின்பு மறுசட்டியில் அரைப்பல நெய்யைவார்த்து நன்றாயச் சூடுகண்டவுடன் அரைப்பலம் வெங்காயத்தைச் சிறுக அரிந்து ஏழுதடவைகள் ஜலத்திற்போட்டு கழுவி முன் நெய்யிற் போட்டு வறுத்துச் சிவந்த பதத்தில் முன் சித்தப்படுத்திவைத்திருக்கும் இரசத்தை மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டித் திப்பியைநீக்கி இரசத்தை மாத்திரம் அதில்விட்டுப் பாத்திரத்தால் மூடிவிடவேண்டும். பிறகு சற்றுநேரஞ்சென்று திறந்து இரண்டு மூன்றுகொதி வந்தபின்பு இறக்கிச் கொஞ்சம் ஆறினபின்பு சுமார் ஒருபலம் சாப்பிடவேண்டும். மீதியாயிருப்பதை

ச் சுடுசாதத்துடன் காப்பிடவேண்டும். இவ்விதம் பிரதி காலையிலும் தொடர்ச்சியாகச் சிலநாட்கள் செய்துவரின் மூலமுளைகள் எரிந்து கரைந்து நாசமாகிவிடும். இடையில் இரண்டொரு நாட்கள் விடுப்போனபோதிலும் பாதகமில்லை. சுகுமார தேகிகள் முதலியயாவரும் உபயோகிக்கலாம். ஆனால், நெடுநாட்செய்யவேண்டிய கஷ்டம் ஒன்றிருக்கிறது. அவசியமானவர்கள் கஷ்டத்தைப் பாராமல் செய்யவேண்டியது தான் கடமை.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி.

அ - ம் பிரிவு.

## இரசவாதம்.

முன்தொடர்ச்சி (Vol-5. பக்கம் 136)

### வெட்டைப்பொன்னை நைப்பாக்கு முறை.

வாதமுறைக்காம் செந்தூரம் முதலியவைகளை உலோகத்தின்மீது கொடுத்தால் பொன்னாக அல்லது வெள்ளியாயாகும். ஆனால் சிலசமயங்களில் அப்படியானது வெட்டையாயிருக்கும், அதாவது:—சுத்தியினால் அடித்தால் தூளாக நொறுங்கிப்போவது. அல்லது, கம்பி, தகடு முதலியவைகளுக்கு வராமல் விரிந்துபோவது. இதன் காரணம் அதில வறட்சி மிகுதியாவதேயாய். இவ்விதமே மேற்சொல்லியிருக்கிறபடி சித்தப்படுத்தும் மட்டங்களும் வெட்டையாகி வேலைக்கு உதவாமற்போகும். அவ்விதம் வெட்டையான பொன்னை அல்லது, மட்டத்தை நைப்பாக்கு முறைகளை பெருதுவதற்குமுன் வெட்டையாக நேடும்சில ஏதுக்களை முன்னர் தெரிந்துகொள்ள வேண்டியது ஆவசியகம். ஏனெனில் வெட்டையாகும் ஏதுக்களைத் தெரிந்துகொண்டால் அதனை உடனே நீக்கி நிவர்த்தி செய்துகொள்ள உற்ற சகாயமாயிருக்குமென்பதே. அவையாவன:—

1. ஒரு உலோகத்தை உருக்கி உருக்குமுகத்தில் கொடுக்கவேண்டிய மருந்தைக் கொடுக்கவேண்டியது. அப்படியிருக்கச் சிலசமயங்களில் அது நன்றாய்க் கண்விட்டாடி உருகுமுன்னமே மருந்தைக் கொடுப்பதினால் அது வெட்டையாக ஏதுவாகும். கொடுத்த மருந்தானது உள்ளும் புறமும் ஊடுருவிப் பாயாமல் உபயோகமற்றதாகிவிடும். ஆகையால் இந்த விஷயத்தைக் கவனத்தில்வைத்து உலோகமானது நன்றாயுருகிக் கண்விட்டாடினபின் மருந்தைக் கொடுக்கவேண்டும்.

2. சில சமயங்களில் உலோகத்திற் கொடுக்க வேண்டிய மருந்தின் அளவு அதிகமாகி விடுவதினாலும் அது வெட்டையாகிவிடுவதுண்டு. இப்படி நேருவதற்குக் காரணம் வாதியின் அனுபவக்குறைவு, அல்லது, குறைந்த அளவு மருந்தை உபயோகித்து சரியான வர்ணம்வராதிருந்த நிமித்தம் அதிக அளவான மருந்தை உபயோகித்ததேயாம்.

3. சில மருந்துகளின் சுபாவகுணமே அதனை யுபயோகித்த உலோகத்தை வெட்டையாக்கி விடுவது. ஆகையால் இந்த விஷயத்தையும் கவனித்துக் கீழ்க்காணுமுறைப்படி நைப்பாக்கிக் கொள்ளவேண்டும்.

4. சில சமயங்களில் வெள்ளைப் பாஷாணம், அல்லது, தாளகம், அல்லது கெந்தகம் ஆகியவைகளுள் ஒன்றின் சிலபாகம் உபயோகிக்குமருந்தில் பச்சையாக இருந்து விடுவது. அல்லது, கும்மட்டியிலுள்ள கரியுடன் கலந்துகிடப்பது, அல்லது உருக்குமூசையில் அவற்றின் வாடையிருந்து அதில் உருக்க நேரிடுகிறது. இந்தக் காரணங்களினால் உலோகமானது வெட்டையாகிவிடும். ஆகையால் இவ்வித விஷயங்கள் நேரிடாதபடி ஜாக்கிரதைசெய்ய வேண்டியது.

5. சில சமயம் நாகம், காரீயம், மிருதார்சிங்கி இவைகளின் வாடைபடுவதினாலும் உலோகமானது வெட்டையாகிவிடும். ஆகையால், இவ்வித சரக்குகளின் சம்மந்தம், வாடை முதலியவைகளில்லாதபடி ஜாக்கிரதைசெய்ய வேண்டியது

6. சில சமயங்களில் ஊதுகுழாய் முதலியவைகளிற் கெந்தகம், அல்லது, அரிதாரம் ஆகியவைகளின் வாடைதங்கி நிற்பதுமுண்டு. அதனாலுதி உருக்கின லோகமானது வெட்டையாகிவிடும். ஆகையால், இந்த விஷயத்தையும் கவனத்தில் வைக்கவேண்டியது.

7. சில மரங்களின் கரி நெருப்பில் உலோகங்களை யுருக்குவதினால் அந்த உலோகமானது வெட்டையாகி விடுகிறதுமுண்டு, சில மரத்தின் கரிக்கு இவ்வித சுபாவகுணமிருப்பதால். அந்த விஷயத்தையும் கவனித்துச் செய்யவேண்டியது.

(இன்னும் வரும்.)

புத்தகம்-௩. 1907ஆம் நவம்பர்மீ 1உ இலக்கம் - கக.

சுகாதார போதினி.

க - ம், பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 13 .)

இரைப்பை ரோகச் சிகிச்சை.

வெற்றிலைத் திராவகம்.

நடுத்தரமான வெற்றிலை பலம்-கரு, தாளிசப்பத்திரி, ஏலரிசி வகைக்கு பலம்-௩, சடாமாஞ்சில், ஓமம், சோம்பு இவை வகை-க-க்குப் பலம்-சஉ, பொதினவிலை, சன்னராஷ்டம், கிச்சிலிக்கிழங்கு இவை வகை-க-க்குப் பலம்-க, தண்ணீர் படி-௩.

செய்முறை:—மேற்படி சரக்குகளைச் செம்மையாகச் சிதைத்துக் கொள்ளவேண்டும். வெற்றிலையைப் பொடியாகஅரிந்து கொள்ளவேண்டும். இவை யெல்லாவற்றையும் மேற்படி ஜலத்திற்போட்டு ஓரிரவு ஊறவைத்து மறுநாட்காலையில் வாலையிலிட்டு முறைப்படி மூன்று சீஷா திராவகமிறக்கிக் கொள்ள வேண்டியது.

பிரமாணம்:—பலம் - க, உ. காலைமாலை யிரண்டு வேளையும் பானஞ் செய்யலாம்.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள வாயுவைக் கண்டித்து வயிற்றுநோய் ஆகியவைகளைப் போக்கும், இரைப்பையைப் பலப்படுத்திப் பசிதீபனத்தையும் சீரணசக்தியையும் அதிகரிக்கச் செய்யும், சுகுமார தேகிகள் முதலான எல்லாருக்கும் உபயோகமாம்.

ஜீரண பில்லை மாத்திரை.

பாற் சாம்பிராணி விராகனெடை-ச, தருஞ்சிநாரத்தத்தோற் சூரணம் விராகனெடை-௩, இலவங்கச்சூரணம், றாமிமஸ்தகிச் சூரணம், சடாமாஞ்சிச் சூரணம், ஏலக்காய்ச் சூரணம், ஜாதிப்பத்திரிச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ, பன்னீர்செல்லத்தக்க அளவு.

செய்முறை:—சாம்பிராணியைத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து திப்பி நீக்கப்பட்ட சூரணத்துடன் மற்ற சூரணங்களையு மிஸ்ரமித்துக் கல்வத்திலிட்டுப் பன்னீரைவார்த்து இரண்டுமணி நேரமரைத்து ஒரு விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவிற் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க, உ.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள அசுத்தமாசுகளைத் தகித்து அதைக் கிரமப்படுத்தி அதனை பலப்படுத்தும்; பசிதீபனம், ஜீரணசக்தி ஆகியவைகளை விருத்தியாக்கும்; வாந்தி, மயக்கம் முதலியவைகளுக்கும் உபயோகமாகும்.

குறிப்பு.

இதிற் பன்னீர் சேர்க்கிறபடியால் ஏழைகளுக்கு அதிகம் உபயோகப்படாது; அவ்வளவிற்குச் சக்தியில்லாதவர்கள் ஜலத்தை வார்த்து மரைத்துக்கொள்ளலாம்.

மாஞ்சி ஷர்பத்.

ஜடாமாஞ்சில் விராகனெடை - உ0, தேன் பலம்-உச.

செய்முறை:—மேற்படி ஜடாமாஞ்சிலைச் சிதைத்து ஒன்றரைப்படி ஜலத்தில்விட்டு ஓரிரவு ஊறவைத்து மறுநாட்காலையி லடுப்பேற்றி யெரித்து நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்துடன் முன் தேனையுஞ் சேர்த்துப் பக்குவமாகக் காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி ஆறினபின் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-உ, ௫.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள குளிர்ச்சி, இரைப்பையிலுள்ள கபம் ஆகியவைகளைக் கண்டித்து இரைப்பையைப் பலப்படுத்தும். பசிதீபனத்தையும், ஜீரண சக்தியையும் அதிகப்படுத்தும்.

துளசி ஷர்பத்.

வெண்துளசி, அல்லது, கருந்துளசி யிலைச்சாறு பலம்-உ0, சீனிசர்க்கரை, அல்லது, தேன் பலம்-ச0.

செய்முறை:—மேற்படி யிரண்டு திரவத்தையும் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கிச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௫, க0.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள கபத்தைக் கண்டிக்கும். இரைப்பையைப் பலப்படுத்திப் பசிதீபனம், ஜீரணசக்தி ஆகியவைகளை விருத்தியாக்கும், கபரோகங்களுக்கும் உபயோகமாம்.

தீபாக்கினி ஷர்பத்.

(a) மேற்கண்ட விதமாகச் சித்தப்படுத்தின துளசிஷர்பத் பலம்-௯0, தேன் பலம்-௪உ, கற்கண்டு பலம்-௬, ஏலக்காய், ஏலரிசி இவை வகை-க-க்கு விராகனெடை-எ௭, சாம்பிராணி, இலவங்கப்பட்டை இவை வகை-க-க்கு விராகனெடை-௩௯, ஜடாமாஞ்சி, இலவங்கம், மேற்றோல்சீவின சுக்கு, மிளகு, இவை வகை -க-க்கு விராகனெடை-உ௭.

(b) குங்குமப்பூ விராகனெடை-க, சக்தியுள்ளவர்கள் கஸ்தூரி, அம்பர் ஆகியவைகளை தம்தம் சக்திக்கேற்ற அளவு சேர்த்துக் கொள்ளவேண்டும்.

செய்முறை:—(a) யி லுள்ள சரக்குகளை யெல்லாம் செம்மையாகச் சிதைத்து ஒரு மெல்லிய வஸ்திரத்தில்முடிந்து ஒருபடி ஜலத்திற்போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து வரவேண்டும். அடிக்கடி அந்த முடிச்சை சந்தனக்கட்டைமத்தால், அல்லது மரமத்தால்நசுக்கிக்கொண்டு வரவேண்டும். மூன்றிலொருபாகம்சுண்டின பின்பு இறக்கிவடிகட்டித்திப்பியைநீக்கின கஷாயத்தில் கற்கண்டைப் பொடித்துப்போட்டுக்கரைத்து அடுப்பேற்றி இரண்டு கொதிவந்தபின்பு தேனையுஞ் சர்பத்தையுஞ் சேர்ந்துக் காய்ச்சி முக்காற் பதமாய் வருகிற சமயத்தில் (b) யி லுள்ள வஸ்துக்களைப் பன்னீர்விட்டு மைபோலரைத்து அதிற் கலக்கிப் பாகுபதத்தில் இறக்கிக் குளிர ஆறினபின்பு சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௩, ௫.

உபயோகம்:—இரைப்பையிலுள்ள குளிர்ச்சி, பசிதீபனக் குறைவு, இரைப்பைத் தூர்ப்பலம், ஈரல் துர்ப்பலம் ஆகியவைகளை நீக்கும். வயிற்றுநோய், அன்னத்துவேஷம், வயிற்றைப் புரட்டுதல், வாயைக்குமட்டுதல் ஆகியவைகளை நீக்கித் தேகசுபாவத்தைக் கிரமப்படுத்தும், இன்னும் இது இரைப்பை, ஈரல் ஆகியவைகளின் அநேக வியாதிகளுக்கு உபயோகப்படுத்தப்படுகிறது. ஆகையால் அனுபோக சாலிகள் இதனைச் சமயோசிதம்போல உபயோகித்து அந்தந்தவியாதிகளைப் போக்கிப் பேருங்கீர்த்தியு மடைய ஏதுவாகும்.

குறிப்பு.

மேற்படி துளசிஷர்பத் பாகத்தில் வெண்துளசிக்குப் பதிலாகக் கருந்துளசிச் சாற்றைச் சேர்த்துக் கொண்டால் மிகவுஞ் சிரேஷ்டமான குணத்தைத்தரும். அவ்விதம் கருந்துளசி யகப்படாத சமயத்தில் வெண்துளசியைச் சேர்த்துக் கொள்ளலாம். அவ்விதமே மேற்படி தீபாக்கினிஷர்பத்திலும் கருந்துளசி ஷர்பத்தைச் சேர்த்துக் கொள்வது விசேஷம். அப்படிக் கூடாத சமயத்தில் வெண்துளசி ஷர்பத்தையே சேர்த்துக் கொள்ளவும்.

குல்கந்து.

ரோஜாப்பூவிதழ் ஒருபங்கு, கற்கண்டுத்தூள், அல்லது, சீனிசர்க்கரை இரண்டுபங்கு.

செய்முறை:—இரண்டையு மிஸ்ரமித்துப் பீங்கான் ஜாடியிற்போட்டு வாய்பந்தனம் செய்து வெயிலில் வைத்துவர வேண்டும். நாற்பது நாளைக்குப்பின் னெடுத்து உபயோகிக்கவேண்டும்.

பிரமாணம்:—பலம்-க, கஉ.

உபயோகம்:—இரைப்பையைப் பலப்படுத்தும், ஆகாரங்களை ஜீரணிக்கச்செய்யும், மலத்தையிளக்கும்.

குறிப்பு.

மேற்படி குல்கந்தைச் செய்வதற்காகக் கஷ்டமெடுத்துக் கொள்வதைப் பார்க்கிலும் கடையில் விற்குங் குல்கந்தை வாங்கி உபயோகித்துக் கொள்ளலாம். அது கடையில் விற்கப் பெறாதவர்கள் அல்லது, கடையில் வாங்க இஷ்டமில்லாதவர்கள், கஷ்டத்திற்குப் பால் மாறாதவர்கள் மேற்கண்ட விதமாகச் செய்துகொள்ளலாம்.

பற்றுகள்.

எலிப்புழுக்கை, சோம்பு இவையிரண்டும் சமனெடை. இவ்விரண்டையுஞ் சலம்வார்த்துமைபோலரைத்துக் கொதிக்கவைத்து வயிற்றிற்பற்றிட வயிற்றுநோய், கருப்பநோய் ஆகியவைகள் தீரும்.

ஒற்றிடம்.

ஆற்றுமணலைக் காடியிலூறவைத்துத் துணியில் முடிந்துக்கொண்டு அதை ஓட்டில்வைத்துச் சூடுகாட்டி இளஞ்சூடாக வயிற்றி லொற்றிடவேண்டும். இப்படிச்செய்வதினால் இரைப்பையின் நோய் முதலியவைகள் தீரும்.

ஒற்றிடம் (வேறு)

கருப்பெள், ஓமம், மஞ்சட் கடுக்காய்த்தோல், உப்பு இவைகள் சமனெடை. இவைகளைக் காடிவிட்டிடித்து ஓட்டில் வறுத்துத் துணியில் முடிந்துக்கொ

ண்டு வயிற்றில் ஒற்றிடமிட வயிற்றுநோய் முதலியவைகள் தீரும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

### உ-ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo-III-பக்கம்-140)

### சிற்றாமணக் கெண்ணெய்.

இது யாவருக்கும் தெரிந்தமருந்து. மேலும் இது அரைக்குழந்தைமுதல் விருத்தர்கள், ஸ்திரீகள் முதலிய எல்லோருக்கும் உபயோகப்படத் தக்கது. இது துல்லியமாய் வைக்கோல்நிறமுள்ளதா யிருக்கிறதுதான் நல்ல சரக்கு. இது வாயிலிட்டவுடன் முதலில் ருசியில்லாததுபோ லிருந்து முடிவில் கொஞ்சம் கரகரப்புண்டாகும். மஞ்சணிற மதிகப்பட்டிருந்தால் அது மட்டமான சரக்கென நிதானிக்கவேண்டும். ஜலத்தைப்பார்க்கிலும் இது இலேசானதாகையால் ஜலத்தின்மேல் மிதக்கும். இது ஜலத்திற்கரையாது. இது ஆல்கோஹல் என்னுஞ் சாராயம், ஈதர் முதலியவைகளில் கரையும். இதனுடன் வேறுவகை யெண்ணெய்களையும் கலந்து விற்பது கடைக்காரரின் வழக்கமாகையால் இதைப் பரீக்ஷித்து வாங்கவேண்டியது. அல்லது, நாமே செய்துகொண்டால் உத்தமமா யிருக்கும் அதன் விபரமாவது:=

1. சிற்றாமணக்கு முத்துகளைஉடைத்து வெயிலிலுலர்த்திச் செக்கிலாட்டி எடுத்துக்கொள்வது ஒருவகை.

2. ஆமணக்கு முத்தை ஜலத்திற்போட்டு வேகவைத்து உலர்த்தி யிடித்து மறுபடியுஞ் சலத்திற்போட்டு வேகவைத்தால் எண்ணெய்கக்கி ஜலத்தில் மிதக்கும். இதனை ஆறவைத்துக் கையினால், அல்லது, ஓலையினால் வழித்தெடுத்து ஒரு பாத்திரத்திற் றனியேவைத்து அதிலுள்ள ஜலத்தை நீக்கிவிட்டு எடுத்துக்கொள்வது ஒருமுறை.

3. முத்துக்களை மணம் வரும்படியாக வறுத்து இடித்துத் தூளாக்கி ஜலத்திற்போட்டு வேகவைத்து மிதக்கும் எண்ணெயை வழித்தெடுத்துக்கொள்வது ஒருவகை. இந்த மூவகைகளுள் பின் காணப்பட்ட முறையே சிரேஷ்டமானது. ஏனெனில்; இந்த ஆமணக்கு முத்துக்கொட்டைக்கும் விஷமிக்கிற குணமிருப்பதால் அதைச் சுத்திசெய்ய வேண்டியது ஆவசியகம். ஆமணக்குப் பருப்பை வறுத்தெடுப்பதே அதன் சுத்திபாம். ஆகையால் வறுத்தெடுத்த பருப்புகளின எண்ணெயானது சுத்தியா யிருப்பதுடன் ஓர் விதச் சுகந்த மணமுள்ளதாகவு மிருக்கும். ஆனால் ஆங்கிலேய வைத்தியர்கள் அவித்தெடுக்கிற எண்ணெயைப் பார்க்கிலும் செக்கிலாட்டி யெடுக்கிற எண்ணெயானது சிரேஷ்டமானதெனச் சொல்கின்றார்கள்.

சிற்றாமணக்கெண்ணெயை உள்ளுக்குக் கொடுத்தால் உபத்திரவமில்லாமல் சாந்தமாய்ப் பேதியாகும். வயிற்றில் உஷ்ணம் செய்யாமலும் வேதனை யில்லாமலும் பேதியாகும்படி செய்யவேண்டிய போதெல்லாம் குடற்புண், வயிறு முறுக்கலோடு வேதனை, மூத்திரவுருப்புகள், ஜனன வுருப்புகள் இவைகளின் வியாதி, மூலரோகங்கள், மலத்துவாரம் அடைப்பு முதலிய ரோகங்களில் பேதிக்குக்கொடுக்க இது நல்லமருந்து. குழந்தைகளுக்கும், பிரசவித்தவர்களுக்கும், மூலரோகிகளுக்கும், சீதபேதி யுடையோர்களுக்கும் பேதிக்குக் கொடுக்க இதுவே தகுந்த மருந்து. அக்கினிமந்தம், வயிற்றுவலி ஆகிய இந்த ரோகங்களில் இதைக்கொடுத்தால் சாந்தமாய்ப் பேதியாகும். அயங்கொடுத்துக் காணுகிற மலச்சிக்கலுக்கும் இதைக்கொடுத்தால் மலச்சிக்கல் தீர்ந்து அயத்தின்தோஷம் நீங்கி அயத்தின் நல்ல குணத்தைக் கொடுக்கும். பலவித அவுடதங்களின் வெப்பங்களைத் தணிக்கவும், மூலத்திலுண்டாகும் உஷ்ணங்களைத் தணிக்கவும் இந்த எண்ணெயானது அதிக முபயோகமானது. குழந்தைகளுக்கு செவ்வெண்ணெய் என்று முலைப்பால் கலந்து வார்ப்பதினால் நல்ல குணமுண்டாகும். ஆனால் பிரதி நாளுமாவது அல்லது, பிரதிதினமும் அந்திசந்தி யிரண்டுவேளையுமாவது வார்த்துக் கொண்டிருக்கிற வழக்கங் கெட்டது. அதனால் அநேக துர்க்குணங்களுக்கேதுவாகும். ஆகையால் வாரத்தில் இரண்டொருதடவை அல்லது, எப்போது அவசியமாய் வேண்டியதோ அப்போது உபயோகப்படுத்தினால் சௌக்கியத்தைத்தரும். குழந்தைகளைத் தாய் வளர்ப்பதுபோல் இது உடலை வளர்ப்பிக்கும் ௫-பலம் சிற்றாமணக் கெண்ணெயுடன் ௨௦-ப்பலம் பேயன் வாழைப்பழத்தை, அல்லது, ரஸ்தாளிப்பழத்தைச் சிறு பில்லைகளாகத் துண்டித்துப்போ

பாலசஞ்சீவிக் குளிகை.

மேற்றோல் சீவினசுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, சுத்திசெய்த லிங்கம், ஓமம், வெண்காரம், இலவங்கம் இவை வகை-க-க்குப் பலம்-க. இவற்றுள் லிங்கம் தவிர மற்றவைகளைத் தனித்தனி யிடித்து வஸ்திரகாயஞ்செய்து தனித்தனி மேற்கண்ட எடை நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

செய்முறை:—லிங்கத்தைக் கல்வத்திலிட்டுப்பொடித்து மற்ற சூரணத்தையுஞ் சேர்த்து பழச்சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து இரண்டு சாமநேர மரைத்து அரைக் குன்றிமணி யெடை மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க. உ.

அனுபானம்:—துளசிச்சாறு, நாய்த்துளசிச்சாறு முதலியவைகளாம்.

உபயோகம்:—சன்னி, சுரம் முதலியவைகள் தீரும்.

பாலபேதி.

மேற்றோல் சீவினசுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, ஓமம், கடுகுரோகணி, கோஷ்டம் இவற்றைத் தனித்தனி யிடித்த சூரணம் வகை-க-க்குப் பலம்-வ, சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு பலம்-கஉ, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—நேர்வாளத்தைக் கல்வத்திலிட்டு அரைத்து மேற்படி சூரணங்களையுஞ் சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து அரைக் குன்றிமணியெடை மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—சிறுவர்களுக்கு மாத்திரை-க. உ. பெரியவர்களுக்கு மாத்திரை-ங. ச.

அனுபானம்:—சிறுவர்களுக்குமுலைப்பால், சுக்குக்கஷாயம்; பெரியவர்களுக்கு வெல்லம், சர்க்கரை, வாழைப்பழம் முதலியவைகளாம்.

உபயோகம்:—வயிற்றிலுள்ள பழைய மலங்கள், அசுத்தமலங்கள் முதலியவை நீங்கி தேகசுக முதலியவைகளுண்டாகும்.

இன்னும் வரும்.

சுகாதார போதினி.

ரு-ம் பிரிவு

மூலரோகம்

முன்தொடர்ச்சி (vol- III பக்கம். 144)

மூலரோகச் சிகிச்சை.

ஆனைநெருஞ்சி சமூலம் பலம்-கo, துவரை ஆழாக்கு-ஆ, தண்ணீர் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—ஐந்துபலம் நெருஞ்சிலைத் துவைத்து ஒரு சட்டியிற் பரப்பி அதன்மீது துவரையைப் பரப்பி, அதன்மீது ஐந்துபலம் நெருஞ்சிலைத் துவைத்துப் பரப்பித் துவரை வேகும்படியான அளவு ஜலம்வார்த்து அடுப்பேற்றி வேகவைத்துத் துவரையானது அழிய வெந்த பதத்தில் இறக்கி துவரையை மாத்திரமெடுத்துக் கொண்டு நிழலிலுலர்த்தி நன்றாயுலர்ந்தபின்பு பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-ச, ரு, சு. காலையில் மென்றுதின்று அதன்மேல் அரை ஆழாக்கு நீராகாரத்தைப் பானஞ்செய்ய வேண்டும். மாலையில் அதனை மென்றுதின்று குளிர்ந்தஜலம் சாப்பிடவேண்டும். இதனைத் தனியே சாப்பிடுவதற் கிஷ்டமில்லாதவர்கள் பனங்கற்கண்டையுங் கூடச்சேர்த்து மென்று சாப்பிடலாம். இதுவுங் கஷ்டமாயுள்ளவர்கள் மேற்படி துவரையைத் தோலுடன் வறுத்துத் தூள்செய்து சர்க்கரையுங் கலந்து சாப்பிடலாம். இவ்விதஞ் செய்த சூரணமானது சாப்பிடுவதற்கு ருசியாகவும், பிரியமாகவு மிருக்கும். சுகுமார தேகிகளுக்கு இவ்விதமே செய்து கொடுக்கவேண்டியது உத்தமம். ஆனால் அளவைக் கொஞ்சம் அதிகப்படுத்தியும் அதிகநாள் தொடர்ச்சியாகவும் உபயோகிக்க வேண்டியதா யிருக்கும். இது தினந்தோறும் நமது உபயோகத்திலுள்ள ஆகார வஸ்துவாயினும் மேற்கண்ட விதமாகப் பக்குவப்படுத்தி உபயோகிப்பதினால் நல்ல மருந்தின் குணத்தைத்தரும். இஷ்டமானவர்கள் இதனை உபயோகித்து இதன் குணத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

உபயோகம்:—இரத்தமூலம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—இதனைச் சாப்பிடும்போது புளி, புகை, காரமானவஸ்துக்கள் ஆகியவைகளை நீக்கவேண்டும். மீன், கருவாடு முதலியவைகளையும் அடியோடே நீக்கவேண்டியது. பெண் விஷயத்தை அடியோடு மறந்துவிடவும் வேண்டியது.

வேறு.

கடுக்காய்ப்பூ, கடுக்காய்ப்பிஞ்சு, சிறுநாகப்பூ, சோம்பு இவை வகை-௧-க்குப் பலம்-௨, பசுவினெய் செல்லத்தக்க அளவு, சீனிசர்க்கரை செல்லத்தக்க அளவு.

செய்முறை:—முன்கண்ட நான்கு வஸ்துக்களையும் தனித்தனியாக மேற்படி நெய்யில் பொன் வருணமாக வறுத்து தனித்தனித் தூள்செய்து சமனெடையாக எடுத்துக் கொள்ளவேண்டும். எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து இதற்குச் சமனெடை சீனி சர்க்கரையைக் கலந்து ஒருமணி நேரமரைத்துப் பின் கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௨, ௧, ௰. காலைமாலையிரண்டுவேளையும் உபயோகித்து வரவேண்டும்.

உபயோகம்:—இரத்தமூல முதலிய மூலரோகங்கள் தீரும். மூலச்சூடு, மூலச்சூட்டினால் மலபந்தப்பட்டிருத்தல், மலச்சிக்கல் முதலியவைகள் தீரும்.

வேறு.

அவுரியிலையை விளக்கெண்ணெயில் வதக்கி ஆசனத்தில்வைத்துக் கட்டவேண்டும். இவ்விதம் தினம் இரண்டுமூன்று தடவைகள் வைத்துக் கட்டவேண்டும். தொடர்ச்சியாகச் சிலநாட்கள் செய்துவரின் மூலமுளையானது அழுகிக்கழன்று விழ்ந்துபோகும். ஆனால் இதனை உபயோகிக்கும்போது காரமான வஸ்துக்களை உபயோகிக்காமல் சாந்தமான வஸ்துக்களை உபயோகித்து வரவேண்டும்.

வேறு.

கோவை யிலையையும் மேற்கண்ட பாகப்படியே செய்து மேற்கண்டபடி உபயோகிக்க மேற்கண்ட குணங்களுண்டாகும்.

(இன்னும் வரும்)

---

சுகாதார போதினி.

௬ - ம் பிரிவு.

## இரசவாதம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 144)

### வெட்டையை நைப்பாக்கு முறை.

நாம் முன் பத்திரிகையிற் சொல்லி யிருக்கிறபடி உருக்கின லோகமானது வெட்டையான காரணத்தைக் கண்டறிந்து அந்தக் காரணத்தை நீக்கவேண்டியதே பிரதானம். அப்படி அந்தக் காரணங்கள் ஒன்றுமில்லாம லிருந்தால் கீழ்க்காணும் விஷயங்களைக் கவனிக்கவேண்டியது ஆவசியகம்.

சில சமயம் வெட்டையான வுலோகத்தை மடக்கி மடக்கி உருக்குவதினால் அவ்வெட்டைத்தனம் எடுபட்டுப் போகும்.

சிலசமயங்களில் நவச்சார எண்ணெய்,அல்லது, மிருகங்களின் குழம்பின் எண்ணெய் முதலியவைகளின்மூலமாக அந்த வெட்டையை நீக்கவேண்டியதா யிருக்கும். ஆகையால் மேற்றிசை முறை, கீழ்த்திசைமுறை ஆகிய இருவகை முறைகளையும் எழுதுகின்றோம். இம்முறைகளின் மூலமாக அது எவ்விதமான கடினமாகிய வெட்டையாக இருக்கினும் அந்த வெட்டைத் தன்மை நீங்கி நைப்பாகிவிடும். இன்னும் அதில் அதிகமாக உருக்கித் துவைத்தால் ஈயத்தைப் போன்ற நைப்புண்டாகிவிடும். இம்முறைகளெல்லாம் அனுபவப்பட்ட தாகையால் வெகு இரகசியமாக வைக்கப்பட்டு வந்தன. ஆயினும் நமது நண்பர்களின் பொருட்டாகவும், நமது போதினியின் அபிமானி கட்காவும் வெளிப்படுத்துகின்றோம். ஆகையால், அவசியமானவர்கள் பின்காணு முறைகளைச் சற்று கவனமாகவும் ஜாக்கிரதை யாகவும் செய்தால் கடவுளினது கிருபையால் நிச்சயமாகச் சித்திபெறலாம். "செய்வன திருந்தச்செய்" என்னும் ஆன்றோர் வாக்கியத்தின்படி நாம் செய்யவேண்டிய எந்த முறையையும் கிரமமாகவும் புத்திக்கூர்மையுடனும் செய்தால் நமது உத்தேசம் சித்தியாகி வெற்றிபெறலாமென்பது நிச்சயம். அப்படிச்செய்யாமல் நாமொருவழியாகவும், முறை ஒருவழியாகவுமிருந்தால் நாமெடுத்தகாரியம் முற்றுங் கைகூடாமல் தப்பிப்போ மென்பதற்கு என்ன ஆட்சேபனையுண்டு. ஆகையால், விடாமுயற்சியுடன் எந்தக் காரியத்தையும் சிலதடவைகள் மடக்கி மடக்கிச்செய்யின் அந்தப் பாகத்திலுள்ள மர்மங்களெல்லாம் அனுபவத்தால் தெரிந்து முடிவில் நமது கருத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம். ஆகையால், தயவுடன் பின்காணுமுறைகளைக் கவனமாகச் செய்து கொள்வார்களென நம்பப்படுகிறது.

1, சிவப்பு வர்ணமாயிருக்கிற மாம்பட்டைச்சாறு (மாமரமானது நாட்பட்டதாகவும், வயதுசென்றதாகவுமிருக்கவேண்டும். வெளிப்புறணியையும்,உள்ளிலிருக்கிற வெண்ணிறமான சவ்வையும்நீக்கிவிட்டுஇவ்விரண்டிற்குமிடையிலுள்ள சதைப்பற்றாயிருக்கிற பாகத்தை மரவுரலில் கழுந்துலக்கையால் நைய இடித்துச் சாறுபிழிந்து கொள்ளவேண்டும்.) இந்தச்சாற்றை ஒருமண்பாத்திரத்தில் விட்டுக்கொண்டு வெட்டையான வுலோகத்தை உருக்கி மேற்படி சாற்றில்சாய்க்கவேண்டும்சாறானது உருக்கிச்சாய்க்கும்லோகம் ஆழ்ந்துகிடக்கும்படியா யிருக்கவேண்டும். ஒவ்வொருதடவையும் புதியசாறாக வார்த்துக்கொள்ள வேண்டியது ஆவசியகம். சாறில்லாத சமயங்களில் ஒருதடவை வார்த்த சாற்றில் மறுதடவை சாய்த்துக்கொள்ளலாம். ஆனால் மூன்றுதடவைக் கதிகம் சாய்க்கலாகாது. இப்படி பலதடவைகள் உருக்கிச்சாய்க்க வெட்டையா யிருப்பது நீங்கி அதிலுள்ள தோஷங்களு மெடுபட்டுச் சுத்தியாகி மிருதுவாகிவிடும். அந்த உலோகமானது எவ்வளவுக் கெவ்வளவு வெட்டையா யிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு உருக்கிச்சாய்க்க நேகிடும். அதாவது பலதடவைகள் உருக்கிச்சாய்க்க நேரிடுமென்பதேயாம். இம்முறையானது பலதடவைகள் அனுபோகப்பட்டதாகையால் முறைப்படி செய்து கொள்ளவும். மேற்படி மாம்பட்டையானது மேற்கண்ட இலட்சணங்களுள்ளதா யிருந்தால் எவ்வித வெட்டையும் ஏழுதடவைக்குள் வாழை நாரைப்போல நைப்பாகிவிடும் எவ்விதமான வெட்டைக்கும் பதினொரு தடவைக்குமேற் செய்யும்படியாக நேரிட்டதில்லை. இனி அவரவர்கள்செய்யும் பாகத்தைப் பொருத்தது.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி

### எ-ம் பிரிவு.

### பற்ப முறைகள்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம்-136)

இதுவரையில் நாம் தாம்பிர பற்பமுறைகளை யெழுதிவந்தோம். கடவுளினது கிருபையினால் நமது நண்பர்களுள் அநேகர் அப்பாகங்களுள் தந்தமக் கிஷ்டமான சிலவற்றைச்செய்து உபயோகித்து அதனால் தாங்களும் தமது சிநேகிதர்களும் அடைந்த பிரயோசனத்தைக் கடிதத்தாலும், நேராகவும் தெரிவித்து வருகின்றார்கள். ஆகையால் நமக்கு அதிக உற்சாகமுண்டாகி இன்னும் பல முறைகளையும் எழுதிவர ஆவலடைந்திருக்கின்றோம். தாம்பிர பற்பமுறைகளை நிறுத்தி அயபற்பத்தை எழுதுவாம்.

### அயச் சுத்தி.

அயத்தைப் புளியிலைக்கனம் தகடாகத்தட்டிக் கரிநெருப்பில் பழுக்கக்காய்ச்சி நல்லெண்ணெயில் தோய்க்கவேண்டும் குளிர ஆறினபின்பு எடுத்து மறுபடியு முன்போற்காய்ச்சி முன்போல் தோய்க்கவேண்டும் இவ்விதம் மடக்கி மடக்கி ஏழுதடவை தோய்க்கவேண்டும். தோய்க்கும் தகடானது ஆழ்ந்து கிடக்கும்படியாகத் திரவமிருக்கவேண்டும். ஒவ்வொரு தடவையும் புதிது புதிதாக திரவத்தை வார்த்துக்கொள்ள வேண்டியது உத்தமம். எண்ணெயில் ஏழுதடவைகாய்ச்சித் தோய்த்தபின்பு காடியில் ஏழுதடவையும், கோமூத்திரத்தில் ஏழுதடவையும், புளித்தமோரில் ஏழுதடவையும், கொள்ளை தேகவைத்த ஜலத்தில் ஏழுதடவையும் மேற்சொல்லி யிருக்கிறபடி காய்ச்சித் தோய்க்க இரும்பானது சுத்தியாகிவிடும்.

### வேறு சுத்தி.

இரும்பை மேற்கண்டபடி புளியிலைக்கனம்தகடடித்துச் சிறுதுண்டுகளாகத் துண்டித்து ஆட்டிரத்தத்தில் புரட்டிக் கரிநெருப்பில்வைத்து ஊதவேண்டும். அது நன்றாய்ப் பழுக்கச் சிவந்தபின்பு எடுத்து ஆறவைத்துமறுபடியுமுன்போல்ஆட்டிரத்தத்திற் புரட்டி முன்போற் பழுக்கக்காய்ச்சிக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஆட்டிரத்தத்தில் ஏழுதடவைகள் செய்தானபின்பு முயல்ரத்தத்தில் ஏழுதடவைகள் செய்துகொண்டால் திறமான சுத்தியாகும். அவசியானபோது அயஅரபொடியை மேற்கண்ட இரத்தங்களிற் போட்டுப் பிசறிக் குகையிற்போட்டுக் கரிநெருப்பில் வைத்துப் பழுக்கக்காய்ச்சி எடுத்து நன்றாயாறின பின்பு முன்போல இரத்தத்திற்போட்டுப் பிசறிப்பழுக் காய்ச்சிக் கொள்ளவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி முன் சொல்லியிருக்கிறபடி ஒவ்வொன்றிலும் எவ்வேழுதடவைகள் செய்துகொண்டால் மிகவு நேர்த்தியான சுத்தியாகியிருக்கும். இவ்விதஞ் சுத்திசெய்யப்பட்ட அயத்தை பற்பமாகவாவது, அல்லது, செந்தூரமாகவாவதுசெய்து உபயோகிப்பதால் பலவித சிறந்த குணங்களுண்டாகும். வேறெவ்வித துர்க்குணங்களுக்கும் இடமாகாது. சுத்திசெய்யாத வுலோகங்களைப் பற்பமாக அல்லது, செந்தூரமாகச்செய்து உபயோகிப்பதால் நன்மைக்குப் பதிலாகத் தீமையேயுண்டாகும். இந்த விஷயம் அனுபவசாலிகளுக்கு வெளிப்படையானதே.

(இன்னும் வரும்.)

---

புத்தகம்-௩. 1907ஞு நவம்பர்மீ 15௳ இலக்கம்-௨0.

சுகாதார போதினி.

க-ம், பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம். 146.)

பேதிச் சிகிச்சை.

இரைப்பையிலுள்ள ஆகாரமானது விஷமித்து விட்டால் அதனை வாந்தி மூலமாகவும், பேதிமூலமாகவும் வெளிப்படுத்த முயலவேண்டும். வயிற்றில் விஷமித்த வஸ்து வெளிப்படாத வரையில் பேதியைக் கட்டத் துரிதப்படலாகாது. சில சமயம் தாகம் அதிகப்பட்டும், தேகசுபாவம் உஷ்ணமாயிருந்தும் வாந்தியானல் ஒருபோதும் உஷ்ணமான மருந்துகளை உபயோகிக்கலாகாது. தண்ணீருக்குப் பதிலாகப்பன்னீர், சோம்புத் திராவகம், மணித்தக்காளித் திராவகம் ஆகியவைகளிலொன்றைக் கொடுக்கலாம். வேறொன்றுங் கொடுக்காமல் நிறுத்திவைப்பது உத்தமம். தூங்குதல், சாப்பிடாமல் இலங்கணமா யிருத்தல், அமதியாயிருத்தல் முதலியவைகள் இந்த வியாதியில் அதிகங் குணத்தைத்தரும்.

கஷாயம்.

சோம்பு விராகனெடை - ௩; உலர்ந்த கொதினு விராகனெடை-௨, இலவங்கம் குன்றிமணி யெடை-௪, குல்கந்து விராகனெடை-௬.

செய்முறை:—இலவங்கத்தைச் சட்டியிற் போட்டுக் கொஞ்சம் வறுத்து மற்றிரண்டு சாக்குகளையும் அதிற்போட்டு ஒன்றரை ஆழாக்கு ஜலத்தை வார்த்து அரை ஆழாக்காகச் சுண்டவைத்து குல்கந்தைப்போட்டுக் கரைத்து வடிகட்டித் திப்பியை நீக்கிப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் தினம இரண்டு மூன்றுதடவைகள் செய்தால் வயிற்றிலுள்ள துர்மல முதலியவைகள் நீங்கிப் பேதி கட்டுப்பட்டுப்போம்.

வயிற்றில் துர்மலமில்லா விட்டால் குல்கந்திற்குப்பதிலாக சீனி சர்க்கரையைச் சேர்த்து உபயோகிக்கலாம்.அல்லது, சர்க்கரை யில்லாமலே உபயோகிக்கலாம்.

உபயோகம்:—பேதி, வயிற்றுப்போக்கு ஆகியவைகள் தீரும்.

வேறு.

கிச்சிலிக்கிழங்கு விராகனெடை-௩, இதனை நையச் சிதைத்து முக்கால் ஆழாக்கு ஜலத்திற்போட்டுக் கால் ஆழாக்காகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டிப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் தினம் இரண்டு மூதடவைகள், அல்லது, பேதி நிற்கிற வரையில் செய்யலாம்.

வேறு.

ஏலக்காய்த்தோல் விராகனெடை-௫, ௬. பன்னீர், அல்லது, ஜலம் பலம்-க௨, இந்த ஜலத்தில்மேற்படி தோலைப்போட்டு ஆறுபலமாகச்சுண்டவைத்திறக்கி வடிகட்டி பானஞ் செய்யவும். இவ்விதம் பேதிநிற்கிற வரையில் மணிக்கொருதடவை உபயோகித்து வரலாம்.

குறிப்பு.

பன்னீருக்கு சக்தியில்லாதவர்கள், அல்லது, பன்னீர் அகப்படாத காலங்கள் ஆகிய இந்தச் சமயங்களில் பன்னீருக்குப் பதிலாகத் தண்ணீரைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். மற்ற காலங்களில் பன்னீரைச் சேர்த்துபயோகிப்பதே சிரேஷ்டம்.

வேறு.

பூசினிப்பூ விராகனெடை-க௰, இதனை ஜலத்திலரைத்துக் கொஞ்சம் ஜலத்திற்கரைத்துப் பேதி கண்டவர்களுக்கு மணிக்கொரு தடவை, அல்லது, இரண்டு மணிக்கொருதடவை உபயோகித்து வந்தால் பேதியானது சீக்கிரம் நின்றுவிடும்.

வேறு.

நீலத்துணியைச் சுட்டெரித்த சாம்பல் விராகனெடை-க௰, ௨. இதனைத் தன் சிறுநீரிற் கரைத்துச் சாப்பிடவேண்டும். இவ்விதம் அடிக்கடி செய்துவந்தால் விஷபேதி கட்டுப்பட்டு சௌக்கிய முண்டாகும்.

வேறு.

மிளகாய்விதை ஒன்று அல்லது, இரண்டு இதனை மூன்று நான்கு குன்றிமணியெடை தேன்மெழுக்கில் வைத்து விழுங்கிவிட வேண்டும். இவ்விதம் இரண்டொருதடவை சாப்பிட்டால், விஷபேதி முதலியவை

கட்டுப் பட்டுப்போகும். இது பேதிரோகத்திற்குச் சஞ்சீவியெனச் சொல்லப்பட்டிருக்கிறது.

வேறு.

வெள்ளெருக்கின் வேர்ப்பட்டை குன்றிமணியெடை-கஉ, சுக்குத்தூள் குன்றிமணியெடை-அ, இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட இரண்டையும் கல்வத்திலிட்டு ஒருசாமநேரமரைத்து ஒருகுன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க.

உபயோகம்:—இதனை விஷபேதி கண்டவர்களுக்கு எந்த ஸ்திதியிலும் உபயோகிக்கலாம். விஷபேதி கண்டிருந்து சீதளங் கண்டிருந்தபோதிலும் அந்தச் சமயத்திலும் குணமுண்டாகும்.

வேறு.

கொள்ளுக்காய் வேளைவேர்ப்பட்டை விராகனெடை-உ, இதனை அம்மியில் வைத்துக் கொஞ்சம் தண்ணீர்விட்டு வெண்ணெய்போலரைத்து மாத்திரையாகச் செய்து விழுங்கிவிட வேண்டும். இவ்விதம் ஒருமணிக் கொருதடவை, அல்லது, இரண்டுமணிக் கொருதடவை சாப்பிட்டுவர விஷபேதியானது நிற்கும்.

வேறு.

சதாபிலே விராகனெடை-உ, மிளகு குன்றிமணியெடை-உ, இவ்விரண்டையுஞ் சேர்த்தரைத்துப் பானஞ் செய்விக்கவேண்டும். வாந்தியாகி விட்டால் மறுபடியு முன்போற் கொடுக்கவேண்டும். இவ்விதம் செய்தால் விஷபேதி கட்டுப்பட்டு கைகால் குளிர்ந்திருந்தாலும் தேகத்திலுஷ்ணமுண்டாகி சுகுணமாகும்.

விண்ணப்பம்.

இந்த வியாதியின் காரணம், இதைத் தடுக்கும் வகை, இதன் சிகிச்சை முதலியவைகளெல்லாம் நமது விஷபேதி நிவாரண போதினியில் வகை விபரமாகச் சொல்லப்பட்டிருப்பதால் அவசியமானவர்கள் அதனைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

விக்கல்ரோகச் சிகிச்சை.

இந்த ரோகமானது ஆகாரம் சாப்பிட்டவுடனே கண்டால் வாந்தி செய்விப்பதாற் குணமுண்டாகும். இந்த வியாதி கண்டிருக்கும்போது கைகாலைக் கட்டுவதினாலும், கோபித்துக் கொள்வதினாலும், பயமுறுத்துவதினாலும், திடீரெனச் சந்தோஷத்தை யுண்டாக்குவதனாலும், வியாதியஸ்தனுக்குத் தெரியாமல் சடுதியில் முகத்திற் சலத்தை யடிப்பதினாலும், தும்மலை யுண்டாக்குவதினாலும், தேக முயற்சி செய்வதினாலும், மூச்சை யடக்கிப் பிடிப்பதினாலும் சாந்தமாகும்.

வேறு.

கருஞ்சீரகம் விராகனெடை-கஉ, இதனை நுண்மையாகப் பொடித்து ஒரு விராகனெடை வெண்ணெயிற் குழைத்துச் சாப்பிடுவதினால் விக்கல்ரோகம் சாந்தமாகும்.

வேறு.

உழுந்தையிடித்துச் சுங்கானில், அல்லது, உக்காவில் வைத்துப் புகை பிடிப்பதினாலும் விக்கல்ரோகங் குணமாகும்.

வேறு.

கொண்டைக்கடலை யுமி, துவரையுமி ஆகியவைகளிலொன்றைச் சுங்கானில், அல்லது, உக்காவில்வைத்து புகைப் பிடிப்பதினால் விக்கல்ரோகங் குணமாகும்.

வேறு.

தேங்காய் நாரையெரித்த சாம்பல் விராகனெடை-ரு, இதனை ஒரு இளநீரில் போட்டுக் கொஞ்சநேரந் தாமதித்தால் எல்லாங் கீழ்ப்படிந்து போகும். அந்தச் சமயத்தில் மேற்றெளிவை மாத்திரமிறுத்துப் பானஞ் செய்விக்க, விக்கல்ரோகங் குணமாகும்.

வேறு.

மயிலிறகைச் சுட்ட சாம்பல் குன்றிமணியெடை-அ, தேன் விராகனெடை-௬. இவ்விரண்டையுமிஸ்ரமித்துச் சாப்பிடவேண்டும். இவ்விதஞ் செய்தால் விக்கல்ரோகங் குணமாகும்.

வேறு.

கருவேலின் முள் விராகனெடை-ந, இது உலர்ந்ததாயினுஞ் சரியே, ஈரமாயினுஞ் சரியே. இதனைச் சிதைத்துப் பனிரண்டுபலம் ஜலத்திற்போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டினபின்பு வடிகட்டி இரண்டு விராகனெடை தேனைச் சேர்த்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் சில தடவைகள் செய்தால் விக்கல்ரோகந் தீர்ந்துபோகும். தேனில்லாமலும் உபயோகிக்கலாம்.

வேறு.

நாட்பட்ட நாற்கயிற்றைச் சுங்கானில், அல்லது, உக்காவில வைத்துப் புகைப்பிடிக்க விக்கல்ரோகந் தீரும்.

வேறு.

பழமையான கோணியை யெரித்த சாம்பல் விராகனெடை-௫, இதனை எட்டுப்பலம் ஜலத்திற்கரைத்து தெளியவைத்துத் தெளிவை யிறுத்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் சில தடவைகள் செய்யின் விக்கல்ரோகம் சாந்தமாகும்.

வேறு.

பெருங்காயம் விராகனெடை-௨, மேற்றோல் நீக்கின வாதுமைப் பருப்பு மூன்று, இவ்விரண்டையுஞ் சேர்த்தரைத்துக் கொஞ்சம் ஜலத்திற் கரைத்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் சில தடவைகள் செய்யின் வாயு சம்பந்தமான விக்கல்ரோகந் தீரும்.

வேறு.

நற்சீரகம் விராகனெடை-௧௨, திராக்ஷக்காடி, அல்லது, நாட்டுக் காடி பலம்-௬, இவ்விரண்டையுஞ் சேர்த்துக் காய்ச்சி மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின் னிறக்கி வடிகட்டிப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதஞ் செய்து வருவதால் தாகம், விக்கல் ஆகியவைகள் தீரும்.

வேறு.

உலர்ந்த மாவிலையைத் தூளாக்கிச் சுங்கானில், அல்லது, உக்காவில் வைத்துப் புகைப்பிடித்துவர, விக்கல்ரோகம் சாந்தமாகும்.

வேறு.

உலர்ந்த பொதினா இலை விராகனெடை-௧, கற்கண்டு விராகனெடை-௧, இவ்விரண்டையு மிஸ்ரமித்து வாயிற்போட்டு மென்று அதன் சாரத்தை விழுங்கிவர, விக்கல்ரோகம் தீரும்.

வேறு.

திராக்ஷக்காடி, அல்லது, நாட்டுக்காடி பலம்-௫, தேன் பலம்-௫, இரண்டையுஞ் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி சீஷாவில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்த ஷர்பத்தில் ஒருபல மெடுத்து இரண்டுபலம் ஜலத்திற்கரைத்து பானஞ் செய்விக்கவேண்டும். இப்படிச் செய்வதால் வயிற்றிலுள்ள அசுத்தசத்து வெளிப்பட்டு, அல்லது, ஜீரணமாகிவிக்கல்நின்றுபோகும்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

### ௨-ம் பிரிவு.

### குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo - III - பக்கம்-148)

### சிற்றாமணக் கெண்ணெய்.

குழந்தை பிறந்தவுடன் பதினைந்து, அல்லது, இருபதுதுளி மேற்படி யெண்ணெயைப் புகட்டுவதால் வயிற்றிலுள்ள துர்மலங்களெல்லா நீங்கி வயிறுனது சுத்தமாகிவிடும். இந்தச் சமயத்தில் பிறந்தகுழந்தைக்கு மற்ற மருந்துகளை உபயோகிப்பதைப் பார்க்கிலும் இந்த எண்ணெயே விசேஷமானது.

குழந்தையின் வயதிற்குத் தக்கபடி எண்ணெயினளவை அதிகப்படுத்தி உபயோகிக்கவேண்டியது. எப்படியெனில், ஒரு வயதுக் குழந்தைக்கு ஒரு விராகனெடையும், இரண்டுவயதுக் குழந்தைக்கு இரண்டு விராகனெடையுமாக உபயோகிக்க வேண்டியது. இவ்விதம் மேற்சொல்லி யிருக்கிறபடி இதன் பூரண அளவுவரையில் உபயோகிக்கலாம்.

குழந்தையானது ஏதேனும் இதர வஸ்துவை விழுங்கிவிட்டால், அதனை வெளிப்படுத்துவதற்கு இந்த எண்ணெய்ப் பேதியே விசேஷமானது.

பல்முளைக்குங் காலங்களில் மலபந்த முண்டானால் அதை நீக்குவதற்காக இதனை யுபயோகிப்பதே உத்தமமான வழியாம்.

கெற்ப ஸ்திரீகளுக்கு வேறுவகைப் பேதிகளைக் கொடுப்பதால் கருப்பத்திற்கு அபாயம் நேரிடலாம். ஆகையால், அந்தச் சமயங்களில் இந்த எண்ணெயைப் பேதிக்கு உபயோகிப்பதே உத்தமம். கெற்ப ஸ்திரீகளுக்கு மலபந்தமானல் ஆறு விராகனெடை வரையில் இந்த எண்ணெயைப் பேதிக்குக் கொடுக்கலாமென ஆங்கிலேய வைத்தியர்கள் அநுமதி கொடுக்கின்றார்கள். ஆனால் ஆயுர்வேதிகள் இதுவுங் கொடுக்க லாகாதென பணிக்கின்றார்கள்.

வயிற்றுக்கடுப்பு, சீதபேதி முதலியவைகள் ஆரம்பமாயிருக்கும்போது எட்டு விராகனெடை சிற்றுமணக்கெண்ணெயும் ஏழு, அல்லது, எட்டு குன்றிமணியெடை கருவேலம்பிசின் தூளையும், எட்டு, அல்லது, பதினாறு விராகனெடை சோம்பு திராவகத்தையும் மிஸ்ரமித்துப் பானஞ் செய்விப்பதினால் வயிற்றிலுள்ள பழைய மலக்கட்டுகள் முதலியவைகளிருந்தால் வெளிப்பட்டு அந்தரோகம் சாந்தமாக ஏதுவாகும். இந்த ரோகத்தில் பழைய மலக்கட்டு இருக்கிறதா வென்பதை நிச்சயமாகத் தெரிந்து கொண்ட பின்புதான் மேற்கண்ட விதமாக உபயோகிக்க வேண்டியது.

வயிற்றில் கெட்டுப்போன ஆகாரம் தங்கியிருப்பதினால், அல்லது, வயிறு நிறைந்திருப்பதினால் பேதிகண்ட ஆரம்பத்தில் மேற்படி யெண்ணெயை வயதிற்குத் தகுந்த அளவாகக் கொடுப்பதினால் அதிகப் பிரயோசனமுண்டாம்.

எந்தக் காரணத்தினாலேனும் மலபந்தமுண்டானால் அதை நீக்குவதற்காகப் பால் முதலியவைகளுடன் மேற்படி யெண்ணெயைக் கலந்து கொடுக்கவேண்டியது ஆவசியகம்.

வயிற்று முறுக்குநோய்கண்டு வேறுமருந்துகளினால் தீராமலிருந்தால் கீழ்க்காணு முறைப்படி உபயோகித்தால் அதிக குணமுண்டாகும் அது இது:—

சிற்றுமணக் கெண்ணெய் விராகனெடை—அ.
அல்லது ௧௦,
கர்ப்பூரத்தைலம் விராகனெடை - உ.
அல்லது ௩.

இவ்விரண்டையு மிஸ்ரமித்து ஒரே தடவையிற் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் தினம் ஒவ்வொருதடவையாக நாலைந்து நாள், அல்லது, இரண்டு நாளைக் கொருதடவையாக நாலைந்து தடவைகள் உபயோகித்தால் மேற்கண்ட வயிற்று முறுக்குநோய் தீர்ந்துபோகும். இது டாக்டர் டிரீவிடர் துரையவர்கள் அனுபவமுறை.

வேறு.

சிற்றுமணக்கெண்ணெய் விராகனெடை-சு.
கோழி முட்டை மஞ்சட்கரு ௧.
பெப்ரமெண்டு ஜலம் விராகனெடை ல.

இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்துக் கொடுத்தால் செம்மையாகப் பேதியாகும், வயிற்றுக்கடுப்பு, ஆசன எரிச்சல், வெகுட்டல், குமட்டல் முதலியவைகள்- ஒன்றுமிராது. இது சுகுமார தேகிகளுக்கு மிகவுமேற்றது. இன்னும் பேதிக்குச் சாப்பிட வழக்கமில்லாதவர்கள் சாப்பிட்டால் எவ்வித கஷ்டமு மின்றிச் செவ்வையாகப் பேதியாகும். இது டாக்டர் ஸீவரிதுரையவர்கள் பேதிமுறை.

மலத்தை வெளிப்படுத்த வர்த்திப் பிரயோகஞ் செய்வதிலும் இந்த எண்ணெய் அதிகம் உபயோகப்படும். நரம்பு வாதரோகத்தில் சிறுகுடலில் தாபனங்கண்டிருக்கும்போது கீழ்க்காணும் வர்த்திப்பிரயோகஞ் செய்யும்படியாக டாக்டர் இன்ஸ்டிதுரையவர்கள் அனுபவமாய்ச் சொல்லியிருக்கின்றார். அம்முறை யிது:

சிற்றுமணக்கெண்ணெய் விராகனெடை-ச
கர்ப்பூரத் தைலம் விராகனெடை ௭
வடிகட்டின அரிசிக்கஞ்சி பலம் ௧௫

இவையெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்து வர்த்திசெய்ய வேண்டியது. இவ்விதம் வர்த்திசெய்வதால் தாராளமாய் மலம் வெளிப்படுவதுடன் சிறுகுடலிலுள்ள தாபனமுந் தீரும்.

யாருக்கேனும் சுரம் அதிகமாய்க்கண்டு வயிறுப்பிக் கடினமாயிருந்து மலபந்தப்பட்டு, மலம் வெளிப்படாவிட்டால் ஏதேனும் அபாயமுண்டாமெனத் தோற்றுஞ் சமயத்தில் வேறெந்தவகை பேதிமருந்துகளையும் உபயோகிப்பது உத்தமமாகாது. ஆனால் பதினாறு விராகனெடை சிற்றுமணக்கெண்ணெயை ஆறுபலம்பசுவின்பாலுடன் கலந்து காய்ச்சிப் பானஞ் செய்விப்பதால் செம்மையாகப் பேதியாகி விடும். இவ்விதம்செய்து வாந்திகண்டால் மேற்சொல்லி யிருக்கிறபடி வர்த்திசெய்ய வேண்டியது.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி.

௩- ம் பிரிவு.

## ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-148.)

1. ஜனனமான ஒருநாழிகைக்கும் பிறகு வயிற்றுநோய் கண்டால் பிரசவ ஸ்திரீயின் வயிற்றின்மீது

மருத்துவப்பெண்ணனவள் தன் கையால் மெதுவாய்த் தடவிவருவதினலும், எப்பிகாக் அல்லது, எருகட் ஆவ்ராய் என்னும் இங்கிலீஷ் மருந்தை உபயோகிப்படுத்தினலும் அதிக குணமுண்டாகும்.

2. பிரசவ ஸ்திரீயின் தலைமயிரை அவள் வாய்க்குட்போட்டுத் தொண்டை வரையிற் செலுத்தினல் வெ்குட்டலுண்டாகி கருப்பையின்மீது பலம்விழுந்து அந்த நோய் சாந்தமாகும்.

3. பூஜ்பத்திரி, பாம்பின்சட்டை இரண்டையும் மர்மஸ்தானத்திற்குள் செலுத்துவதினல் குணமுண்டாகும்.

4. பேய்ச்சுரைவிதை, பாம்பின்சட்டை, கடுகு ஆகியவைகளைப் புகைப்போடுவதினலும் குணமுண்டாகும்.

குறிப்பு.

குழந்தையின் சிரசு உதயமானபின்பு தோள்கள் வெளியாக ஆரம்பமாகும். அதுமுதல் நஞ்சுக்கொடி வெளிப்படாதவரையில் பிரசவஸ்திரீயின் வயிற்றைக் கையால் மெதுவாயழுத்திக் கொண்டிருக்க வேண்டியது.

நாம் பிரசவசம்பந்தமான சில முக்கியவிஷயங்களை இங்கெழுதிவந்ததெல்லாம் நமது நாட்டுமருத்துவப்பெண்களுக்கும், நமது பாட்டிமார்களுக்கும் இதிற்கொஞ்சம் ஞானமுண்டாக வேண்டுமென்பதே நமது கருத்து. ஆங்கிலேய ஸ்திரீகள் இத்தொழிலைக் கற்றுக்கொள்ளப் பிரியமுள்ளவர்களாய் அதற்குத் தகுந்த கல்வியும், தைரியமு முடையவர்களா யிருக்கின்றார்கள். இவர்களைப்போல நமது இந்து சகோதரிகளும் பிரிய முள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில், நமது இந்து சகோதரிகளுக்கு நேரிடும் அகால அபாயங்கள் தினேதினே குறைந்து க்ஷேமத்திற்கே துவாகும். இந்துஸ்திரீகளில் ஆயிரம் இரண்டாயிரத்திற்கொருவராகிலும் கிரமப்படி இத்தொழிலில் பழகினவர்களைக் காணலாம். மகமதியஸ்திரீகளிலோ அவ்வித ஸ்திரீகள் குதிரைக்கொம்புதான், ஆனல் இப்போது அலீகரில் பிரசவத்தொழிலை மகம்மதிய ஸ்திரீகளுக்குக் கிரமப்படி கற்பிக்கும் ஒரு வைத்தியசாலை ஏற்பட்டிருப்பதைக் கேள்வியுற்று அடங்காமகிழ்ச்சி கொண்டோம். இவ்விதமே மற்றெல்லோரும் செய்து வருவார்களாயின் நாளுக்குநாள் இத்தொழிலிற் றேர்ச்சியுண்டாகித் தெரியாமையினல் நமது சகோதரிகளையும் வீண் கஷ்டங்களெல்லாம் பறந்துபோமென்பது திண்ணம். இந்தப் பிரசவவிஷயம் அதிக விரிவானதாகையாலும் இந்த விஷயங்களைத் தெரிந்துகொள்ள அதிகப் பழக்கம் வேண்டியதாகையாலும் அவ்வித சமயங்களில் கிரமப்படி பழக்கப்பட்டவர்களும் அனுபவசாலிகளுமான மருத்துவப் பெண்களைக்கொண்டு பரிகாரந்தேடிக்கொள்வது ஆவசியகமாகையாலும் இந்த விஷயத்தை இம் மட்டோடு நிறுத்தி அந்தச் சமயங்களில் உபயோகமாம் சில இந்து யூநாநி முறைகளை யிங்கெழுதிமுடிப்பாம்.

1 நாயுருவிவேர். இதனை வெண்ணெய்போலரைத்து நாபி, துடை, மர்மஸ்தானம் முதலிய இடங்களில் பூசுவதினல் குழந்தையானது சீக்கிரம் ஜெனனமாகும்.

2. நாயுருவியானது கருப்பத்தை வெளிப்படுத்துவதில் அதிக பலமானது. பிள்ளை பிறக்காமல் அதிக கஷ்டமும், வேதனையுமுண்டாகி யிருந்தால் பின்காணு முறைப்படி செய்யலாம்.

நாயுருவியின்பச்சைவேர் நாலங்குலம் உள்ளதாகத் துண்டித்து அதில் மண், கரடு, முரடு முதலியவைகளில்லாதபடி சமமாகவும், மிருதுவாகவு மிருக்கும்படியாகச் சீவி அதன்மீது கொஞ்சம் விளக்கெண்ணெயைத்தடவி மர்மஸ்தானத்தில் செலுத்தி வைப்பதினல் குழந்தை சீக்கிரம் ஜெனனமாகும். இது கருப்பையையும் இழுத்துக் கொண்டுவருஞ் சக்தியுடையதாகையால் சாதாரணமான சமயங்களில் இதனை உபயோகிக்கலாகாது. கஷ்டமான காலங்களில்மாத்திரந்தான் உபயோகிக்க வேண்டியது.

3. நவச்சாரம், பொதின ஆகிய இரண்டும் சமனெடையாகச்சேர்த்து மெழுகுபோலரைத்துத்திரியாகச்செய்து மர்மஸ்தானத்தில் வைத்துவைப்பதினலேயும் குழந்தை சீக்கிரம் ஜெனனமாக ஏதுவாகும்.

4. யாளிவிதை, எள், தேன் ஆகியவைகளை வெண்ணெய்போலரைத்துத் துடைகளிலும் புட்டங்களிலும் பற்றுகப் பூசிவைப்பதினலும் குழந்தை சீக்கிரஞ் ஜெனனமாக ஏதுவாகும்.

5. பாம்பின் சட்டையை நெருப்பிலிட்டுப் புகைப்பதனாலும் குழந்தை சீக்கிரம் ஜெனனமாகும்.

6. குதிரைக் குளம்பைத் தூள்செய்து கரிநெருப்பிற்போட்டுப் புகைப்பதினாலும் குழந்தை சீக்கிரம் ஜெனனமாக ஏதுவாகும்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி.

ச-ம் பிரிவு

### பாலவைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 150.)

குழந்தைகளுக்கு உபயோகமாகும் சில யூநாநி முறைகளையும் இங்கெழுதுவோம். இதுவரையில் பற்பலவித ஆயுர்வேத முறைகளை யெழுதி வந்திருக்கின்றோம். அவற்றுள் பலபாகங்கள் நமது பரம்பரையிலுள்ள மூதாதைகளுக்கும், நமக்கும் அனுபவமானவைகள், இன்னும் சில முறைகள் நமது அரிய நண்பர்களுக்குச் சித்தியான அனுபவமுறைகள். ஆகையால் அவ்வகைமுறைகள் இன்னும் அநேக மிருப்பினும் அம்முறைகளை நிறுத்தி மேற்கண்டபடி சில யூநாநி முறைகளையும் இங்கெழுதுவாம்.

#### சிறு திரிபலாதி.

சூரத்துக் கடுக்காய்த்தோல், மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், சீமை நெல்லிமுள்ளி, கருப்புக் கடுக்காய், இவை வகை-க-க்குப் பலம்-௨,வாதுமை யெண்ணெய், அல்லது, பசுவினெய் செல்லத்தக்க அளவு, தேன் அல்லது, சர்க்கரை பலம்-ரு.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளை இடித்து வஸ்திரகாயஞ் செய்து அதில் வாதுமை நெய்யை, அல்லது, பசுவினெய்யைத் தெளித்துத் தெளித்துப் பிசைந்து நெய்ப்பசை யுண்டாக்கி வைத்துக் கொள்ளவும். தேனைக்காய்ச்சி, அல்லது, சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் முன் சித்தப்படுத்தி வைத்திருக்குஞ் சூரணத்தைச் சிறுகச் சிறுகப் போட்டு மரமத்தாற்கடைந்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—இரண்டு வயதிற்குட் பட்டவர்களுக்கு விராகனெடை-௳, ௨. அதற்கு மேற்பட்டவர்களுக்கு விராகனெடை-க. உ. இதன் பிரமாணத்தை வயதிற்குத் தக்கபடியும் சமயோசிதம் போலவும் உபயோகித்துக் கொள்ளவேண்டியது. ஆனால், அனுபவத்தில் தேக சுபாவத்திற்கு எந்தப் பிரமாணம் உபயோகிக்கவேண்டுமென்பது தானே தெரிந்துபோகும்.

உபயோகம்:—மூளையைப் பலபடுத்தி நரம்புகளின் தளர்ச்சியையும் துர்ப்பலத்தையும் நீக்கும், இரைப்பையி லெழும்பும் ஆவியைத் தடுக்கும். மறதிரோகம், மூலரோகம் ஆகியவைகளைக் கண்டிக்கும். முகத்தில் அழகையும், மினுமினுப்பையு முண்டாக்கும்.

#### மைசாக்ஷித் திரிபலாதி.

சூரத்துக் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், சீமை நெல்லிமுள்ளி, இவை வகை-க-க்கு விராகனெடை-கூ, சுத்திசெய்த மைசாக்ஷி விராகனெடை-உஎ, தேன், அல்லது, சர்க்கரை பலம்-கசு, வெங்காயத்தாள் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மைசாக்ஷியைக் கல்வத்திலிட்டுவெங்காயத்தாழ்ச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து அரைத்து வெண்ணெய்போ லானபின்பு முன்மூன்று சூரணங்களையும் ஒன்றாகக்கலந்து அதில் வாதுமைநெய்யை, அல்லது, பசுவினெய்யைத் தெளித்து நெய்ப்பசை யுண்டாக்கி மேற்படி கல்வத்திற்போட்டு அரைத்து மிஸ்ரமித்துத் தேனைக்காய்ச்சி, அல்லது, சர்க்கரையைப் பாகுசெய்து முன் சித்தப்படுத்தின மருந்தைச் சிறுகச் சிறுகப் போட்டுக் கடைந்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—இரண்டு வயதிற்குட் பட்டவர்களுக்குக் குன்றிமணி யெடை-அ, க0. அதற்கு மேற்பட்டவர்களுக்கு விராகனெடை-௳, க௳. தேக சுபாவத்திற்கும் வயதிற்குத் தகுந்தபடி அனுபவத்தால் இதனளவை நிதானித்துக் கொள்ளவேண்டும்,

உபயோகம்:—மலத்தை யிளக்கும், மூலரோகங்களைக் கண்டிக்கும், மூலச்சூட்டினா லுண்டான மலபந்தம், மலச்சிக்கல் ஆகியவைகளை நீக்கி மலத்தைக் கிரமப்படுத்தும். கெற்பவாயு முதலிய நோய்களையுங் கண்டிக்கும்.

#### மல்லியாதித் திரிபலாதி.

கொத்துமல்லி விதைச்சூரணம் விராகனெடை-கஅ, மஞ்சட் கடுக்காய்த்தோல், சூரத்துக் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், கறுப்புக் கடுக்காய் இவ

ற்றின் தனித்தனிச் சூரணம் வகை-க-க்கு விராகனெடை-கடு, உஸ்துருத்தூஸ் சூரணம் விராகனெடை-சஅ, ரோஜாப்பூச் சூரணம் விராகனெடை - ரூ, வாதுமைநெய், அல்லது, பசுவின்நெய் விராகனெடை - சு, தேன், அல்லது, சர்க்கரை பலம்-உஎ.

செய்முறை:—சூரணங்களையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து வாதுமைநெய்யை, அல்லது, பசுவின்நெய்யைத் தெளித்து நெய்ப்பசை யுண்டாக்கி வைத்துக் கொள்ளவேண்டும். தேனைக் காய்ச்சி, அல்லது, சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் முன் சித்தப்படுத்தி வைத்திருப்பதைச் சிறுகச் சிறுகத் தூவிச் சந்தனமத்தால், அல்லது, மரமத்தாற் கடைந்து ஆறினபின்பு பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:— இரண்டு வயதிற்குட்பட்டவர்களுக்கு விராகனெடை-வ. அதற்கு மேற்பட்டவர்களுக்கு விராகனெடை-அ, முதல் இரண்டு வரையில் வயதிற்குத் தக்கபடியும் தேக சுபாவத்திற்குத் தகுந்தபடியும் அளவை யேற்படுத்தி உபயோகிக்க வேண்டியது.

உபயோகம்:—மூளையைப் பலப்படுத்தும், ஞாபகசக்தியை விருத்தியாக்கும்; தலைநோய், ஒருத்தலைநோய் ஆகியவைகளைக் கண்டிக்கும். கண்டத்திற்கு மேற்பட்ட எல்லா வியாதிகளுக்கு முபயோகமாம்.

(இன்னும் வரும்.)

---

## சுகாதார போதினி·

### ௫ - ம் பிரிவு

---

### மூலரோகம்

முன்தொடர்ச்சி (vol- III பக்கம். 151)

#### மூலத்திற்குச் சூரணம்.

பாலில் வேகவைத்து வெயிலிலுலர்த்தி இளவறுப்பாய்வறுத்துச் சூரணித்த சிவதைவேர்ச் சூரணம் விராகனெடை-கூ, பாலில் வேகவைத்து வெயிலிலுலர்த்தி இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்த வெள்ளைச் சாட்டரணைவேர்ச் சூரணம் விராகனெடை- ரூ, குச்சி, காம்பு முதலியவைகளை ஆய்ந்து சுத்திசெய்து இளவறுப்பாய் வறுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்த நில ஆவாரைச் சூரணம் விராகனெடை-சஅ, நற்சீரகம், வால்மிளகு, வாய்விளங்கம் இவற்றைத் தனித்தனி இளவறுப்பாக வறுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் தனித்தனி வகை-க-க்கு விராகனெடை-ரூ, பனங்கற்கண்டு விராகனெடை-கஅ.

செய்முறை:—சூரணங்களை யெல்லாம் ஒன்றாக மிஸ்ரமித்துக் கற்கண்டையுஞ்சேர்த்து இரண்டுமணி நேரமரைத்துப் பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க, உ.

உபயோகம்:—மூலரோகங்கள், மூலவாயு, மூலச்சூடு, மூலச் சூட்டினாலுண்டாகும் மலபந்தம் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—வெந்நீர், மீன், கருவாடு, நல்லெண்ணெய், வாயுபதார்த்தங்கள் ஆகியவைகளாகா.

#### வேறு.

ஆகாசத் தாமரையிலைச்சாறு ஆழாக்கு - அ, சிற்றாமணக்கெண்ணெய் ஆழாக்கு-உ.

செய்முறை:—மேற்படி யிரண்டு திரவத்தையுஞ் சேர்த்துக் காய்ச்சிக் கடுகுதிரள் பதத்திலிறக்கி வடிகட்டி திப்பிநீக்கிச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-க, கஅ. மத்தியானம். அந்தி, படுக்கைக்குப் போகுஞ்சமயம் ஆகிய மூன்றுநேரங்களிலும் சாப்பிடவேண்டியது. இராக்கங்லங்களில் மேற்படி யிலையையும், வெங்காயத்தையும் சேர்த்தரைத்து ஆசனத்தில்வைத்துக் கட்டிவரவும் வேண்டும்,

உபயோகம்:-மூலத்தினால் மலஜலங் கட்டிப்போதல், மலமந்தம், நீரடைப்பு ஆகியவைகள் தீர்ந்து மூலமுளைகளும் கரிந்து வெளிப்பட்டுப்போம்.

#### குறிப்பு.

ஆகாசத் தாமரையில் இலகுவாகச் சாறுவராது. குளகுளப் புள்ளதாகவும், கரகரப் புள்ளதாகவுமிருக்கும். ஆகையால் பின்காணும்விதம் சாறெடுத்துக்கொள்ள வேண்டும். ஆகாசத் தாமரையிலையைக்கொண்டுவந்து வேர், பழுத்த இலை, அழுகின இலை முதலியவைகளை நீக்கி வெறும் இலைகளைமாத்திர மெடுத்துப் பிட்டவிப்பதுபோலவித்துச் சாறுபிழிந்து கொள்வது உத்தமமும், இலகுவுமான வழியாம்.

(இன்னும் வரும்.)

---

சுகாதார போதினி.

சு - ம் பிரிவு.

இரசவாதம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 152)

வெட்டையை நைப்பாக்கு முறை.

முப்பட்டைப் பிரண்டையைச் சாறு பிழிந்து வெட்டையாயிருக்கிற லோகத்தை உருக்கிச் சாய்க்க வேண்டும். குளிர ஆறினபின்பு மறுபடியு மெடுத்து ருக்கி முன்போற் சாய்க்கவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி பதினொருதடவைகள் உருக்கிச் சாய்க்கின் வெட்டைநீங்கி நைப்பாகிவிடும். பதினொரு தடவையில் நைப்பாகாவிட்டால் நைப்பாகிறவரையில் உருக்கிச்சாய்ப்பதுதான் உத்தமமான வழி. ஒவ்வொருதடவையும் சாறுனது புதிது புதிதாக இருக்கவேண்டும். மேலும் அந்தச் சாறுனது உருக்கிவிடுகிற லோகமானது ஆழ்ந்துகிடக்கும் படியாகவும் அந்தச்சாறு அவ்வளவு மிருக்கவேண்டும்.

குறிப்பு

மேற்படி சாற்றில் ஜெர்மன் சில்வரை மேற்கண்டபடி மடக்கி மடக்கி இருபது,அல்லது,இருபத்தொருதடவை உருக்கிச்சாய்க்கின் வங்கம்போல நைப்பாகிவிடும். இவ்விதம் நைப்பாக்கிச் சமயோசிதம்போல அதனுடன் இடைக்கிடை, அல்லது,இரண்டிற்கொன்று வெள்ளியைச் சேர்த்துவிற்று ஜீவனஞ் செய்வதுமுண்டு.

வேறு.

சிற்றுமணக்கெண்ணெய் ஒருபங்கு, முள்ளங்கிக்கிழங்குச்சாறு ஒருபங்கு, இவ்விரண்டையுஞ் சேர்த்து ஒரு பாத்திரத்தில் விட்டு வெட்டையாயிருக்கிற லோகத்தைச் சிறுதுண்டுகளாகத் துண்டித்து அதிற் போட்டு நான்குமணிநேரங் காய்ச்சியெடுத்து உருக்கவும். நைப்பாகிவிடும். அப்படி நைப்பாகாவிட்டால் மறுபடியு முன்போற் காய்ச்சவேண்டும். இப்படிச்செய்வதைப்பார்க்கிலும் மேற்படி உலோகத்தை உருக்கிவெட்டைவாங்கி நைப்பாகிறவரையில் சாய்த்துக்கொள்வது சுலபமான மார்க்கம். ஆனால் அடிக்கடி யுருக்கப் பால்மாறுகிறவர்கள் மேற்கண்ட விதமாகக் காய்ச்சியெடுத்துக்கொள்ள வேண்டியது. மேற்கண்ட இருவகைகளிலும் தத்தமக்கனுகூலமான முறைப்படி செயதுகொள்ளலாம். இன்னும் மேற்படி லோகத்தை பழுக்கக்காய்ச்சி மேற்படி திரவத்தில் மடக்கி மடக்கியும் தோய்த்துங் கொள்ளலாம். இந்த விஷயங்களையெல்லாம் அவரவர்கள் சக்திக்குத் தகுந்தபடியும் சமயோசிதம்போலவும் செய்துகொள்ள வேண்டியது. சிறிய விஷயங்களெல்லாவற்றையும் தனித்தனி இங்கெழுதித்தீர்ப்பது அசாத்தியமான காரியம். ஆகையால் புத்திமான்கள் சமயோசிதம் போலவும் அந்தந்த லோகமிருக்குந் தன்மையைப்போலவும் யூகித்துத் தக்கவாறு செய்துகொள்ள வேண்டியது தான் உத்தமம்.

(இன்னும் வரும்)

பத்திரிகை வரவு

தீராவிட தீபம் என்னும் ஓர் புதிய தமிழ்ப் பத்திரிகை வரப்பெற்றோம். மேற்கண்ட பத்திரிகையானது இனிய செந்தமிழால் பல அரிய விஷயங்கள் தமிழில் மிகவும் வல்லமை வாய்ந்த சில அறிவுடையோரால் எழுதப்பட்டு பார்ப்பவர்கள் மனதை அப்பொழுதே கவரத்தக்க சிறப்பு வாய்ந்ததாயிருக்கின்றது. இதிலடங்கியிருக்கும் விஷயங்களோ எவரும் எப்பொழுதுங் கொண்டாடற் பாலன. வர்த்தமானங்கட்கோ அளவில்லை. இன்னும் இது தன்னைப் பார்ப்பவர்கட்குப் பக்குவமாயறிவையூட்டி அவர்களை நல்வழியிற் சேர்க்குமென்பது திண்ணம். அறிவு விருத்தி, தேசநன்மை, உயர்ந்த வொழுக்க முதலியவைகளை விரும்பும் ஒவ்வொருவரும் கைக்கொள்ளத் தக்கது. இவ்வித அருமை வாய்ந்த பத்திரிகைகள் வெளிவருமானால் உலகம் மிகவும் நலத்தை யடையுமென்பதில் என்ன சந்தேகமிருக்கின்றது. இத்தகைய நற்றமிழ்ப் பத்திரிகையை யெமக்கனுப்பிவைத்த கனம் பத்திராதிபரவர்கட்கு மிகவும் நன்றிசெலுத்தக் கடைப்பட்டிருக்கின்றோம். இதையெப்பொழுது மனுப்பி மகிழ்ச்சியை யுண்டாக்கும் பொருட்டாகவும் விரும்புகின்றனம்.

ப - ர்.

புத்தகம்-ரு. 1907௵ டிசம்பர்௴ 1௳ இலக்கம்-௨௧.

சுகாதார போதினி.

க-ப், பிரிவு.

வைத்தியக் குறிப்புகள்.

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம் 155.)

விக்கல் ரோகச் சிகிச்சை.

தாமரைக் கொட்டைப் பருப்பு விராகனெடை-௨. இதனை அம்மியில் வைத்துப் பொடித்து ஜலம்வார்த்து வெண்ணெய்போ லரைத்து அரை ஆழாக்கு ஜலத்திற் கரைத்து வடிகட்டிப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் தினம் க-க்கு ௨-அல்லது, ௩-தடவைகள் செய்துவர, விக்கல் ரோகங்கள் தீரும்.

வேறு.

காசினிவிதை, உளுந்துமா, உலர்ந்த ஆட்டுத்தோல், அல்லது, மாட்டுத்தோல் தூள் இவை வகை-க-க்கு சமனெடை. இவற்றை ஒன்றாகக் கலந்துக்கொஞ்சம் சுங்கானில் வைத்து புகை பிடிக்கவேண்டும். இவ்விதம் தினம்-௨-௩-தினங்கள் செய்துவர, விக்கல் ரோகந் தீரும்,

குந்திரிக்க பில்லை மாத்திரை.

குந்திரிக்கத்தூள் விராகனெடை-௨. பெருலவங்கப்பட்டை, உலர்த்தின பொதினா, கோரைக்கிழங்கு, ஏலரிசி, சோம்பு; இவற்றைத் தனித்தனி இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் வகை - க - க்கு விராகனெடை-க.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்து கல்வத்திலிட்டு குளிர்ந்த ஜலத்தைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு ஜாமநேர மரைத்து அரை விராகனெடையுள்ள பில்லைகளாகச் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவிற் வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-௨.

அனுபானம்:—சுக்குக் கஷாயம், சோம்புக்கஷாயம், சோம்புத் திராவகம், கொத்துமல்லி விதைக் கஷாயம், கொத்தமல்லிக் கீரைச்சாறு முதலியவைகளாம்.

உபயோகம்:—வாயு சம்பந்தமான விக்கல் ரோகம், ஏப்பம், வாயு சம்பந்தமான சீதபேதி, வயிற்றுப்பிசம், வயிற்றுப் பொருமல் முதலியவைகள் தீரும்.

வேறு.

தேங்காய் விராகனெடை-௨, சீனிசர்க்கரை விராகனெடை-௨, இரண்டையும் அம்மியில் வைத்து வெண்ணெய்போ லரைத்துச் சாப்பிட வேண்டும். இவ்விதம் தினம் - ௨ - ௩ - தடவைகள் செய்து வந்தால், சிறு பிள்ளைகளுக்குண்டான விக்கல் ரோகந் தீரும்.

வேறு.

பால்குடிக்கும் பிள்ளைகளுக்கு விக்கலுண்டானால், அந்தப் பாலூட்டுந் தாயின் வஸ்திரத்தில் ஒருசிறு துண்டைக் கிழித்து ஜலத்தில் நனைத்து குழந்தையின் நெற்றியிற் போட்டுவைக்க உடனே அந்த விக்கல் நின்று போகுமென அனுபவசாலிகளாற் சொல்லப்பட் டிருக்கிறது.

வேறு.

பொன்னாங் கொட்டையை, அல்லது, பூலந்திக் கொட்டையைக் கயிற்றிற் கோர்த்துக் குழந்தையின் கழுத்திற்கட்டித் தொங்கவிட்டு வைப்பதினால், விக்கல்ரோகந் தீரும்.

தாகரோகச் சிகிச்சை.

தாகமானது பெரும்பான்மையும் உஷ்ணம் அதிகப்படுவதினாலேயே யுண்டாகிறது. வேறு வியாதிகளிலும் தாகம் அதிகப்படுவது முண்டு. அந்தச் சமயங்களில் தாகத்திற்குக் காரணமா யிருக்கிற வியாதிக்கு சிகிச்சை செய்து அந்த ரோகத்தைச் சாந்தப்படுத்தினால், தாகம் தானே போய்விடும். ஆயினும் தாகரோகங்களில் உபயோகப்படும் கைவல்யமான சிலமுறைகளையும் இங்கெழுதுவாம்.

சிகிச்சை.

பருப்புக்கீரை விதை விராகனெடை-ரு, இதனை அம்மியில்வைத்து ஜலத்தை வார்த்து வெண்ணெய்போ லரைத்து அரை ஆழாக்கு ஜலத்திற் கரைத்து வடிகட்டி, ௨-மணிக் கொருதடவை பானஞ்செய்துவர, அதிதாக ரோகந் தீரும்.

### காடி ஷர்பத்து.

சீமை திராக்ஷக்காடி பலம் - ௧௩, சீனிசர்க்கரை பலம்-௧௩, இரண்டையுஞ் சேர்த்து அடுப்பேற்றி இரண்டொருகொதி வந்தபின்பு வடிகட்டித் திப்பிநீக்கி மறுபடியும் அடுப்பேற்றிக் காய்ச்சிப் பாகுபதத்தி லிறக்கிச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௫-௧௦.

சமனளவு ஜலத்திற்சேர்த்துக் கலக்கிப் பானஞ் செய்யவும். இவ்விதஞ் சமயத்திற்குத் தகுந்தபடி தினம், ௨-௩-தடவைகள் செய்து வந்தால் அதிதாக ரோகம், பித்தமயக்கம், பித்தபேதி; பித்தவாந்தி, உஷ்ணரோகம் ஆகியவைகள் தீரும்.

### தாமரை ஷர்பத்து.

தாமரைப்பூ விதழ் பலம்-௧௬, (உலர்ந்ததாயிருந்தால் பலம்-௮,) இது வெண்தாமரை யாயினும் சரியே அல்லது செந்தாமரை யாயினுஞ் சரியே. இதில் ஒருபடி ஜலத்தை வார்த்து நாலிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டி அதில்-௧௦-பலம் சீனிசர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சி இரண்டொரு கொதிவந்தவுடன் மறுபடியும் வடிகட்டி திப்பிநீக்கி மறுபடியுங் காய்ச்சி பாகுபதத்தி லிறக்கிச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௫, ௧௦, சமனளவு தண்ணீருடன் கலந்து பானஞ் செய்யவும்.

உபயோகம்:—அதிதாகரோகம், வெட்டைச்சூடு, கணச்சூடு, பித்தச்சூடு முதலிய ரோகங்கள் தீரும்.

### பழ ஷர்பத்து.

எலுமிச்சம் பழச்சாறு பலம்-௫௦, சீனிசர்க்கரை பலம்-௫௦. இரண்டையுங் கலந்து காய்ச்சி இரண்டொருகொதி வந்தபின்பு வடிகட்டித் திப்பிநீக்கி மறுபடியும் அடுப்பேற்றிக் காய்ச்சிப் பாகுபதத்திலிறக்கிச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை - ௩, ௭. சமனளவு ஜலத்திற் கலந்து பானஞ் செய்யவேண்டும்.

உபயோகம்:—அதிதாக ரோகம், பித்த சம்பந்த ரோகம், பித்தச்சூடு, வாந்தி முதலியவைகள் தீரும்.

### வேறு.

இசுபகோல் விதை விராகனெடை-௨,௦. இதனை அரை ஆழாக்கு ஜலத்திற்போட்டு ௩-மணிநேரம் ஊறவைத்து அதன் கோழையை யெடுத்து அதில் முன் சொல்லப்பட்டிருக்கிற தாமரைப்பூ ஷர்பத்தை பிரமாணப்படி கலந்து பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் சமயத்திற்குத் தகுந்தபடி தினம்-௧-க்கு-௨-அல்லது, ௩-அல்லது ௪-தடவைகள் செய்துவந்தால் கஷ்டமான அதிதாக ரோகம், உஷ்ண சம்பந்தமான ரோகம், பித்தச்சூடு, இரத்தச்சூடு முதலியவைகள் தீரும்.

### வேறு.

அரசம் பட்டையை எரித்தெடுத்த சாம்பல் பலம்-௨௦, இதனை ஒருபடி ஜலத்திற்போட்டு - ௧௦ - நிமிஷம் வரையில் கலக்கிக் கொண்டிருந்து ஒரு புதிய மண் பாத்திரத்தில் விட்டு அசையாமல் வைத்தால் சாம்பலெல்லாங் கீழே படிந்து தண்ணீர் தெளிந்து போயிருக்கும். அந்தத் தெளிவை யிறுத்து தாகமெடுக்கும் போதெல்லாம் பானஞ் செய்துவர, அதிதாக ரோகம், வாந்தி முதலிய ரோகங்கள் தீரும்.

### வேறு.

தாமரைக் கொட்டைப் பருப்பு விராகனெடை - ௧௦, இதனை மைபோலப் பொடித்து ௦-படி ஜலத்திற் போட்டுக் கலக்கி ஒரிடத்தி லசையாமல் வைத்து தெளிவை யிறுத்து பானஞ் செய்துவர, சிறுபிள்ளைகளுக்குண்டாகும் தாகரோகந் தீரும்.

### வேறு.

தாமரைக் கொட்டையின் மத்தியிலிருக்கும் பருப்பிலே விராகனெடை-௦, இதனை மைபோலரைத்துக் கொஞ்சஞ் சலத்திற் கரைத்து வைத்துக்கொண்டு சிறுகச் சிறுகக் குடிப்பாட்டிவர, சிறுவர்களுக்குண்டாகுந் தாகரோகந் தீரும்.

### வேறு.

வேப்பிலையை மண்ணுடன் பிசைந்து ஒரு உருண்டையாகச் செய்து நெருப்பிற் சிவக்கக் காய்ச்சி ஜலத்திற்போட்டு ஆறினபின்பு அந்த ஜலத்தை வடிகட்டிப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் அடிக்கடி செய்துவர, அதிதாக ரோகம், வாந்தி ஆகியவைகள் தீரும்.

வேறு.

காட்டெருவை எரித்த சாம்பலை வெங்கலப்பாத்திரத்திற் போட்டு அதில் ஜலத்தைவார்த்து வியாதியஸ்தரின் நாபியில் வைக்க தாகம், நாவறட்சி, உஷ்ணதிக்கம் முதலியவைகள் உடனே தீரும்.

வேறு.

நெல்லிமுள்ளிச் சூரணம் பலம்-௧, வெள்ளைக்காய்ச்சுக்கட்டி பலம்-௧. இரண்டையுங் கல்வத்திற்பொடித்து ஜலம்வார்த்து ௧-மணி நேரமரைத்து ஒரு விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும். அவசியமான காலங்களில் ௧-மாத்திரையை வாயிலடக்கிக் கொண்டு அதன் ரசத்தை விழுங்கிவர, தாகரோகம் சாந்தமாகும். வாந்தி, உஷ்ணதிக்கம் ஆகியவைகளுந் தீரும். இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

௨-ம் பிரிவு.

---

குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo - III - பக்கம்-156)

கர்ப்பூரம்.

இதற்கு இங்கிலீஷில் Camphor காம்பர் என்றும், தமிழில் சூடனென்றும், தீபகர்ப்பூரமென்றும், கர்ப்பூரமென்றும் சொல்லப்படுகிறது. இது அநேகஞ் செடிகளிலிருக்கிறது. ஆனால் பிரதானமாய் சீனா, ஜப்பான், கொச்சின் சைனா முதலிய தேசங்களில் விளைகிற ஒருவகைச்செடியில கர்ப்பூரமானது விசேஷமாகக் காணப்படுகிறது. இந்தச் செடிகளின் வேர், அடிமரம், கிளைகள் இவைகளைப் பிளந்து துண்டுகளாக்கி ஆரம்பத்தில் ஜலத்திற் காய்ச்சி எடுத்துப் பிறகு வாலையிலிட்டு எரித்துப் பதங்கித் தெடுத்துக்கொள்ள வேண்டும். இதனைச் சுண்ணாம்புடன் சேர்த்துப் பொடித்து வாலையிலிட்டுப் பதங்கித் தெடுத்துக்கொண்டால் அதிலுள்ள தோஷங்கள் நீங்கி சுத்தியாகிவிடும். சூடனென்பது யாவருக்குந் தெரிந்த சரக்கே. இது வெண்ணிறக் கட்டிகளாய் நொய்யணுக்களுள்ளதாயிருக்கும். அதிக வாசனை யுடையது. இதை அழுத்தினாலழுந்தும். சாராயம்விட்டரைத்தால் தூளாகும். ஜலத்திற்போட்டால் மிதக்கும். ஜலத்திற் கரையாது. ஆல்கோஹல்சாராயத்திலும், ஈத்திரி யென்னுஞ் சரக்கிலும், எண்ணெயிலுங் கரையும். வாயிற்போட்டால், விறுவிறுப்புண்டாய் பிறகு குளிர்ச்சியாயிருக்கும். கொளுத்தினால் பிரகாசசுவாலையோடெரியும். காற்றுப்பட்டாற் பறந்துவிடும். விளாம்பிசின், சர்க்கரை, முட்டையின்கரு இவைகளில் எதையாவது சேர்த்து ஜலத்தில் மிஸ்ரமிக்கும்படி செய்யலாம்.

உபயோகம்:—துர்ப்பல தேகசுரங்கள், தாபனங்கள், பிரசவ உன்மாந்தம், இரைப்பு, மாரடைப்பு, கக்கிருமல், மார்த்துடிப்பு, சூதகச்சூலை, காமஇச்சை, சொர்ப்பனஸ்கலிதம், பிரமை, பிரமேகத்தில் ஆண்குறியிற்காணுகிற வேதனை, சூதகச்சன்னி, சொட்டு மூத்திரம், சீல்வாதம், அழிவிரணம், ஜலதோஷம், மார்ச்சளி, அதிசாரம் இவை முதலிய அநேக ரோகங்களுக்கு கர்ப்பூரத்தை உபயோகிக்கலாம். சுளுக்கு, படுக்கை விரணம், நமைச்சல் இவை முதலியவைகளுக்கு இதை மேலுக் குபயோகிக்கலாம். சூடனை ஆக்ராணித்தால் ஜலதோஷமும் இருமலுங் குணமாகும். வாந்திபேதிக்கு இதனை அடிக்கடி கூட்டிக் கொடுக்கலாம்.

மாத்திரை:—௫-குன்றிமணி முதல் ௨௫-குன்றிமணி வரையில் உபயோகிக்கலாம்.

அவசியமான காலங்களில் இந்த எடையை இரட்டித்துக் கொள்ளலாம்.

௫-குன்றிமணி முதல் ௨௫-க் குன்றிமணி வரையில் அடிக்கடி கொடுத்து வந்தால், நாடியை உற்சாகப்படுத்தி சுறுசுறுப்பை யுண்டாக்கும். தேக வுஷ்ணத்தை அதிகப்படுத்தும், வியர்வையை வெளிப்படுத்தும். இக்காரணம் பற்றியே விஷபேதியில் இது சம்பந்தமான கர்ப்பூர ஜலம் உபயோகிக்கப் படுகிறது.

அது செய்யும் விபரம்:—

கர்ப்பூரம் விராகனெடை ௮
இரட்டித்துவடித்த சாராயம் பலம் ௭வ

செயமுறை:—இரண்டையுஞ் சேர்த்தரைத்து சீஷாவில் வைத்துக்கொள்ளவும்.

ஐந்தைந்து, அல்லது, அவ்வாறு துளிக்கணக்காக ௧0-நிமிஷத்திற் கொருதடவை விஷபேதியில் உபயோகித்துவந்தால், பெரும்பான்மையும் அந்தரோகம் வசப்பட்டுப்போகும். வாந்திபேதி நின்று தேகத்தில் சூடுண்டாகி சுகுணங்களுண்டாகும்.

இன்னும் வரும்.

சுகாதார போதினி.

ரு - ம் பிரிவு.



ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-158.)

7. பாம்புச் சட்டை. இதனை ஒருமண்பாத்திரத்திலிட்டெரித்துச் சாம்பலாக்கிச் சீஷாவில் வைத்துக் கொள்ளவேண்டும். அவசியமான காலங்களில் தேனிற் குழைத்து பிரசவ அவஸ்தைப்படும் ஸ்திரீ கண்ணில் மையிட குழந்தை உடனே பிறக்கும்.

8. பிரசவ வலியானது சாந்தமாய் நின்று விட்டால் அதனைக் கிரமப்படி அதிகப்படுத்த வேண்டுமானால் பிரசவ ஸ்திரீக்குத்தெரியாமல் உ - குன்றிமணியெடை நாக்குப்பூச்சியை ஒரு வெற்றிலையில் வைத்து மடித்துக்கொடுத்து மென்று தின்னும்படி செய்யவேண்டும். இப்படிச் செய்வதால் கிரமப்படி பிரசவவலி அதிகரித்து குழந்தை ஜனனமாகஹேதுவாகும்.

குறிப்பு.

இப்படிச் செய்வதைப் பார்க்கிலும் நாக்குப்பூச்சியை வெயிலிலுலர்த்தி ஒரு கலயத்திற் போட்டு வாய்பந்தனஞ் செய்து புடமிட்டு பற்பமாகச் செய்து அதில் ௫-கூ-குன்றிமணியெடை பற்பத்தை வெற்றிலையில் வைத்து மடித்து மென்றுதின்னச் செய்தால் மேற்கண்ட குணங்களுண்டாகும். இது முன்கண்ட முறையைப் பார்க்கிலும் எல்லா விதத்திலும் அனுகூலமானதும் உபயோகமானதுமாம்.

9. ஆற்றுத் தும்மட்டிக்காய் விதையை அல்லது வேரை கொஞ்சஞ் சலம்வார்த் திழைத்து மெல்லிய வஸ்திரத்தில் தடவி திரியாகச்செய்து மர்மஸ்தானத்தில் வைக்க குழந்தை சீக்கிரம் ஜனனமாகும்.

குறிப்பு.

இது சற்று கடினமான சிகிச்சையாகையால் சுகுமார தேகிகளுக் கேற்காது. ஆகையால் இந்த விஷயத்திலதிகங் கவனிக்கவேண்டியது.

10. புறுவின் வெண்ணிறமான எச்சம் விராகனெடை-க. இதனைப் பொடித்துக் கொஞ்சஞ் சலத்திற் கரைத்து வடிகட்டிப் பானஞ்செய்வித்துவர, சீக்கிரம் ஜனனமாகும்.

11. மஞ்சள் முள்ளங்கி விதை விராகனெடை ௩, சோம்பு விராகனெடை - ௩; சதகுப்பை விராகனெடை-௩; வெந்தயம் விராகனெடை-௩, பனப்ஷாபூ விராகனெடை-௩, அதிமதுரம் விராகனெடை-௩.

செய்முறை:—இவற்றுள் சிதைக்க வேண்டியவைகளைச் சிதைத்து ஒன்றாய்ச் சேர்த்து-க௨, ஆழாக்கு ஜலத்திற்போட்டு ௨-ஆழாக்காகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டிப் பானஞ் செய்விக்க வேண்டும். இவ்விதஞ்செய்வதால் குழந்தை சீக்கிரம் ஜனனமாகும்.

12. சரக்கொன்றைக் காயின் தோல் விராகனெடை-ரு, அல்லது-௪. இதனைச் சிதைத்து க௨-ஆழாக்கு ஜலத்திற்போட்டு ௨-ஆழாக்காகச் சுண்டவைத்து அதில் ௬-பலம் சர்க்கரையைக் கரைத்துப் பானஞ்செய்விக்க, சீக்கிரம் குழந்தை ஜனனமாகும்.

இன்னும் வரும்.



சுகாதார போதினி.

௪ - ம் பிரிவு



பால வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 159.)

ஹப்பனேன் ஜவாரிஷ்.

கரபஸ் ஓமம், மஞ்சள் முள்ளங்கி விதை, சதகுப்பை, இவை வகை-௩-க்கு விராகனெடை-௪௨, லவங்கம், ரூமிமஸ்தகி, அகர் இவை வகை - க - க்கு விராகனெடை-க, தேன் பலம்-௫.

செய்முறை:—எல்லாச் சரக்குகளையும் இடித்து வஸ்திரகாயஞ்செய்து தேனைக்காய்ச்சிப் பாகுபதத்தில் மேற்படி சூரணத்தைத் தூவி சந்தனமத்தாற் கடைந்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க, க௨.

உபயோகம்:—இரைப்பையைப் பலப்படுத்திப்பசி தீபனத்தைஅதிகப்படுத்தும், உட்கொண்ட ஆகாரங்களை ஜீரணிக்கச் செய்யும். கபத்தைக் கண்டிக்கும். வாயு சம்பந்தமான மூலரோகம், அஸ்மரிரோகம், உஷ்ண சம்பந்தமா யுண்டாகும் வயிற்று வீக்கம், பிரசவ காலத்திலுண்டாகுங் குளிர்ச்சி, வாய்நீரொழுக்கு ஆகியவைகளைக் கண்டிக்கும். தேகதிடம், தேகபலம் இவை

களெல்லா முண்டாகும். இதனைக் குழந்தைகளுக்கு பிரதி மாதத்திலும் எ-நாள் உபயோகித்து வந்தால், வேறெந்த வியாதியு முண்டாகாது. வைத்தியரைத்தேட விடமிராது.

## குறிப்பு.

மேற்கண்ட முறையில் ரூமிமஸ்தகியைத் தனியே பொடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொண்டு, மேற்படி ஜவாரிஷ் செய்து, குளிர ஆறினபின்பு சேர்க்கவேண்டும். அப்படிச் சேர்க்காமற் சூட்டுடன்சேர்த்தால், அதிக கசப்பாகிவிடும். சாப்பிடுவதற்கு ருசியாயிராது. ஆகையால் சூட்டுடன் சேர்க்காமல் குளிர ஆறினபின்பு சேர்த்துக் கொள்வதே உத்தமமான வழி.

## பகாரத் ஜவாரிஷ்.

கரபஸ் ஓமம், மஞ்சள் முள்ளங்கி விதை, சதகுப்பை, சோம்பு, கொத்துமல்லிவிதை, ஓமம், ரூமிமஸ்தகி, அக்ராகாரம் இவை வகை-க-க்குப் பலம்-கவ, திறமான கிருஷ்ண அகர், லவங்கம், இவை வகை-க-க்கு விராகனெடை-ரு, தேன் பலம்-ஙங.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளில் ரூமிமஸ்தகியைத் தனியே பொடித்து வைத்துக் கொள்ளவும் மற்ற சரக்குகளை ஒன்றாய்ச் சேர்த்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொள்ளவும். தேனைக்காய்ச்சி நுரையை நீக்கிச் சுத்திசெய்து முன் சூரணத்தைச் சிறுகத் தூவிக் கிண்டிக்கிளறி இறக்கி ஆறவிட்டு ரூமிமஸ்தகிச் சூரணத்தைச் சேர்த்து நன்றாய் மிஸ்ரமித்து பீங்கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க, கவ.

உபயோகம்:—இரைப்பையைப் பலப்படுத்தும், பசிதீபனத்தை விருத்திசெய்யும், உட்கொண்ட ஆகாரங்களைச் சீரணிக்கச் செய்யும். வயிற்றுப்பிசம், இரைப்பையின் குளிர்ச்சி, நீர்க்குண்டிக்காயின் குளிர்ச்சி, வாய்நீரொழுக்கு ஆகியவைகள் தீரும். இது சிறுவர்களுக்கதிக உபயோகமான லேகியம்.

## கண் மாத்திரை.

படிக்காரம் விராகனெடை-க, அபின் விராகனெடை-அ, ரசாஞ்சனம் விராகனெடை-உ, வேப்பிலை விராகனெடை-ரு, குங்குமப்பூ குன்றிமணியெடை-ரு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒரு இரும்புப் பாத்திரத்திற் போட்டு இரும்புக்குக் குழவியால் றாற் கடைந்து மைபோலான பின்பு நீண்ட மாத்திரைகளாக உருட்டி நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும். அவசியமானபோது முலைப்பாலிலிழைத்து இரண்டு கடுகுப்பிரமாணம் கண்ணிலிட்டுவர வேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டுவேளையுஞ் செய்து வருவதால், கண்சிவப்பு, கண்சதை வளர்ச்சி, கண்பூ, கண்ணில் நீரருகல், நீர்வடிதல் முதலிய பலவகைக் கண்ரோகங்கள் தீரும்.

## வேறு

மிளகு, வேப்பிலை இவை வகை-க-க்கு விராகனெடை-உ. இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டுப் பொடித்து மீன்பித்து நீரைச் சிறுகச் சிறுக வார்த்து உ-சாமநேரமரைத்து மைபோலான பின்பு நீண்ட சிறு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

உபயோகம்:—இதனை முலைப்பாலிலிழைத்துக் கண்ணிலிட மேற்கண்ட ரோகங்கள் தீரும்.

இன்னும் வரும்.

---

## சுகாதார போதினி·

### ரு-ம் பிரிவு.



## மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-3. பக்கம் 159)

### மூலரோகச் சிகிச்சை.

அஞ்ஜுபார் என்பது ஒருவகை மரம் இது பிரதானமாய் ஷாம் தேசத்தில் உண்டாகிறது. அதன் வேர் மருந்துகளில் அதிகம் உபயோகப்படுத்தப் படுகிறது. சாதாரணமாய் எல்லா யூநாநி மருந்துக்கடைகளிலும் கிடைக்கும். இது மூல இரத்தத்தை நிறுத்துவதில் மிகவுஞ் சிறந்தது. மற்ற சங்கோசன காரிகளைப்போல மலத்தைக் கட்டாமல் அந்த இரத்தத்தை மாத்திரம் கட்டுவதில் மிகவுங் கைவல்யமான தாகையால் யூநாநி வைத்தியர்கள் இதனை அதிகம் கையாடுவது வழமை. இதனைப் பின்கண்ட விதமாக உபயோகிக்கவேண்டும்.

அஞ்ஜுபார் வேரை யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் விராகனெடை-உ, வெண்ணெய் விராகனெடை-ஙு. இவ்விரண்டையு மிஸ்ரமித்து உட்கொ

ள்ளவேண்டும். இவ்விதம் வியாதிக்குத் தகுந்தபடி தினமொன்றிற்கு இரண்டு அல்லது மூன்று தடவைகளுபயோகித்து வந்தால் இரண்டு தினத்திற்குள்ளாகவே எல்லாவித இரத்தப்போக்கும் நின்றுவிடும். மூலரோக இரத்தம், வாயிலிருந்து விழும் இரத்தம், இரத்தங் கக்கல் ரோகம் ஆகியவைகளெல்லாந் தீரும்.

வேறு

மூலரோகிக்குப் பால்தெளிநீரை ஆரம்பத்தி லுபயோகித்துப் பிறகு கீழ்க்காணும் முறையை யுபயோகித்தால் அதிசீக்கிரத்தில் அந்த ரோகம் கைவல்யமாகிவிடும்.

பால்தெளிநீர் செய்யுமுறை.

அரைப்படி பாலுடன் காற்படி ஜலத்தைச் சேர்த்துக் காய்ச்சி ஜலம் சுண்டின சமயத்தில் கீழிறக்கி ஆறவைத்து இளஞ்சூடா யிருக்குந் தருணத்தில் அரைப்பலம் எலுமிச்சம் பழச்சாற்றை, அல்லது, புளியைக் கரைத்த சாற்றைவிட்டு மூங்கில்தட்டால் மூடி இராமுழுதும் வைத்திருந்து காலையில் பார்த்தால் ஜலமானது முத்துப்போற் றெளிந்திருக்கும். அந்தத் தெளிவை மாத்திரம் இறுத்துப் பானஞ்செய்ய வேண்டும். முதல்நாள் இரண்டொரு தடவை பேதியாகும். மறுநாட் காலையிலும் இவ்விதமே செய்யவேண்டியது. இவ்விதம் செய்தபிறகு கீழ்க்காணும் அவுடதத்தை உபயோகித்து வரவேண்டும். அம்முறையாவது:—

சீமை அதிவிடயச் சூரணம், கைப்பு வெட்பாலையரிசிச் சூரணம், ரசாஞ்சனச் சூரணம் இவை வகை-௩-க்கு விராகனெடை-வ, வெண்ணெய் விராகனெடை-௬. இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்துச் சாப்பிடவேண்டும். இந்த அளவுப் பிரகாரமே ஒவ்வொருவேளையும் உபயோகிக்கவும். இவ்விதம் தினமொன்றிற்கு இரண்டுவேளை செய்து வந்தாற் போதுமானது இரத்தமூலம், எரிவந்தம், ஆசன அழலை முதலியவைகள் தீரும்.

வேறு.

சீமைக் கிச்சிலிக்கிழங்குச் சூரணம், குந்திரிக்கச் சூரணம், ஏலக்காய்ச் சூரணம், சோம்புச் சூரணம் இவை வகை-௪-க்கு விராகனெடை-௧௮, தேன் விராகனெடை-௬. இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்துத் தேனைச் சிறுகச் சிறுக வார்த்தரைத்து நான்கு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்துவைத்துக் கொள்ளவும். வேளை-௧-க்கு ஒரு மாத்திரை வீதம் தினம் ஒன்றிற்கு இரண்டு, அல்லது, மூன்றுதடவைகள் உபயோகித்து வந்தால் இரத்தமூலம் இரத்தப்போக்கு, ஆசன அழலை முதலியவைகள் தீரும்.

வேறு.

கசகசாத்தோற் சூரணம் விராகனெடை-௨, கடுக்காய்ப் பிஞ்சைப் பசுவினெய்யில் வறுத்துத் தூள் செய்த சூரணம் விராகனெடை-வ, துத்திவிதை விராகனெடை-௩, இதனை இரண்டரைப்பலம் தண்ணீரிற் போட்டு இரண்டு மணிநேரம் ஊறவைத்துப் பிசைந்து அதன் கோழையை யெடுத்துக்கொள்ளவேண்டும். இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் தினம் ஒன்றிற்கு இரண்டுவேளை, அல்லது, மூன்றுவேளை உபயோகித்து வந்தால் இரத்தமூல ரோகம், இரத்தக் கழிச்சல், இரத்தப்போக்கு முதலியவைகள் தீரும்.

வேறு.

மூங்கிலுப்புத் தூள் விராகனெடை-வ, பூஜபத்திரியை யெரித்த சாம்பல் விராகனெடை-வ, ஆட்டுக்கொம்பை ,யெரித்த கரித்தூள் விராகனெடை-வ, இம்மூன்றையு மிஸ்ரமித்து மேற்சொல்லி யிருக்கிற முறைப்படி செய்தெடுத்த துத்திவிதைக் கோழையை அனுபானித்துட் கொள்ளவேண்டும். இவ்விதம் தினமொன்றிற்கு இரண்டுவேளை, அல்லது, மூன்றுவேளை உபயோகித்து வந்தால், இரத்தமூலம், இரத்தப்போக்கு, இரத்தக் கழிச்சல், ஆசன அழலை,| சிறுகுடல் அழலை, உள் அவயவங்களிலுள்ள தாபனரோகங்கள் ஆகியவைகள் தீரும்.

வேறு.

வறுத்துத் தூள்செய்த கருவேலம்பிசின் சூரணம், பாகப்படுத்தின கருஞ்சீரகச் சூரணம், இவை வகை-௧-க்கு விராகனெடை-௧௫, வறுத்திடித்த பருப்புக்கீரைச் சூரணம் விராகனெடை-௪, வறுத்திடித்த கொத்துமல்லி விதைச் சூரணம் விராகனெடை-௧௮, மாதளம்பூச் சூரணம் விராகனெடை-௮, கசகசாத்தோற் சூரணம் விராகனெடை-௮, மூங்கிலுப்புச் சூரணம், விராகனெடை-வ, கஹறூபா வென்னும் கற்பூரமணிச் சூரணம் விராகனெடை-வ, (சக்தியில்லாதவர்கள் இதனை நீக்கி விடலாம்) இவை யெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துக் கல்வத்திலிட்

டுக் குளிர்ந்த ஜலத்தைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டுமணி நேரமரைத்துக் கடலைப் பிரமாண மாத்திரைகள் செய்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-௧-௨. சமயோசிதம்போல தினம் ஒன்றிற்கு இரண்டு, அல்லது, மூன்றுவேளை உபயோகிக்கலாம்.

உபயோகம்:—இரத்த மூலரோகம், இரத்தப்போக்கு, இரத்தக் கழிச்சல், சிறுகுடல் தாபனரோகம் ஆகியவைகள் தீரும்.

(இன்னும் வரும்)

---

## சுகாதார போதினி.

சு - ம் பிரிவு.

## இரசவாதம்.

மூன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 160.)

### வெட்டையை நைப்பாக்கு முறை.

#### நவச்சார எண்ணெய்.

பலகறையை யெரித்த சாம்பல், குதிரைக்காற் குளம்பின் றாள், யானைத் தந்தத்தூள், பதங்கித்த நவச்சாரம் இவை வகை-௧-க்குப் பலம்-௧௦. இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு மைபோலாகிற வரையிலரைத்து அகலில் வைத்து மேலகல்மூடி சுண்ணாம்பு, வெல்லம் ஆகிய இரண்டையும் சேர்த்து கோதுமை நொய்யை யூறவைத்துப் பிசைந்து பிழிந்த ஜலத்தை விட்டுஅரைத்துச் சீலையிற்றடவி மேற்படி அகலிற்குச் சீலைசெய்ய வேண்டும். இது சுமார் ஏழுசெய்தாற் போதுமானது. இதை வெயிலில் வைத்துலர்த்தி நன்றாயுலர்ந்தபின்பு நாலுவீசை விராட்டியைக் கொளுத்திப் புகைபடங்கித் தழலஆறுஞ் சமையத்தில் முன்சித்தப்படுத்தின கவசத்தை வைத்துக் குளிர ஆறினபின் னெடுத்துக் கவசத்தைப் பிரித்து அதினுள்ளிருக்கும் பற்பத்தைப் பீங்கான் பாத்திரத்திற் போட்டுவாய்ப்பந்தனஞ் செய்து எப்போதும் ஈரமாயிருக்கிற நிலத்திற் புதைத்து இருபதுநாட் சென்றபின் பெடுத்தால் எல்லாம் எண்ணெயாகி யிருக்கும். பிறகு உறைந்து போகாது. இதனைச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

வெட்டையா யிருக்கிற உலோகத்தை உருக்கி உருக்குமுகத்தில் மேற்படி யெண்ணெயில் கொஞ்சம் பஞ்சை நனைத்து இரண்டொரு சொட்டு விட்டால் எல்லாவித வெட்டைகளும் நைப்பாகிவிடும். கடினமான உலோகங்களும் நைப்பாகி வேலைக்கு மெழுக்குப் போலவரும். இது பலதடவை செய்து அனுபவப்பட்ட தாகையால் இது அனுபவசாலிகளுக்கு அதிகமாக உபயோகப்படும்.

#### நைப்பெண்ணெய்.

யானைத் தந்தத்தூள், குதிரைக் குளம்புத்தூள், எருமை மாட்டின் கொம்புத்தூள், வெள்ளாட்டுக்கொம்புத்தூள் இவை வகை-௧-க்குச் சமனெடை இவை யெல்லாவற்றையும் முறைப்படி குழித்தைல மிறக்கிச் சீஷாவில் வைத்துக் கொள்ளவும்.

வெட்டையா யிருக்கிற உலோகத்தை உருக்கி உருக்குமுகத்தில் மேற்படி தைலத்தில் இரண்டொருதுளிவிட, பட்டுப்போல நைப்பாகிவிடும். பொன், வெள்ளி, முதலியவைகள் நகை முதலியவைகள் செய்யவராமல் வெட்டையாக இருந்தாலும், கடினமாக விருந்தாலும் மேற்கண்ட விதமாகப் பக்குவப்படுத்த அதிகமிருதுவாகி எல்லாவகை நகைகள்செய்ய ஏதுவான நைப்பாகி யிருக்கும்.

#### குறிப்பு.

இரசவாதத் தொழிலிற் பிரியமுள்ளவர்கள் ஆரம்பத்தில் கூட்டுவேலை, அல்லது, உலோகவாதம் என்னும் முறையைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியகம். அத்தகையினர்கள் மேற்கண்ட வெட்டையை நைப்பாக்கு முறைகளைத் தெரிந்து கொள்ளவேண்டியதும் ஆவசியகமாகையால் அனுபவமானபல முறைகளை யிங்கெழுதி வந்தோம். ஆகையால் இனி உலோகவாதத்தை எழுதி வருவோம். இரசவாதத்திற் பிரியமுள்ள நண்பர்கள் அம்முறைகளை ஆதியோடந்தமாகக் கவனித்து அதிற்கண்ட கிரமப்படி செய்வார்களாயின் தாம்தாம் நற்பலனை யடைவதுடன் மற்றவர்களும் அவ்விதமே யடைய ஏதுவாமென்பதே திண்ணம்.

இன்னும் வரும்.

## சுகாதார போதினி

எ-ம் பிரிவு.

### பற்ப முறைகள்.

முன்தொடர்ச்சி (Vol, 3. பக்கம் 152)

அயபற்பம்.

சுத்திசெய்த அயத்தகடு விராகனெடை - கடு, லிங்கம் விராகனெடை-கடு, முலைப்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை:--லிங்கத்தைக் கல்வத்திலிட்டுப்பொடித்து முலைப்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமநேரமரைத்து மேற்படி கட்டிற்குக் கவசஞ்செய்து உலர்த்தி அகலில்வைத்து மேலகல்மூடிச் சீலைமண் செய்துலர்த்தி கெஜபுட மிடவும். குளிர ஆறினபின் னெடுத்தால் எல்லாம் நொறுங்கிக் கறுப்பான பற்பமாயிருக்கும். இதனை நிறுத்து இதுகண்ட எடையில் எட்டி லொருபங்கு லிங்கத்தைச் சேர்த்து இரண்டு சாமநேர மரைத்துத் திரிபலைக் கஷாயத்தைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமநேர மரைத்துப் பில்லை செய்துலர்த்தி அகலில்வைத்து மேலகல்மூடி ஐந்து சீலைமண் செய்துலர்த்தி அரைக்கெஜப் புடமிட வேண்டும். குளிர ஆறினபின்பெடுத்து முன்போலவே திரிபலைக் கஷாயத்தில் அரைத்து முன்போற் புடமிடவேண்டும் இவ்விதம் மடக்கி மடக்கித் திரிபலைக் கஷாயத்தில் மூன்று புடமும் எலுமிச்சம் பழச்சாற்றில் ஆறுபுடமும் இடவேண்டும். ஒவ்வொரு புடத்திற்கும் பற்பத்தின் எட்டிலொருபங்கு லிங்கத்தைச் சேர்த்தரைத்துப் போடவேண்டும். ஆகக்கூடிய பத்துப் புடமுந் தீர்ந்தால் செஞ்சாயலான பற்பமாகியிருக்கும். சக்தியுள்ளவர்கள் மேற்கண்ட விதமாகத் திரிபலைக் கஷாயத்தில் இருபது புடமும், எலுமிச்சம்பழச்சாற்றில் இருபது புடமும் போட்டுத் தீர்ந்தால் மகா சஞ்சீவிக் கொப்பான பற்பமாயிருக்கும். இந்தப் பற்பமானது மகா கற்பம் போன்றது. இதனால் நரைதிரை முதலியவைகளும் நீங்கும். எல்லா வியாதிகளிலும் உபயோகித்து ஜெயமடையலாம். ஆனால், பாடுபட்டால் பலன் பெறலாமென்பது சத்திய வாக்கு.

பிரமாணம்:—குன்றிமணியெடை-க-கஉ.

அனுபானமும், உபயோகமும்:--வலம்புரிக்காய்ச் சூரணம், பிரமதண்டு வேர்ச் சூரணம், கற்கடகசிங்கிச் சூரணம் இவை வகை-க-க்கு குன்றிமணி பெடை உ, தேன் விராகனெடை-கூ. இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, இருமல் ரோகம், சுவாசரோகம் சுரரோகம் ஆகியவைகள் தீரும்.

தேன் விராகனெடை - ங. இஞ்சிச்சாறு விராகனெடை-ங, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, வாயு சம்பந்த ரோகம், அரோசிக ரோகம், இருமல் ரோகம், சுவாசரோகம் ஆகியவைகள் தீரும்.

அரிசித்திப்பிலிச் சூரணம் குன்றிமணி பெடை-சு, தேன் விராகனெடை-ங. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, கபக்கட்டு, கோழைக்கட்டு, தொண்டைக்கம்மல், அரிகுரல் ஆகியவைகள் தீரும்.

சீந்திற் கொடிச்சாறு விராகனெடை - கூ, தேன் விராகனெடை-க. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட பற்பத்தைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, எல்லாவகை சுரரோகங்களும் தீரும். பசிதீபனம் அதிகப்படும்.

இன்னும் வரும்.

---

### விண்ணப்பம்.

கனவான்களே! நமது சுகாதார போதினியாகிய இப்பத்திரிகையை நேயர்களியாவரும் மிக்க அபிமானித்துக் கையாண்டுவருவது எமக்கு மற்றெவர்க்குந் தெரிந்த விஷயமே. ஆயினும், இடையிடையே ஏற்படுஞ் சில அசந்தர்ப்பங்களால் பத்திரிகை காலத்தோடு வெளிவராமல் தாமதித்து வருவதைப் பற்றிச் சிலருக்கு அதிருப்தியாயிருக்கலாம். மனப்பூர்வமாக இதை தாமதத்தோடு வெளிப்படுத்த வேண்டுமென்னும் எண்ணம் ஒரு சிறிதேனும் எமக்கு எப்பொழுதுமில்லை. இவ்விதம் காலத்தோடு வெளிப்படுத்தாமல் தடைப்படுத்துவதால் எமக்கு ஒரு பயனுமின்றென்பதை ஒவ்வொருவரும் அறிந்தேயிருக்கலாம். நமது போதினியின் அபிமானிகளைக் காட்டிலும் பதின்மடங்கதிகமாக இப்பத்திரிகை காலத்தோடு வெளியாக வேண்டுமென்னும் எண்ணம் எமக்கிடைவிடா திருந்தும் ஏதோ தெய்வ சங்கல்பத்தால் சில குடும்பக்கவலைகளினாலும், தேக அசௌகரியங்களை முன்னிட்டும் இவ்வாறு தடைநேர்ந்து விடுகின்றது. ஆனதால் தற்போது பத்திரிகை விஷயத்தில் உண்டாகிய தாமதத்தை மனக்கொள்ளாமல் மன்னிக்குமாறு நமது நண்பரனைவரையும் வேண்டுகிறோம்.

புத்தகம்-ங. 1907ஹு டிசம்பர்மீ 15௳ இலக்கம்-௨௨.

## சுகாதார போதினி.

க - ம், பிரிவு.

### வைத்தியக் குறிப்புகள்

முன்தொடர்ச்சி (Vol-III. பக்கம் 163.)

### இரைப்பையில் பால், அல்லது. இரத்தம் சேர்ந்திருப்பதின் சிகிச்சை.

இதன் லக்ஷணம்:—வயிறப்புதல் மயக்கம், குளிர்ச்சியான வியர்வை, சில சமையம் நடுக்கல், சில சமையம் சுரம் ஆகியவைகளுண்டா யிருத்தலாம்.

காரணம்:—வியாதி யுண்டாவதற்கு முன்பாலே அதிகமாகக் குடித்தல் முதலியவைகளாம்.

சிகிச்சை:—திராக்ஷக் கொடியை யெரித்த சாம்பல் பலம்-ங௮, இதனை ஏழுபாகமாகச் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு பாகத்தை இரண்டு ஆழாக்கு ஜலத்திற்போட்டுச் செவ்வையாகக் கலக்கித் தெளியவைக்க வேண்டும். இந்தத் தெளிவையிறுத்து அதில் மேற்படி சாம்பலின் மறுபாகத்தைப் போட்டு முன்போற் கலக்கி முன்போற்றெளியவைத்து அந்தத் தெளிவில் சாம்பலின் இன்னொரு பாகத்தைப்போட்டுத் தெளியவைக்க வேண்டும். இவ்விதமே ஒவ்வொரு தடவையும் தெளிவை யிறுத்து அதில் முன் சாம்பலில் ஒவ்வொரு பாகத்தைப் போட்டு முடிவாக ஏழாந் தடவையும் தெளிவை யிறுத்து சீஷாவில்வைத்துக்கொண்டு சுமார் ஒருபலம், அல்லது, இரண்டு பலம் பானஞ் செய்விக்க வேண்டும். இவ்விதம் அரைமணி அல்லது, ஒருமணிக்கொருதடவை பானஞ் செயவிக்க, இரைப்பையிலுள்ள பாற்கட்டு நீங்கிச் சுகமுண்டாகும்.

பால் குடிக்குங் குழந்தைகளுக்கு அடிக்கடி பாற் கட்டுண்டாவது சகஜ மாகையால் அவர்களுக்கும் மேற்கண்ட விதமாகச் செய்து வைத்துக் கொண்டு உபயோகிக்கச் சுகுணமுண்டாகும். ஆனல், வயதிற்குத் தகுந்தபடி குறைந்த அளவாக உபயோகிக்க வேண்டியது.

#### வேறு.

பொதினாத்திராவகம், அல்லது, பெப்ரமெண்ட் திராவகம். இதில் சுமார் ஐந்து ஏழு துளியை ஒருவிராகனெடை சர்க்கரையில் விட்டுச் சாப்பிட்டாலும்; அல்லது, அரை விராகனெடை பொதினா இலையைத் தூள்செய்து அதனுடன் ஒரு விராகனெடை சர்க்கரையைக் கலந்து சாப்பிட்டாலும், இரைப்பையில் தங்கியிருக்கிற இரத்தம் கரைந்து வெளிப்பட்டுப் போகும்.

#### வேறு.

நான்கு குன்றிமணியெடை கடுகைப் பொடித்துக் கொஞ்சம் ஜலத்திற கரைத்துப் பானஞ் செய்வித்தால் இரைப்பையில் கட்டி யிருக்கிற இரத்தம் கரைந்து வெளிப்பட்டுப் போகும்.

#### வேறு.

கொண்டைக் கடலையை வறுத்து அதனுடன் உப்புத் தூளைச் சேர்த்துச் சாப்பிட வயிற்றிலுள்ள பாற்கட்டு, இரத்தக்கட்டு ஆகியவைகள் தீரும்.

### அருவருத்தல்; குமட்டல். வாந்தி ஆகியவைகளின் சிகிச்சை.

அருவருத்த லென்பது வாந்தி வருவதுபோன்றிருத்தல். குமட்டலாவது ஒக்கரித்துக்கொண்டே வாந்தி வெளிவராதிருத்தல். வாந்தியாவது:--உள்ளே யிருக்கிற சத்து வாயால் வெளிப்படல்.

#### சிகிச்சை.

பூவந்திக் கொட்டை, அல்லது, பொன்னாங் கொட்டையின் பருப்பு-ச, இதனைக் கொஞ்சம் ஜலத்தில் அரைமணிநேரம் ஊறவைத்துச் சிறுகச் சிறுக மென்று தின்றுவர அருவருத்தல் தீரும்.

#### வேறு.

சீமைக் கிச்சிலிக்கிழங்கைத் தூள்செய்து ஜலம் வார்த்து ஒருமணி நேரமரைத்துப் பயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும். சமையத்திற்குத் தகுந்தபடி ஒன்று, அல்லது இரண்டு மணிக்கொருதடவை இரண்டிரண்டு மாத்திரைகளை மென்று தின்றுவர, அருவருப்பு, வாந்திஆகியவைகள் தீரும்.

#### வேறு.

பூங்காவிக் கட்டியை நெருப்பில் வைத்துச் சூடாக்கி ஜலத்திற் றேய்க்கவேண்டும். அதினபின்பு அந்த ஜலத்தை யிறுத்துக்கொண்டு அதில் வேறொரு பூங்காவிக் கட்டியை முன்போற் காய்ச்சித் தோய்க்க வேண்டும் இவ்விதம் மூன்று நான்கு கட்டிகளைக் கா

ய்ச்சிக் காய்ச்சித் தோய்த்து ஜலத்தை யிறுத்துப் பானஞ் செய்விக்கக் கடினமான வாந்தியும் நிற்கும்.

வேறு.

பழமையான மண் விளக்கை நெருப்பில் வைத்தூதினல் அது பற்றியெரியும் அது சுவாலை யடங்கின பின்பு ஜலத்தில் தோய்க்கவேண்டும். அந்த ஜலத்தை யிறுத்துச் சிறுகச் சிறுகப் பானஞ் செய்துவர, வாந்தி, குமட்டல் ஆகியவைகள் தீரும்.

வேறு.

இலந்தை விதைப்பருப்பு, துளசியிலைச் சூரணம், கற்கண்டு, இவை வகை-க-க்கு விராகனெடை-க, மிளகுச் சூரணம்; விராகனெடை-௨, இவை யெல்லாவற்றையும் ஒன்றுகச் சேர்த்துத் தண்ணீர் வார்த்தரைத்து இலந்தை விதைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். சமையத்திற்குத் தகுந்தபடி ஒன்று, அல்லது, இரண்டு மணிக்கொரு தடவை ஒரு மாத்திரையைச் சாப்பிட்டுவர, நீடித்திருக்கிற அருவருப்புத் தீரும்.

வேறு.

மதுபானத்தை அதிகமா யுண்டதனல் வாந்தி கண்டிருந்தால் சிவப்பு அரிசியை ஊறவைத்த கழுநீரைப்பானஞ் செய்வித்துவர, அந்த வாந்தி நின்றுவிடும்.

வேறு.

வேப்பங் கிளையை இலைகளுடன் அடுப்பிற்போட்டு வெதுப்பிச் செம்மையாக வெதம்பின பின்பு அம்மியில் வைத்தரைத்து ஜலத்திற் கரைத்து அதன்தெளிவை யிறுத்துச் சிறுகச் சிறுகப் பானஞ் செய்வித்துவர, வாந்தி, அருவருப்பு ஆகியவைகள் தீரும்.

வேறு.

பழைய கோணியை யெரித்துச் சாம்பலாக்கி ஜலத்திற்போட்டு அதன் தெளிவை யிறுத்துப் பானஞ் செய்விக்க, வாந்தி, அருவருப்பு ஆகியவைகள் தீரும்.

வேறு.

விதை நீக்கின திராக்ஷப்பழம், புளிப்பு மாதுளம்பழச்சுளை, இவை வகை-க-க்கு விராகனெடை-கஅ, கருஞ்சீரகம் விராகனெடை-வ, இவை யெல்லாவற்றையுஞ் சேர்த்து ஜலம் வார்த்தரைத்து இலந்தை விதைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து வைத்துக்கொண்டு மணிக்கொரு மாத்திரையாகச் சாப்பிட்டுவர, பித்த சம்பந்தமான வாந்தி தீரும்.

வேறு.

அரசம் பட்டையை யெரித்த சாம்பல் விராகனெடை-ரு, ஒரு ஆழாக்கு ஜலத்தை ஒரு புதியமண் பாத்திரத்தில் விட்டு அதில் மேற்படி சாம்பலைப்போட்டுச் செம்மையாகக் கலக்கிக் கொஞ்சநேரம் வைத்து அந்தத் தெளிவை யிறுத்துச் சிறுகச் சிறுகப் பானஞ் செய்துவர வாந்திநிற்கும்.

வேறு.

ஆலம் விழுதை யுலர்த்தி யெரித்த சாம்பல் விராகனெடை-வ, இதனைத் தேனிற் குழைத்து அல்லது தனியே சாப்பிடவும். இவ்விதம் செய்து வந்தால் கூடிய சீக்கிரத்தில் வாந்தி நின்றுபோகும்.

ஏலரிசி ஜவாரிஷ்.

ஏலரிசிச் சூரணம் பலம்-க, அகற் சூரணம் பலம்-க, சீனிசர்க்கரை பலம்-ரு௨.

செய்முறை:—சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் மேற்படி சூரணங்களைக் கலந்து துவிக்கிண்டிக்கிளறி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-௨, க.

உபயோகம்:—வாந்தி ரோகத்தைத் தீர்க்கும், இரைப்பையைப் பலப்படுத்திப் பசிதீபனத்தை யதிகரிக்கச் செய்யும்.

துரிஞ்சி ஜவாரிஷ்.

துருஞ்சி நாரத்தை ரசம் பலம்-கூ௨; சீனிசர்க்கரை பலம்-கரு, இவ்விரண்டையுஞ் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தி லிறக்கிச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—பலம்-௨, க.

உபயோகம்:—பித்த சம்பந்தமான வாந்தி, வேறுவகை வாந்தி ஆகியவைகள் தீரும்.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

உ-ம் பிரிவு.

குடும்ப வைத்தியம்

முன்தொடர்ச்சி (Vo - III - பக்கம்-163)

| | |
|---|---|
| சூடன் விராகனெடை | ௨ |
| விளாம்பிசின் பாகு விராகனெடை | ௬ |
| தண்ணீர் பலம் | ௬ |

இவை யெல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்தரைத்து சீஷாவில் வைத்துக் கொள்ளவும். நான்கு மணிக் கொருதடவை நான்கு விராகனெடை பானஞ் செய்விக்கவும்.

தேகந் துர்ப்பலப் பட்டவர்களுக்கு நெடுநாளாயிருக்கிற இருமல் ரோகம் தீரும், நுரையீரலிலுள்ள தாபனரோகம் முதலியவைகளும் தீரும்.

வேறு.

| | |
|---|---|
| சூடன் விராகனெடை | ௧ |
| பசுவின் புதியபால் பலம் | ௫ |
| தண்ணீர் பலம் | ௧௰ |

இவை யெல்லாவற்றையு மிஸ்ரமித்து நான்கு மணிக் கொருதடவை நான்கு விராகனெடை வீதம் உபயோகித்து வந்தால் துர்ப்பலப் பட்டவர்களுக்குண்டாகும் இருமல் ரோகம், நுரையீரலில் உண்டான தாபனரோகம் ஆகியவைகள் தீரும்.

வேறு

சூடனைக் காடியில் கரைத்துப் பற்றிட நரம்புத் தலைநோய் தீரும்.

வேறு

சூடனை கிளிஸரீனில் குழைத்து மார்பின்மீது பற்றிடப் பால்சுரத்தல் நின்றுபோகும்.

வேறு.

| | |
|---|---|
| சூடன் குன்றிமணி யெடை | ௭௰ |
| சீமைச் சுண்ணாம்பு விராகனெடை | ௨ |

இவ்விரண்டையும் ஜலம் வார்த்தரைத்து மார்பில் பற்றிட, பால்சுரத்தல், பாற்கட்டு ஆகியவைகள் தீரும்.

வேறு

சூடனை அதிகப் பிரமாணமாக உபயோகித்தால் இசிவு, வலி, ஆகியவைகள் நீங்கிப்போகும்; நித்திரை யுண்டாகி விடும், ஆகையால், பைத்தியரோகம், மதுபான பைத்தியம் ஆகியவைகளில் இதனை அதிகமாக உபயோகிப்பதனால் அந்த வியாதி தீர்வதற்கு ஏதுவாகும்.

வேறு.

| | |
|---|---|
| சூடன் குன்றிமணியெடை | அ |
| அபின் குன்றிமணியெடை | ௧௰ |

இவ்விரண்டையுஞ் சேர்த்தரைத்து ஆறு மாத்திரைகளாகச் செய்து நித்திரை செய்யப் போகும்போது இரண்டு, அல்லது, மூன்று மாத்திரைகளைச் சாப்பிடுவதினால், பிரமேக ரோகத்திலுண்டாகும் வேதனை யெழுச்சி, இந்திரிய சிராவகம் ஆகியவைகள் தீரும்.

இன்னும் வரும்.

சுகாதார போதினி.

௩-ம் பிரிவு.

ஸ்திரீ வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vo. III-பக்கம்-164.)

பிரசவமானபின்பு பிரசவ ஸ்திரீக்குச் செய்யவேண்டிய உபசாரங்கள்.

பிரசவ அறையானது சுத்தமாகவும், சற்று விசாலமானதாகவு மிருக்கவேண்டும். அதில் பலவகைப் பாத்திரங்கள், சாமான்கள் ஆகியவைகளை வைத்து நிறைத்துவைக்காமல் கூடியவரையில் வெற்றிடமாயிருக்கவேண்டும். குறைந்தபக்ஷம் ஆறு, அல்லது, ஏழுகெஜ நீளமுள்ளதாகவும், மூன்று, அல்லது, நான்கு கெஜம் அகலமுள்ளதாகவு மிருக்கவேண்டும். சாத்தரை, நீர்ச்சாரல், குளிர்ந்த காற்றுவீசுதல் முதலிய அவலக்ஷணங்க ளில்லாததாகவு மிருக்கவேண்டும். பிரசவ அறையின் வாசற்படியானது குளிர்காலம், மழைகாலம் ஆகியவைகளில் கூடுமானால் கிழக்குமுகமாயிருக்கவேண்டும். உஷ்ண காலங்களில் தெற்குமுகமாக இருக்கவேண்டும். காற்றானது எங்கு மிருக்கிறதென நமது நாட்டு ஸ்திரீகட்குச் சொன்னால் அவர்கள் சொல்லுகிறதாவது:—காற்றானது நம்மைச் சுற்றிலுமிருந்தாலும் காற்று வீசுகிறதையாவது; அல்லது, காற்றையாவது நாம் பார்க்கவில்லையே யென்பதே.

கனவான்களே! நமது ஸ்திரீகளுள் பெரும்பாலார்கள் காற்று இன்னதென்பதும், அதன் உபயோகம் இன்னதென்பதும் அறியாதிருப்பதினால் சுத்தமான காற்றின் உபயோகத்தை எவ்விதம் தெரிந்து

கொள்வார்கள். இவ்வித அறியாமையினுலேயே நமது நாட்டுப் பிரசவ அறையானது எல்லாப்பக்கங்களிலும் அடைக்கப்பட்டுக் கொஞ்சமும் சுத்தமான காற்று விசாதபடி செய்துவிடுவதுந்தவிர நெருப்பு மூட்டம் முதலியவைகளையு மெரித்து அந்த அறையைச் சுத்தமான காற்றில்லாமல் செய்துவிடுகின்றார்கள். நம்மவர்கள் சுத்தக் காற்றின் உபயோகத்தைத் தெரிந்து அதன் மூலமாகவே நாம் ஜீவிக்கவேண்டுமென் அறிந்திருந்தால் பிரசவ அறையைமுறைப்படி சுத்தமாக வைத்திருப்பார்கள். இவ்விதம் செய்வதினுல் சிறு குழந்தைகளுக்கு நேரிடும் அநேகவிதக் கஷ்டங்கள் நீங்கிப்போய்விடும். இதைப்பற்றி அநேகர் இன்னும் தெரிந்துகொள்ளாம லிருக்கிறார்களென்பதற்குச் சில பிரசவ அறைகளில் நாம் புகுந்தவுடன மூக்கையழுத்திப் பிடித்துக்கொள்ள வேண்டியதா யிருப்பதே பெருத்த அறிகுறியாம். ஆகையினுல், கனவான்களே! தம்தம் தாய்மார்கள், சகோதரிமார்கள், புத்திரிகள் ஆகியவர்கள்மீது அதிகக் கிருபையுள்ளவர்களாக விருக்கும் பட்சத்தில் இந்த விஷயத்தைத் தாங்களுங் கவனித்து இதற்குத் தகுந்த ஏற்பாடு செய்யுங்கள். நமது ஸ்திரிகளுக்கோ கல்விப் பயிற்சி கிடையாது. ஆகையால், புருஷர்களாயினும் இந்த விஷயத்தைக் கவனித்துச் சீர்திருத்த முயலவேண்டும். ஆகையால் சில முக்கியமான விஷயங்களை பின்பெழுதி வருகின்றோம்.

குழந்தை பிறந்தவுடன் சில குடும்பங்களில் பெருங்காய முதலியவைகள் போன்ற உஷ்ணமான மருந்துகள் கொடுக்கப் படுகின்றன. ஆனுல் பிரசவ ஸ்திரீயின் தேக சுபாவம் குளிர்ச்சியா யிருப்பதுடன் பிரசவமான காலமுங் குளிர்காலமா யிருந்தால் மேற்படி மருந்தானது நல்ல குணத்தைத் தரும் இதற்கு விரோதமா யிருந்தாலோ அந்த மருந்தானது குடல் முதலியவைகளை எரித்து நாசமாக்கிவிடும், ஆகையால் உஷ்ண காலங்களில் உஷ்ணமான மருந்துகளைக் குறைந்த அளவாக உபயோகிக்க வேண்டும். இன்னும் கருப்பவதிகள் இருக்கிற வீட்டில் பின் சொல்லப்படும் சௌபாக்கிய சொண்டியென்னும் அவுடதத்தைத் தயாரித்து வைத்துக்கொள்ள வேண்டும். பிரசவமாதற்கு முன் சில நாட்கள் இதனை யுபயோகித்து வருவதினுல் சுகப் பிரசவத்திற் கேதுவாகும். பிரசவத்தால் அந்த ஸ்திரீயின் பலங்குறைந்து போகாது. பிரசவமான பின்பும் நாற்பதுநாள் இதனை உபயோகித்து வந்தால் தாயும் பிள்ளையும் எவ்வித வியாதியு மணுகாமல் கடவுளினது கிருபையால் சரீர சுகமாக விருப்பார்கள், குழந்தையானது அதிக புஷ்டியுள்ளதாக வளரும். தாய்க்குப்பால் அதிகமாக வுண்டாகும் தாய்க்கும்தேகஞ் செழித்து தேகம் பெருத்து பலமுதலியவைக ளுண்டாகும். ஆகையால் தங்கள் தங்கள் மனைவி மக்களின் க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவரும் கீழ்க்காணும் முறையைச் செய்து உபயோகித்து வருவார்களென எதிர் பார்க்கின்றோம். அம்முறையாவது:—

மேற்றோல் சீவின சுக்கு பலம்-௨௦, லவங்கப்பட்டை விராகனெடை-௨௦, அக்கிராகாரம்விராகனெடை-௨௦, வெட்டிவேர் விராகனெடை - ௨௦, மிளகு விராகனெடை-௨௦, சிறுநாகப்பூ விராகனெடை-௨௦, தாமரை வளையம் விராகனெடை-௨௦, கோரைக் கிழங்கு விராகனெடை-௨௦, இலவங்கம் விராகனெடை-௨௦, வால்மிளகு விராகனெடை-௨௦, ஏலரிசி விராகனெடை-௫, மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி இவை வகை-௩-க்கு விராகனெடை-௬, அசுவகெந்திக் கிழங்கு விராகனெடை - ௬, கருஞ்சீரகம் விராகனெடை - ௩, கண்டத்திப்பிலி விராகனெடை-௩, கொடிவேலி வேர்ப்பட்டை விராகனெடை-௩, சந்தனம் விராகனெடை-௬, நற்சீரகம் விராகனெடை-௩, தண்ணீர் விட்டான் கிழங்கு விராகனெடை-௩, அஜமோதா ஓமம் விராகனெடை-௩, தாளிசப்பத்திரி விராகனெடை-௩, ஜாதிப்பத்திரி விராகனெடை-௬, அகர் விராகனெடை - ௬, அரிசித்திப்பிலி விராகனெடை - ௩, ஜாதிக்காய் விராகனெடை-௬,

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

௨-ம் பிரிவு

பால வைத்தியம்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 165.)

கருப்புக் கடுக்காய், மஞ்சட் கடுக்காய்த்தோல், இவற்றின் சூரணம் வகை-௧-க்கு விராகனெடை - ௩, படிக்காரத்தூள் விராகனெடை-௩, நவச்சாரத்தூள் ஜங்கால் பச்சை, இவை வகை-௧-க்கு விராகனெடை-௨௦. நந்தியா வட்டப் பூச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு மைபோலப் பொடித்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமநோ மரைத்து நீண்ட சிறு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இதனை முலைப்பாலில் அல்லது நந்தியாவட்டப் பூச்சாற்றில் இழைத்துக் காலைமாலை யிரண்டுவேளையும் கண்ணிலிட்டுவர, கண்பூ, படலம், பில்லம், முதலியவைகள் தீரும். கண்ணில் சுமார் ஒரு அரிசி அல்லது இரண்டு அரிசியெடை தீட்டினாற் போதுமானது இதைச் சிறுவர்களுக்கும் பெரியவர்களுக்கும் உபயோகிக்கலாம். கண்மாத்திரைகளில் இது மிகவுஞ் சிறந்தது.

வேறு.

பூங்காவி விராகனெடை - க. அபினி விராகனெடை-வ, மேற்றோல் சீவின சுக்குத்தூள் குன்றிமணியெடை-ச, சூரத்துக் கடுக்காய் கஷாயம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளைக் கல்வத்திலிட்டு மேற்படி கஷாயத்தைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாமநோ மரைத்து இலந்தைப் பழப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளவும்.

உபயோகம்:—இதனைப் பின்காணும் விதமாக இழைத்துக் கண்ணைச் சுற்றிலும் பற்றிட, கண்ணோவு, கண்சிவப்பு, கண் கடுப்பு கண் தடிப்பு, கண்ணீர்வடிதல், கண்ணரிப்பு ஆகியவைகள் தீரும். இந்த வியாதிகளுடன் கண்ணில் வீக்கமிருந்தால் கொத்துமல்லிக் கீரைச்சாறு, மணித்தக்காளி யிலைச்சாறு ஆகியவைகளி லொன்றில் இழைத்துப் பற்றிட வேண்டும். மேற்படி வியாதியில் வீக்கமில்லாதிருந்தால் கசகசாத்தோற் கஷாயத்தி லிழைத்துப் பற்றிட வேண்டும்.

வேறு.

கறுப்புக் கடுக்காய்ச் சூரணம், கலியாண முருக்குவிதைச் சூரணம், இந்துப்புத்தூள், இவை வகை-க்கு விராகனெடை-க, நந்தியாவட்டப் பூச்சாறு செல்லத்தக்க அளவு.

செயமுறை:—இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாம நோமரைத்து நீண்ட சிறு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இதனை முலைப்பாலில் அல்லது நந்தியா வட்டப் பூச்சாற்றிலிழைத்து இரண்டரிசிப் பிரமாணம் கண்ணிலிட வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையுஞ் செய்து வந்தால், கண்பூ, கண்படலம், கண்தடிப்பு, கண்ணிலரிப்பு, கண்வீக்கம் ஆகியவைகள் தீரும்,

வேறு.

காதுக்குரும்பி, மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-௩, கம்பி வெடியுப்புத்தூள் விராகனெடை-வ, இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டுக் கொஞ்சம் ஜலம்வார்த்து ஒருமணி நேரமரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி சீஷாவில் வைத்துக் கொள்ளவும்.

உபயோகம்:—இதனை முலைப்பாலில், அல்லது, ஜலத்திலிழைத்து அஸ்தமனமாக ஒரு நாழிகைக்கு முன்பு கண்ணிலிட வேண்டும். இவ்விதம் செய்துவந்தால் அந்திமாலை தீரும். இது இலகுவான முறையாயினும் அதிக உபயோகமானது. இதன் சிறந்த குணம் அநுபவசாலிகளுக்கு அதிசீக்கிரம் தெரியவரும்.

வேறு.

ஆட்டின் மண்ணீரலை அனலிற்போட்டு வெதுப்பிப் பிழிந்த ஜலத்தை ஒருசீஷாவில் வைத்துக்கொண்டு காலைமாலை இரண்டுவேளையும் வேளை-க-க்கு-க-உ-துளி கண்ணில் விட்டுவர, அந்திமாலை தீரும்.

மேற்படி மண்ணீரலைச் சாப்பிட்டுவருவதினாலும் மேற்படி அந்திமாலை தீரும். ஆனால், இதைச் சாப்பிட்டு வரும்போது அறவே உப்பில்லாத பத்தியம் வைக்கவேண்டியது. வியாதி கடினமாயிருந்தால், மேற்கண்டபடி அறவே உப்பில்லாப் பத்தியம் வைக்கவேண்டியது. வியாதி லேசாயிருந்தால், அரை உப்பாகச்சேர்த்துக் கொள்ளலாம். அப்படிக் கூடாத சமயங்களில் சமயோசிதம்போல் உப்பைச் சேர்த்துக் கொள்ளலாம்.

வேறு.

ஈச்சங் கொட்டையைப் பாலிலிழைத்து இரண்டரிசிப் பிரமாணம் கண்ணிலிட வேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டு வேளையுஞ் செய்துவர, கண்பூ, கண்படலம், ஆகியவைகள் தீரும்.

குறிப்பு.

குழந்தைகளுக்கு கண் வைத்தியஞ் செய்யும் பொழுது மிகவும் நுண்மையான அவுஷதங்களை உபயோகிக்க வேண்டியது.

இன்னும் வரும்.

---

சுகாதார போதினி.

ௐ-ம் பிரிவு.



மூலரோகம்.

முன்தொடர்ச்சி (Vol-5. பக்கம் 159)

மூலரோகச் சிகிச்சை.

இரசாஞ்சனம் விராகனெடை-க, கஹரூபா விராகனெடை-௩, ஏலரிசிச் சூரணம் விராகனெடை-௩, பூங்காவி விராகனெடை-௩, வேங்கை மரப்பிசின் விராகனெடை-௩, வறுத்திடித்த கறுப்புக் கடுக்காய்த் தூள் விராகனெடை-௨, நெல்லிமுள்ளிச் சூரணம், விராகனெடை-௩, மூங்கிலுப்புச் சூரணம் விராகனெடை-௩, சுத்திசெய்த மைசாக்ஷி விராகனெடை-ரு, வெங்காயத்தாள்சாறு அல்லது முள்ளங்கிக் கிழங்குச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—மைசாக்ஷியைக் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து அரைத்து வெண்ணெய் போலானபின்பு, வேங்கை மரப்பிசினைச் சேர்த்தரைத்து அதுவும் வெண்ணெய் போலானபின்பு, மற்றச் சூரணங்களை ஒன்றாய்க் கலந்து அதிற் சேர்த்து மேற்படிச் சாற்றையே சிறுகச் சிறுக வார்த்து, உ-சாமநேரமரைத்துக் குன்றிமணிப்பிரமாணம் மாத்திரைகளைச் செய்து நிழலிலுலர்த்தி சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-ச, அ. காலைமாலை இரண்டு வேளையும் உபயோகிக்கவும். நீராகாரம், பசுவின்மோர், பசுவின்பால், முள்ளங்கிக் கிழங்குச்சாறு, ஆகியவைகளி னொன்றுடன் அனுபானித் துபயோகிக்கவும்.

**உபயோகம்:**—இரத்தமூலம், ஆசனஅழலை, ஆசனஎரிச்சல், இரத்தப் போக்கு, இரத்தக்கடுப்பு ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—உஷ்ணமான பதார்த்தங்கள், அதிகக் காரமான வஸ்துக்கள், மீன், கருவாடு ஆகிய இவைகளைத் தவிர்க்கவேண்டியது.

வேறு.

தேன் மெழுகு விராகனெடை-க, இதனை நான்கு பாகமாகச் செய்து ஒரு பாகத்தை மாத்திரையாகத் திரட்டி அதன்மீது வெள்ளிரேக்கைச் சுற்றி வெண்ணெய்க்குள் அல்லது வாழைப் பழத்திற்குள் வைத்து விழுங்கி விடவேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டு வேளையுமாக இரண்டுநாள் உபயோகித்தால் இரத்தமூலம், இரத்த மூலத்தாலுண்டானவேதனை, இரத்தப்போக்கு முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—மேற்கண்டபடியே யாம்.

வேறு.

மஞ்சள் கடுக்காய்த்தோற் சூரணம், சூரத்துக்கடுக்காய்த்தோற் சூரணம், நெய்யில் வறுத்திடித்தகறுப்புக் கடுக்காய்ச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ, வேங்கை மரப்பிசின் சூரணம், பன்னீர்வார்த் திழைத்துலர்த்தின சந்தனத்தூள், மாதளம்பூச்சூரணம், இவை வகைக-க்குவிராகனெடை-க, மூங்கிலுப்புத்தூள், பார்தங்கு விதைத்தூள், பவளபற்பம், அல்லது, சிலாசத்து பற்பம், வகை-க-க்கு விராகனெடை-கனு, ரசாஞ்சனம் விராகனெடை-உ, அன்சுபார் வேர்ப்பட்டைச் சூரணம் விராகனெடை-உவ, சுத்திசெய்த மைசாக்ஷி விராகனெடை-சரு,வெங்காயத்தாள்சாறு, அல்லது, முள்ளங்கிக்கிழங்குச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்

து-உ-சாமநேர மரைத்து அரை விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி பத்திரப் படுத்தவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க, உ.

அனுபானம்:—நீராகாரம், பசுவின்மோர், வெங்காயத்தாட்சாறு, முள்ளங்கிக் கிழங்குச்சாறு முதலியவைகளாம்.

உபயோகம்:—இரத்தமூலரோகம், ஆசன எரிச்சல், ஆசனக் கடுப்பு, ஆசன அழலை முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—உஷ்ணமான பதார்த்தங்கள், அதிசுக் காரமான பதார்த்தங்கள் ஆகியவைகளை நீக்கவேண்டியது.

வேறு.

நெய்யில் வருத்திடித்த கறுப்புக்கடுக்காய்ச் சூரணம், பாலில் வேகவைத்துலர்த்தி யிடித்த நெல்லிவற்றல் சூரணம், மஞ்சள் கடுக்காய்த்தோற் சூரணம், ரசாஞ்சனச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-ஈ, ரோஜாப்பூச் சூரணம், மூங்கிலுப்புச் சூரணம், மாசக்காய்ச் சூரணம், முத்துச்சிப்பி பற்பம், அல்லது சிலாசத்து பற்பம், கொத்துமல்லி விதைச் சூரணம், ரேவல்சீனிச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-கஉ, வெங்காயத்தாட்சாறு அல்லது ஆலம் விழுதுச்சாறு செல்லத்தக் அளவு,

செய்முறை:—மேற்படி சூரணங்களை யெல்லாமொன்றுய்க்கலந்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து, உ-சாமநேர மரைத்து அரை விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து பத்திரப்படுத்தவும்.

மாத்திரை:—க, உ.

அனுபானம்:—ஆலம் விழுதுச்சாறு, வெங்காயச்சாறு, நீராகாரம், பசுவின்மோர் முதலியவைகளாம்.

உபயோகம்:—இரத்தமூலம், இரத்தப்போக்கு, ஆசன எரிச்சல், ஆசனக் கடுப்பு, ஆசன வேதனை, ஆசன அழலை, ஆகியவைகள் தீரும்.

(இன்னும் வரும்)

---

சுகாதார போதினி.

சு-ம் பிரிவு.

இரசவாதம்.

முன்தொடர்ச்சி (Vol. 3. பக்கம். 160.)

முன் பத்திரிகையில் உலோக வாத முறைகளை எழுதுவாக சொல்லி யிருக்கின்றோம் ஆனால், உலோக வாதத்தைச் சேர்த்து உருக்கும் முறை அதன் ஊட்டம் முதலியவைகளையும் தெரிந்துகொள்ள வேண்டியது ஆவசியகமானதால், அவைகளைப் பற்றியும் முக்கியமான சில விஷயங்களைச் சுருக்கமாக இங்கெழுதுவாம்.

ஒவ்வொரு உலோகத்தின் (Specific gravity) கன கவற்சி எடை, அல்லது, விசிஷ்ட குத்வ எடை ஏற்பட்டிருக்கிறது. அதன் விபரம் பின் வருகிற விதமாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| தங்கத்தின் (Specific gravity) கன கவற்சி எடை | | | | 100 |
| இரசத்தின் | do | do | do | 71 |
| வெள்ளியின் | ,, | ,, | ,, | 54 |
| கருவங்கத்தின் | ,, | ,, | ,, | 49 |
| நாகத்தின் | ,, | ,, | ,, | 48 |
| தாம்பிரத்தின் | ,, | ,, | ,, | 45 |
| இரும்பின் | ,, | ,, | ,, | 40 |
| வெள்வங்கத்தின் | ,, | ,, | ,, | 38 |

மேற்கண்ட விகற்ப கன கவற்சியுள்ள உலோகங்களை அதாவது கனமாகவும், இலேசாகவு மிருக்கிற உலோகங்களைச்சேர்த்து உருக்கினால் எப்பொழுதும்

கனத்த உலோகம். மேலும், இலேசான உலோகம் கீழுமாக முறையே உருகிச்சேர்ந்திருப்பது அநுபவத்தால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், இவ்வித உலோகங்களைச்சேர்த்து உருக்கும்போது மடக்கி மடக்கிப் பல தடவைகள் உருக்கினால் எல்லா மொன்றாகச் சேர்ந்துருகி இலேசான உலோகத்திற்கும், ஊட்டம் உண்டாகி விடுகிறது. இவ்விதம் அநுபவத்தினால் நிச்சயப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட குறிப்பினால் தங்கத்தின் டிக்ரி 100 என்றும். வெள்ளியின் டிக்ரி 54 என்றும் தெரிந்துக் கொண்டோம். இந்த இரண்டையும் சேர்த்துருக்கினால், 100+54=154. இந்த 154. இரண்டு பேருக்கு பங்கிட்டால் 77 டிக்ரியாகிறது, இந்த கன அளவானது இரசத்தின் கன அளவைப் பார்க்கிலும் 6-பங்கு அதிகமாக யிருக்கிறது. இவ்விதம் சேர்க்கப்பட்ட உலோகத்தின் சமனெடை, தங்கத்தை சேர்த்துருக்கினால் $88\frac{1}{2}$ டிக்ரியாகிறது. இதனையே மடக்கி மடக்கி, உருக்கினால் சில சமயம் 90, சில சமயம் 91, சில சமயம் 92 டிக்ரி வரையில் அதிகப்படுவதைப் பல தடவைகளிலும் அநுபவத்தால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இந்த கன அளவின் ஏற்றங் குறைச்சலுக்குத் தகுந்தபடியே மாற்றை நிதானிக்கப்படுகிறது. நேப்பால் தேசத்துப் பொன், சாணாக்காசு ஆகியவைகளெல்லாம் 77 டிக்ரியுள்ள பொன் ஆகையால் அவற்றின் மாற்று அதிகங் குறைவாக ஏற்படுகிறது. இவ்விதமே உலோகவாதப் பொன்னின் டிக்ரியின் ஏற்றங் குறைச்சலுக்குத் தகுந்தபடி மாற்றானது ஏற்படுத்தப்படும். அதற்குத் தகுந்தபடியே விலையும் ஏற்படுத்தப்படும். உலோகங்களின்மாற்றை ஏற்படுத்தும் வகையும் அதனைத் தெரிந்துக்கொள்ளும் வகையும் சற்று கடினமான விஷயமாகையால், சமயம் வாய்க்கும்போது அதனைப்பற்றி அதிக விபரமாக எழுதப்படும்.

இன்னும் வரும்.

---

## விண்ணப்பம்.

கனவான்களே! நமது பத்திரிகையானது சென்ற மூன்று வருஷகாலமாக நடத்தப்பட்டு வருகிறதென்பதும். இதனால் இன்னின்ன பயனென்பதும் தங்களுக்குத் தெரிந்தவிஷயமே. இம்மாதிரியான பத்திரிகை பிரசுரிக்கப்படுவது ஜனங்களுக்கு எவ்வளவு உபயோகமும் லாபகாமுமான தென்பதுங் தங்களுடைய மனதிற்குத் தெரியும். ஆனால், இப்பேர்ப்பட்ட பத்திரிகைக்குத் தாங்கள் சகாயஞ் செய்யாதிருப்பது அதிக விசனிக்கத் தக்கதேயாம். இப்பத்திரிகையை நடத்துவதில் நமது கைப்பணச் செலவேயன்றி இலாப மொன்றமே யில்லை. இதற்குக் காரணம் சந்தாதாரர்களின் குறைவே. ஆகையால், கனவான்களே. தற்போது யிருக்கும் அபிமானிகள் ஒவ்வொருவரும் இப்பத்திரிகைக்குக் குறைந்த பக்ஷம் - 3 - சந்தாதாரர்களைச் சேர்த்துவைத்தால் இப்பத்திரிகையானது இன்னும் விசேஷ விஷயங்களோடு வெளிவர ஏதுவாகும். இப்பத்திரிகைக்குச் சந்தாதாரர்களைச் சேர்ப்பது ஒரு பெருங்கஷ்டமான காரியமல்ல. ஆனால், தாங்கள் சற்று பிரயாசை யெடுத்துத் தங்கள் சிநேகிதர்களுக்கு இப்பத்திரிகைகளைக் காண்பித்து இதனாலுண்டாகும் பயன்களை எடுத்துக்காட்டி வற்புறுத்தும் கஷ்டமொன்றேயாம். இந்தப் பிரயாசைக்காக தங்களுக்கு இனாம் கொடுக்கப்படும். அதாவது இரண்டு சந்தாதாரர்களைச்சேர்க்கிறவர்களுக்கு நமது புத்தகங்களில் - 8 - அணா விலையுள்ள புத்தகங்களில் தம்தமக்கு இஷ்டமான ஒன்றை இனாமாக அனுப்பப்படும் சந்தாதாரர்களென்றால் பெயரை எழுதியனுப்பி விடுவது மாத்திரமல்ல, ஆனால் பணமும்வந்து விடுவதே கருத்தாம். இவ்விதம் சிரமம் எடுத்துக்கொள்ளும் பரோபகார கனவான்களின் நாமங்களும் அவரவர்களின் பெயருடன் வந்தனத்துடன் பத்திரிகையிற் பிரசுரிக்கப்படும்.

---